# காற்றினிலே வரும் கீதம்

ரா. கணபதி

திவ்ய வித்யா ட்ரஸ்ட்
106/1 ஹபிபுல்லா ரோடு, தி. நகர்,
சென்னை - 600 017

# காற்றினிலே வரும் கீதம்

ரா. கணபதி










# காஞ்சி முனிவர் ஸ்ரீ மஹாஸ்வாமிகள் அருளிய ஸ்ரீமுகம்

**चित्तपरीपाके संन्यासिनां सहस्रेण समानायाः**
**बाई मीरायाः श्रीकृष्णभक्तिभरितं चरितं**
**पंठन्तः सर्वेजनाः पुरुषार्थभाजो**
**भूयासुः ॥**

*சித்தபரிபாகே ஸந்ந்யாஸிநாம் ஸஹஸ்ரேண ஸமாநாயா:*
*பாயீ மீராயா: ஸ்ரீ க்ருஷ்ணபக்தி பரிதம் சரிதம்*
*படந்த: ஸர்வேஜநா: புருஷார்த்தபாஜோ*
*பூயாஸு: //*

சித்தப் பரிபக்குவத்தில் ஆயிரம் சந்நியாசிகளுக்குச் சமமான மீராபாயின் ஸ்ரீ கிருஷ்ண பக்தி ததும்பும் சரித்திரத்தைப் படித்து மக்கள் அனைவரும் வாழ்க்கைப் பயனைப் பெறுவார்களாக!

# முதற்பதிப்பு முகவுரை (1970)

*1942*-ஆக இருக்ககலாமென நினைக்கிறேன். எனக்கு ஏழோ எட்டோ பிராயம். ஆரணியில், உலக சம்பந்தமில்லாத ஒரு கோட்டையில் வசித்து வந்தோம். ஸப் மாஜிஸ்திரேட்டாக இருந்த தந்தைக்குக் கோட்டையை ஜாகையாகத் தந்திருந்தார்கள். ஐந்து பெரிய ஆலமரங்கள் பஞ்சவடியாக ஜாகையில் அமைந்திருந்தன.

அந்த அமைதியில்தான் மீரா என்ற கிளர்ச்சி பிறந்தது. ஸ்ரீமதி எம்.எஸ். சுப்புலக்ஷ்மி மீராவாக நடிப்பதாகவும் பேராசிரியர் கல்கி அவர்கள் திரைக்கதை வசனம் எழுதுவதாகவும் அப்போது ஒரு செய்தி வந்தது. ஏனோ எனக்கு அது சாமானியச் செய்தியாக இருக்கவில்லை. மீரா என்ற மதுரமான பெயரே ஏனோ என்னில் ஓர் உறவு ஈர்ப்பினை உண்டாக்கிற்று. அதோடு, ஸ்ரீமதி எம்.எஸ்ஸின், 'அம்பா நீ இரங்காயெனில்', 'வண்டினம் முரலும்' ஆகிய இசைத்தட்டுக்களைக் கேட்ட குழந்தைப் பிராயத்திலிருந்தே அவரது இசை என்னை இறுக ஈர்த்திருக்கிறது. 'ஸாவித்ரி' ஸினிமாவில் அவர் நாரதராகத் தோன்றி, 'அக்கினி என்றறியாயோ?' ராகமாலிகை பாடித் தமிழ் நாட்டையே புரட்டியிருந்த சமயம் அது. அநேக நள்ளிரவுகளில் ஆரணி நகருக்குள் இருந்த டூரிங் ஸினிமாவிலிருந்து, 'அக்கினி என்றறியாயோ?' காற்றில் மிதந்து எங்கள் பஞ்சவடிக்கு வந்திருக்கிறது. அதைக் கேட்கவே நள்ளிரவுவரை விழித்துக் கொண்டிருந்ததும் உண்டு என்றுகூட நினைக்கிறேன்.

நாரத முனிவராக வந்து குழந்தை உள்ளத்தில் ஒரு fairy–tale ஆகிவிட்டவர் போடுகிற மீரா வேஷம் பக்தி விஷயமானதுதான் என்று தன்னாலேயே மனத்துக்கு வந்து விட்டது. அதன் பிறகு மீராவின் கதையைக் கேட்டறிந்தேன். என் சிற்றப்பா ஒருவரும் சின்ன அத்தையும் அந்தக் கதையைச் சொன்னார்கள். 'பக்த விஜய'த்திலுள்ளபடி கதை கூறினார்கள். இருவருக்கும் பக்தி, கற்பனை, ரஸிகத்தன்மை யாவும் உண்டு. எனவே சுயமாக எனக்கு இருந்த ஈடுபாட்டுடன், அவர்கள் அழகாகச் சொன்ன கதையைக் கேட்டபோது ஏனோ என் உடம்பு பறந்தது. உடம்பும் உள்ளமும் ஒன்றாக இருக்கும்

குழந்தைப் பிராயமானதால் அந்தப் பறப்புக்கு விசேஷம் உண்டு.

சிற்றப்பாவும் அத்தையும் கதை சொல்லி முடித்து விட்டார்கள். ஆனால் எனக்குள் கதை முடியவில்லை. அதன் பின்தான் எனக்குள் கதை ஆரம்பமாயிற்று என்றே சொல்வேன். அனவரதமும் அந்தக் கதையே நினைவா யிருந்தேன். இதற்கு முன்னும் பின்னும் நான் எத்தனையோ புராண இதிஹாஸக் கதைகள் கேட்டிருக்கிறேன். இன்றும் கேட்டும் படித்தும் வருகிறேன். ஆனால் மீரா என்னை ஆட்கொண்டதுபோல் எந்தக் கதையும் செய்யவில்லை.

ஆல நிழலில் ஆலங்காற்றில் பாலதசையில் அந்தக் கதை கேட்டதை இப்போது நினைத்தாலும் நெஞ்சை என்னவோ செய்கிறது. மறுபடியும் அப்படி ஆகமாட்டோமா என்று ஆசையாக இருக்கிறது.

அச் சிறுவயதிலேயே அப்போது 'கல்கி' ஏட்டிலும், அதற்குச் சகாவாக நடைபெற்று வந்த 'துணைக் கல்கி' ஏட்டிலும் கல்கி அவர்கள் முறையே எழுதி வந்த, 'பார்த்திபன் கன'வையும், 'மகுடபதி'யையும் ஆர்வ வெறியுடன் படித்து வந்தேனாதலின் மீரா கதை அவரது எழுத்தில் எப்படி ஒளி வீசும் என எண்ணி வியப்பேன்.

அவ்வாறெனில் கிருஷ்ணன், பக்தி, ஸங்கீதம், எம்.எஸ்., கல்கி எல்லாம் சேர்ந்ததால்தான் மீரா என்னை அப்படி இழுத்தாளா? உணர்ச்சி நிறைந்த நிகழ்ச்சிகள் மீரா கதையில் மலிந்திருந்ததே என்னை ஈர்த்ததா? இருக்க முடியாது. இதெல்லாம் ஒருவேளை துணைக்காரணங்களாக இருக்கலாம். மீரா என்பவள் மீராவாக இருந்ததொன்றே எனக்கு அவளிடம் ஏற்பட்ட பற்றுக்குக் காரணம் என்றுதான் சொல்லவேண்டும். மீராவின் கதை அல்ல, அன்னை மீராவே என்னை இழுத்துக் கொண்டாள்.

1945 தீபாவளித் திருநாளில் மீரா ஸினிமா வெளிவந்தது. அதில் நான் அப்படியே பைத்தியமாகி இருந்தேன். இந்தப் பைத்தியத்தில் எனக்கு ஓர் உற்ற சகாவாக இருந்தாள் என் தமக்கை. எங்கள் இருவருக்கும் படிப்பு, பாடம், மற்ற ஜோலிகள் எல்லாம் இரண்டாம் பட்சமாயின. ஓயாமல் மீரா ஸினிமாப் பாடல்களைப் பாடுவோம். அவற்றிலொன்றே இந்நூலுக்கு நாமகரணமாகியுள்ள 'காற்றினிலே வரும் கீதம்' என்ற கல்கியின் அமுதப் பாடல். தரை முழுதும் திரும்பத்

திரும்ப அந்த ஸினிமாக் கதையை எழுதுவோம். மீராவின் படங்கள் போடுவதற்குத் தீர்ந்த சாக்குக் கட்டிகள் எத்தனையோ! காற்றினிலே வந்த கண்ணனின் குழலிசைக்கு மீரா பறந்ததுபோல், எம்.எஸ். பாடிய மீராப் பாட்டுகளுக்கு நாங்கள் பறந்திருக்கிறோம்!

ஆனாலும்... அந்த மீரா ஸினிமா சொல்லாமல் விட்ட விஷயங்களிலும் என் மனத்தின் ஒரு மூலை முழுகிக் கொண்டேதான் இருந்தது. அந்தச் சிறிய வயதில் இதை வெளியிட்டால், பச்சிளம் வாழைக் கன்று குலைதள்ளியது போல், விபரீதமாக நினைப்பார்களோ என்று என்னை நானே அடக்கிக்கொண்டேன். ஆனால் அடக்க அடக்க, உள்ளுக்குள் குலைகுலையாகக் கனி தள்ளியது. கிருஷ்ணனும் மீராவும் முகமுகமாகப் பேசியதையும், அவள் அவனோடு ஆடியதையும் பாடியதையும் ஊடியதையும் சாடியதையும் அவனுக்கு அவள் உணவிட்டு உபசரித்ததையும் சிற்றப்பா சொல்லியிருந்தார். அதிலேயே இதுவரை மனம் மூழ்கிக் கிடந்தது.

ஆனால் மீரா ஸினிமாவில் பால மீராதான் கண்ணனுடன் நேருக்கு நேர் அன்பு விளையாட்டு விளையாடினாள். பெரிய மீரா மானஸிகமாக மட்டுமே கிருஷ்ணப் பிரேமையில் ஈடுபட்டிருந்தாள். ஸ்தூலமாகப் பிரேமை விளையாட்டு இல்லை. அதன் மகிழ்ச்சியும் இல்லை; துயரமும் இல்லை. அதன் பேச்சும் இல்லை; மௌனமும் இல்லை. ஸ்தூலமாகப் பிரேமையைத் திரையில் காட்டினால் அதில் பக்திப் பிரேமை என்றும் பௌதிகப் பிரேமை என்றும் பாகுபாடு தெரியாது. ரிஷிகளுக்குச் சமமாகக் கலாஸித்தி பெற்ற ஒரு சில சிற்பிகளும் சைத்திரிகர்களும் வனைந்த சிற்ப, சித்திரங்களில் மட்டுமே, பௌதிகம் அடிபட்டுப்போன ஆன்மக் காதலைப் பார்க்க முடியும். மற்றபடி, மேடைமீது இரு மானுடர்கள் சிருங்கார பக்தியைத் தூய்மையாகக் காட்டுவது சிரமம். நடைமுறை உலகிலிருந்து நம்மை விடுவிக்கும் தனித் தர்மம் கொண்ட நாட்டிய நாடகங்களில், காதலர் இருவரும் ஆண்பால் நடர்களாகவோ, அல்லது பெண்பால் நடீக்களாகவோ இருக்கும்போதே, சிருங்கார பக்தியை வெளிப்படுத்துவது ஓரளவு சாத்தியமாக இருக்கிறது. நடிகர்களின் தோஷத்தோடு, பார்ப்பவரின் தோஷமும் சேருவதால் ஸினிமாவிலும் நாடகத்திலும் சிருங்கார பக்தியைக் காட்டுவது அதிசிரமமான காரியமே. இதைக்

கருத்தில் கொண்டே போலும், மீரா திரைப்படக் கதை எழுதிய பேராசிரியர் கல்கி அவர்களும் ஸ்ரீ சதாசிவம் அவர்களும் அவளை ஓரளவுக்கு ஒரு வைராக்கிய சந்நியாசினி போலவே சித்திரித்திருந்தனர். கல்கியின் எழுத்தாற்றலில், அவர் சித்திரிக்க விரும்பிய நாத யோகினி மீராவின் கதையை ஒளி வீசும் காவியமாகத்தான் ஆக்கியிருந்தார். எம்.எஸ்ஸும் அப்பாத்திரத்தைக் கண் காணும் சித்திரமாக்கினார். மீரா ஸினிமா அதனாலேயே தூய்மைக்குப் பெயரெடுத்தது.

ஆனாலும் என்னுடைய முழு'மீரா அதில் இல்லை. 'என் மீரா' என்பதற்கு அர்த்தமுண்டு — நான் ஏற்கெனவே கேட்டிருந்த கதையோடு என்னுடைய உணர்வும் சேர்ந்து அவளை எனக்கென்றேயான ஒரு மீராவாக்கியிருந்தது. ஸினிமாவில் அம் மீரா இல்லாததால் ஓர் ஏமாற்றம், ஓர் ஆதங்கம் எனக்கு இருக்கத்தான் இருந்தது. நல்ல வேளை, அது லௌகிக சிங்காரம் தெரியாத பருவம். கண்ணன் காதலை மட்டும் எப்படியோ ரசிக்கத் தெரிந்த குழந்தைப் பருவம்! என்றாலும் இந்த ஏமாற்றத்தை மற்றவர்களிடம் சொல்ல மாட்டாமல் ஏதோ ஒன்று என்னைத் தடுத்தது. இந்த ஏமாற்றத்துக்குள் அப்போதிருந்தே எனக்கென ஒரு மீரா கதையும் குலை விடலாயிற்று. 'கதை' என்று சொன்னாலும் கதையைவிட மீராவே அதில் முக்கியம்.

துரதிருஷ்டவசமாகக் காலம் மாறிற்று. சிருங்காரமா, சந்நியாசமா என்ற கேள்விகள் எழும்பாமலே மீராவின் அன்பில் ஈடுபட்ட குழந்தை நாள்கள் போய்விட்டன; சிருங்காரமே சந்நியாசமாக இருக்கும் நிலையும் உண்டு என்ற முதிர்ச்சியும் வரவில்லை. இந்த இரண்டுங்கெட்டான் நிலையில் மீராவின் சரித்திரம் குறித்துப் பல இடைஞ்சலான கேள்விகள் எழுந்தன. 'மீரா ஏன் காரைக்கால் அம்மையைப் போல், ஸினிமா மீராவைப் போல், கண்ணனின் காதலியாக இல்லாமல் பக்தையாக மட்டும் இருந்திருக்கக் கூடாது? கண்ணனிடமாயினும் காதல் எதற்கு? ஆண்டாளும் இப்படித்தான் பிரேமை புரிந்தாள். ஆனால் ஆண்டாளை விடவும் அதிகமாக மீராவை ஒப்புக்கொள்ள முடிய வில்லையே! சாஸ்திரோக்தமாக ஒருவனைக் கலியாணம் செய்துகொண்ட பின்னும் மீரா ஏன் கண்ணனைக் காதலித்தாள்?' இப்படியெல்லாம் இடைஞ்சல் கேள்விகள் எழுந்தன. இருந்தாலும் இதயத்தின் அடியில், மீரா சரியாகத்தான் நடந்துகொண்டிருக்க முடியும் என்ற

எண்ணமும் அறுபடாத இழையாக இருந்துகொண்டே இருந்தது. மீராவை நான் விடவே முடியாது என்கிற உறுதியும் இருந்துகொண்டே இருந்தது. என்னால் விட இயலாத மீராவிடம் தோஷமும் இருப்பதாகப் பட்டதால் மிகவும் அவஸ்தைப்பட்டேன்.

வெளியில் எத்தனையோ மாறுதல்கள் நடந்தன. படித்து முடித்தேன். உத்தியோக வேட்டை; பொருத்தமில்லாத உத்தியோகம்; அப்புறம், திடீர் யோகம்! காஞ்சிப் பெரியவாள் அருளில் 'ஜயஜய சங்கர' தந்த பிராபல்யம்! ஏதோ நானே ஓர் ஆத்மஞானி என்று உலகம் மயங்குகிற அளவுக்கு ஆகி விட்டது! வெளியில் இத்தனை நடக்கும்போதும் உள்ளுக் குள்ளே மீராவைப் பற்றிய உறுத்தல் இருந்துகொண்டேதான் இருந்தது.

இந்த உறுத்தல் இருந்தபோதிலும் அதே போதில் கண்ணன்-மீரா ஜோடியை நாயக-நாயகியராக்கியும் அதே மனம் தனது கதைக் குலையைத் தள்ளிக்கொண்டு தானிருந்தது! அதனாலேயே உறுத்தலும் அதிகம் பாதித்தது! அவ்வுறுத்தல் தீர்ந்த கதை......!

இன்று கலையுலகில் மிகப் பிரசித்தி பெற்றுள்ள இரண்டு பெண்மணிகள் என்னுடைய மீரா-ஈடுபாட்டுக்கு மிகுந்த தொடர்புள்ளவர்கள். ஒருவர் ஸ்ரீமதி எம்.எஸ். சுப்புலக்ஷ்மி. மற்றவர் ஸ்ரீமதி பாலஸரஸ்வதி. எம்.எஸ்ஸால் மீராவிடம் எனக்குப் பற்றுதல் வலுத்ததை இதுவரை சொல்லி விட்டேன்.

ஆனால் பற்றுதல் வைத்துப் பயன் என்ன? கடைசியில் இந்தப் பற்றுதல் உறுத்தலில் அல்லவா முடிந்துவிட்டது? நீண்ட காலத்துக்குப் பின் இந்த உறுத்தலை நீக்கி உதவியவர் ஸ்ரீமதி பாலஸரஸ்வதியே. சிலருக்கு ரத்த ஓட்டத்துடன் ஒரு முள் ஓடுவதுண்டாம். மிக நுட்பமான சஸ்திர சிகித்ஸை செய்து அதை எடுப்பார்களாம். எனக்குள் ஓடிக் கொண்டிருந்த முள்ளை எடுத்த ஸ்ரீமதி பாலஸரஸ்வதிக்கு எப்படி நன்றி சொல்வேன்?

ஐந்து ஆறு வருஷங்களுக்கு முன் ஸ்ரீமதி பாலாவின் நடனக் கச்சேரி ஒன்றுக்குச் சென்றிருந்தேன். அவர் ஆடிய சப்தமும் வர்ணமும் சிருங்கார ரஸம் சொட்டுபவை. ஆனால் அது என்ன அற்புதம்? அந்த சிருங்காரத்துக்கும் உடம்புக்கும் துளிகூடச் சம்பந்தமே இல்லையே! பாலஸரஸ்வதி தமது உடலால்தான் அபிநயிக்கிறார். ஆனால் ஜீவாத்மாவே

பரமாத்மா ஆவதைவிடப் பெரிய அதிசயமாக, ஆடும் நடிகையின் உடம்பே ஆத்மாவுக்குச் சின்னமாகி இருக்கிறது! சிருங்காரமும் சந்நியாசமும் ஒன்றுகிற நிலை இன்னதென்று அன்றைக்கு அழுத்தமாக உணர்ந்துவிட்டேன். அது எனக்கு மகத்தான தினம்.

தெய்விகக் காதல் என்ன, மண்ணுலகக் காதலுக்கும் அதற்கும் என்ன சம்பந்தம் (அல்லது சம்பந்தமின்மை) என்பது வெட்ட வெளிச்சம் ஆகிவிட்டது. மீராவைப் பற்றிய உறுத்தல் கேள்விகள் அப்படியே அடங்கி விழுந்துவிட்டன. அதுவரை என் உள்ளுணர்ச்சி மீராவிடம் வைத்த அன்பு அப்போது வெளிப்பட நியாயமாகிவிட்டது!

அன்றைய நடன நிகழ்ச்சியில் இன்னொரு முக்கியமான விஷயமும் நடந்துவிட்டது. அம்பாள், சிவன், முருகன் ஆகியோரிடம் எனக்கிருந்த பக்தி, நடுவிலே பல்லாண்டு களாகக் கண்ணனிடம் இருந்ததில்லை. மேற்சொன்ன நாட்டிய நிகழ்ச்சியின் கடைசியில் அநுக்கிரகம் செறிந்த ஒரு முகூர்த்தம் பிறந்தது. ஸ்ரீமதி பாலஸரஸ்வதியின் பக்குவமான குரல், யமுனா கல்யாணியைச் சித்திரித்து, யமுனையின் அலை வரிசைகளையும் சுழிகளையும் காட்டியது. சலனமற்ற அதன் கர்ப்ப ஓட்டத்தையும் காட்டியது. 'க்ருஷ்ணா நீ பேகனே பாரோ'வுக்கு அபிநயம் செய்தார். என்னிடம் யமுனாதீர விஹாரனான கிருஷ்ணன் வேகமாக வரவேண்டும் என்றே செய்தாரோ என்னவோ? அப்பாட்டில் 'ஜகதோத்தாரக னம்ம'வில் கிருஷ்ண லீலைகள் அவ்வளவும் விரிந்தன. நான் பாகவதப் பிரவசனங்கள் கேட்டபோதும் கிருஷ்ணலீலா தரங்கிணி படித்தபோதும் ஏற்பட்டிராத கண்ணனன்பு அன்று உண்டாயிற்று. சங்கீதத்துக்கும் பக்திக்கும் உள்ள ஆழ்ந்த உறவை அன்று நான் பிரத்தியட்சமாக அநுபவித்தேன். அதுவே சங்கீத பக்தையான மீராவிடம் நான் மேலும் ஈடுபட வழி செய்தது.

உறுத்தல் போச்சா? தெய்விகக் காதல் புரிந்தேவிட்டதா? கண்ணனன்பு மொட்டிட்டுவிட்டதா? அப்புறம் என்ன? என்னுள் பிறந்த மீராக் கதைக் குலை தடுப்பும் தயக்கமுமின்றி வள்ளிசாக முற்றுருவம் பெற்றது. ஆனால் எண்ணமாகத்தான், எழுத்தாக இல்லை.

மீராவை நம்முடைய உலக தர்மத்தால் அளப்பது பாபம். ஈசுவரனைத் தவிர மற்ற எதையும் — வேதம், சாஸ்திரம்,

லோக தர்மம் உள்பட எதையும் — நினைக்காத பக்தி வாழ்க்கை அது. அதை நம் தர்மத்தால் எப்படி அறிய முடியும்? **'மற்று இருந்தீர்கட்கு அறியலாகா மாதவன் என்பது ஓர் அன்பு'** என்றாள் ஆண்டாள். அவனைத் தவிர மற்ற எதையும் நினைப்போரால் அவனது அன்பை, சிருங்காரத்தை அறிய முடியாது. அவனைத் தவிர மீராவுக்கு எதுவுமில்லை, எனவே தர்மசாஸ்திரங்களையும் கடந்தாள்.

தங்கள் கணவன்மார்களை மறந்து கண்ணன் காதலில் ஈடுபட்ட கோபியரிடம் உத்தவரைத் தூது அனுப்புகையில், 'லோக தர்மங்களை எனக்காக விட்டவர்களையே நான் தாங்குகிறேன்' **(யே த்யக்தலோகத4ர்மாஸ்ச மத3ர்தே2 தான் பி3ப4ர்ம்யஹும்)** என்கிறான் பகவான். உத்தவரும், கோபிகளை உலகநடைமுறை யாவும் விட்டவர்களாகவே **(த்யக்தலௌகிகா:)** கண்டார் என்கிறார் சுகர்.

உலகுக்கு வழிகாட்டவே வந்த பெரியோர்களில் பலர் உலக தர்மங்களை அநுஷ்டிப்பவர். அந்தத் தர்மங்களையும் கடந்த பெரியவர்களும் அபூர்வமாகத் தோன்றுவதுண்டு. அவர்களைத் தர்ம சாஸ்திரத்தால் அளப்பது முறையன்று.

மீரா, தாலிகட்டிய கணவனை ஒதுக்கிக் கண்ணனைக் காந்தனாகக் கொண்டது தர்மம் கடந்த பெரு நிலை. லோக தர்மத்தை மீறியவள் பெண்தர்மத்தை மீறினாள். ராஜதர்மத்தை மீறினாள். ராணியாகிய மீரா, ஆண்டிப் பரதேசிகளுடன் ஆடிப் பாடினாள். பெண்களுக்குரிய நாணத்தை நீத்துப் பகிரங்கமாக நாட்டியமாடிக் கண்ணனைப் பாடினாள். ஆனால் அவள், 'தர்மத்தை முறிக்கிறேன்' என்று புரட்சிக்காரியின் சங்கற்பத் துடன் இதைச் செய்யவில்லை. தர்மத்தைக் கடப்பதே அவளுக்கு இயற்கையான தர்மமாக இருந்தது. சந்திரமண்டலத்துக்குப் போக வேண்டுமாயின் உலகின் ஆகர்ஷணத்தைக் கடந்து சந்திரனின் ஆகர்ஷணத்துக்கு ஆட்படவேண்டும். உலகியல் ஆகர்ஷணத்தை மீறிக் கிருஷ்ணசந்திரனால் இழுக்கப்படுவது மீராவுக்கு இயல்பாக இருந்தது. அவள் ஒருகாலும் புரட்சிக்காரியல்ல. நாணத்தை விட்டாலும் லௌகிகக் கற்பை விட்டாலும் அவள் நூறு சதவிகிதமும் பெண், பெண், பெண்ணேதான். அன்பும் இசையும் அவளைப் பெண்ணாகவே வைத்திருந்தன.

**'நாணி இனி ஓர் கருமம் இல்லை'** என்று ஆண்டாள் சொன்ன நிலையில், 'நாணத்தைவிட்ட என் சித்தம்'

(சித்தமபத்ரபம் மே) என்று ருக்மிணி சொன்ன நிலையில் இருந்தவள் மீரா. அவள் நாணம் விட்டதால் அவளது தூய்மை குறைந்து விடவில்லை. மாறாக பக்தியும் சங்கீதமும் நாட்டியமும் அந்த நாணமற்ற நிலையிலேயே வெளிப்பட்டு உலகையெல்லாம் தூய்மையாக்கின.

'என்னிடம் பக்திவைத்து, **வெட்கத்தை விட்டுப்** பாடி ஆடுபவர்கள் பிரபஞ்சத்தையே புனிதமாக்குகின்றனர்' என்று ஐயனே சொன்னபிறகு, மதிப்பீடு செய்ய நாம் யார்?

**விலஜ்ஜம் உத்$^3$கா$^3$யதி ந்ருத்யதே ச**
**மத்$^3$ப$^4$க்தியுக்தோ பு$^4$வனம் புநாதி |**

கட்டுப்பாடற்ற மீராவிடம் சங்கீதம் தானாகப் பிறந்தது. ஆனால் சங்கீதத்துக்குள்தான் எத்தனை கட்டுப்பாடு! ஸ்வர ஸ்தானமும் தாள மாத்திரையும் அணுவும் பிசகக் கூடாதே! லோக தர்மம் விட்டவளிடம் இந்தக் கண்டிப்பான கலா தர்மம் இயல்பாக வந்து மேவியது! பரம சுதந்திரத்துடன் விளங்கும் சங்கீதத்துக்கு உள்ள தர்ம விதிகளையேனும் நாம் ஓரளவு சாஸ்திரமாக்கிப் புரிந்துகொள்ள முயலலாம். ஆனால் பக்தி என்கிற, அன்பு என்கிற, கண்ணன் காதல் என்கிற ஸ்வாதந்திரியத்தின் தர்மத்தை எப்படிப் புத்தியால் புரிந்து கொள்ள முடியும்? பக்தியிடம் புத்தியின் சாதுரியம் செல்லாது. அன்பு மீராவிடம் நம் அற்ப புத்தியைத் தூக்கிச் செல்ல வேண்டாம்.

**மீ**ராவின் சங்கீதத்திலும் பக்தியிலும்தான் அவள் இருக்கிறாள்; சம்பவங்களில் அல்ல. இந்தப் புத்தகமோ சம்பவங்களைத்தான் தருகிறது. ஆனால் இந்தச் சம்பவங்கள் நிகழாமலே மீரா மீராவாக வாழ்ந்திருக்க முடியும்.

பக்தர்களுக்கெல்லாம் சம்பவம் நிறைந்த வாழ்க்கை இருக்க வேண்டும் என்று உலகம் விரும்புகிறது. இதனாலேயே நாடக ஓட்டம் உள்ள பக்த சரித்திரங்கள் உண்டாகியுள்ளன.

இந்தக் 'காற்றினிலே வரும் கீதத்'தில் நாடகம் ஜாஸ்தி. இது, பக்த விஜயக் கதை மட்டுமல்ல; ஆராய்ச்சியும் சேர்ந்தது. ஆனால் ஸ்ரீ கிருஷ்ணாஜி அன்னை போலவும், விஷ்ணுகுமாரி மஞ்ஜு போலவும், ஹெர்மன் கோட்ஜ் (Herman Goetz) போலவும் சரித்திரத்தைத் துளைத்து ஆராய்ச்சி செய்து இதை எழுதவில்லை. மீரா குறித்து, 'மன்னன் மனைவி' என்ற பெயரில் ஆங்கிலக் கவிதை நாடகம் தந்த ஜேம்ஸ் கஸின்ஸைப்

போல், யதார்த்த ஸத்தியத்தோடு கற்பனையின் ஸத்தியத்தையும் பெரிதாக மதித்தே இதை எழுதியிருக்கிறேன். மற்றவர்கள் சரித்திர ஆதாரங்களை வெகுவாகக் காட்டியிருப்பதால் என் கதைப் பின்னணிக்கேற்ப நானும் சரித்திரத்தை நிறையவே துணை காட்டியிருக்கிறேன்.

பதினாறாம் நூற்றாண்டின் மத்தியில் வாழ்ந்த ஸங்க ராணாவின் மகனான போஜனை மணந்தவள் மீரா என்றும் இவளை அக்பர் மாறு வேஷத்தில் கண்டு சென்றார் என்றும் வழங்குகிற கருத்துக்கு என் கதை மாறுபடுகிறது. இதற்கு ஒரு நூற்றாண்டுக்கு முன்னால், கும்பராணாவின் காலத்தில் அவளது கதையை அமைப்பதே எனக்குப் பாங்காகப் படுகிறது. எனினும் முகம்மதிய மன்னன் மீராவைக் கண்ட கதை மிகவும் புழக்கத்தில் இருப்பதால் எனக்குக் குழப்பம் உண்டாயிற்று. கும்பராணாவின் காலத்தில் அக்பர் நிச்சயமாக இருக்க வில்லை. மிகவும் சிந்தித்தேன். கும்பரின் வரலாற்றை ஆராய்ந்தேன். கிடைத்த தகவல்களைக் கொண்டு, மாளவ கில்ஜியை அக்பரின் இடத்தில் அமர்த்துவது எனக்கு மிகப் பொருத்தமாகப்பட்டது. அவ்வாறே செய்திருக்கிறேன். (நூற்றாண்டுகளுக்கு முன் ஹிந்து-முஸ்லீம் சமூகங்களிடையே நிலவிய நிலவரங்கள் சில இதில் இடம் பெறுகின்றன. சர்வ ஜன ஐக்கியம் மிக மிக அவசியமாயுள்ள நிகழ்காலத்தில் அப் பழங்கதைகளின் அடிப்படையில் மனோ பேதங்களை வளர்த்துக் கொள்வது மாதா மீராவுக்கும் மதுரக் கண்ணனுக்கும் சற்றும் உவந்ததாக இராது.)

தீண்டாதாராகப் பிறந்து, நமது மனம் தீண்டவொண்ணாத திவ்ய பக்தியிலும் ஞானத்திலும் திளைத்த ரயிதாஸர் என்ற மஹான், தம்மொருவரின் மெய்ஞ்ஞானம் நிறைந்த பராபக்தியால் வட தேசம் முழுதிலும் பல தலைமுறைகளாக பக்திப் பிரவாஹம் பாய்ச்சி வரும் துளஸீதாஸர் ஆகியவர்களோடு மீராவைத் தொடர்புறுத்தி நிகழ்ச்சிகள் கூறுவோர் உள்ளனர். இவை ஆதாரமற்றவை என்று பலமாகக் கண்டிப்போரும் உள்ளனர். சரித்திர ரீதியில் உண்மை யாதாயினும், காவியம் என்ற ரீதியிலும், காவியமாயிருந்து கொண்டே ரகசியமாக நமக்கு உபதேசம் செய்யும் ரீதியிலும் அத்தொடர்புகளுக்கு ஆழ்பொருள் உள்ளது. எனவே அவை நிகழ்ந்ததாகவே இங்கு வரைந்துள்ளேன். கும்பராணா, ரயிதாஸர், துளஸீதாஸர்

காலங்கள் இடறுகின்றனவே எனலாம். அக்பருக்குப் பதில் கில்ஜி என்பதுபோல் இங்கும் வேறு மஹான்கள் பெயரையாவது கொடுத்திருக்கலாமே எனலாம். ஆயின் இவ்விரு மஹான்களுக்கெனத் தனிப்பட்ட மஹத்துவம் இருப்பதால் இவ்வுத்தம பாத்திரங்களுந்தான் இங்கு உலவி ஆசி கூறட்டுமே என எண்ணி, அவ்வெண்ணத்தையே எழுத்தாக்கியுள்ளேன்.

சரித்திர ரீதி மாறுபாடு மட்டுமின்றி சாத்திர மரபு ரீதியிலும் மாறுபட்டிருக்கிறேன். வட நாட்டின் வைணவ சாத்திர சம்பிரதாயஸ்தர்கள் மீராவை ராதையின் உற்ற ஸகியான லலிதையின் அவதாரமாகவே சொல்கிறார்கள். ஆயின் என் உள்மனமோ அவளை ராதையாகவே உணர்த்துவதை என்னால் மறுதலிக்க இயலாததால் அவ்வாறே எழுதியுள்ளேன்.

ஒருவேளை இவை தவறே ஆயினும் பெரியோர்கள் மன்னிக்க வேண்டும். மீரா இதனை க்ஷமிப்பாள் என்பது நிச்சயம். ஏனெனில் அவள் தனது சரித்திர ரீதியான வாழ்வையோ, சாத்திரமறிந்தோர் அவளது வாழ்வுக்குத் தத்துவார்த்தமாகக் கொள்ளும் பொருளையோ பொருட் படுத்துவதாகத் தெரியவில்லை. இப்படிச் சொல்லக் காரணம் உண்டு. ஸ்ரீமதி இந்திராஜி என்ற பக்தையின்மீது மீரா இன்றும் ஆவேசித்து, தனது பாடல்களை வெளியிட்டு வருகிறாள். இந்த ஆவேசத்தின் சத்தியத்தை ஸ்ரீ அரவிந்த முனிவரே ஒப்புக் கொண்டிருக்கிறார். இதில் கிடைத்த சில உண்மைகளை இந்நூலிலும் சேர்த்திருக்கிறேன். இவ்வாறு ஆவேச உருவில் வரும்போது மீரா, தன் பக்தியையும் கானத்தையும்தான் வெளியிடுகிறாளே தவிர, வரலாற்று அடிப்படையிலான 'வாஸ்தவ'ங்களையோ தத்துவார்த்த நம்பிக்கைகளையோ அல்ல. ஆதிசங்கரர் நிறுவிய திருமடங்களில் அதிபர்களாக வந்தவர்களில் அவரோடு உயிர்த் தொடர்பு கொண்டவர் களாக உலகறிந்த வெவ்வேறு மடத்து மஹனீயர்களே ஸ்ரீ சங்கரரின் சரிதத்தை வெவ்வேறு விதமாகப் பார்த்திருப்பதி லிருந்தும் என் கருத்துக்குச் சான்று பெறுகிறோம்.

இந்தக் கதையில் சம்பவச் செறிவு அதிகம். அதையும் மீறி மீராவை ஓரளவு தரிசனம் செய்யமுடியும் என நம்புகிறேன்.

உண்மையான மீராவைப் பொதிந்து கொண்டுள்ள அவளது பாடல்களைச் சுத்தமாகக் கவி வடிவில் தமிழாக்கித் தர எனக்குப் புலமை போதாது. கருத்தை மட்டும் வசனமாகத்

தந்தால் பொன்வளையலை அழித்துத் தங்கக் கட்டியைக் காட்டியது போலாகும். ஏதோ அந்த அந்தச் சமயத்தில் தோன்றிய அளவுக்குப் பாடல் என்கிற பெயரில் தமிழாக்கித் தந்திருக்கிறேன். பாவிலக்கணம் பார்த்து யாரும் கஷ்டப்பட வேண்டாம்! சில பாடல்களைக் குறுக்கியும் சிலவற்றை நீட்டியும் இருக்கிறேன் — அளவில் மட்டுமின்றிப் பொருள், உட்பொருள் ஆகியவற்றிலும்தான்! பிற்சேர்க்கையில் மீராவின் மூலப் பதாவளிகளை அவற்றின் அஸல் வடிவங்களில் கொடுத்திருக்கிறேன்.

ராஜஸ்தான் மொழியிலும் விரஜ பாஷையிலும் குஜராத்தியிலும் மீரா இசைத்துள்ள அமுதகீதங்களை மூலத்தில் படித்துப் புரிந்துகொள்ளும் பாஷா ஞானம் எனக்கில்லை. 'கல்கி' உதவி ஆசிரியராகிய நண்பர் ஸ்ரீ ரா. வீழிநாதன் அவர்கள் எனக்கு மொழி காட்டி வழி காட்டினார். ஆங்கில மொழிபெயர்ப்புக்களை வைத்துக்கொண்டும் மூலத்தை ஓரளவு புரிந்துகொண்டேன்.

கல்கியில் இது தொடராக வந்தபோது இருந்ததைக் காட்டிலும்; இப்போது நிறையப் பாடல்களைச் சேர்த்திருக் கிறேன்.

கதையிலும் பற்பல மாறுதல்கள் செய்துள்ளேன்; புதுப் பகுதிகள் சேர்த்துள்ளேன்.

மீரா போன்றவர்களின் வாழ்வு, வார்த்தைகளில் இல்லை; ரகசியத்தில்தான் இருக்கிறது. நான் மிகவும் ரகசியமாக எழுதிவிட்டதாக ஒரு பெரியவர் குறைப்பட்டுக் கொண்டார். இன்னொருவரோ நான் ரகசியத்துக்கு 'லவுட் ஸ்பீக்கர்' வைத்துவிட்டதாகச் சொன்னார்.

ரகசியத்துக்கு லவுட்-ஸ்பீக்கர் வைக்கிற குணத்தை என்னால் மீற முடியவில்லை என்பதற்கு இம் முகவுரையின் சுய புராணமே சான்று. முகவுரையை முடிக்குமுன் மறுபடி சான்று காட்டிவிடுகிறேன்.

ஆம்; காஞ்சிப் பெரியவாளின் ஆசியைப் பற்றி எழுதாமல் இருக்க முடியவில்லை. 'கல்கி'யில் நான் தொடங்கிய பெரியவாளின் வரலாற்றை* அவர் நிறுத்தியவுடன், அதற்குப் பதிலாகவே 'காற்றினிலே வரும் கீதம்' எழுதினேன்.

---

* 1966–ல் காஞ்சி முனிவரது பீடாரோஹணத்தின் மணிவிழா ஆண்டு தொடங்கியது. அவ்வருடமே கல்கி ஏட்டின் வெள்ளி விழாவும் அமைந்தது. வெள்ளிவிழா இதழில் முனிவரின் வாழ்க்கைத் தொடர் தொடங்கப்பட்டது.

நானாக எழுத ஆசைப்பட்ட ஒரே ஒரு சரிதம் இதுதான். அருவப் பொருளை உணர்த்த உருவம் எழுப்புவதுபோல், சரிதம் கடந்த மீராவை உணர்த்தவே, ஒரு சரிதம் எழுத விரும்பினேன். தயக்கமோ தடுப்போ இன்றி எண்ணமாக உள்ளே அச் சரிதக் குலை தள்ளியதையொட்டி அதை எழுத்தாக்கி எல்லோருக்கும் படைக்கவேண்டுமென்ற விருப்ப முனைப்பும் ஏற்பட்டுவிட்டது. ஆயினும் இதை எழுதிப் பிரசுரிக்க முடியும் என்று நான் நினைக்கவில்லை. ஏனெனில் பேராசிரியர் கல்கி அவர்கள் தொட்ட விஷயத்தில் அதற்குப் பல அம்சங்களில் மாறுபாட்டுடன் நான் புனர்ப் பிரவேசம் செய்ய அநுமதி கிடைக்கும் என்று எண்ணவில்லை.* நான் இதை எழுத ஒருவிதத்தில் 'மறக்கருணை' காட்டுமுகமாகவே ஸ்ரீ பெரியவாள் தமது வரலாற்றை நிறுத்தினார் போலும்! ஏனெனில்: அந்தத் தொடர் நின்றவுடன் அதற்குப் பதில் நான் ஏதேனும் செய்தாகவேண்டிய நிலை ஏற்பட்டது. என் மனத்தில் ஆழ்ந்து கிடந்த மீராவைப்பற்றி, அந்த வேகத்தில் ஸ்ரீ சதாசிவம் அவர்களிடம் கூறினேன். 'கல்கி'யும் தாமும் சேர்ந்து எழுதிய திரைக்கதை பற்றி இம்மியும் எண்ணாமல் பெருமனத்தோடு அவர் இதனை நான் எழுத அநுமதித்தார். உடனே, எண்ணத்தில் வண்ணம் காட்டிய கதையை எழுத்தில் உரியபடி படைக்க இயலுமா என்றும், பெரியவாளுடன் ஒரு வித சொந்தமே கொண்ட பெரும்பாலான வாசகர்கள் ஆர்வத்துடன் எதிர்பார்த்த அவரது வரலாற்றுக்குப் பதில் என்றோ எங்கோ வாழ்ந்த மீராபாயின் வரலாறு வெளிவந்தால் அது அவர்களை ஈர்த்துப் பிடித்து நிறைவு தருமா என்றும் அச்சமும் தயக்கமும் என்னுள் எழுந்தன. அப்போது ஸ்ரீ பெரியவாள் அறக்கருணையும் பாலித்தார். ஸ்ரீகாளஹஸ்தியில் முகாமிட்டிருந்த அவரிடம் மீரா தொடர்கதை பற்றி விஞ்ஞாபிக்க, அவர் பொன் மனசு நிரம்பி கூறிய ஆசீர்வாத பலத்திலேயே என் எண்ணம் திருப்திகரமாக எழுத்தாயிற்று. அது மாத்திரமின்றி வாசகர்களும் பரம திருப்தியுடன் பாராட்டுமாறு அவர்களை ஈர்க்கவும் செய்தது. ஆஹா! அவர் தான் எவ்வளவு அன்பொழுக இச்சரிதத்தை ஆசீர்வதித்துத் தெம்பூட்டினார்!

பெரியவாள் தமது சரிதத் தொடரை ஆரம்பித்த வுடனேயே நிறுத்திவிட்டாரே என்ற தாபம் இன்னமும்

---

* அது கல்கி ஏட்டின் ஆசிரியர் குழாத்தில் நான் பணி புரிந்த காலம். எனவே அவ்வேட்டுக்கு இன்றித் தனிப்பட்ட நூல் எழுதத் தயங்கிய காலம்.

முற்றிலும் தணியாமலே, அதற்குப் பதிலாக உத்தேசித்துள்ள மீரா சரிதத் தொடருக்காவது அவரது பரிபூர்ண அநுக்ரஹம் பெறவேண்டும் என்ற துடிப்புடன் காளஹஸ்தி சென்றடைந்தேன். அது காலையில் அவர் ஸ்நான அநுஷ்டானங்கள் முடித்துப் பூஜைக்குச் செல்லும் சமயம். அந்த இடைவேளையில் அவர் பேசமாட்டார். அத்தியாவசியம் நேர்ந்தால் ஸம்ஸ்கிருதத்தில் பேசுவார். நான் வந்திருப்பது தெரிந்ததும் காருண்யப் பிரபு அவ்வேளையிலாக்கும் கூப்பிட்டனுப்பினார்! பரிசுத்தத்தின் ஸ்வரூபமாக நின்ற அவரை நமஸ்கரித்து, நான் உடனே ஏதேனும் தொடர் எழுத அவசியம் நேரிட்டிருப்பதைச் சொல்லி, நான் நல்லபடி மீரா வரலாற்றை எழுதி அது நல்வரவேற்புப் பெற வரம் வேண்டினேன். வர்ணனாதீதமான அகமலர்ச்சி கொண்ட ஸ்ரீசரணரின் திருமுகத்திலிருந்து மதுரமான ஸம்ஸ்கிருத மொழியில் ஸ்ரீமுகம் தேனைத் தெளித்தது! அதோடு சரிதை நல்லுருப் பெறவும், வாசகர்களின் பேராதரவைப் பெறவும் திருக்கரம் தூக்கி ஆசீர்வதித்தருளினார். என் உள்ளம் உற்சாகத்தில் துள்ளச் செய்துவிட்டார்!

விநயமே உருவான நம் பெரியவாள் தம் சரிதத்துக்குப் பதில் இது வருவது ஆயிரம் மடங்கு விசேஷம் எனக் குறிப்பால் உணர்த்தும் வகையில், **'சித்தப் பரிபக்குவத்தில் ஆயிரம் சந்நியாசிகளுக்குச் சமமான மீராபாயின் கிருஷ்ண பக்தி ததும்பும் சரித்திரத்தைப் படித்து, மக்கள் அனைவரும் வாழ்க்கைப் பயனைப் பெறுவார்களாக!'** என்று அந்த ஸ்ரீமுகத்தில் கூறினார். அதே சமயத்தில் சிருங்காரமே சந்நியாசமாகிற தெய்விகத்தைப் பற்றியும் எனக்கு அசைக்க முடியாத உறுதிப்பாட்டை அருளி விட்டார்! அப்புறம் கேட்பானேன்? எண்ணத்தில் வண்ணம் காட்டிய 'என் மீரா' எழுத்திலும் மடைதிறந்த வெள்ளமாக வெளிப்பட்டு விட்டாள். குழந்தை நாளில் கேட்ட 'பக்த விஜய'க் கதை, அப்புறம் படித்த சரித்திர நிபுணர்கள்-இலக்கிய ஆசிரியர்களின் கதைகள், அவற்றுள் குறிப்பாக பாரதீய வித்யா பவன வெளியீடான *Minstrels of God*-லும், பேராசிரியர் 'கல்கி'யின் திரைப்படக் கதையிலும் விரிந்த வரலாறுகள், என்னுடைய புத்திக் கற்பனையில் பிறந்த கதை, புத்தியை மீறிய உணர்வில் பீறி வந்த கதை யாவும் இழைந்து இதோ உங்கள் கையிலுள்ள கதையாயிற்று!

**சென்னை – 31** **ரா. கணபதி**
**18–3–'69**

## இரண்டாம் பதிப்பு முகவுரை (1999)

*இருபத்தொன்பது ஆண்டுகளுக்கு முன் இந்நூலின் முதற் பதிப்பு 'கலைமகள்' காரியாலயத்தினரால் வெளியிடப்பட்டு அமோகமாக விநியோகமாயிற்று. முற்ற விநியோகமான பின், சுமார் கால் நூற்றாண்டுக் காலமாக இன்றளவும் ஏராளமான வாசகர்கள் நூற்பிரதி கோரிவந்தபோதிலும் இன்றுதான் இரண்டாவது பதிப்புக் கொண்டுவரக் கண்ணனருள் கூட்டு வித்திருக்கிறது. குறைந்த விலையில் மஹாத்மாக்களின் சரிதை நூல்களை வெளியிடுவதில் பெயர் பெற்றுள்ள திவ்ய வித்யா டிரஸ்டினர் இப்பதிப்பை வெளியிட்டிருப்பது மகிழ்ச்சிக்குரிய அம்சம்.*

*இப்பதிப்பில் முந்தைய முகவுரையைச் சில விஷயங்கள் கூட்டி அளித்திருக்கிறேன். நூலினுள்ளும் சில மாற்றங்கள் செய்திருக்கிறேன்.*

*இவ்விரண்டாம் பதிப்பில் கூடுதலாக இரு அருட் போனஸ்கள் — ஒன்று காஞ்சி முனிவர் ஸ்ரீ மஹா பெரியவாள் அருள்வது; மற்றதை அருள்பவர் பகவான் ஸ்ரீ ஸத்யஸாயி பாபா. 'பிருந்தாவனம்' என்ற அத்தியாயத்தில், ரூபகோஸ்வாமிகள் பெண்ணாய்ப் பிறந்தோரைப் பார்ப்பதில்லை என்று விரதமிருப்பதாக அறிந்தவுடன் மீரா கூறும் வசனம் ஸ்ரீ மஹா பெரியவாளின் அருள்வாக்காகும். 'கல்யாணப் பரிசும் கர்மக் கார்முகிலும்' என்ற அத்தியாயத்தில் தொடங்கி அவ்வப்போது தலைகாட்டி மறையும் முகில் ஸ்வாமி பாபாவின் வாக்கில் முகிழ்த்ததாகும்.*

*முதற்பதிப்புக்கு வினு தீட்டிய அட்டைச் சித்திரத்தை அடியொற்றி இப்பதிப்புக்கு ஓவியப் பணிபுரிந்துள்ள திரு மணிகண்டன், அச்சிட்டுத் தரும் ஸ்ரீசக்ரா பிரிண்டர்ஸ், லேஸர் - அச்சுக் கோத்துள்ள எல்.கே.எம். கம்ப்யூட்டர்ஸார், அச்சுத்தாள்களை நுணுக்கமாகச் சோதித்து உதவியுள்ள சோதரர் ஸ்ரீதரன் முதலிய எல்லா நல்லன்பர்களுக்கும் அன்பே உருவாம் மீரா-கண்ணன் நினைவில் நன்றி கூறுகிறேன்.*

*கண்ணன்-மீரா என்ற அன்பினிமை நம் யாவரையும் அணைத்துக் காக்குமாக!*

**சென்னை – 600 041** **ரா. கணபதி**
**20–3–1999**

# பொருளடக்கம்

# 1. சுருதி சேர்ந்தது!

மைத்தடங் கண்ணினாய்! நீஉன் மணாளனை
எத்தனை போதும் துயில்எழ ஒட்டாய்காண்!
எத்தனை யேலும் பிரி(வு)ஆற்ற கில்லாயால்
தத்துவம்அன்று தக(வு)ஏலோர் எம்பாவாய்!

விஷ்ணு சித்தராகிய பெரியாழ்வாரின் கம்பீரமான குரல் அவரது அருமைக் குமாரி கோதையின் திருப்பாவையை ஓதிற்று. சந்திரகாந்தக் கல் உருகிக்கொண்டிருப்பதுபோல் ஆழ்வாரின் ஆழ்ந்த குரல், கம்பீரத்திலும் கசிவு நிறைந்து, கோலோகத்தில் நிரம்பியது.

ஆகா! கோலோகம்!

அதன் பெருமையை யார் சொல்ல முடியும்?

சைவர்களுக்குக் கைலாயம் எப்படியோ, வைஷ்ணவர் களுக்கு வைகுண்டம் எப்படியோ, முருகனடியார்களுக்குக் கந்தவெற்பு எப்படியோ, தேவியின் பக்தர்களுக்கு மணித்வீபம் எப்படியோ அப்படியே மதுர மோகனக் கண்ணனின் மதுர மோகன கீதத்தில் கரைந்த பக்தர்களுக்குப் பரமபதமாக விளங்குவது கோலோகம்.

'புலன்கள் யாவும் பசுக்கள்; அவற்றைக் கண்டபடி திரியாமல் அடக்கினால் பாலாகிய அமுத அநுபவத்தைப் பொழியும்' என்று சித்தர் பாடினார். நமக்குள்ளேயே இந்தப் பசுக்களின் கோலோகம் இருக்கிறது. அவை பொழியும் பாலாகிய பாலகனும் இருக்கிறான். அந்தப் பாலும்கூட இன்னொரு பாலைப் பொழிகிறது — குழலின் வழியாக கோபாலன் பொழியும் கானப் பால் அது. ரஸமாகிய பால் அவன் எனில், அந்த ரஸத்துக்கும் ரஸமான கானாமுதமே ராதை. ரஸம் அவன்; ரஸிகை அவள். இவற்றில் ஒன்றின்றி மற்றதில்லை.

ராதையுடன் கண்ணன் கூடியிருக்கும் அந்தப்புரத்தின் வெளியே அடியார்கள் குழுமியிருக்கின்றனர். 'ராதையுடன் கண்ணன் கூடியிருக்கிறானென்றால் அழகுடன் அன்பு கூடியிருக்கிறது என்பது பொருள்; இசையுடன் லயம் கூடியிருக்கிறது என்பது பொருள்; சொல்லொடு பொருள்

கூடியிருக்கிறது என்பது பொருள்; பரமாத்மாவுடன் ஜீவாத்மா கூடியிருக்கிறது என்பது பொருள்'—இப்படியெல்லாம் பகுத்துச் சொல்பவர்கள் உண்டு. ஆனால் கோலோகத்தில் ராதா-கிருஷ்ணர்களின் அந்தப்புரத்துக்கு வெளியே காத்து நின்ற கிருஷ்ண பக்த சிகாமணிகள் இந்தத் தத்துவங்களையெல்லாம் தேடி நிற்கவில்லை. அனந்த கலியாண குணங்களும் கூடிய சர்வாங்க சுந்தரனையும் பகவத் பிரேமையில் நனைந்த பரம கல்யாணியையும் கண்களாரக் காணத்தான் அவர்கள் காத்திருந்தார்கள்.

வைகறை வேளையில் மூவுலகத் தம்பதியைத் துயில் எழுப்பு முகமாகவே பெரியாழ்வார் திருப்பாவைப் பாசுரம் ஓதினார்.

உள்ளே புன்னை மரத்தடியில் ஆதிசேஷ வடிவான மஞ்சத்தில் கண்ணனும் ராதையும் கண்வளர்ந்திருந்தனர். அவன் நீலக் கடலலை; அவள் அதன் வெண் நுரை. அவன் நீல ஆகாசம்; அவள் அதில் நிலவும் நிலவு. அவன் நீலமலை; அவள் அதன் சிகரத்தில் பதிந்த வெண்பனி. பச்சைப் பத்திரத்தினிடையே அல்லி மலர் பரிசுத்தமாக ஓங்கி எழுந்திருப்பதுபோல் கண்ணனின் திருமார்பில் கையை ஊன்றி எழுந்திருந்தாள் ராதை.

ராதையைப் பற்றி எழுதி முடியுமா? வாக்குக்கு வராத அன்பின் உருவம் அவள் என்பதால் சாட்சாத் சுகப்பிரம்மமே பாகவதத்தில் அவளைப் பற்றிப் பாடாது விட்டு விட்டபோது நாம் அவளை வருணிப்பது எப்படி?

விஷ்ணுசித்தரின் கனத்த குரல், கனிந்த குரல் கனக மயமான கதவைத் தாண்டி வந்து ராதையின் காதுகளில் புகுந்தது. பரமாத்மாவுக்குள் சொக்கிச் செருகிக் கிடந்த புனித ஜீவாத்மாவின் ஐக்கிய நிலை கலைந்து, அது எழுந்தது.

மைத்தடங் கண்ணினாய்! நீஉன் மணாளனை
எத்தனை போதும் துயில்எழ ஒட்டாய்காண்!
எத்தனை யேலும் பிரி(வு)ஆற்ற கில்லாயால்
தத்துவம்அன்று தக(வு)ஏலோர் எம்பாவாய்!

ராதா தேவிக்கே ஆச்சரியமாக இருந்தது. 'ஆண்டாளாகப் பிறந்து தானே பாடிய பாட்டுத்தான் அது! அதுவே இன்று தன் நெஞ்சை அள்ளுகிறது! அள்ளுவது மட்டும்தானா? அறுப்பது போலக்கூட இருக்கிறதே!'

'கண்ணா, கண்ணா!'' என்று நாயகனைத் தட்டி எழுப்பினாள் ராதிகா. சிவமாகக் கிடக்கிற வஸ்துவைச் சக்திதான் தட்டி எழுப்பி உலகின்புறம் திருப்பி அருள் சுரக்க வைப்பது வழக்கம்!

ராதையின் திருநாமத்தை ஜபித்தவாறே விழித்தான் வாசுதேவன்.

"கண்ணா, அடியார்கள் யாவரும் வந்திருக்கிறார்கள். அவர்களுக்கு நல்வரவு சொல்லி வரவேற்பாய்! அதே சமயத்தில் எனக்கு விடைகொடுத்தும் அனுப்பிவிடு!'' என்றாள் ராதை. அவளுடைய தொண்டை கரகரத்தது.

வெள்ளைச் சங்கத்தின் உட்புறங்களில் செம்மை படர்ந்திருப்பதுபோல் அவளது முகத்தில் சிவப்புப் பரவலாயிற்று. கண்ணனுக்கு மறுபுறமாக முகத்தைத் திருப்பிக்கொண்டாள்.

ஆனால் அவன் எங்கெங்கும் பரந்த முகமுடையவன் அல்லவா? இவள் முகத்தைத் திருப்பிக்கொண்ட திசையிலும் அவனது வதனமே தெரிந்தது.

கதிரவனைக் காணாவிட்டால் கமலம் வாடிவிடும் என்பதை மட்டும்தான் கவிகள் பாடியிருக்கிறார்கள். கமலங்கள் இல்லாவிடில் கதிரவனும் வாடிவிடுவான் என்பதை யாரும் பாடவில்லை. ஆயினும் கண்ணனுக்காக ராதை துடித்ததற்கு இம்மியும் குறைவில்லாமல் அவன் அவளுக்காகத் துடித்ததை ஜயதேவரும் சண்டீதாசரும் பாடியிருக்கிறார்களே! ராதை தன்னைவிட்டுப் போகிறாள் என்பதைக் கண்ணனால் தாங்க முடியுமா?

"ஸ்ரீமதி, என்ன பேச்சுப் பேசினாய்! உனக்காவது விடை தரவாவது! என்மீது உனக்கு என்ன கோபம்?" என்றான் கண்ணன்.

"கோபம்தான் கோபாலா! இத்தனை அடியார்கள் இருக்க நீ என்னை மட்டும் அதிகமாக விரும்புகிறாய் என்பதில் எனக்குக் கோபம்தான். 'எனக்கு அனைவரும் சமம்' என்று தனஞ்ஜயனிடம் நீ கூறியதற்கு மாறாக என்னிடம் அதிகப் பட்சத்துடன் இருக்கிறாய். உன் சமத்துவத்தைக் குலைப்ப வளாக நான் ஏன் இருக்கவேண்டும் என்பது என் குறை. அதோடு இன்னொன்று: நீ என்னிடம் அதிக அன்பு காட்டுவதாலேயே நான் உன்னிடம் அன்பு காட்ட முடியாத படியும் செய்துவிட்டாய்!" என்றாள் ராதை.

"ஸ்ரீமதி, நீ இப்படியெல்லாம் பேசினால் இந்த ஆயப் பிள்ளைக்குப் புரியுமா?" என்றான் கண்ணன். இது வெறும் மாயப்பேச்சு அல்ல! பரம தத்துவங்களைக் கூறிய கீதாசாரியனாயினும் கண்ணன் எளிமையில் மனம் வைத்து விட்டானாயின் பச்சைக் குழந்தையாக மாறிவிடுவான்.

"கோவிந்தா, நீ என்னிடம் அதிக அன்பு காட்டுவதால் எனக்கும் எல்லையற்ற அன்பு பொங்குகிறது. அதன் விளைவாக நான் உன்னோடு ஐக்கியமாகி விடுகிறேன். ஐக்கிய நிலையில் நானே அன்பாகி விடுகிறனே அன்றி, உன்னிடம் அன்பு என்ற ஒன்றைக் காட்டி, அதை விலகி நின்று பார்த்து மகிழ முடியவில்லை. உன்னிடமிருந்து இம்மியேனும் பிரிந்திருந்தால்தானே உன் அன்பையும் அழகையும் நான் ரஸிக்க முடியும்? உன்னோடு ஐக்கியம் அடைவதால் நான் அடைகிற நஷ்டம் எனக்குத்தான் தெரியும். ஆனால் இதோ பெரியாழ்வாரோ நான் உன்னைச் சிறிதும் பிரிந்திராமல் இருப்பது நியாயமல்ல என்று என்னைக் கோபித்துப் பாடுகிறார். உன்னை நான் பிரியாதிருப்பது 'தத்துவமன்று' என்கிறார். உன்னோடு அப்படியே சேர்ந்து ஐக்கியமாகி விடுவதுதான், 'தத்'தும் 'த்வம்'மும் ஒன்றுவதுதான், 'தத்துவம்' என்று வேதாந்திகள் சொல்வார்கள். ஆனால், அழகை அநுபவிக்க அவாவும் பக்தர்களோ, 'த்வம்' பிரிந்திருந்தால் தான், 'தத்'தை அநுபவிக்க முடியும் என்கிறார்கள். 'மைத்தடங் கண்ணினாய்' என்று ஆழ்வார் என்னை அழைப்பதிலும் கூடப் பொருள் இருக்கிறது. நிரஞ்சனனாகிய உன்னையே அஞ்சன மாக்கிக் கோபியராகிய நாங்கள் நயனத்தில் தீற்றிக் கொண்டிருக்கிறோம். எங்கள் கண்ணுக்கு மை அழகு ஊட்டுவதை உலகம் காணலாம். ஆனால் அனைத்தையும் காணும் எங்கள் கண்கள், தன்னிலேயே தீற்றிய மையை எப்படிக் காணமுடியும்? அழகை அநுபவிக்கும் அநுராக தசையில் பிரிவுதான் வேணும் கண்ணா!" என்றாள் ராதை.

கண்ணன் கலகலவென்று சிரித்தான்.

"நானாகவே நீயும் ஆகிவிடுகிற அத்வைத நிலையைக்கூட அழகுணர்ச்சிக்காகத் தியாகம் செய்ய ஆசைப்படுகிறாய். என்னோடு ஐக்கியமாகி விடாமல் ஓர் இழை விலகியிருந்தே, ஒதுங்கியிருந்தே என்னை ரசிக்கப் பிரியப்படுகிறாய். நீ என்னிடம் ஒடுங்கி விட்டால் உலகமே இல்லை; ஒதுங்கினால் தான் உலகம். உலக லீலை வாழவேண்டும் என்றே நீ இப்போது ஒதுங்க ஆசைப்படுகிறாய். கோலோகத்தை விட்டு

பூலோகத்துக்குச் செல்ல ஆசைப்படுகிறாய். என்னை இவ்வளவு காலம் நீ ஒருத்தியே சுவீகரித்துக் கொண்டது தவறு என்று நினைத்து அதற்குத் தண்டனையாக என்னைப் பிரிந்து எத்தனை தாபப்பட முடியுமோ அவ்வளவும் பட ஆசைப்படுகிறாய். அப்படித்தானே?" என்றான் முரளீதரன்.

"ஆம், மாதவா! பிரிவுத் துயர் மட்டுமின்றி உலகில் இன்னும் என்ன என்ன துயரம் உண்டோ அவ்வளவையும் படவேண்டும் என்று ஆசையாக இருக்கிறது. உலகத்து மக்களின் கவலையே நினைவில்லாமல் உன் சங்கீத வலையில் விழுந்ததற்குப் பிரதியாக அவர்களின் துன்பங்களை யெல்லாம் அநுபவிக்க ஆசைப்படுகிறேன்..."

வாசுதேவன் இடைமறித்தான்: "ஸ்ரீமதி, அதுதான் உன் பெருமை. துயரங்கள் தீர்ந்து நித்திய ஆனந்தம் பெறுவதற்காக மற்றவர்கள் என்னைச் சேரவேண்டுமெனத் தவமிருப்பார்கள். ஆனாலும் நீயோ என்னிடமிருந்து பிரிந்து நித்தியானந்தத்தைத் துறந்து துயரப்படுவதையே பிரார்த்திக்கிறாய். சீதையாகப் பிறந்து துன்பத்தின் எல்லையை அநுபவித்தபின் கடைசியில் முடிசூடிக் கொண்டாயே! அப்போதும்கூட உனக்குத் துக்கம் அநுபவித்ததில் திருப்தி ஏற்படவில்லை. 'வனத்துக்கு மீண்டும் போக வேண்டும் என்பதே எனக்கு மசக்கை' என்றாய். அதற்கு அநுசரணையாகவே அபவாதத்தை உன்மீது சுமத்தி உன்னைக் காட்டுக்கு ஓட்டினேன். அந்த இன்னல்களையெல்லாம் அநுபவிக்க மீண்டும் ஆசை வந்துவிட்டதா? என்னை இவ்வளவு கொடியவனாக்கிப் பார்ப்பதில் உனக்கு என்ன திருப்தி?"

ராதிகா பதில் பேசவில்லை. கோவிந்தனுக்கே அப் பதில் தெரிந்ததுதானே? அவள் துயரம் அநுபவிக்கிறாள் என்றால் உலகத்தின் துயரில் ஒரு பங்கினைத் தாங்கிக் கொள்கிறாள். எனவே அவள் ஒருத்தியின் துயரத்தை அவன் கடைசியில் தீர்க்கும்போது உலகம் முழுவதன் துயரத்தையும் அந்த அளவுக்குத் தீர்த்து விடுகிறான். உலகோர் ஏன் துன்பப்படவேண்டும்? அதாவது விச்வ வேதனை என்று ஏன் உண்டாகவேண்டும்? தாங்கள் செய்த பாப கர்மத்துக்காகவே உலகோர் துயருறுவது. ஆண்டவனின் நீதி நெறிப்படி புண்ணியம் செய்தோர் இன்பமும், பாபம் செய்தோர் துன்பமும் உறத்தான் வேண்டும். உறத்'தான்' என்றாலும் அவன் நீதிபதியாயிருப்பது மாத்திரமின்றிக் கருணையாளனு மாதலால், நீதியை இளக்கி, வாஸ்தவத்தில் மக்கள் தமது பாபத்துக்காகப் பட வேண்டிய துன்பத்தை ஓரளவு குறைத்தே

தருவான். அதுவும் போதாதென்று, அவ்வப்போது உலகின் பாப பாரத்தை மேலும் குறைக்க அக் கருணா சக்தியான அவனது அன்பு ஸதியே மக்களில் ஒருவராகப் பிறவி கொண்டு, அதில் இன்னொரு பங்கைத் தனது அந்த அவதார வாழ்வில் தானே பெரும் துன்பங்களை அநுபவிப்பதன் மூலம் தீர்த்துவைக்கும். விச்வ வேதனையை, லோகத்தின் பாபச் சுமையை ஓரளவு குறைக்க இது கருணையன்னை புரியும் மகாத் தியாகம். முடிவில் யாவும் அவன் செயலேயானதால், அவ்வவதாரத்தின் துன்பத்தை அவன் இறுதியாகத் தீர்த்துத் தன்னிடம் சேர்த்துக் கொள்கையில் லோக பாபத்தையும் அதன் விளைவான விச்வ வேதனையையுமே குறைத்துவிடும் பெரிய இன்னருளையாக்கும் புரிந்துவிடுகிறான்!

இதையெல்லாம் கண்ணன் அறியானா? 'தான் லோகத்தின் பாபத்தையும் சோகத்தையும் குறைக்க வேண்டும் என்பதற்காக அவள் தனக்கு அளிக்கும் வரமே இது; தன்னைக் கொடியவனாக்கிப் பார்க்கும் கொடுமையல்ல' என்பது அவனுக்குத் தெரியாதா?

"வரதா, வரம் தந்தாயல்லவா?" என்றாள் ஸ்ரீமதி.

"தருவதாவது? நீயே எடுத்துக்கொண்டு விட்டாயே!" என்றான் வேணுகோபாலன்.

பலபலவென்று ராதையின் முகம் மலர்ந்தது.

ஜணஜணவென்று அந்தப்புரக் கதவும் திறந்தது.

கம்மென்று துளசியின் மணம் எங்கும் பரவியது.

'ம்ஹா!' என்று பசுக்களின் கம்பீர கோஷம் கோலோகத்தைப் பூரணமாக்கியது.

"ராதே சியாம்! ராதே சியாம்!" என்று ஜபித்தபடி அடியார்கள் அந்தப்புரத்துக்குள் பிரவேசித்தனர்.

வசுதேவரும் தேவகியும் நந்தகோபனும் யசோதையும் குந்தியும் முன்வந்து ராதா-கிருஷ்ணரை வாழ்த்தினர். நாரத மாமுனியும் வியாசரும் சுகரும் உத்தவரும் அக்ரூரரும் குசேலரும் கர்க்காசாரியரும் அத்தம்பதியோடு உள்ளத்தில் இழைந்து, வாழ்த்துவதற்கு வாக்கிழந்த நிலையில் நின்றனர்.

சகாதேவனும் அர்ஜுனனும் பாஞ்சாலியும் ஆழ்வாராதிகளும் ஆசாரிய புருஷர்களான சைதன்யமகாப்பிரபு போன்றோரும், நாமதேவரும் சக்குபாயும் நரஸிமேதாவும் போதனாவும் வித்யாபதியும் வில்லிப்புத்தூராரும் இன்னும் எண்ணற்ற அடியார்களும் ராதா-கிருஷ்ண தரிசனத்தில்

புளகித்து நின்றனர். விதுரரோ இவ்வளவிலும், 'வருகலாமோ?' என்ற பாவத்தில் கதவத்தின் வெளியிலேயே ஒடுக்கமாக நின்றார்.

ஜயதேவர் அஷ்டபதிகளைப் பாடினார். அவரது பிரியபத்தினி பத்மாவதி அபிநயம் பிடித்து ஆடினாள்.

லீலாசுகர் கிருஷ்ணகர்ணாமிருதம் பாடினார். ஆதியில் அவருக்கு ஆசைநாயகியாக இருந்து, பின்னர் ஞான குருவான சிந்தாமணி நேத்ராமிருதமாக ஆடினாள்.

சண்டீதாசர் ராதாகிருஷ்ண லீலைகளைப் பாடினார். அவரது துணிகளை வெளுத்ததோடு மனத்தையும் வெளுக்கச் செய்த சலவைக்காரி ராமி ஆடினாள்.

கண்ணனே தன் கனியதரத்தில் குழலைப் பொருத்திக் கொண்டான். கீதை தந்த வாயிலிருந்து கீதம் வழிந்தது. ராதா தேவி ஆடினாள்.

ஆகாயவெளியில் பிரபஞ்ச கோளங்கள் யாவும் ஆடுகிற பிரம்மாண்ட நாட்டியம் அது. அணுவுக்குள் பரமாணுக்கள் ஆடுகிற அதிசூட்சுமமான ஆட்டம் அது.

கண்ணனின் கருங்குழலில் அணிந்த மயிற்பீலியிலிருந்து ஏழு வண்ணங்களும் மின்னுவது போலவே அவனது வாயில் பொருந்திய வேய்ங்குழலிலிருந்து ஏழு சுரங்களும் உதிர்ந்தன. ராதையின் காற்சிலம்புகளில் உதித்த லயத்தில் அக்குழலின் இசை கலந்தது. குலுங்குகின்ற அவளது நூபுரங்களிலிருந்து பளீர் பளீரென்று வீசிய ஒளித் துகள்களிலேயே சங்கீதமும் தாளமும் கரைந்தன. அதிலேயே ராதிகாவும் கரைந்து விட்டாள்.

"மஹராஜ், தேவியுடன் நானும் செல்லவேணுமே!" என்று கோலோக நாயகனிடம் முறையிட்டுக் கொண்டாள் ராதையின் பிரிய சகியான லலிதை.

"ஆம், நான்தான் ராதையைப் பிரிந்திருக்க வேண்டு மெனில் உனக்கும் ஏன் அந்தத் துர்ப்பாக்கியம்? சென்று வா, செல்வி!" என்று அவளை ஆசீர்வதித்தான் அச்சுதன்.

தீனமான கண்களுடன் காமதேனு, தன் முகத்தைத் தூக்கி கோபாலனைப் பார்த்தது.

"நீயுமா என்னை விட்டுப் பிரிவதற்குப் பிரியப்படு கிறாய்? வேண்டாம் கண்ணே!" என்றான் மூவுலகத்துக்கும்

துணை நிற்பவன். அன்பின் துணையைத் தேடி நிற்கிறவன் அல்லவா?

காமதேனு தன் முகத்தைத் தொங்கப் போட்டுக் கொண்டது. கண்ணனின் கானரஸம் கனத்து அதன் தலையில் நிரம்பும் போது அது இப்படித்தான் தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டு நிற்கும்; அப்போது அதன் மடி திறந்து பால் பொழியும். ஆனால் இப்போதோ அதன் கண்களே திறந்து நீரைப் பொழிந்தன.

காமதேனுவின் இரு கொம்புகளுக்கிடையே கோவிந்தன் தன் பட்டு விரல்களை வைத்துத் தடவிக் கொடுத்தான். அவன் அணியும் மயிற்பீலியால் வருடிவிடுவதைவிட மிருதுவாக இருக்கும் அந்த ஸ்பரிசம். அந்த ஸ்பரிச ஆனந்தத்தில் காமதேனு குதித்துத் தாண்டவமாடுவது வழக்கம். ஆனால் இன்று அது தாண்டவமாடவில்லை. ஆடாமல் அசையாமல் ராதிகா தேவியை நினைத்து நின்றது.

"காமதேனு! ஆடமாட்டாய்? சரி சரி, நீயும் ஒரு நாள் தாண்டவமாடத்தான் போகிறாய்!" என்றான் கண்ணன், வருங்காலத்தில் என்றோ ஒரு நாள் நடக்கவிருக்கும் சம்பவத்தை நினைந்தவனாக.

நீலோத்பலத்துக்குள்ளிருந்து கேசரங்கள் வெளிப் படுவதுபோல் அவனது நீலத் திருமுகத்தில் ஓடிய கோலத் திருநகையில் பற்கள் ஒளிவிட்டன.

* * *

'ஆகா, அதோ வானமண்டலத்தில் என்ன அற்புதமான ஒளித் துகள்கள்!' என்று வியந்தார் பிருந்தாவனத்தில் யமுனாதீரத்தில் காலை அநுஷ்டானங்கள் செய்துகொண்டிருந்த ரூப **கோஸ்வாமி**. ஜீவ **கோஸ்வாமி** என்றும் சிலர் சொல்வார்கள். பெயர் எதுவானால் என்ன? உண்மையான **கோஸ்வாமி**யாக மாலவனிடம் மனம் புதைத்தவர் அவர்.

'ஒளித்துகள்களா? அல்லது ஒலித்துகள்கள்தாமா?' என்று கூடப் புரியாத ஓர் அதிசய அநுபவம் அவருக்குக் கிட்டியது. 'மயில் குயிலாச்சுதடி' என்று தமிழகத்துத் தவயோகி பாடிய அதிசய அநுபவம் அது! விந்துவும் நாதமும் ஒன்றும் விந்தை அநுபவம்!

துகள்கள் யாவும் ஒன்று திரண்டு தாரகை வடிவாயின். வானுலகப் பூப்போன்ற அந்த நட்சத்திரம் 'சரசர' வென்று

பூவுலகை நோக்கி வந்தபோது, நீலவானாக நிற்கும் நாயகன் கழுத்தில் ஒரு சரத்தை அணிவித்தாற்போலவே தோன்றியது. நில உலகுக்கு அருகே வந்ததும் தாரகை மறைந்தது.

'பரம உத்தமமான ஒரு ஜீவன் எங்கோ ஜனித்திருக்கிறது!' என்று தமக்குத் தாமே சொல்லிக்கொண்டார் ரூப கோஸ்வாமி.

தாரகை மறைந்த திசை நோக்கித் தண்டனிட்டார்.

அந்தத் திசையில் ராஜஸ்தானத்தைச் சேர்ந்த மேர்தா என்னும் நகரத்தில் அதே சமயத்தில் இளைய ராணி சந்திரமுகி தேவி, சந்திரப்பிஞ்சு போன்ற பெண்குழந்தை ஒன்றைப் பெற்றெடுத்தபோது—

பொழுதும் நன்கு புலர்ந்தது!

இங்கே யமுனாதீரத்தில் பட்சிகள் உதயராகம் இசைத்தன. மந்தமாருதம் வீசிற்று.

கோஸ்வாமி முகுந்த நாமத்தை மனத்தில் வைத்துத் தம்புராவை மீட்டினார். அதன் தந்திகளில் கரைந்திருந்த ராதையின் பிரிய சகி லலிதை நாத கர்ப்பம் அடர்ந்த ஜங்காரத்தை எழுப்பினாள்.

சுருதி சேர்ந்தது!

## 2. இசை பிறந்தது!

மேர்தாவில் சந்திரப்பிஞ்சாக நாம் கண்ட பெண் குழந்தை இன்று பூரண சந்திரனாக வளர்ந்து மேவார் சாம்ராஜ்யத்தின் தலைநகரான சித்தோர் அரண்மனையின் உப்பரிகையில் தன்னந் தனியாக உலவிக்கொண்டிருக்கிறாள்.

ஆனால் பூரணசந்திரனைக் கார்மேகம் மூடிக் கொண்டிருக்கிறது. கார்மேக வண்ணனின் நினைவு அவளைச் சூழ்ந்து வதைக்கிறது.

வசந்தகாலம்; மாலை மங்கும் வேளையில் சம்பகமும் சமேலியும் பூத்துக் குலுங்கிச் 'சுரீல்' என்ற மணத்தை உத்தியானவனம் முழுதும் நிரப்புகின்றன.

திடீரென வெகு அண்மையிலேயே சூரிய மணம் வருகிறது! அவள் சிந்தனை கலைந்து தன் சுற்றுப்புறத்தின் நினைவுக்கு வருகிறாள்.

'திவாதாரி'கள் எனப்படும் சேடிகள் சுகந்த தைலம் வார்த்த ஏராளமான தீபங்களைக் கொண்டுவந்து மாடத்தின் கைப்பிடிச் சுவர் முழுதிலும் அதனை ஒட்டி அமைத்துள்ள வளைவுகளிலும் வைக்கிறார்கள்.

தன் சேலையின் நுனி அந்தத் தீபங்களில் படக்கூடும் என்பதைக்கூடப் பொருட்படுத்தாமல் அவள் நின்ற இடத்திலேயே சிலையாகச் சமைந்திருக்கிறாள். தாரகைகளுக் கிடையே கருவானம் போலச் சுற்றிலும் தீபங்கள் தீக் கொழுந்தை ஆட்டிக் கொண்டு ஜொலிக்கும்போதே அவற்றுக்கு இடையில் தான் ஓர் இருளாக நிற்பதுபோல் அவளுக்குத் தோன்றுகிறது.

"ராணிஜி, உற்சவத்துக்கு வரவில்லையா?" என்று தயங்கியபடியே கேட்கிறாள் ஒரு சேடி.

'இல்லை' என்பதற்கு அடையாளமாகத் தலையை மட்டும் ஆட்டுகிறாள் அவள்.

"நீங்கள் வராவிட்டால்..." மென்று விழுங்கிக்கொண்டு சேடி தொடருகிறாள்: "நீங்கள் வராவிட்டால் பாய்ஜிராஜ்..... கோபித்துக்கொள்வார்கள்."

பாய்ஜிராஜ் என்றால் ராஜமாதா; அதாவது மேவார் மாமன்னர் கும்பாஜி மகாராணாவின் அன்னை. ஆனால் ராஜமாதாவின் கோபத்தைப்பற்றி அவள் கவலைப்பட்ட தாகத் தெரியவில்லை. மௌனமாகவே இருக்கிறாள். திவாதாரிகள் திரும்பிவிடுகிறார்கள்.

தூரத்தில் பெண்களின் கூத்தாட்ட ஒலி கேட்கிறது.

ஆம், இன்று மதனத் திரயோதசி. காமவேளுக்கு விழா வெடுத்துச் சித்தோரின் ராஜபுதன நாரீமணிகள் அமர்க்களம் செய்கின்றனர்.

**அன்பனே, மலர் அம்பனே, வாழ்க!**
**மச்சக் கொடியோனே, மனம்பிளக்கும் கொடியோனே, வாழ்க!**
**சித்தர்கள் சித்தமும் சிதைத்திடும் சிங்கமே, வாழ்க!**
**அரிஅயன் அரனையும் அமரர் குழாத்தையும்**
**ஆட்டிப் படைத்திடும் அனங்கனே, வாழ்க!**

உப்பரிகையில் தன்னந் தனியாக உலவிக்கொண்டிருந்த முகில் மூடிய மதியத்துக்கு இவர்கள் மதனனிடம் கோரும் வரம் அருவருப்பாக இருந்தது. காதுகளைப் பொத்திக் கொண்டாள் அவள்.

வெளி ஓசை அடங்கிற்று. ஆயின், அவளுக்கு உள்ளேயிருந்து குரல் கேட்கத் தொடங்கியது. நூறு நூறு ஆண்டுகளுக்குமுன் ஸ்ரீவில்லிபுத்தூரில் பட்டர்பிரானின் இல்லத்தில் கோதைநாயகி எழுப்பிய குரல் அது. அவளும் மதனனிடம் தான் பிரார்த்தித்துக்கொண்டாள்.

'மானிடவர்க் கென்று பேச்சுப்படில்
வாழகில்லேன் கண்டாய் மன்மதனே!'

ஆண்டாள் பாக்கியசாலி! அவளை மானுடரின் பிரேமைக்கு ஆட்படுத்தாமல் காத்தான் காமவேள். ஆனால் இவள்...?

'மானிடவர்க்கென்று பேச்சுப்படில் வாழகில்லேன்' என்ற சொற்கள், தீப்பொறிகள்போல் அவள் நாபியிலிருந்து குமுறிக்கொண்டு வெடித்துத் தேகம் முழுதும் வியாபித்தன. 'வாழகில்லேன்' என்று ஆண்டாள் தீர்மானமாகப் பாடினாள். இவளோ மானிடனுக்குத் தாரமானபின் இன்னமும் வாழ்கிறாள். ஆனால் இதுவும் ஒரு வாழ்வுதானா?

வெளிப் பாட்டைக் கேளாமல் காதைப் பொத்திக் கொண்டதாலும் அமைதி கிட்டிவிடவில்லை! உட்குரல் அவளை வதைத்தது. செவியை அழுத்தியிருந்த விரல்களை எடுத்தாள். அடுத்த விநாடி ஆனந்தக்கடலில் ஆழ்ந்தாள்.

ஆகா, இதோ கேட்கும் குரல் — ஆயிரம் பல்லாயிரம் ஆண்டுகளாகப் பழகிய குரல் — இது அவனுடையதுதானே?

உப்பரிகையிலிருந்து எட்டிப் பார்த்தாள்.

ஒரே கணம்தான். அந்த ஒரு கணத்திலேயே, மாடத்துக்குக் கீழே நந்தவனத்திலே வந்து நிற்கும் நந்த பாலனைப் பார்த்துவிட்டாள். தேகத்தின் ஒவ்வொரு மயிர்க்காலும் கண்ணாகிவிட்டாற்போல் ஊன்றி ஊன்றி, ஊறி ஊறிப் பார்த்து விட்டாள்.

நீல வெள்ளமாக நின்ற அந்தப் பிள்ளையின் உருவம் மங்கலான முன்னிரவிலும் தெற்றெனத் தெரிந்தது. இது இருள் நீலம் அல்ல. அக்கினி ஜ்வாலையின் உச்சியில் பிரகாசிக்கும் ஒளி நீலம் இது. அவனது குழல் முடியில் கொத்துக் கொத்தாக மயில் தோகை. மயிலிடமேகூட இந்தத் தோகை இவ்வளவு இயல்பாகப் பொருந்தியதில்லை. இன்னும் ஏதேதோ காட்டுப் பூக்களையெல்லாம் வாரிப் போட்டுக்கொண்டிருக்கிறான். ஆகா! அவனது மெல்லிய செவிமூலத்தில் சொருகப்பட்டிருக்கிறதே, அந்தக் கர்ணிகார மலர் என்ன பாக்கியம் செய்ததோ?

கழுத்து நிறையக் குன்றிமணி மாலை. துழாய் ஆரமும் அவனது நயமான திருமேனியைத் தழுவுகிறது. மாடுகளின் பின்னங் கால்களைச் சேர்த்துக் கட்டும் முரட்டுக் கயிற்றைத் தன் நுட்பமான இடையைச் சுற்றிக் கட்டிக் கொண்டிருக்கிறான். அதிலே பசுக்களை அழைக்கும் கொம்பையும் அவற்றைத் தட்டிக்கொடுக்கும் குச்சியையும் சொருகிக்கொண்டிருக்கிறான். போதாக்குறைக்குப் புல்லாங்குழல் வேறு! இவையெல்லாம் சேர்ந்து அந்தக் கோமள சருமத்தை உறுத்துமே! இடையில் அன்னை ஆசையாகக் கட்டியுள்ள பட்டு வஸ்திரத்தின் தங்கக் கரைகூட அவன் உடம்பைக் கீறிவிட்டாற்போல் தோன்றுகிறது! பாதுகையும் அணியாத பாதங்கள், பகலெல்லாம் நடந்து நடந்து எப்படி நொந்தனவோ?

பக்தி, ஞானம், யோகம் என்றெல்லாம் உயர்த்திப் பேசுகிறார்கள். ஆனால் இந்தக் குழந்தையோ உழைப்பின் பெருமைக்காக அல்லவா அவதரித்தது? ராஜகுமாரனாக வளரக்கூடிய அவன் வனம் வனமாகக் கன்றுகளை மேய்த்து உழைப்பாக உழைக்கிறானே! மேய்ச்சலை முடித்துத் திரும்பும் இப்போது சற்றே வாடித்தான் காண்கிறான். ஆயர் குலத்திடம் ஆயுள் உள்ளவரை (ஆயுள்தான் இவனுக்கு என்றும் உண்டே!) நன்றியுடன் இருக்க வேண்டும் என்பதற்காக, உப்புக் கரிக்க அவர்கள் வீட்டுச் சித்திரான்னங்களை யமுனைக் கரையில் தோழர்களுடன் கலந்து உண்டதால் இப்போது வியர்த்து நிற்கிறான். பசுக்களின் குளம்புகளினின்று எழும் புழுதி அந்த வியர்வையில் படிந்து, சந்தனக் காப்புக்குமேல் எழிலாக அவனுக்குப் பூச்சு அளித்திருக்கிறது. அந்தத் திருக்கோலத்தில் சகா ஒருவனின் தோள்மீது கையை மடித்து வைத்துக்கொண்டு சாய்ந்து நிற்கிறான்.

அச்...சோ! என்ன அழகு! இந்த மேனி அழகுகளையும் அணி அழகுகளையும் மட்டும் பார்த்தால் போதுமா? அந்த முகத்தின் எழிலை — நெற்றியை, கண்களை, நாசியை, அதரங்களை, கன்னங்களை, முகவாயை — ஜன்ம ஜன்மத்துக்கும் பார்க்க வேண்டாமா?

'வேண்டாம், வேண்டாம், பார்க்கவே வேண்டாம்!' அவளுடைய அந்த ஆனந்த அநுபவ நிலையிலும், அவள் வலிந்து வரவழைத்துக் கொண்டிருந்த ராஜஸ்தான ஸ்திரீ தருமம் அவளுடைய கருத்தில் ஓடிற்று. கருத்தில ஓடியது கரத்திலும் ஓடிற்று. தலையிலிருந்து நழுவியிருந்த முக்காட்டை

இழுத்துப் போர்த்துக் கொண்டாள். அப்போது கண்களில் ஒரு மின்னல் வெட்டிற்று. மின்னலா? இல்லை. அவள் கையைத் தூக்கியபோது, அவளது நீண்ட மெல்லிய விரலில் அணிந்திருந்த மோதிரக் கற்களில் தீபத்தின் ஒளிபட்டு வர்ணஜாலத்தை எழுப்பியிருக்கிறது. ஆனால், அதுவே மின்வெட்டுக்கு மேலாக, வஜ்ராயுதத்துக்கு மேலாக அவளது இதயத்தில் பாய்ந்தது. 'கும்பாஜி' என்று வைரக் கற்களால் பொறிக்கப்பட்ட மோதிரம் அல்லவா அது?

ஆம், அவள் கும்பராணாவின் மனைவி! சாஸ்திர விதிப்படி, அக்கினி சாட்சியாக, பெரியோர்கள் முன்னிலையில் அவனோடு 'ஹாத்லேவா' செய்த கை இது!

பூகர்ப்பமே கொந்தளித்து வெடித்ததுபோல் நடுங்கினாள் அவள். கீழே, புல்வெளியில் நிற்கும் பிள்ளையின் கண்ணில் படக்கூடாது என்ற பதிவிரதா உணர்வுடன் ஸ்தம்பம் ஒன்றின் பின்புறத்தில் மறைந்துகொண்டாள். தன்னிடமிருந்தே விடுபட்டு எங்காவது ஒளிந்துகொள்ள வேண்டும்போல் இருந்தது அவளுக்கு! ஏனெனில், தூணின் பின் மறைந்து கொண்ட பின்பும் அவளது மனம் கீழேயேதான் வட்டமிட்டது. அதை அவளால் அடக்க முடியவில்லை. மனம் காட்டிய வழியில் செவியும் ஓடிற்று. அதையும் அவளால் அடக்க முடியவில்லை.

எப்படி முடியும்?

அவனுடைய குரல் கேட்கிறபோது செவிகளை யாரால் அடைத்துக்கொள்ள முடியும்? ஒவ்வொரு மயிர்க்காலும் செவியாகிக் கேட்கலானாள்.

அவனேதான் பேசுகிறான்! யாருடைய தோள்மீது சாய்ந்து கொண்டிருக்கிறானோ, அந்த ஆயப்பிள்ளையிடம் பேசுகிறான்!

"மதுமங்கள்! முத்தை இழைத்து நெய்தாற்போன்று பாவாடையும் கஞ்சுளியும் துபடாவும் அணிந்துகொண்டு சோகக் கடலில் பிறந்த முத்துப்போல் இங்கே மாடத்தில் ஒரு பெண் நிற்கிறாளே, அவள் யார் தெரியுமோ?" என்றான்.

"அதுதான் மேவார் மகாராணி" என்று மதுமங்கள் மரியாதை தொனிக்கக் கூறுகிறான்.

மதுவாக இனிக்கும், மங்களமாகப் பொலியும் மோகனன் அமிருதக்கடலின் அலைகள் மோதுவதுபோல் சிரிக்கிறான்.

"மேவார் மகாராணியா? இல்லை; அவள் அன்றும் இன்றும் என்றும் மீராதான்... மீ - ரா, மீ - ரா....."

மாடத்தில் மறைந்து நின்றிருந்த மீராவின் உடல் குப்பென்று சிலிர்த்தது! 'எவன் பெயரை உலகில் மாமுனிவர்களும் ஜபிக்கிறார்களோ, அவனே பேதை என் பெயரைச் சுவைத்துச் சுவைத்து, நீட்டி நீட்டித் தன் திவ்வியத் திருவாயால் கூறுகிறான்! அந்தப் பெயருக்கே இப்போது எத்தகைய ஏற்றமான அழகும் தெளிவும் சோகமும் உண்டாகி விட்டன!'

மீரா மீரா என்று அவன் மீண்டும் மீண்டும் கூறிய போதிலும் அவனிடம் ஓடாமல் தன் கால்களைக் கட்டுப் படுத்திக்கொண்டாள், கும்பராணாவின் கற்பரசி.

"கண்ணா, இதென்ன, திரும்பத் திரும்ப இந்தப் பெயரையே பைத்தியம்போல் சொல்லிக்கொண்டிருக்கிறாய்?"

"மது! 'பைத்தியம் போல்' என்று சொல்லாதே! பைத்தியமேதான். ஞானியால்தான் ஞானம் தரமுடியும், வித்வானால்தான் வித்தை தர முடியும், தனிகனால்தான் தனம் தர முடியும் என்றெல்லாம் உனக்குத் தெரியுமல்லவா? அதே போல் பைத்தியம் பிடித்தவனால்தான் பிறருக்கும் பைத்தியத்தைத் தரமுடியும்."

மதுவுக்குப் புரியவில்லை.

மாதவன் விளக்கினான். "மீராவைப் பைத்தியமாக்கி யிருப்பவன் நான்தான் என்றால் என்னையும் பைத்தியம் என்றுதானே சொல்லவேண்டும்?"

"மீராவை நீ பைத்தியமாக்கினாயா? நந்தகுமாரா, எனக்குத் தெரியாத கதையாக இருக்கிறதே!"

"தெரிந்துகொள்ள ஆசைப்படுகிறாயா?"

"நிச்சயமாக!"

மீராவின் உயிர்ப் புறா இறகுகளைச் சடசடத்துக் கொண்டது. 'அவன் — சாட்சாத் அவனே — அபலையான என்னுடைய கதையைச் சொல்லப் போகிறான்!"

வெளியே ஒரு விநாடி மௌனம் நிலவியது.

சம்பகத்தின் மணமும் சமேலியின் மணமும் வெகு தீவிரமாக அந்த ஒரு விநாடியில் பாய்ந்து வந்தன.

'தப்பள தளபள' என்று ஒரு சப்தம் வந்தது.

அது என்ன சப்தம் என்று மீரா ஊகித்தறிந்தாள்.

ஆடாமல் அசையாமல் நின்ற அந்தப்புரத் தடாகத்தில் அவன் கால்களை வைத்து அலைகளை அடிக்கிறான்.

தடாகப் படிக்கட்டில் அமர்ந்துகொண்டு காலை நீருக்குள் விட்டுக் கொண்டு அலை அடிக்கிறான் போலும்! அலைந்து அலுத்த அவனது பாதங்களின் ஆயாசத்தைத் தீர்க்கும் அந்த அலைகள் செய்த பாக்கியத்தை என்னென்பது? அந்தத் தடாகத்திலுள்ள ஒரு மீனாக நான் மாறக்கூடாதா? அவன் கால்களைக் கொத்துகிற சாக்கில் வருடிவிடக்கூடாதா? அவன் பாதத்தில் படியக் கூடவா பதிவிரதா தருமம் குறுக்கே நிற்கும்!

தடாகக் கரையில் தோழனுடன் அமர்ந்துகொண்டு, அலையொலியைப் பழிக்கும் குரலில் அவன் அவளுடைய கதையைச் சொல்லத் தொடங்கினான்.

எங்கோ உப்பரிகையிலிருந்த மீராவின் மெய்க்காதல், நீண்ட நெடுந்தூரம் புவியை அகழ்ந்து இலை நுனிவரை நீரைக் கொண்டு வந்து தரும் வேர் போல, எட்டத்திலிருந்த கண்ணனின் கருப்பஞ்சாற்றுக் குரலை அவளது காதில் — சர்வாங்கத்திலுமே, ஆருயிர்க்குள்ளேயே பாய்ச்சியது.

* * *

மேர்தா கண்ட மாவீரர்களில் ஒருவர் ராவ் தூதா. மண்டோரில் தளபதியாக இருந்த அவர் தமது பராக்கிரமத்தால் மேர்தாவை ஒரு தனி ராஜ்யமாக ஸ்தாபித்தார். சிறிய ராஜ்யம்தான் அது. எனினும், ராஜஸ்தானத்திலிருந்த பெரிய அரசுகளுக்கு அடிமையாக இராமல் சுதந்திரமாக இருந்தது.

தூதாவின் முதல் மூன்று மக்களான மல்தேவ், ராய்மல், வீர்சிங் ஆகியோர் தந்தைக்கேற்ற தனயர்களாக, வீரதிலகங்களாக விளங்கினார்கள். கடைசிப் புதல்வன் ரத்தன்சிங் மட்டும் சற்றே மாறுபட்ட ஒரு பிறவி. போர்க்களத்தைவிட 'டாகுர் த்வார்'தான் அவனுக்கு அதிகம் பிடித்திருந்தது. 'டாகுர் த்வார்' என்பது கிருஷ்ண பரமாத்மாவின் ஆலயம். வீர, தீர, ரண பராக்கிரமர்களான ராஜபுதனத்தார் பொதுவாக வீரத் தெய்வங்களான துர்க்கையையும், மகாதேவனையுமே வழிபடுவர் எனில் இவனோ மதுரக் கண்ணனை வழிபட்டான்.

ரத்தன்சிங் ஊரோடு இருந்து நிர்வகித்து வந்ததால் அவனையே அரசனாகக் கருதினர் மக்கள்.

தந்தையும் மூத்த சகோதரர்களும் ரணகளங்களில் தங்கள் புயவலியைக் காட்டிவரும்போது ரத்தன்சிங் மேர்தாவிலேயே தங்கியிருந்து டாகுர் த்வாரத்தில் பூஜைகள், பஜனைகள், பிரவசனங்கள் நடத்தி வைப்பதில் ஈடுபட்டிருப்பான்.

மேர்தாவில் பூமியை நன்கு அகழ்ந்தால்தான் நீர் கிடைக்கும். களிமண் பாங்கான அடிப் பகுதிகளில் ஊறி வரும் அந்த நீர் ருசியாகவும் இராது. இதைக் கண்டு, ராவ்தூதா மேர்தாவின் சுற்றுப் பகுதிகளைத் தேடித் தேடிப் பார்த்து ஓர் ஏரியை வெட்டினார். தூதா ஸர் (தூதா ஸரஸ்) என்று அதைச் சொல்வார்கள். அதிலிருந்து முதற் கும்பநீர் முகந்து டாகுருக்கு ரத்தன்சிங் அபிஷேகித்த அன்றே,

உள் வறட்சியைத் தீர்க்கும் ஒரு பொய்கையாக, அவன் மனைவி சந்திரமுகி மீராவைப் பெற்றெடுத்தாள்.

கண்ணன் குரல் கரகரத்தது. கதையை நிறுத்தினான்.

இப்போது கண்ணனிடமும் மதுமங்களனிடமும் சிறிது விடைபெற்று, அந்தக் காலத்தின் சமய நிலையைச் சற்றே அறிய வேண்டியது அவசியம்.

பதினைந்தாம் நூற்றாண்டும் பதினாறாம் நூற்றாண்டும் கிருஷ்ணபக்தி வரலாற்றில் பொன்னேடுகளாகும். ஏறக்குறைய இந்த ஒரே காலகட்டத்தில் இந்தியாவின் பல திசைகளில் பல மகாபுருஷர்கள் தோன்றிக் கண்ணனன்னைக் கனியச் செய்தது ஆச்சரியம். அது ஸ்ரீ கிருஷ்ண சைதன்யரில் கனியாய்ப் பழுத்த பாகவத மத காலம். அன்பு, சங்கீர்த்தனம் இரண்டையுமே இரு கண்களாகக் கொண்ட அற்புத மதம் அது. பஜனையும் சங்கீர்த்தனமும் தீர்த்தாடனமும் க்ஷேத்திராடனமும் செய்து கோஸ்வாமிகள் பலர் இந்த சமயத்தைத் தழைக்கச் செய்தார்கள். இதன் வித்து தமிழகத்தில் தோன்றியதே என்பதில் நாம் பெருமை கொள்ளலாம். ஸ்ரீ ராமாநுஜாசாரியரின் சீடரான ஸ்வாமி ராமானந்தர்தான் வட இந்தியாவில் இந்தப் பக்தி வெள்ளத்துக்கு ஆதாரச் சுனையை அகழ்ந்து தந்தார். ஆனால் சிறப்பம்சம், இதில் அத்வைத-விசிஷ்டாத்வைதச் சண்டைகளின்றி, அது பெரும்பாலும் விசிஷ்டாத்வைதம் போன்ற பக்தி சமயமாகவே இருப்பினும் அத்வைதத்தின் நிர்குணப் பிரம்மம், மாயை ஆகியவற்றுக்கும் இடமளித்தது. அதோடு சிவபெருமானை ஒதுக்காமல் சேர்த்துக்கொண்டது. முகமதியரின் ஆட்சி இங்கு

உண்டாக்கியிருந்த இன்னாத சூழ்நிலையில் இந்துக்களிடை பேதப் பிரிவினையை அகற்றி, எல்லாப் பிரிவினரையும் அன்பில் ஐக்கியப்படுத்தும் இனிய சூழ்நிலையை இது ஏற்படுத்தியது. கண்ணபெருமானைப் பரம லளிதமான துதிகளால் போற்றிய ஆதிசங்கரரின் அத்வைத மரபில் ஊறி, 'அத்வைத ஸித்தி' முதலிய பிரமாண நூல்களைத் தந்த ஸ்ரீ மதுசூதன சரஸ்வதியும் அக்காலத்தில்தான் கிருஷ்ண பக்தியைப் பெருக்கெடுக்கச் செய்தார். கிழக்கே வங்காளத்தில் மதுசூதனரும், உத்தர பாரதத்தில் பரம பாகவதரான கபீர் தாஸரும், மேற்கே கூர்ஜரத்தில் வைஷ்ணவ லட்சணங்களின் உறைவிடமான நரஸிமேதாவும், மகாராஷ்டிரத்தில் இரண்டாவது வியாஸர்போல் மதிக்கப்படும் ஏகநாதரும், ஆந்திரமாதாவின் தவப் புதல்வராகப் பிறந்து வடபுலமெங்கும் கிருஷ்ண பக்தியையே மோக்ஷமார்க்கமாக்கித் தந்த வல்லபாசாரியரும், தெற்கே காதுக்குப் பொன்னாக - கர்ண ஆடகமாக - கர்நாடக சங்கீதத்தின் வேரிலேயே கிருஷ்ண பக்தி என்ற நீரைப் பாய்ச்சி வளர்த்த புரந்தரதாஸரும் ஏறக்குறைய ஒரு நூற்றாண்டு இடைவெளியிலேயே அவதரித்தவர்கள் என்பது ஓர் அதிசயம்.

தமிழகம் மட்டும் இதற்குப் பின் தங்கி விட்டதா என்று எண்ணவேண்டாம். பாரதத்தின் இதர பகுதிகள்தான் தமிழகத்துக்குப் பின்தங்கி விட்டன! ஆழ்வாராதிகளின் காலத்திலிருந்தே இங்கே கிருஷ்ணப் பிரேமை செழிப்பாக வளரத் தொடங்கிவிட்டது. அது பல நூற்றாண்டுகளில் ஒரு நெடிய தருவாக ஓங்கிவிட்டது. வித்து முளைத்துச் செடியாகும் வரையில் தினந்தோறும் அதன் வளர்ச்சியைக் கண்களால் காண முடியும். 'ஆகா, என்ன வளர்ச்சி!' என்று வியப்போம். ஆனால் விருட்சமாகி முதிர்ந்து விட்டபின் வளர்ச்சியைப் பார்க்க முடியாது. மௌனமாக அது எவ்வளவோ அதிசயங்களைச் செய்துவந்த போதிலும், 'நேற்று இருந்த விருட்சமேதான் இன்றும் இருக்கிறது' என்று நினைப்போம். பாரதத்தின் பிற பகுதிகளில் கிருஷ்ணபக்தி சிறிய கன்றாக, கண்ணுக்கு வெளிச்சமாக வளர்ந்து வரும்போது, தமிழகத்தில் அது தருவாக நின்று மௌனமாகப் பழங்களைத் தந்துகொண்டிருந்தது. பழச்சாறாக, இதற்கடுத்த பதினேழாம் நூற்றாண்டில் காஞ்சி சங்கர மடாதிபதியாயிருந்த அத்வைத சந்நியாசி மடத்தைத் துறந்து, அத்வைதப் பின்னணியில் பகவந் நாமத்தின் மகிமையைப் பரக்க எடுத்து விரித்துக் கூறி எங்கிலும்

பக்தி வெள்ளம் பெருக்கெடுக்கச் செய்து, 'பகவந்நாம போதேந்திரர்' என்றே பெயர் கொண்டார்.

காவிரியின் மத்தியில் கோதைநாயகி இடம் கொண்டாற் போல் இந்த அன்பு யுகத்தின் மத்தியில்தான் மீராவின் ஜனனம் நிகழ்ந்தது.

ஆனால் இரண்டாற்றின் இடையே மீரா அவதரிக்க வில்லை. ராஜஸ்தானத்தில் ஒருபுறம் கடும் பாறையாக உறையும் அராவலா என்கிற அரவல்லி மலைத்தொடரும் மறுபுறம் பாலைவனமும் சூழ்ந்த கட்டாந்தரைப் பகுதியான மேர்தாவில் பிறந்தாள். அதிலும் ஒரு பொருத்தம் உண்டு. பாறாங்கல்லைப்போன்ற திண்மை பெற்றவர்கள் ராஜபுதன மக்கள். வீர உணர்ச்சிக்கு அவர்கள் தந்த முக்கியத்துவத்தால் இதர உணர்ச்சிகளெல்லாம் வறண்டு பாலைவனமாகி விடாமல் சோலைவனமாக மீரா வந்து உதித்தாள்.

கண்ணன், கதையைத் தொடர்ந்தான்.

பெண்களுக்கு மரியாதை செய்வதில் ராஜபுதனத்துக்கு ஈடு இணை இல்லை. எனினும் 'பெண் குழந்தை' என்றால் வீர ராஜபுத்திரர்களுக்கு அவ்வளவாக ரசிக்காது. போர்க்களத்தில் வாளேந்தவும் வில் எய்யவும் இரு கரங்களைத்தான் அவர்கள் எதிர்பார்த்தார்கள். ஆயினும் ரத்தன்சிங்குக்கு மட்டும் தன் அருமைப் பெண்ணைப் பார்த்தவுடன் உள்ளம் புளகித்தது. அல்லித்தண்டு போன்ற அவ்விரு கரங்கள் வாளையும் வில்லையும் ஏந்தப் போவதில்லை; தம்புராவையும் சிப்ளாக் கட்டையையுமே ஏந்தப் பிறந்தவை என்று அவனுடைய உள்ளுணர்வு கூறியது.

குழந்தையின் எழிலைப் பலர் பலவிதமாகப் புகழ்ந்தார்கள். ஆனால் அன்னை சந்திரமுகியோ அதன் நெற்றியையே பார்த்துப் பார்த்து விம்மிதம் அடைந்தாள். 'நயனங்களையோ நாசியையோ வாயையோ கை கால்களையோ அழகு பார்ப்பதில் பொருள் உண்டு. அவற்றில் ஒரு வளைவு, நெளிவு இவை இருக்கும். நெற்றியில் என்ன அழகைக் காணமுடியும்? அதில் என்ன, ஏற்றமா இறக்கமா?' என எண்ணலாம். இதெல்லாம் இல்லாததாலேயே அதற்கு விசேஷ அழகு. ஒரே சமமாகப் பரவியிருக்கும் நெற்றியைப் பார்க்குந்தோறும் மனத்துக்கு ஓர் அமைதி. குழந்தையின் முன்னுச்சிக் கேசங்களை விலக்கிவிட்டு, அதன் நெற்றியின் விஸ்தாரத்தைப் பார்த்துப் பார்த்து உவகை பூத்தாள்

சந்திரமுகி. கரும்பு வில் போன்ற அதன் அழகிய நீண்ட இரு கரும் புருவங்களிடையே உள்ள மத்தியப் பிரதேசத்தைப் பார்க்கும்போது அனந்த வாழ்வுக்கு அது ஒரு வாயில் போலத் தோன்றும். இரு கண்கள் மட்டுமின்றி மூன்றாவதான ஞானக் கண்ணும் சேருகிற அந்தப் புருவமத்தி, கங்கையும் யமுனையும் சரஸ்வதியும் கலக்கும் திரிவேணிபோல் பாவனமாக இருந்தது. அதில் நீராடியது சந்திரமுகியின் நயனம்.

பன்னிரண்டாம் நாள் குழந்தைக்குப் பெயர் சூட்டும் திருவிழா.

ராஜகுருவைத் தகுந்த பெயர் சூட்டுமாறு கேட்டுக்கொண்டான் ரத்தன் சிங்.

அவர், நட்சத்திரத்தை வைத்துக் கணக்குச் செய்ய ஆரம்பித்தார்.

அதே போதில் யமுனா தீரத்தில் அதிசய நட்சத்திரத்தைக் கண்டு புனித ஜீவன் ஒன்றின் உதயத்தை அறிந்த ரூபகோஸ்வாமியும் மேர்தா வந்து சேர்ந்தார்.

அன்பின் எல்லையை, இசையின் எல்லையை, துன்பத்தின் எல்லையை — அன்புக் கடலை, இசைக் கடலை, துன்பக் கடலைக் குழந்தையிடம் கண்டார் அவர்.

"மீரா என்று பெயரிடுங்கள்" என்றார்.

'மீரம்' என்றால் எல்லை என்று ஒரு பொருள்; கடல் என்றும் ஒரு பொருள்.

மதுமங்களன் கண்ணனின் முகத்தை நோக்கினான். 'ஏன் கதையை நிறுத்திவிட்டான்? எப்போது மீண்டும் வாய் திறப்பான்?' என்று ஆவலுடன் பார்த்தான்.

கண்ணனின் வாய் திறந்துதான் இருந்தது. அவனது அதரங்களும் அசையத்தான் அசைந்தன. மிகவும் மெல்லிய இரகசியக் குரலில், 'மீரா, மீரா!' என்று உச்சரித்துக் கொண்டிருந்தான்.

உப்பரிகையில், தூணின் பின் மறைந்து நின்ற மீராவின் காதுகளில் அந்த இரகசியக் குரலும் பாய்ந்தது! அவளுடைய நரம்புகள் அத்தனையையும் முடுக்கிவிட்டாற்போல் அப்பெயரே அவளது மேனி முழுதும் வியாபித்தது. மேனியையும் பீறிக்கொண்டு அந்த நாதம் வெளிப்படுவது போன்ற உச்சகட்டத்தை அடைந்தபோது,

கீழே கண்ணன் மீண்டும் கதையைத் தொடங்கினான்.

குழந்தைக்குப் பெயர் சூட்டியவுடன் இளையராணி சந்திரமுகி தேவி, அதனை மார்போடு அணைத்துக்கொண்டு கணவனுடன் டாகுர்த் துவாரத்துக்குச் சென்றாள். என்ன தோன்றியதோ? கண்ணனின் பிரதிமைக்கு அடியிலேயே குழந்தையை விட்டுவிட்டாள்.

குழந்தை, 'குவா குவா' என்று அழுதது.

ஆனால் சாதாரணமாக எல்லாக் குழந்தைகளும் அழுகிற அழுகை அல்ல அது. வாழ்நாள் முழுதும் இந்தக் குழந்தையின் அழுகை ஓயப்போவதில்லை. கண்ணனைக் காண்பதற்காகக் குமுறி அழும் அழுகையாக, அவனைக் கண்டவுடன் ஆனந்தத்தில் கண்ணீர் விடும் அழுகையாக, உலகத்தின் இன்னல்களை அநுபவித்துக் கதறும் கதறலாக, உலகத்தோர் இதுவரை காணாத துயரங்களை ஏற்று அலறும் அலறலாக அந்த அழுகையே சாசுவதமாக நீடிக்கப் போகிறது!

தன் பாதத்தில் வந்து கிடந்த பசுந்தளிர்க் குழந்தைக்குப் பொல்லாத கண்ணன் இதைத்தான் பரிசாக வைத்திருந்தான் போலும்! ஆனந்தங்களில் பெரியதான பக்திப் பிரேமானந்தம் கண்டவளுக்கு மாற்றுச் சுவையாக அவன் வைத்திருந்த துயரமோ துயரம்!

மதுமங்கள் குறுக்கிட்டான். "சியாம்! நீதானே அந்தக் கண்ணன்? ஏன் யாரோ மூன்றாம் மனிதரைச் சொல்வதைப் போலப் பேசுகிறாய்?" என்று கேட்டான்:

கண்ணன் இளநகை புரிந்தான். "அர்ஜுனனிடம் 'நான் நான்' என்று சொல்லிக்கொண்டு என் பிரபாவங்களைக் கூறி விட்டேன். நீ அர்ஜுனன் இல்லை. மதுமங்கள் அல்லவா? அதனால் இப்படித்தான் சொல்லவேண்டும்" என்று கூறி, விட்ட இடத்தில் மீண்டும் கதையை எடுத்துக்கொண்டான்.

குழந்தை மீரா வளர்ந்தாள். ஆற்றங்கரைப் பயிர்போல் கிருஷ்ண மந்திரத்தின் சூழலிலே பச்சென்று வளர்ந்தாள். பார்வை வந்தவுடன் அவள் பார்த்தது பாகவதோத்தமர்களின் இடையில் கட்டியிருந்த தம்புராவைத்தான். ஒலியைக் கேட்கத் தெரிந்தவுடன் அவள் கேட்ட முதல் சப்தம், கண்ணனடியார் களின் ஜாலரா முழக்கத்தைத்தான். தவழ்ந்து சென்று அவள் எட்டிப் பிடித்த முதல் பொருள்கள், கண்ணனின் பூஜா திரவியங்கள்தாம். கண்ணனின் பீடத்தைப் பிடித்துக்கொண்டு

தான் குழந்தை மீரா எழுந்திருந்து நின்றாள். கையை விட்டுவிட்டு நிற்க முடியாமல் அவள் விழுந்ததும் டாகுரின் அடி மீதே!

வாழ்நாள் முழுவதும் இப்படியேதான் அவள் சுருண்டு சுருண்டு அவன் அடிமேல் விழப்போகிறாள். அப்படி அடி மீது விழுவதும் தவறோ என்று தவித்து, நிற்கவும் முடியாமல், விழுவதற்கும் இடம் காணாமல் அலமாந்து போகவும் போகிறாள்.

குழந்தை மீராவுக்குப் பேச வந்தது.

பேச்சே பாட்டாக இருந்தது.

அவளுக்கு அன்னை சொல்லித் தந்த முதல் வார்த்தை, 'கான்ஹா' என்பதுதான்.

நம்முடைய கண்ணனை வடநாட்டில், 'கான்ஹா' என்பார்கள். அந்தப் பெயரைச் சொல்லி 'ஹா' என்று குழந்தை முடிக்கும் போது அந்த ஒலியில் எல்லையற்ற துயரத்தைக் காண்பான் ரத்தன் சிங்.

ஜன்மாஷ்டமித் திருநாள்.

மாதவன் பிறந்த பொன்னாள்!

தூதாஸரில் நீராடச் சென்றாள் சந்திரமுகி. மூன்று வயசுப் பாலகி மீராவும் உடன் சென்றாள்.

காழியில் சிவபாத ஹிருதயர் தம் செல்வன் ஞான சம்பந்தனுடன் நீராடச் சென்றபோது அந்தக் குழந்தைக்கும் வயசு மூன்றுதான்.

தடாகக் கரையில் இருந்த வழுவழுப்பான சரளைக் கற்களைக் குழந்தை மீரா எடுத்து வந்து, "அம்மா, இதென்ன, இதென்ன?" என்று கேட்டுக் கொண்டிருந்தது.

முதல் முறையும் இரண்டாம் முறையும், "கூழாங்கல்" என்று நிதானமாக விடை சொன்னாள் சந்திரமுகி.

மூன்றாம் முறையும் ஒரு கல்லை எடுத்து வந்து, "அம்மா, இதென்ன?" என்று மீரா கேட்டபோது சந்திரா சற்றுப் பொறுமை இழந்தாள்.

"இதுதான் உன் அகமுடையான்" என்றாள்.

"அகமுடையானை என்ன செய்வது?" என்று கேட்டது குழந்தை.

"பூஜை செய்வது" என்றாள் சந்திரமுகி. ராஜபுதனத்துப் பதிவிரதையின் வாயில் வேறு என்ன வரும்?

குழந்தை மீரா அந்தக் கல்லைக் கையிலேயே மூடிக்கொண்டு அம்மாவுடன் டாகுர்த் துவாரத்துக்கு வந்தாள். பூஜாரி அர்ச்சனை புரியத் தொடங்கியபோது மீரா கல்லைக் கிருஷ்ண விக்கிரகத்தின் பாதத்தில் வைத்தாள். இத்தனை நாழிகை மூடியிருந்த வியர்வைக் கையைப் பட்டுப் பாவாடையில் துடைத்துக்கொள்ளப் போனாள் மீரா.

"பாவாடையில் துடைக்காதே, இங்கே என் தலையில் அந்தக் கையை வை, தேவி! என் விதி அழிந்து போகும்" என்று ஆவேசமாகக் கூறினார் அர்ச்சகர். அவருக்கு ஆவேசம் வந்ததற்குக் காரணம் உண்டு.

மீரா தன் கைப்பிடியிலிருந்து தளர்த்திப் பூஜையில் வைத்த 'அகமுடையான்' சாதாரணக் கல் அல்ல. சியாமளனின் திவ்விய ரூபமாக மதிக்கப்படும் சாளக்கிராமம் அது!

சந்திரமுகிக்குத் தூக்கிவாரிப் போட்டது! 'தூதஸர் கரையில் சாளக்கிராமம் எப்படிக் கிடைத்தது? அல்லது... வெறும் கல்தான் இவள் கைபட்டு....? கல்லைப் பெண்ணாக் கியவன் ராமன் என்னில் இந்தப் பெண் கல்லையே...?'

மேர்தா அரண்மனையில் கண்ணன் பிறந்த நாளை ஆடியும் பாடியும் கொண்டாடினர். அந்த ஆடலுக்கும் பாடலுக்கும் மையமாக விளங்கியது கண்ணன் அல்ல; மீரா தான்.

பீச்சாங்குழல்களில் வண்ண நீர்களை நிறைத்துப் பரஸ்பரம் அடித்துக்கொண்டதில் பட்டாடைகளெல்லாம் சாயமாகித் தெப்பலாக நனைந்து, அன்னை முன் வந்து நின்றாள் மீரா. ஆடைகளைக் களைந்த சந்திரமுகி, "மறுபடியும் உனக்குப் பாவாடை கட்டிவிடட்டுமா? அல்லது கண்ணன் வேஷம் போட்டு விடட்டுமா?" என்றாள்.

"ஊஹூம், நான் கண்ணனாக மாட்டேன். மீராவாகத் தான் இருப்பேன். கண்ணன்தான் மீரா வேஷம் போட்டுக் கொள்ள வேண்டும்" என்றது குழந்தை.

"ஏன், அதுவும் போட்டுக்கொள்வான். சக்குபாய் பண்டரிபுரம் போனபோது கிருஷ்ணனே சக்குபாய் வேஷம் போட்டுக்கொண்டு அவள் வீட்டில் அவளைப் போலவே வேலை செய்து கொண்டிருந்தான்."

"அந்தக் கதையைச் சொல்லு" என்று நச்சரிக்கத் தொடங்கினாள் மீரா.

"கதை சொல்ல இதல்ல சமயம். கோஸ்வாமி ரூப்ஜி வரப்போகிறார். அவரை வரவேற்கத் தயாராக வேண்டும்" என்றாள் சந்திரமுகி.

பிருந்தாவனத்திலிருந்து கோஸ்வாமியும் வந்தார்.

குழந்தை மீரா விறுவிறுவென்று அவரருகே ஓடினாள்.

லக்ஷ்மிதேவி பாலையாகப் பிறந்து பிருகு முனிவரின் அருகே சென்றபோது அவர் எப்படி மனம் பூரித்து நின்றாரோ, அப்படியே நின்றார் கோஸ்வாமி ரூபர்.

அவரிடம் சென்றதும் தன் இரு கைகளையும் நீட்டினாள் மீரா.

அவரும் அதைப் புரிந்துகொண்டவர் போலத் தமது தம்புராவைத் தம் பிடியில் வைத்துக்கொண்டே மீராவின் கைகளில் இலேசாகச் சார்த்தினார்.

மீராவின் இளம் விரல்கள் தந்திகளை மீட்டிவிட்டன. காற்று தொட்டவுடன் நீர் நிலையில் அலை எழும்புவது போல் மீராவின் மந்தமாருத ஸ்பரிசம் பட்டவுடன் தம்புராவில் சங்கீத அலை எழுந்தது.

தந்திகளிலிருந்த ராதையின் சகி லலிதை சுத்தமான சுருதியை எழுப்பினாள்.

மீராவின் மழலை மாறாத மதுர கண்டத்திலிருந்து

'ஹரே ராம், ஹரே ராம்
ராம் ராம், ஹரே ஹரே!
ஹரே கிருஷ்ண, ஹரே கிருஷ்ண,
கிருஷ்ண கிருஷ்ண, ஹரே ஹரே!'

என்ற குளிர்ந்த நிஷ்களங்கமான ஒலி எழும்பிப் பரவியது.

பொன்மலர் மணம் வீசத் தொடங்கிவிட்டது!

## 3. கிரிதர கோபாலன்

'என் பதத்தை அடைய விரும்புகிறவர்கள் எனது பெயரை வெட்கம் விட்டுக் கூவவேண்டும்' என்றான் பகவான். 'வெட்கம்விட்டு' என்பதை 'விஸ்ருஜ்ய லஜ்ஜாம்' என்கிறான் பகவான். இது மிகவும் முக்கியம். இப்படி வெட்கம் விட்டுப்

பகவந்நாமத்தைக் கூறுவதைத்தான் 'லோக லாஜ கோயி' என்று மீராபாய், பிற்காலத்தில் தன் பாடல்களில் திரும்பத் திரும்பக் குறிப்பிடப்போகிறாள். 'ஹரே ராம், ஹரே ராம், ராம் ராம், ஹரே ஹரே! ஹரே கிருஷ்ணா, ஹரே கிருஷ்ணா, கிருஷ்ணா கிருஷ்ணா, ஹரே ஹரே' என்று சுதாமயமான வார்த்தைகளைக் கூறிய குழந்தை மீரா அன்றே தனது 'வெட்கம் விட்ட' வாழ்வைத் தொடங்கிவிட்டாள்!

மீராவின் வாழ்வுதான் எத்தனை புதிர்மயமாக இருக்கிறது! பெண்களுக்கு நாணம் முக்கியம். ஆனால், 'நாணத்தை விட்டேன்' என்று பெருமைப்பட்டுக்கொண்டு பாடுகிறாள் மீரா. இதில் அதிசயம், நாணத்தை விட்ட போதிலும் அவளுடைய பெண்மைக்கு இம்மியும் பங்கம் வரவில்லை. 'இரு வேறு உலகங்கள்' என்று தமிழ் முனிவர் கூறியதைத்தான் இங்கே வேறே ஒரு கோணத்தில் எண்ணத் தோன்றுகிறது. இந்த உலகத்துப் பழக்கவழக்கங்களையும் பண்புகளையும் இந்த உலகக் காரியங்கள் அனைத்திலும் விடாமல் பின்பற்றத்தான் வேண்டும். ஆனால் இதனினும் மேம்பட்டதோர் உலகத்தில் பிரவேசித்தவர்களுக்கு இவை தேவை இல்லை. தேவை இல்லை என்பதோடு மட்டுமின்றி அவர்களில் ஒரு சாராருக்கு இவை விரோதமாகவேகூட இருக்கக்கூடும். நீரில் வாழ்கிற மீனுக்கு நில ஜந்துக்களுக்கு உள்ள நுரையீரல்கள் இருந்தால் சுவாசிக்க முடியாதல்லவா? அதற்கு வேறு சுவாசகோசம் வேண்டும்.

இருவேறு உலகங்களின் இயல்பையும் எடுத்த எடுப்பிலேயே இவ்வளவு சுருக்கமாகக் கூறி விடுவது பொருந்தாது. ஏனெனில் இந்த இரு வேறு உலகங்களின் மோதல்களும் முரண்பாடுகளும் மீராவின் சிந்தையைக் குழப்பியதுதான் இனி விரிய இருக்கும் சரிதை.

**தோ**ழி லலிதையைத் தொட்டவுடன் ராதாதேவி தன் மயமாகிவிடுவாள். குழந்தை மீரா, தம்புராவைச் சுண்டிவிட்டு, 'ஹரே ராம்' என்று குரல் எடுத்த சமயத்தில் அவளுக்குள் உண்மையான மீரா உதயமானாள்.

இந்தக் குழந்தை ஹரிநாமத்தில் கரைகிறதா, ராகத்தில் கரைகிறதா, அல்லது தனது மதுரமான சாரீரத்திலேயே கரைகிறதா என்று வியந்து நின்றனர், ரூபகோஸ்வாமியை வரவேற்கக் கூடியிருந்த மேர்தாவின் பிரமுகர்களும் மக்களும்.

ஆனால் கோஸ்வாமியோ ஹரிநாமம் வேறு, அதைப் பொதிந்து கொண்டுள்ள ராகம் வேறு, அதனை இசைக்கும் சாரீரம் வேறு என்று நினைக்கவில்லை. எல்லையற்ற துயரத்தில் ஒருவர் பேசும்போது அவரது குரலே மாறிவிடுகிறது. மாறிய இக்குரல் யாருடையது? துயரம் என்பதற்கே ஒரு குரல் இருக்கிறது. துயரப்படுபவரிடம் அது வந்து சேருகிறது. அப்படியே பக்தி என்பதற்கே ஒரு ராகம் இருக்கிறது; பக்தி என்பதற்கே ஒரு சாரீரம் இருக்கிறது. அந்தச் சாரீரம் அதற்குரிய ராகத்தைத் தேக்கிக்கொண்டு மீராவிடம் வந்திருப்பதைக் கோஸ்வாமி உணர்ந்தார்.

பாடுகையில் தசைகள் ஏறியிறங்கும் மீராவின் இளம் குருத்துப் போன்ற கழுத்தைக் கண்டபோது அவரது கண்கள் கரகரவென்று நீரைப் பொழியத் தொடங்கிவிட்டன. இளநுங்கு போல் தெள்ளிய அந்தக் கண்டத்துக்குள் நுங்கின் இளநீர் போல் மதுரமான சாரீரம்! இந்த நுங்கை எத்தனையோ மட்டைகள் சுற்றி நெருக்கிக் குமைக்கப் போகின்றன! அத்தனை குமைச்சலுக்கும் நடுவே இனிய நுங்கு வளர்ந்தாக வேண்டும். இல்லை, இல்லை; குமைச்சல் இருந்தால்தான் அது இனிய நுங்காக வளர முடியும். குமைச்சலுக்காக விடுகிற கணணீர்தான் அதன் இளநீர் — இனிய கீதம்.

பக்தி மார்க்கத்தின் எல்லையும் ஞானமார்க்கத்தின் எல்லையும் சங்கமிக்கும் கானமார்க்கம் என்று ஒன்று உண்டு. சாதனைகளால் பெறக்கூடிய மார்க்கம் அல்ல அது. அருள் ஒன்றின் மூலமே அதைப் பெற முடியும். அப்படிப்பட்ட அருட் குழந்தையே மீரா என்பதைக் கோஸ்வாமி கண்டார்.

சுற்றுப்புற நினைவு வந்து கோஸ்வாமி தமது கண்களைத் துடைத்துக்கொண்டார். தமது தீர்க்க தரிசனத்தையும் சட்டென்று துடைத்துவிட்டுக்கொண்டார்.

குழந்தை மீராவோடு தாமும் பகவந் நாம பஜனையில் கலந்துகொண்டார். குழுமியிருந்த அனைவரும் கலந்து கொண்டனர். வீரம் செறிந்த மக்களின் நாவிலிருந்து ஈரம் கனிந்த நாமம் புறப்பட்டது.

"ஹரே ராம், ஹரே ராம், ராம் ராம் ஹரே ஹரே!
ஹரே கிருஷ்ண, ஹரே கிருஷ்ண, கிருஷ்ண கிருஷ்ண ஹரே
ஹரே!"

என்ற நாதம் மேர்தாவெங்கும் பரவியது.

காலத்தில் நினைவு அழிந்த அந்த கான உலகிலும் யாரோ ஒருவர் மட்டும் கணக்கெடுத்துக் கொண்டிருந்தார். நூற்றெட்டு முறையானதும், 'ஜேய், ராதே சியாம்!' என்று கோஷித்தார்.

மீராவுக்குத் தூக்கிவாரிப் போட்டது. தம்புராவை மீட்டிச் சற்றே கன்றிய சொகுசான விரல்கள் நிலைத்து நின்றன.

சுற்றுமுற்றும் பார்த்தாள் குழந்தை.

எல்லையில்லாத வெட்கமாகி விட்டது அவளுக்கு. அந்த உலகம் போய், இந்த உலகம் வந்துவிட்டதல்லவா?

ஓடிப்போய் அம்மாவின் மடியில் முகத்தைப் புதைத்த படி குப்புறப் படுத்துக்கொண்டாள். அவளது பின்னந் தலையில் வைத்துப் பின்னியிருந்த அராக்கொடி ஆபரணம் சரிந்து உச்சித் தலைக்கு நகர்ந்தது. அந்த அராக்கொடியில் இரு பாதங்கள் கற்களால் இழைக்கப்பட்டிருந்தன. குருபாதம் தங்க வேண்டிய தலை உச்சிக்கே அது வந்துவிட்டது!

அவளை ஆசீர்வதிக்கும் மந்திராட்சதைகளாகச் சந்திர முகியின் கண்களிலிருந்து முத்து முத்தாக நீர் உதிர்ந்து கொண்டிருந்தது.

கோஸ்வாமியிடம் ரத்தன்சிங், தன் அருமை மகளின் கையில் கிடைத்த சாளக்கிராமத்தைப் பற்றிக் கூறினான்; டாகுர் த்வாரத்தின் பஜனைகளுக்கு இடையிலேயே அவள் வளர்ந்து வருவதைச் சொன்னான்.

"கோஸாயி மஹராஜ், இவளுடைய எதிர்காலம் எப்படியிருக்கும்?" என்று வினவினான்.

சந்திரமுகி ஆவல் மீதூர ரூபகோஸ்வாமியையே பார்த்துக் கொண்டிருந்தாள்.

"இவளுடைய எதிர்காலமா?" என்று கேட்டுச் சிரித்தார் கோஸ்வாமி. ஒரு லட்சம் அர்த்தங்கள் கொண்ட சிரிப்பு அது.

**"காலம் காலகலாதீதம்...கோவிந்தம் பரமானந்தம்"** என்று பாடினார் கோஸ்வாமி. பாடிக்கொண்டே சிரித்தார். சிரித்துக் கொண்டே பாடினார். அச்சிரிப்பின் முக்கிய காரணம் எவரே அறிவார்? ஆனால், அத்வைத சங்கரரே காலாதீத தத்துவத்தை இப்படி கோவிந்த மூர்த்தியாகச் சொன்னது ஸ்ரீ சைதன்யரின் வைஷ்ணவத்தைப் பின்பற்றிய ரூபரின் சிரிப்புக்கு ஓர் இனிய 'விஷம'மான துணைக் காரணமோ என்னவோ?

ரத்தன்சிங் சிந்தித்தான். "கால அதீதம் என்பது கோவிந்தனைப் பற்றிய விஷயம். நான் கேட்டது குழந்தையைப் பற்றி அல்லவா?" என்றான் விநயத்துடன்.

"குழந்தையைப் பற்றிய விஷயமும் கோவிந்தனைப் பற்றியதுதான். துருவித் துருவிக் கேட்காதே. பகவானின் இரகசியங்களை அம்பலப்படுத்துவதற்கில்லை. உன் பெண்ணின் வாழ்க்கையைப் பற்றி வருங்காலத்தில் எவ்வளவோ பேர் எவ்வளவோ விதமாகப் பேசப் போகிறார்கள். பல தலைமுறைகளுக்குப் பிறகும்கூட இவளது வாழ்க்கையை ஆராயப் போகிறார்கள். ஆனால் யாருக்கும் அது பூரணமாகத் தெரியப் போவதில்லை. ஆண்டவன், தன் இரகசியத்தைப் பத்திரமாகக் காத்துக்கொள்வான். அதோ அந்த கிரிதர கோபாலனின் விக்கிரகத்தைப் பார். அவனுடைய விரல் நுனியில் கோவர்த்தன மலையைத் தூக்கிக் கொண்டிருப்பதால்தான் கிரிதரன் என்று பெயர் எடுத்திருக்கிறான். ஆனால் இந்த விக்கிரகத்தில் என்ன பார்க்கிறாய்? அவன் விரலைத் தூக்கிக் கொண்டிருப்பதை மட்டும்தான் பார்க்கிறாய். அதன்மீது கிரியைப் பார்க்கவில்லை. ஏனென்றால் சிற்பியால் இந்தச் சிறு விரலின்மீது ஒரு கிரியை நிறுத்த முடியாது. அது கோபாலன் ஒருவனால்தான் முடியும். இந்தக் குழந்தையின் எதிர்காலமும் ஒரு மலையாக இருக்கப்போகிறது. அதைக் கண்ணன்தான் தூக்கிப்பிடித்து நிறுத்தமுடியும். நம்மால் முடியாது. நமக்கு அப்பாற்பட்ட விஷயம் அது" என்றார் கோஸ்வாமி.

கிரிதர மூர்த்தியைப் பார்த்தான் ரத்தன்சிங். ரூபர் ஆராதிக்கும் விக்கிரகம் அது. அவரது சீடர்கள் அதனை சபா மத்தியில் ஒரு பீடத்தில் எழுந்தருளச் செய்திருந்தார்கள். அந்த கிரிதர கோபால விக்கிரகத்தில் கிரியைக் காண முடியாவிடினும் தூக்கிய விரலைக் காட்டியே அதன்மீது உள்ள கிரியைக் குறிப்பால் உணர்த்திவிட்டிருந்தான் சிற்பி. மீராவுடைய வாழ்வு இன்னது என்பதை வெளிப்படக் காட்டாமலே அது கோவிந்தன் கையில் இருக்கிறது என்பதை மட்டும் புரிய வைத்து விட்டார் கோஸ்வாமி.

உள்ளம் கசிந்து குழந்தையின் புறம் திரும்பினான் ரத்தன் சிங். அவளும் கிரிதர மூர்த்தத்தைப் பற்றி ரூபர் கூறியவுடன் ஏதோ ஒரு வேகம் அவளை உந்திவிட, அம்மாவின் மடியில் பதிந்திருந்த தன் முகத்தைத் தூக்கி அத்திசையில் கண்களைச் செலுத்தியிருந்தாள்.

தம்புராவைக் கண்டவுடன் அவளுடைய ஆன்மப் பயிருக்கு நீர் பாய்ந்தது. கிரிதரன் திருஉருவைக் கண்டவுடன் அப்பயிர்மீது திண்ணெனச் சூரிய வெளிச்சமும் படிந்தது.

வைத்த கண் வாங்காமல் கிரிதரனையே பார்த்துக் கொண்டிருந்தாள் குழந்தை. அப்போது அவளது இரு வேறு உலகங்களில் இருவேறு அதிசயங்கள் நிகழ்ந்தன. ஓர் உலகத்திலுள்ள நிச்சலமான தடாகத்தில் 'சிலுசிலு' வென்று முல்லை மொட்டுக்களை சரித்துவிட்டாற்போல் சிறிய சிறிய அலைகள் தோன்றின; சிற்றலைகள் பேரலைகளாக மாறின; வான்முகடுவரை எட்டிவிடும்போல் அவை ஆரவாரம் செய்தன. இன்னோர் உலகிலோ முன்னம் அலையடித்துக் கொண்டிருந்த தடாகம், கலைந்த வஸ்திரத்தை இழுத்துப் போர்த்துக்கொள்வதுபோல் திடீரென அலைகளையெல்லாம் சுருக்கிக்கொண்டு சாந்தமாகத் தூங்கிவிட்டது.

**தூ**க்கத்திலிருந்து தட்டி எழுப்பியது ஒரு குரல்.

"யார் கூப்பிடுவது?" என்றாள் மீரா.

"ஏன், நான்தான்! நான் யாரென்று தெரியவில்லையா?" என்றான் கிரிதரன்.

"நீதானே? தெரியும், தெரியும்! முரளீதரனல்லவா நீ? எதற்காக வந்தாய்?" என்று கேட்டாள் மீரா.

"நான் ஒன்றும் முரளீதரன் அல்ல. என் கையில் முரளியா இருக்கிறது? நன்றாகப் பார். முரளி மெல்லியதாக இருக்கும். ஆனால் என் கைபட்டுவிட்டால் கனமான சங்கீதத்தைத் தரும். இப்போதோ என் கையில் கோவர்த்தன கிரி இருக்கிறது. இது பார்க்கக் கனமாக இருக்கும்; என் கை பட்டுவிட்டால் மெல்லியதாகிவிடும். இதோ பார்த்தாயா? ஒரே விரலால் தூக்கி நிறுத்துகிறேன்" என்றான் கிரிதரன்.

"எதற்காக இதைத் தூக்கி வைத்துக்கொண்டிருக்கிறாய்? அதுவும் அதிக லாகவமில்லாத இடது கையின் சின்னஞ்சிறு சுண்டுவிரல் ஒன்றாலேயே தூக்கிப் பிடித்திருக்கிறாயே! உனக்கு இவ்வளவு பலம் இருக்கிறது என்று காட்டுவதற்கா?" என்று கேட்டாள் மீரா.

"பலம் என்றால் என்ன?" என்று எதிர்க்கேள்வி விடுத்தான் கண்ணன்.

"பலம் என்றால்....பலம் என்றால்" — பலம் என்றால் என்ன என்பது மீராவுக்குப் புரிந்துவிட்டது.

“பலம் என்றால் உடம்பு சக்தியாக இருப்பது என்று அர்த்தமில்லை. பலம் என்றால் அன்பு. உனக்கு நிரம்ப அன்பு. அந்த அன்புக் குணத்தினால்தான் சிறுபிள்ளையாக இருந்தாலும் மலையைத் தூக்க முடிகிறது!” என்றாள்.

**“குன்று குடையாய் எடுத்தாய், குணம் போற்றி !”** என்று பாடினான் கண்ணன்.

அது அவனாகப் பாடியதல்ல. ஆண்டாளின் வாக்கைத் தான் பாடினான் அவன். மொழி கடந்த அன்பு நிலையில் எதையும் மீராவால் புரிந்துகொள்ள முடிந்தது. மீராவுக்கு ஆயிரமாயிரம் ஆண்டுகளின் நினைவுகளெல்லாம் வந்தன. எதிரே நிற்கும் பாலனுக்காக அந்த நினைவுகளை அழித்துக் கொண்டாள்.

“நீ இந்தக் குன்றை அன்புக்காகத்தானே தூக்கினாய்?” என்று வினவினாள்.

“ஆமாம். தன்னால்தான் மழை பெய்கிறது என்று இந்திரனுக்குக் கர்வம் ஏற்பட்டது. அவனிடம் எனக்கு மிகவும் அன்பு. அவன் கர்வம் கொண்டிருக்கிறானே என்று வருத்தப் பட்டேன். இப்படியே அவன் கர்வத்தை வளர்க்கக் கூடாது என்று கருதினேன். ‘இனிமேல் அவனுக்குப் பூஜை செய்ய வேண்டாம்’ என்று ஆயர்களிடம் சொன்னேன். அவர்கள்தான் நான் சொன்னதையெல்லாம் செய்வார்களே! ‘அப்படியே’ என்றார்கள். ‘நமக்குப் பயிர் பச்சை தருவதும், சுனைநீர் தருவதும், மேகத்தைத் தடுத்து மழை தருவதும் கோவர்த்தன கிரிதானே? அதற்கே பூஜை செய்யுங்கள்’ என்றேன். ஆயர்கள் அப்படியே செய்தார்கள்.

“இந்திரனுக்கு மகா கோபம் வந்துவிட்டது. கொட்டு கொட்டு என்று பிரளயமாக மழை பெய்யத் தொடங்கி விட்டான். ஆயர்கள் கதிகலங்கிப் போனார்கள். கண்பார்வை கூடத் தெரியாமல் மழை பெய்ததால் எங்கே செல்வது, எப்படிச் செல்வது என்று தெரியாமல் திண்டாடினார்கள். அவர்களின் துயரம் எவ்வளவுக்கு அதிகமாயிற்றோ அவ்வளவுக்கு எனக்கு அன்பு அதிகமாகிவிட்டது. அன்புதான் பலமாயிற்றே! அவர்களோடு, எனக்குப் பரம ப்ரியமான மாடு, கன்றுகளும்கூட அந்தப் பிரளய வர்ஷத்தைத் தாங்க முடியாமல் தவித்ததைப் பார்த்தபின் என் அன்பு வேகமும் வர்ஷமாக வெடித்து விட்டது! ஏதுமறியாப் பேதை ஆயர்களை ‘வலக்கை இடக்கை தெரியாதார்’ என்பார்கள். நானும் அந்தச்

சமயத்தில் அப்படித்தான் எந்தக் கை என்றே தெரியாமல் அப்படியே இடதுகைச் சுண்டுவிரலை அடியில் கொடுத்து கோவர்த்தன மலையை நெம்பி எடுத்தேன். அந்த விரல்மீதே மலையை நிறுத்தி வைத்துக்கொண்டேன். குடையின் கீழ் நிற்பது போல் ஆயர்களும் ஆநிரைகளும் குன்றின்கீழ் வந்து சுவஸ்தமாகத் தங்கிவிட்டார்கள். கோவர்த்தனம் நம்மைக் காப்பதால் அதற்குப் பூஜை போடவேண்டும் என்று சொன்னேன் அல்லவா? அதற்கேற்ப அந்தக் கோவர்த்தனமே மழையிலிருந்து அவர்களைக் காக்குமாறு செய்தேன். நான் காத்தேன் என்று சொல்வது இரண்டாம் பட்சம்தான்!

"இந்திரன் பலம் கொண்ட மட்டும் மழை பெய்து பார்த்தான். ஆனால் அந்தப் பலம் அன்பின் பலம் இல்லை, அகங்கார பலம் அல்லவா? அது தோற்றுப் போயிற்று! கடைசியில் அகங்காரம் குன்றி என்னிடம் வந்து நல்ல புத்தி பெற்றான். தவறுணர்ந்து மன்னிப்புக் கேட்டுவிட்டு **கோ-**இந்திரன் என்றே எனக்குப் பெயரிட்டுப் பட்டாபிஷேகம் செய்துவிட்டுச் சென்றான். நான் பட்டம் பெற்றதைவிட அவன் நல்ல புத்தி பெற்றதிலேயே மகிழ்ந்தேன். என் அன்பு ஆயர்கள் அந்த கோ-இந்திரனைத்தான் 'கோவிந்தன்' என்றாக்கிப் பரம மந்திரமாகவே செய்துவிட்டார்கள்.

"இப்படியாக எனக்கு அன்பான ஆயர்களை இந்திரனின் கோபத்திலிருந்து காப்பாற்றினேன். எனக்கு அன்பான இந்திரனையும் அவனுடைய அகங்காரத்திலிருந்தே காப்பாற்றி னேன். கிரியைத் தூக்கி ஆயரையும் ஆநிரையையும் காத்ததால் என்னை 'கிரிதர கோபாலன்' என்று சொல்கிறார்கள். ஆனால் நீயோ, நான் புல்லாங்குழல் கொண்டு வராதபோதே என்னை 'முரளிதரன்' என்கிறாயே?" என்று கதை சொல்லி முடித்தான் கண்ணன்.

கிரிதரன் வரலாறு மீராவுக்கு மிகவும் பிடித்துவிட்டது. எங்கிருந்தோ கருமேகங்கள் திரள் திரளாக உறுமிக்கொண்டு வந்து தன் தலைக்கு மேல் சூழ்ந்துகொள்வது போலவும் பிரளயமாக மழை பொழியப்போவது போலவும் அவளுக்குத் தோன்றியது. அந்த மழையிலிருந்து கிரிதரன்தான் அன்பு மலையைக் குடை பிடித்துத் தன்னைக் காக்க வேண்டும் என்று அவள் ஆசைப்பட்டாள்; அப்படி அவன் செய்வான் என்று நம்பவும் நம்பினாள்.

"கிரிதரா, நீ இப்போது வந்தது என்ன காரணத்துக்காக?" என்று கேட்டாள் மீரா.

"காரணத்தோடுதான் நான் வரவேண்டுமா?" என்று எதிர்க்கேள்வி போட்டான் கண்ணன்.

"அதற்காகச் சொல்லவில்லை, கண்ணா! காரணம் இருந்தால் கூட நீ வரமாட்டாயே! பக்தர்கள் படாத பாடு பட்டால் கூடத் தரிசனம் தரமாட்டாயாமே! அப்படிப்பட்ட நீ தானாகவே வந்ததால் ஏதோ காரணம் இருக்கவேண்டும் என்று நினைத்தேன்" என்றாள் மீரா.

"பொல்லாத குட்டியாக இருக்கிறாயே! காரணத்தோடு தான் நான் வந்தேன். அது உனக்கே தெரியும்,"

"ஊஹூம், தெரியாது."

"பொய் சொல்கிறாயா?"

"நிஜம்தான் சொல்கிறேன்."

"அதாவது நிஜமாகப் பொய் சொல்கிறாயாக்கும்... மீரா, விளையாட இது நேரமில்லை."

"ஏன்? நேரமில்லாமல் என்ன? சதா சர்வ காலமும் உனக்கு விளையாட்டுத்தானே?"

"என்னை மடக்காதே மீரா, என்னைச் சீக்கிரம் இந்தக் கிரிதர வேஷத்திலிருந்து மாற்றி முரளீதரன் ஆக்கு."

"அப்படியென்றால்?"

"புரியாததுபோல் பாசாங்கு பண்ணாதே. நான் இந்த கிரியைத் தூக்கி வைத்துக்கொண்டிருந்தால் எப்படிக் குழலூத முடியும்?"

"நீ கிரியைத் தூக்கிக்கொண்டிருப்பதற்கு நானா பிணை? அதைக் கீழே வைத்துவிட்டுத் தாராளமாகக் குழல் ஊதேன். நான் வேண்டாமென்கிறேனா, என்ன? பார்க்கப்போனால் எனக்கே உன் வேணுகானத்தைக் கேட்கவேண்டும் என்றுதான் ஆசை ஆசையாக இருக்கிறது."

"ஆசை இருந்தால் மட்டும் போதுமா? நான் வேணுகானம் தர நீதான் வழி செய்ய வேண்டும்."

"நான் செய்ய என்ன இருக்கிறது? வேணுவைத்தான் இடுப்பில் சொருகிக்கொண்டிருக்கிறாயே! எடுத்து வாயில் வைத்துக்கொண்டு ஊதேன்!"

"என்ன மீரா, இப்படிப் பேசுகிறாய்? வேணு மட்டும் இருந்தால் போதுமா? கானம் வேண்டாமா?"

மீரா பதில் பேசவில்லை.

"வெட்டு வெட்டு என்று மறித்த என் அருமை மீரா இப்போது ஏன் பேசவில்லையாம்! 'உன் கானத்தை நானா எடுத்துக்கொண்டு வந்துவிட்டேன்?' என்று ஏன் கேட்க வில்லையாம்?" என்றான் கண்ணன்.

அவன் குரலில் குறும்பு தொனிக்கவில்லை. ஆராத் துயரமே பிரதிபலித்தது. கானத்தைப் பிரிந்த கலைஞன் மட்டுமே பெறக் கூடிய துயரம் அது!

அவனுடைய கானத்தை அவள் எடுத்துக்கொண்டு வந்து விட்டாள் என்று சொன்னால் மட்டும் போதுமா? அவனுடைய கானமே அவள்தானே?

மீரா, அவன் இடையில் சொருகியிருந்த வேய்ங்குழலை உருவி எடுத்துக்கொண்டாள். அவன் கழுத்தில் அணிந்திருந்த துளசிச் சரத்தை எடுத்து அதற்குள் அடைத்தாள்.

"நீ என்று என்னைக் கல்யாணம் செய்துகொள்ள மனம் வைக்கிறாயோ அன்று இந்தச் சரத்தைக் குழலிலிருந்து எடுத்து என் கழுத்தில் வரமாலையாகப் போடு. அன்றைக்கே நானும் இந்தக் காலியான குழலுக்குள் சப்த ஸ்வரங்களாகப் புகுந்து கொள்வேன்" என்றாள்.

அதற்குக் கோடி அர்த்தம் உண்டு.

கண்ணன் புரிந்துகொண்டான்.

ஆனால் ஏதும் பேசவில்லை.

மீராவின்பால் சென்ற தன் நோக்கையும் திருப்பிக் கொண்டான்.

அப்படியே மறைந்துவிட்டான்.

'கிரிதாரி, கிரிதாரி!' என்று அலறியபடி குழந்தை மீரா, சந்திரமுகியின் மடியிலிருந்து எழுந்தாள்.

## 4. திரை விழுந்தது!

விழித்தெழுந்த மீராவின் விழிகள் கிரிதர விக்கிரகத்தின் மீது நிலைத்தன. அன்னையின் மடியிலிருந்து எழுந்திருந்து கண்ணன் அடிகளைச் சென்றடைந்தாள் பாலகி. கிரிதரமூர்த்தி யின் கழலிணையைக் கட்டி அணைத்து, அப்பாதத்திலேயே தனது முகத்தைப் பதித்துக்கொண்டு விசும்பினாள்.

ரத்தன் சிங்கும் சந்திரமுகியும் குழுமியிருந்த மற்ற பக்தர்களும் இனந் தெரியாத துயரத்துடனும், சற்றே அச்சத்துடனும் மீராவைப் பார்த்துக்கொண்டிருந்தார்கள்.

ரூபகோஸ்வாமி ஆனந்தக் கண்ணீர் வடித்துக்கொண்டிருந்தார். தமது அதரமும் தாடியும் துடிக்க, அவர் நிர்மலமான நயனங்களிலிருந்து நீர் பெருக்கியது, மாமலை ஒன்றிலிருந்து புனித அருவி இழிவதுபோல் இருந்தது.

அவையோரை நோக்கினார் ரூபர். "நீங்கள் யாவரும் என்னையும் இந்தப் பெண்ணையும் தனியே விட்டு வெளியே செல்லுங்கள்" என்று அன்புடன் பணித்தார்.

மன்றம் காலியாயிற்று.

குழந்தை மீராவின் விம்மல் ஒலியும் அடங்கி வந்தது.

பயபக்தியுடன் அவளிடம் நெருங்கி அமர்ந்தார் ரூபர்.

"குழந்தாய் மீரா, நீ கண்டு கேட்டு அநுபவித்த அற்புதங்களை இந்தக் கிழவனுக்குச் சொல்லலாமா? நீ சொல்லித்தான் நான் தெரிந்துகொள்ள வேண்டுமேயன்றி, எத்தனை தவம் செய்தாலும் எனக்கு அந்தக் காட்சி கிடைக்காது. என்னைப் பாக்கியசாலியாக்குவாயா?" என்றார் நெஞ்சடைக்க.

கண்ணனின் கழலிணைகளிலிருந்து கமல முகத்தை எடுத்தாள் மீரா. அடித் தாமரையோடு ஒட்டிய அவளது முடித்தாமரைக்கும் ஒரு கூடுதலான தூய்மை வாய்த்திருந்தது. அழுகையில் கரைந்த அஞ்சனம் பரவியிருந்த முகம், வண்டுக் குழாத்தொடு சேர்ந்த தாமரை போல், புகையோடு கூடிய தீக் கொழுந்துபோல் தனியானதொரு சோபையோடு திகழ்ந்தது. அழுது தெளிந்திருந்த அமுதக் கண்களால் ரூபகோஸ்வாமியை மீரா ஏற இறங்கப் பார்த்தாள். தாயார் குழந்தையைப் பார்ப்பதுபோல் பார்த்தாள்.

அவளது செப்பு வாயிலிருந்து திவ்வியமான கானம் எழுந்தது.

குழந்தை மீரா எப்படிப் பாடல் இயற்றினாள் என்று திகைக்க வேண்டியதில்லை. செடிக்கு அரும்புகட்ட யாரேனும் கற்றுத்தர வேண்டுமா என்ன?

அன்பு எனும் அழகு வழியில் சென்று ஆண்டவனை அடைவதற்கென்றே சிலர் பிறக்கிறார்கள்; அவர்கள் உருவமற்ற பரமனை உருவத்தில் கட்டி நிறுத்துகிறார்கள்; மௌனத்தில்

மட்டுமே துய்க்கக்கூடிய மொழியற்ற பொருளை மொழியில் கட்டிப்போடுகிறார்கள். அப்படிச் செய்ய வந்தவளேயன்றோ மீரா?

மீராவின் வாக்கை என்னென்பது? அது என்றுமே குழந்தையின் வாக்கு. அவள் இயற்றியதாக இன்று நமக்குக் கிடைத்துள்ள பாடல்களைப் பிற மொழிகளில் பெயர்த்துக் காண்கையில் இதற்கு மாறான கருத்துத் தோன்ற நிறைய இடமுண்டு. ஆயின் அவளது திருவாயிலிருந்தே வந்த மூலப் பாடல்களைப் பார்த்தால் பிறந்த மேனியான குழந்தையிடம் காண்கிற தூய்மையே அவற்றில் நிலவும். மீராவின் வாக்கில் ஒளிவு மறைவு என்பது இல்லாவிடினும் அதில் ரஸக்குறைவு ஏற்படாததற்குக் காரணம் அதன் குழந்தைத்தன்மைதான். ஆடை அலங்காரங்களை உதறிவிட்டும் குழந்தை ரஸ கனமாக நிற்பது போல் கவிதையணிகளைத் தூக்கி எறிந்துவிட்டும் தூய்மையாக நிற்பவை மீராவின் பாடல்களாகிய 'பதாவளி'களில் பெரும்பாலானவை.

சம்பங்கிக் கொடி தனக்கென்றே ஒரு தனியான சுகந்தத்தைப் பரப்ப ஆசைப்படுகிறது. அந்தச் சுகந்தத்தை மொழியும் திருவாயாகச் சம்பங்கி மலர் என்ற ஒரு கிண்ணத்தையும் சிருஷ்டி செய்கிறது. மீரா அன்பு மணத்தைப் பரப்ப ஆசைப்பட்டாள். அந்த சுகந்தத்தை மொழியும் மலராக ஒரு மொழி வாய்த்தது. அந்த மணமாகிய உயிருக்கு அந்த ஒரு மொழிதான் உடலமாக இருக்க முடியும். ராஜஸ்தானி, குஜராத்தி, விரஜபாஷை என்ற மும்மொழிப் பாடல்களாக பாஷை நிபுணர்கள் பிரித்துச் சொல்லுவார்கள். உண்மையில் அது பக்திக் காதலின் மொழி. மீராவைப்போல் பக்திக் காதலால் கண்ணீரில் உருக முடியாத எவருக்கும் அதன் பொருள் பூரணமாகப் புரியாது. அதைப் புலமையால் பாஷா சாஸ்திரப்படியான பிற மொழிகளில் ஆக்கித் தரவும் முடியாது. ஏதோ ஓரளவு கோடி காட்டலாம், அவ்வளவே!

'மீரா பாடினாள்' என்று சொல்வதுகூட அவ்வளவு சரியில்லை. பால் உண்டாவதற்குப் பசு மட்டும் இருந்தால் போதுமா? கன்றும் இருந்தால்தானே அதை முன்னிட்டுப் பசுவுக்குப் பால் சுரக்கும்? மீரா பசுவல்ல; கன்றுதான். அவளை முன்னிட்டு நம்மனைவருக்காகவும் பிரேம பக்திப் பசுவே இசையமுதத்தைப் பொழிந்தது. பால் தோன்றும் போதே நீர்மையுடனும் வெண்மையுடனும் சுவையுடனும் இயல்பாகச் சுரப்பதுபோல், இசையும் தன்னியற்கையாகவே

*மொழியுடனும் பண்ணுடனும் சந்தத்துடனும் பிறந்தது. மீரா பாட்டை அமைத்தாள் என்பது கன்று பாலை அமைத்தது என்பது போலத்தான்!*

*மீரா பாடினாள். மீராவின் குரலில் கண்ணனின் கரும்புக் குரலையே கேட்டார் கோஸ்வாமி.*

'முரளியை மீளக் கொடு,
மோகன ராதா ராணி,
முரளியை மீளக் கொடு!
முரளியின் மேனியில் என் மூச்சுமே மேவிநிற்கும்,
முரளியில்லாவிடில் மூர்ச்சித்துப்
போய்விடுவேன் (முரளியை)

குழலில்லாவிடில் கானம் எப்படிச்செய்வேன்?
உழல விடாதே, எந்தன்
உயிரிசைக் கருவியைத் தா (முரளியை)

மாடுகன்றை மேய்ச்சலில் மயக்கிக் கவர்ந்துவரப்
பாடும் குழலினைநீ
பறிக்கலாகுமோ கள்ளி?'

*மீரா பாடிக்கொண்டே இருந்தாள். இப்போது அதில் கண்ணன் குரல் மறைந்தது. ராதிகா தேவியின் புனித சாரீரத்தை நுகர்ந்தார் ரூபர்.*

'மழலை வழியும் உந்தன் வாய்மொழி இருக்கக்
குழலைஏன் தேடுவாய் என்கேசவா? (மழலை)

ஆவினத்தை அழைக்க வாயிசை இல்லையோ?
கரமுண்டே தாளமிட, பிறகருவியும்ஏனோ? (மழலை)

தார்க்குச்சியும் தருவேன், மேச்சலுக்குதவிட
வேய்ங்குழலை மறப்பாய், ஆய்க்குலச் செல்வனே!

*ரூபகோஸ்வாமி ராதா-கிருஷ்ண லோகத்தில் சஞ்சரித்துக்கொண்டிருந்தார். அப்போது மீராவின் குழந்தைக் குரல் மீராவின் குரலாகவே வெளிவந்து அவர் உள்ளத்தைக் குளிர்வித்தது.*

காரியம் சாதிக்கக் கார்மேகக் கண்ணன்
'நாரீமணிதேவி, நமஸ்காரம்' எனவீழ்ந்தான்!
மீராவின்பிரபு கிரிதர நாகரனை
ஆரா அன்புசெய்த ஸ்ரீராதை தோல்விகண்டாள்!

*மீரா தனது அதிசய அநுபவத்தை முற்றும் பாடி விடவில்லை என்பது ரூபருக்குத் தெரிந்தது. 'ராதை தோற்றாள்.' குழலைக் கண்ணனிடம் கொடுத்துவிட்டாள். ஆனால், மீரா*

தோற்றாளா? மீரா தோற்பாளா?' என்று ரூபகோஸ்வாமி தம்மைத் தாமே கேட்டுக்கொண்டார்.

"மீரா தேவி, உன் திருவுள்ளத்துக்கு எவ்வளவு விருப்பமோ அவ்வளவுக்கே இந்தக் கிழவனிடம் கூறினாய். அதுவே என் அதிருஷ்டம். உன் மலர்வாயில் நீ முதல் முதலில் தொடுத்த சொல்மாலையை மோந்துபார்க்கும் பேறு எனக்குக் கிட்டியதே, அதுவே போதும்!" என்றார் கோஸ்வாமி.

மீரா அவரையே வெறிக்கப் பார்த்துக்கொண்டிருந்தாள். அவளுடைய உடம்பு மெல்ல ஆடிற்று; உதடுகள் நடுங்கின; கண்ணிமைகள் படபடத்தன. சர்வ சாதாரணக் குழந்தை யாகவே கம்மிய குரலில், "அம்மா எங்கே?" என்றாள்.

கண்ணன் தனது மாய வலையை வீசி அவளுடைய அற்புத நினைவுகளை அகற்றிச் சாதாரண மக்களில் ஒருத்தியாக அவளைச் செய்கிறான் என்பதைக் கண்டார் ரூபர்.

"வா, குழந்தே! நானே உன்னை அம்மாவிடம் அழைத்துச் செல்கிறேன்" என்று மீராவைத் தூக்கிக் கொண்டார்.

அப்போது அவர் உதயசந்திரனைத் தாங்கும் பனிவரை யாக இருந்தார்.

சந்திரமுகியும் ரத்தன்சிங்கும் ரூபகோஸ்வாமியை இலேசில் விட்டுவிடவில்லை. அவருடன் ஏகாந்தமாக நீண்ட நேரம் பேசிக்கொண்டிருந்தார்கள். குழந்தை மீராவைப் பற்றித்தான் பேச்சு. அவளுடைய போக்கு அவர்களுக்குப் புரியவே இல்லை.

"புரியாது, புரியாது. எப்படிப் புரியும்? நாமும் மீராவானால்தான் புரியும்" என்றார் ரூபகோஸ்வாமி. "எல்லா வற்றுக்கும் ஒரு காலம் வரவேண்டியிருக்கிறது. அதே போல் ஒரு காலம் வரும்போது, அதன் தேவையைப் பூர்த்தி செய்கிற வஸ்துவும் தானே தோன்றிவிடுகிறது. தானே தோன்றிவிடுகிறது என்று சொல்வானேன்? பிரபு கிரிதரன்தான் அதைத் தோற்றுவிக்கிறான். சைதன்ய மகாப்பிரபுவின் மரபில் வந்துள்ள நாங்கள் 'அநுகத உபாஸனை' என்று செய்கிறோம். 'நேருக்கு நேராகக் கண்ணனில் கலந்து கரைந்து அநுபவிக்க அடியார்களால் இயலாது. கண்ணனின் அன்புக் கடல் ராதையின் மூலமாகவே ஒரு வடிகாலாக இழியும். அந்த வடி காலையும் அவளது தோழிகள் ஒவ்வொருவராகப் பிரித்துச் சிற்றோடைகளாக அனுப்புவார்கள். இறுதியில் இச் சிறிய

*வாய்க்காலும் குருவின் மூலம் நீர்த்துளிகளாகத்தான் நமக்குக் கிட்டமுடியும்' என்று நாங்கள் நம்புகிறோம். ஆனால் நாமும்கூட நேரடியாகக் கண்ணனை அடையமுடியும், அவனுடைய பிரேம வாரிதி முழுவதையும் அப்படியே பருகிவிட முடியும் என்று நிரூபிக்க வேண்டிய தேவை ஏற்பட்டுவிட்டதோ என்னவோ? இதை யார் நிரூபிக்க முடியும்? ராதாதேவி ஒருத்தியால்தான் முடியும். ராதாதேவி அப்படி நிரூபிக்க வருவாளா? கண்ணனைப் பிரிந்து வருவாளா? வருவாள்! ஏனெனில் பிரிவிலும் ஓர் இன்பம் உண்டு. சேர்ந்திருக்கும்போது ஒரே ஒரு கண்ணனை ருசிப்பதோடு முடிகிறது. பிரிந்திருக்கும்போதோ உலகமும் அதிலுள்ள கோடானு கோடிப் பொருள்களும் தெரிகின்றன. ஆயின் நேசம் மறக்காத நெஞ்சம், கண்ணனையும் மறப்பதில்லை. கோடானு கோடி பொருள்களைப் பார்க்கும் போதும் அவற்றில் கண்ணனையே காண்கிறது. சேர்க்கையில் ஒரு கண்ணன் என்றால் பிரிவின்போதோ எண்ணற்ற கண்ணன்கள்!* **'ஏக: ஸ ஏவ ஸங்கே, த்ரிபுவனமபி தன்மயம் விரஹே!'**

*ரூபகோஸ்வாமி தமது 'லகு பாகவதாம்ருதம்' என்ற கிரந்தத்தைத் தாமே ரசித்து விளக்கினார்.*

*அவரது உள்மனம் கொண்ட உணர்வுகளை அவராலேயே பூரணமாக வெளிப்படுத்த முடியவில்லை. அவ்வாறிருக்கச் சந்திரமுகியும் ரத்தன் சிங்கும் அதை எப்படிப் பூரணமாகப் புரிந்துகொள்ள முடியும்?*

*"ஸாயீ! தாங்கள் சொல்வதெல்லாம் மீராவுக்கு எப்படிப் பொருந்துகின்றன என்பது எங்களுக்குப் புரியவில்லை. ஆயினும் அவள் உள்ளார்ந்த பெருமை வாய்ந்த ஓர் அற்புதப் பெண் என்பது மட்டும் தெரிகிறது. அவளை நாங்கள் எப்படி வளர்ப்பது என்றே புரியவில்லையே?" என்று கலங்கிக் கேட்டனர் பெற்றோர்.*

*"அதைப் பற்றி ஏன் கவலை? மீராவை சாமானியப் பெண்ணாகவே நினைத்து வளர்த்து வாருங்கள். அப்படி நினைக்க இயலுமா இயலாதா என்ற கவலை உங்களுக்கு வேண்டாம். கிரிதரன் அதைப் பார்த்துக்கொள்வான். அவன் குழந்தையாக இருந்தபோது மண்ணுண்ட வாயை யசோதையிடம் காட்டினான். அதில் ஈரேழு உலகமும் கண்டாள் அவள். இப்படிப் பார்த்தபின்னும் அவள் கண்ணனை சாமானியப் பிள்ளையாகவே எண்ணி வளர்க்க*

வில்லையா? உங்களுக்கு மாத்திரமின்றி, இந்த மீராவுக்குமே அவன் அப்படி மாயத் திரை போட்டு விளையாடுவான். கண்ணனுக்கே தெரியும் எங்கெங்கே எப்படி எப்படி மாயத் திரை போட வேண்டும் என்பது."

சுத்த ஆன்மாவாகிய ரூபகோஸ்வாமி எந்த வேளையில் இப்படிக் கூறினாரோ? மீராவின் மாண்பு பூரணமாக எவருக்கும் தெரியாதபடி அக்கணமே மாயத்திரை விழுந்தது. சந்திரமுகிக்காகவும் ரத்தன்சிங்குக்காகவும் மட்டும் அந்த மாயத்திரை விழவில்லை. இனி வரப்போகும் காலத்தில் மீராவின் வாழ்வில் மிக முக்கியமான அங்கம் வகிக்கப் போகிறவர்களும் அவளைப் புரிந்துகொள்ள முடியாதபடி இந்தத் திரை கனமாக விழுந்துவிட்டது!

## 5. கள்ளக் கல்யாணம்!

ஜன்மாஷ்டமியின் நள்ளிரவு.

தட்சிணாயனம் என்பது தேவர்களின் இரவு. கிருஷ்ணபட்ச அஷ்டமி பிதிரர்களின் இரவு. அவ்விரட்டை இரவில் மானுடருக்கும் நள்ளிரவில் நிகழ்வது நந்தநாயகனின் ஜயந்தி.

மேகங்களில் கருமை ஏற ஏற மின்னல் அதிக ஒளியுடன் பிரகாசிக்கும்.

மேகங்களில் கருமை ஏற ஏற மழை அதிக வலிவாகப் பொழியும்.

காரிருளில் ஒரு பேரொளியாக, சோக கனாந்தகாரத்தில் ஆனந்த கனமழையாகக் கண்ணன் பிறந்தது தட்சிணாயன-அஷ்டமி-நள்ளிரவு.

ரூபகோஸ்வாமி கிரிதர கோபாலனுக்கு ஆராதனை செய்து கொண்டிருந்தார். மேர்தா மக்கள் யாவரும் அந்த அற்புத பூசனையைக் கண்டு மெய்ம்மறந்திருந்தார்கள்.

மீரா மட்டும் அங்கில்லை.

அரண்மனையின் இரண்டாம் மாடத்தில் தந்தக் கட்டிலில், காசிப் பட்டுப் பஞ்சணையில் காச்மீரச் சால்வையைப் போர்த்துக்கொண்டு இலட்சணமாக உறங்கிக் கொண்டிருந்தாள்.

பகலெல்லாம் ஆடியதிலும் பாடியதிலும் பீய்ச்சாங்குழல் அடித்து விளையாடியதிலும் அலுத்துப் போய்க் குழந்தை தூங்கி விட்டாள் என்றுதான் சந்திரமுகி நினைத்தாள்.

ஆனால் இது உடல் அலுத்துப் பிறந்த உறக்கம் அல்ல. மனம் முகிழ்த்துப் பிறந்த உறக்கம். கண்ணைத் திறந்து கொண்டு காணும் காட்சிகளைவிடத் தெளிவாக, அடர்த்தி யாகக் கண்ணனைக் காணும் கனவுக்காகவே மீரா துயின்று கொண்டிருந்தாள்.

கிளிக் குஞ்சைத் தூக்கிச் செல்லும் காற்றுப்போல் கண்ணன் எழுப்பிய கொம்பின் ஒலி மீராவை அவனுடைய உலகுக்குத் தூக்கிச் சென்றது.

கண்ணன் முன் களித்து நிற்கவில்லை மீரா. குற்றவாளி போல முகத்தைத் தொங்கப்போட்டுக்கொண்டு நின்றாள். 'அவனது முரளியின் கானத்தைத் தான் அபகரித்ததால் அல்லவோ அவன் கொம்பை ஊதவேண்டியிருந்தது? அப்படி யாயின் கானத்தை அவனிடமே திருப்பித் தந்துவிடலாமா?' அதற்கும் மீராவுக்கு மனம் வரவில்லை. கானத்தைத் தந்து விட்டால் பிறகு மீரா இல்லை. அவள் அநுபவிக்க விரும்பிய பிரிவும் இதரத் துன்பங்களும் இல்லை.

வேணுவினால் அவளது வதனத்தைத் தூக்கினான் கோவிந்தன்.

மீராவுக்குச் சொல்லி முடியாத கோபம் வந்துவிட்டது.

"உன் விரலாலேயே என் முகத்தைத் தூக்கியிருந்தால் கூடப் பொறுத்துக்கொண்டிருப்பேன். இந்தப் பாழாய்ப் போன குழலால் எப்படித் தூக்குவாய்?" என்றாள் சினத்துடன். யமுனா தீரத்தில் வளர்ந்திருந்த ஓர் அசோக மரத்தின் அடியில் சோகக் கொடியாக உட்கார்ந்து கொண்டாள்.

"கோபிகே, கோபிக்காதே! இந்தா வேணு. உன் கையாலேயே இதை முறித்துப் போட்டுவிடு" என்று கண்ணன் அவள் எதிரே வந்து நின்று குழலை நீட்டினான்.

மீரா அதை வாங்கிக்கொண்டாள்.

ஆனால் முறிக்கவில்லை.

தன் அதரங்களில் வைத்துக்கொண்டாள்.

கண்ணனின் திருமுகம் பட்டுப் பட்டுத் தித்தித்தது அந்த வேய்ங்குழல்.

அதிலிருந்து தித்திக்கும் கானத்தை எழுப்பினாள் மீரா.

கண்ணன் நடனமாடினான்.

நடனமாடிக்கொண்டே இசையில் அவன் கரைந்து தனக்குள்ளேயே வந்துவிடுவான் என்பதை அவள் புரிந்து கொண்டாள்.

இருவரும் ஒன்றாகி விடக் கூடாது; தனித் தனியே நின்று அழகு பார்க்கவேண்டும்; அதற்கும் மேல், பிரிந்திருந்தும் தாபத்தில் தவிக்கவேண்டும் என்று ஆசைப்பட்டல்லவா அவள் பிறவி எடுத்திருந்தாள்? கண்ணனைக் கரையவிடாமல் கட்டிவிட ஆசைப்பட்டாள். தன் கழுத்தில் உறுத்திய ஒரு ஹாரத்தை எடுத்து வீசி எறிந்து. அவனைச் சுற்றிப் பிடித்தாள்,

என்ன ஆச்சரியம்!

அவள் வேணுவில் அடைத்து வைத்திருந்த துளசித் தாமம்தான் அந்த ஹாரம்!

அது எப்படித் தன் கழுத்துக்கு வந்தது?

மீராவுக்கு விஷயம் புரிந்துவிட்டது. அவளது சிரசுக்குள் வெண்ணிலவு உதித்தது. அதிலிருந்து அமிர்தம் வழிந்து உச்சந் தலையிலிருந்து உள்ளங்கால் வரையில் உள்ள நாடிகளி லெல்லாம் குளுகுளுவென்று பிரவகித்தது. ஆம். அவளுக்குக் கல்யாணம் ஆகிவிட்டது! அவளறியாமலே அவளைக் கண்ணன் கள்ளனாக மணந்திருக்கிறான்! திருமணப் பரிசாகவே மணக்கின்ற துழாய் மாலையைச் சூட்டி யிருக்கிறான்!

"இப்படித்தான் திருட்டுத் தாலி கட்டுவதா?" என்று கண்ணனிடம் பொய்ச்சண்டை பிடித்தாள் மீரா.

கண்ணன் சிரித்தான்.

"இது ஒரு பெரிய அதிசயம் மீரா! மிகப் பெரிய அதிசயம்! நான் உன்னை மணந்துகொண்டது உனக்கு மட்டும் தான் தெரியாது என்று நினைக்கிறாயா? அது எனக்குமே தெரியாது. நாம் நம்மை அறிந்தா ஒவ்வொரு சுவாசத்தையும் இழுத்து விடுகிறோம்? நம்மை அறிந்தா ஒவ்வொரு இதயத் துடிப்பையும் உண்டாக்கிக் கொள்கிறோம்? நம்முடைய கல்யாணமும் அதைப் போன்றதே. ஆனால் கல்யாணம் ஆனதைத் தெரிந்துகொண்டு மெய்க்காதலில் உறவாடி உறவாடி உச்சநிலை தொட்ட பின் நம்மில் ஒருவர்தான் இருக்க முடியும்" என்றான்.

மீராவுக்குச் சுரீரென்றது. உடலில் பரவிய அமிருதம் முழுதும் ஆலகாலம் ஆகிவிட்டாற்போல் இருந்தது.

"ஹா, கான்ஹா, என்ன அமங்கல வாக்குச் சொன்னாய்! நம் இருவரில் ஒருவர்தான் இருக்க முடியுமென்றால் நான் உயிரை விட்டுவிடுகிறேன். நீ...நீ... அதெப்படிச் சாத்தியம்! நீ பொய் சொல்கிறாய், மாயா! நீ அழிவற்ற அனந்தன் அல்லவா?" என்றாள்.

"வாஸ்தவம்தான். ஆற்றின்மேல் ஓர் இலை விழுகிறது; நீரின் மென்மையை அநுபவித்துக்கொண்டு அதன்மீது மிதக்கிறது. ஆற்றின்மேல் ஒரு மலர் விழுகிறது; நீரின் தண்மையை அநுபவித்துக்கொண்டு அதன்மீது மிதக்கிறது. இதையெல்லாம் பார்த்துக்கொண்டே யிருக்கிறது முகில். தானும் ஆற்றின் மென்மையை, குளிர்ச்சியை நுகர வேண்டும் என்று ஆசைப்படுகிறது. மழையாகப் பொழிகிறது. அந்த மழை ஆற்றின் மென்மையை, குளிர்ச்சியைத் தனித்து நின்று அநுபவிக்க முடியுமா? இன்னொன்று சொல் மீரா, இந்த மென்மையும் குளிர்ச்சியும் அந்த மேகத்திடமே உள்ளவை தாமே? மேகமும் ஆறும் மணந்தால் ஒன்றுதான் இருக்க முடியும்; தம்பதி என்று இருவர் எப்படி இருக்க இயலும்? அன்பின் பாதை மிக மிகக் குறுகல், கண்மணி! அதில் ஒருவர்தான் நிற்க முடியும். நீ நிற்பதென்றால், அகந்தை பிடித்த ஜீவாத்மாவாக நீயேதான் தனித்து நிற்க வேண்டும். அதில் எனக்கும் இடம் தருவதென்றால் நீ நானாக வேண்டும். மீரா.... இல்லை.... ராதா! நீ இயற்கைக்கே முரணான ஒன்றுக்கு ஆசைப்பட்டாய். என்னோடு அன்பில் ஒன்றிவிடாமல், பிரிந்திருந்து என்னை ரசிக்க விரும்பினாய். ஆனால் ரசிக்க ரசிக்கப் பிரிவு அழிந்துகொண்டேதான் இருக்கும். இறுதியில் ஒன்றிவிட வேண்டியதுதான். ராமாநுஜரும் மத்வரும் சைதன்யரும் நிம்பார்க்கரும் வல்லபரும் பிரிந்திருந்து ரசிப்பதைச் சொல்லி மக்களை அழகு வழியில், அன்பு வழியில், கண்ணீரின் வழியில், விநயத்தின் வழியில், சங்கீத வழியில் திருப்பி விட்டார்கள். ஆனால் அதன் முடிவு அவர்கள் கையிலும் இல்லை. என் கையிலும்கூட இல்லை" என்று சொல்லித் தாராகணங்கள் உதிர்வதுபோல் சிரித்தான் ஸ்ரீதரன்.

அத்தனை அழகாக அவன் சிரித்தாலும் அவன் சொன்னதென்னவோ பொய்! அவன் கையிலில்லாத ஒரு விஷயமும் உண்டா என்ன? எல்லாமும் அவன் வசம்தான். எதையும் செய்யவல்ல சமர்த்தனவன். எனவே அவனே

அவனான பரமாத்மாவாக ஒன்றி ஐக்கியமுற்றவர்களும் அவனிடமிருந்து அதேபோதில் சிறிது பிரிந்ததுபோல் அவனோடு அன்புறவாடுமாறு செய்யவும் அவனால் முடியும். ஜீவன் முக்தர்களான அத்வைத ஞானியர் அப்படிப்பட்ட நிலையில்தான் அவனை அன்புக்கிடுவதும், ஜீவகுலத்துக்கு நலன் புரிவதும். ராதா-மீரா-சைதன்யர் போன்றோர் த்வைத பக்தியின் சிகரமாக அவனால் சங்கற்பிக்கப்பட்டவர்கள். அவர்களை அவனே அன்புறவின் உச்சி ஸ்தானத்திலும் தன்னுடன் பூர்ண ஐக்கியமுறாதவண்ணம் சற்றேனும் பிரித்தே வைத்து அன்புறவாடலை நீடிப்பான். அல்லது, அவர்கள் அவ்வப்போது அத்வைத ஐக்கியமே உற்றாலுங்கூட, உடனுக்குடனே அவர்களை த்வைத பக்தியநுபவத்துக்குத் திருப்பிவிடுவான்.

பின் ஏன் மீராவிடம் பொய் சொன்னான்? மிச்சம் மீதியின்றிச் சகல விதத்திலும் துன்பப்படவே எடுத்த அவதார மல்லவா மீராவின் பிறவி? 'தன்னை அடைந்து இன்புறும் விஷயமாகவும் அவள் ஒருவிதமான துன்பம் அடையுமாறு அவளுடைய சிந்தையைத் தூண்டிச் சஞ்சலிக்கவைப்போமே!' என்றுதான் இப்படிக் கதைத்தான்.

மீரா சிந்திக்கலானாள். சாதாரண சிந்தையா அது? 'அவனிடம் அன்பில் முழு முதிர்ச்சி கண்டால் அப்புறம் அவனை அன்புக்கிடவே முடியாமல் ஒன்றுபட நேருமாமே! என்ன கொடுமை? அதற்காக அவனிடம் பூர்ண ப்ரேமை செலுத்தாமலிருக்க முடியுமா என்ன? என்ன கொடூரமான தர்ம சங்கடம்?' — சிந்தாகுலத்தின் சிகரத்தில் நரக வேதனைக்கு மேற்பட்ட இன்னலை மீரா அநுபவித்தாள். சில நொடிகளில் அவள் இறுக்கிப் பிழிந்து அநுபவித்த அத்துயரே போதும் எனக் கருணாகரன் கருதினான்.

"வேண்டாம் மீரா, நீ சிந்திக்க வேண்டாம். சிந்திக்கப் பிறந்த தத்துவ ஞானிகள் அதைச் செய்யட்டும். நீ அதற்கு மேலாக என்னை வந்திக்கப் பிறந்தவள்; நாத பாசத்தால் என்னைக் கட்டிப் பந்திக்கப் பிறந்தவள். நீ பாடு, குழலெடுத்துப் பாடு" என்றான் கண்ணன்.

அக்கணமே அவனருளில் அவளுடைய அச் சிந்தனை பறந்தோடிவிட்டது.

மீரா வேணுவை எடுத்து யமுனாகல்யாணி ராகத்தை ஊதினாள். சங்கீத சாஸ்திரத்தைக் கற்காமலே அவளிடம்

ராகமும் தாளமும் தாமாகக் கூடின — சத்தியத்தைப் பற்றிய நூல்களைப் படிக்காத எளியவர்களிடம் சத்தியம் கூடுவது போல்.

அவள் குழலூதியதும் அவள் ஆடியதும்தான் மீரா-கண்ணனின் திருக்கல்யாணம். 'கல்யாணம் ஆனபின் ஒருவர் தான் இருக்க முடியும்' என்று அவன் கூறினானல்லவா? யமுனாகல்யாணியில் கரைந்து வேணுவின் வழியாகக் கல்யாணப் பெண்ணின் இதயத்தில் மறைந்துவிட்டான் மாதவன்.

அதை மீராவே உணராதபடி செய்துவிட்டான்! கண்ணனில் நாம் கரைவதற்கும் நம்மில் கண்ணன் கரைவதற்குமிடையே அவன் ஒரு வித்தியாசம் செய்வான். அதாவது அவனில் கரைகிறவர்களுக்கு அனந்தமான ஆனந்தம் கிடைக்கும். அவனே கரையும்போதோ சிலரிடம் அவன் எந்த உணர்ச்சியையும் ஏற்படுத்தமாட்டான்! நாம் யாவருமே அவன் நம்மில் கரைந்திருப்பதை உணராமலேதானே நம் வழி செல்கிறோம்? மாயை என்பது இதுதான்! மீரா போன்ற பரம பக்தர்களின் உள்ளேயும் அவன் இப்படிக் கள்ளனாக அவர்களே அறியாமல் ஒளிவதுண்டுதான்! ஆனால் நம் போலின்றி அவர்கள் உள்ளேயே உள்ள அவனுக்காக விரக உணர்ச்சியில் துடிப்பார்கள்.

கண்ணனைக் காணாது அப்படித்தான் கண்ணீரும் கம்பலையுமாக மீரா எழுந்தாள். அச்சமயம் கோஸ்வாமியின் பூஜை முடிந்து விட்டது. அடியார்கள் யாவரும் உறங்கச் சென்றுவிட்டனர்.

மோர்தா முழுதும் உறங்கும் யாமத்தில் மாடத்திலிருந்து தனியாகப் பரக்கப் பரக்க இறங்கி ஓடினாள் பாலகி மீரா. நீண்ட நீண்ட தாழ்வாரங்களையும் அங்கணங்களையும் படி வரிசைகளையும் துருத கதியில் கடந்து சென்றன அவளது பஞ்சுப் பாதங்கள்.

ரூபகோஸ்வாமியார் பூஜை புரிந்து வந்த மண்டபத்துக்குள் நுழைந்தாள் மீரா.

ஓரிரு குத்துவிளக்குகள் முத்துச் சுடர் பரப்ப, ஒளியின் ஆட்டத்தில் கிரிதரமூர்த்தியின் முகம் சிரிப்பு அலைகளைச் சிந்த விட்டுக்கொண்டிருந்தது.

அப்படியே குண்டுக் கட்டாக அந்த கிரிதர விக்கிரகத்தைத் தூக்கிக் கொண்டாள் மீரா. எங்கிருந்துதான்

அவளுக்கு அவ்வளவு சக்தி வந்ததோ? விக்கிரகத்தை எடுத்துக் கொண்டு வந்த வேகத்திலேயே தன் மாடத்துக்குத் திரும்பினான்.

தந்தக்கட்டிலில், காசிப் பட்டுப் பஞ்சணையில் கிரிதரனைச் சயனிக்கச் செய்து காச்மீரச் சால்வையால் போர்த்தினாள். அவனது பாதத்தின் அடியிலேயே தானும் படுத்துக்கொண்டாள். அவனது கால் விரல் பத்தையும் அவளது கைவிரல்கள் பத்தும் கெட்டியாகப் பிடித்துக் கொண்டன.

மீரா நிம்மதியாகத் தூங்கினாள்.

'கிரிதர மூர்த்தியைக் காணவில்லை. மோர்தா வந்ததற்கு மகத்தான அபசாரம் ஏற்பட்டு விட்டது' என்று விடியும் வேளையில் ரூபரோடு வந்திருந்த அடியார்கள் அமர்க்களம் செய்தனர். ரூபகோஸ்வாமி கையை அசைத்து அவர்களை அடக்கினார். மௌனமாகத் தம்மைப் பின்தொடருமாறு ஜாடை காட்டிவிட்டு நடந்தார்.

மாளிகை வாசலில் ரத்தன்சிங் அவசர அவசரமாக வந்து அவரை வரவேற்றான். ரூபர் ஏதும் பேசாமலே குழந்தை மீரா துயின்ற மாடத்துக்குச் சென்றார்.

கிரிதரமூர்த்தத்தை மஞ்சத்தில் வைத்து, அதன் காலடியில் தூங்கும் குழந்தையைக் கண்டவுடன் அனைவருக்கும் உள்ளம் கசிந்தது.

விக்கிரகத்தை எடுக்கப் போனான் ரத்தன்.

அவனது கையை இறுகப் பிடித்தார் ரூபர்.

'சேர வேண்டிய இடத்தில் கிரிதரன் சேர்ந்துவிட்டான்' என்று கூறுவதுபோல் திருப்தியுடன் பார்த்தார்.

தம் இடையில் கட்டியிருந்த தம்புராவை மீராவின் மறுபுறத்தில் வைத்தார். இறைவனுக்கும் இசைக்கும் நடுவே ஒரு பாலமாகப் படுத்திருந்தாள் பாலகி!

அனைவரும் வந்த சுவடு தெரியாமல் அங்கிருந்து அகன்றனர்.

அரண்மனையிலிருந்து வெளிப் போந்த கோஸ்வாமி தமது க்ஷேத்திராடனத்தைத் தொடர்ந்தார்.

முதல் நாளான ஜன்மாஷ்டமி இரவு பொழிந்த மழை இப்போதுதான் நின்றிருந்தது. வறண்ட ராஜஸ்தானத்திலும்

குளிர்ந்த காற்று வீசியது. மங்கள ஸ்நானம் செய்ததுபோல் மேர்தாவின் புகழ் பெற்ற கம்புப் பயிரும் எள்ளுப் பயிரும் பச்சென எழும்பி நின்றன. அவற்றின் அடியிலிருந்து மண்டூகங்கள் கோஷ்டி கானம் எழுப்பின.

தம்புராவை மீராவுக்குத் தந்துவிட்ட ரூபருக்கு இயற்கையின் சூழலே சுருதி கூட்டியது.

'மழலை வழியும்உந்தன் வாய்மொழி இருக்கக்
குழலைஏன் தேடுவாய், என்கேசவா ?'

என்று பாடியவாறு அவர் உற்சாகமாகச் சென்றார்.

'இதென்ன புதிய பாடலாக இருக்கிறதே!' என்று அவருடைய சீடர்கள் வியந்தனர்.

அவருமே அப்போது ஒரு பச்சிளம் பாலகியிடம் சீடராகத்தான் இருந்தார்.

# 6. சிராவணம் வந்தது; சியாமளன் வாரானோ ?

மேர்தா ராஜபவனத்தின் வாயிலில் பெருங் கூட்டம்.

ராவ் தூதா மக்களுக்குச் சிவப்பு நிற ஆடைகள் வழங்குகிறார். அவற்றைப் பெற்றுச் செல்லத்தான் கூட்டம் கூடியிருக்கிறது.

"தாத்தா, எனக்கு" என்று கூட்டத்தின் பல கைகளிடையே இரண்டு மெல்லிய சிறு கரங்கள் நீட்டப் படுகின்றன.

"ஆ! மீரா? நீ ஏன் குழந்தாய், இவர்களோடு போய்க் கூட்டத்தில் சேர்ந்தாய்? இப்படி வா" என்கிறார் தூதா ராவ்.

"எனக்கும் சிவப்புச் சேலை வேணுமே!" என்கிறாள் மீரா.

"பேஷாக! உனக்கு இல்லாததா? ஆனால் அவர்களோடு நிற்க வேண்டாம். இந்தத் தோம்புத் துணி உனக்கு வேண்டாம். உனக்கு சீனப் பட்டில் பொற்சரிகை வேய்ந்த சேலை தருகிறேன். அரண்மனைக்குள்ளே வா" என்கிறார் ராவ் தூதா.

"மாட்டேன். இவர்களோடுதான் இருப்பேன். இவர்களுக்குத் தருகிற தோம்புத் துணியைத்தான் நான் வாங்கிக்கொள்வேன்."

"சரி, இதையும் வாங்கிக்கொள்" என்று சிரித்தபடியே முரட்டுத் துணியாலான ஒரு சிவப்புச் சேலையை மீராவிடம் தருகிறார் தூதா ராவ்.

மீராவின் கைகளுக்கு மேலாக ஒரு பாமர ஸ்திரீயின் இரு கைகள் நீட்டப்படுகின்றன.

ராவ் தூதாவிடம் வஸ்திரங்களை எடுத்துத் தரும் அதிகாரி, விழிகளை உருட்டி அவளை உறுத்துப் பார்க்கிறார். "சற்று முன் நீ சேலை வாங்கிக் கொள்ளவில்லை?" என்று கோபமாகக் கேட்கிறார்.

"அப்போது சேலை வாங்கிக்கொண்டேன். இப்போது வேட்டிக்காகக் கை நீட்டுகிறேன். வீட்டுக்காரருக்கு உடம்பு சுகமில்லை. அவருக்கும் நானே வாங்கிப் போகிறேன்" என்கிறாள் அந்தப் பெண்மணி.

தூதாராவ், "உன் புருஷனின் நோய் ஈசானியின் அருளால் குணமாகும்" என்று அன்போடு கூறிக்கொண்டே அவள் கையில் வேட்டியை வைக்கிறார்.

மீராவும் மறுபடி தனது கைகளை நீட்டுகிறாள்.

தூதா சிரிக்கிறார். "போக்கிரிக் கழுதை! புடைவையைக் கை இடுக்கில் ஒளித்துக்கொண்டு மறுபடியும் கை நீட்டுகிறாயா? நீட்டுகிற கையில் பிரப்பம்பழம்தான் தருவேன், ஜாக்கிரதை!" என்கிறார் பொய்க் கோபத்துடன்.

மீராவுக்கு ரோஷம் பொத்துக்கொள்கிறது. முகம் குப்பென்று சிவக்க, "நான் ஒன்றும் ஏமாற்றவில்லை. புடைவைக்காகக் கை நீட்டவும் இல்லை. என்..." மீராவுக்குக் கோபம் மறைந்து வெட்கம் உண்டாகிறது. மிகவும் மெல்லிய குரலில் "என் வீட்டுக்காரருக்கு வேட்டி வாங்கிப்போகத்தான் மறுபடி கை நீட்டினேன்" என்று சொல்லிக்கொண்டே புடைவையையும் அங்கேயே போட்டுவிட்டு விருட்டென்று நகருகிறாள்.

சுருண்டு ஆடும் அவளது பின்னலைப் பிடித்து லாகவமாக இழுக்கிறார் தூதா. "போக்கிரிப் பெண்ணே! புடைவைத் திருட்டுச் செய்யவில்லை என்று நிரூபிக்க ஆசைப்பட்டு அதைவிடப் பெரிய திருட்டை வெளிப்படுத்தி விட்டாயே! தாத்தாவுக்குத் தெரியாமல் உனக்கு ஒரு

வீட்டுக்காரன் வேறு ஏற்படுத்திக்கொண்டு விட்டாயா? யாரடி அம்மா அந்தக் கள்ளப் புருஷன்?" என்று விளையாடுகிறார் தூதா.

பாலை மீராவுக்குச் சினம் பொங்குகிறது.

"என்ன தாத்தா, ரொம்ப ரொம்பப் பேசிக்கொண்டே போகிறீர்கள்? நான் ஒன்றும் திருட்டுத்தனமாகக் கல்யாணம் செய்துகொள்ளவில்லை. எல்லாம் அம்மாவுக்குத் தெரியும். சரியாக ஒன்றும் கேட்காமலே கோபித்துக்கொள்ளுகிறீர்களே! ராஜா என்றால் இப்படி இருக்கவே கூடாது என்று அம்மா சொல்லியிருக்கிறாள்" என்று ஒரு போடு போட்டுவிட்டு அங்கிருந்து ஓட்டமாக ஓடுகிறாள்.

ராவ் தூதா குலுங்கக் குலுங்கச் சிரிக்கிறார்.

மீரா குலுங்கக் குலுங்க அழுகிறாள் தன் அன்னையிடம்.

வஸ்திர தானம் முடிந்து ராவ் தூதா சிரமபரிகாரம் செய்துகொள்ளும்போது சந்திரமுகி மீராவையும் அழைத்துக் கொண்டு அவரிடம் வருகிறாள்.

"அப்பா, தவறு என்னுடையது. உங்களை அழைக்காமலே உங்கள் பேத்தி அகமுடையானுடைய ஊர்வலத்தை நடத்தி விட்டேன். அதனால்தான் காலையில் அத்தனை உபத்திரவம் விளைந்துவிட்டது" என்று நகைத்துக் கொண்டே கூறுகிறாள்.

"கிழவனாகிவிட்டால் அவ்வளவுதான், வீட்டுக் காரர்களே இலட்சியம் செய்யமாட்டார்கள் என்று பெரியவர்கள் பாடி வைத்திருப்பதெல்லாம் பொய்யாகுமா? சரி, என் பேத்தியின் அகமுடையான் யார் என்று இப்போ தாவது இஷ்டமிருந்தால் தயை கூர்ந்து தெரிவிக்கலாம்" என்று பொய்ப் பவ்வியத்துடன் கேட்கிறார் தூதா.

"உங்கள் பேத்தியையே சொல்லச் சொல்லுங்கள். அவளாகவே பார்த்துத்தான் கல்யாணம் செய்துகொண்டாள். நாங்கள் உங்களை லட்சியம் செய்யவில்லை என்கிறீர்களே! என்னையும் கூட லட்சியம் செய்யாமலேதான் மீரா அகமுடை யானைத் தேர்ந்தெடுத்துவிட்டாள்" என்று கூறுகிறாள் சந்திரமுகி.

தாத்தாவிடம் கோபம் கொண்டதனால் அவருக்கு முதுகுப்புறத்தைக் காட்டிக்கொண்டு எங்கோ பார்த்தவாறு நிற்கும் மீராவிடம் சத்தம் செய்யாமல் வருகிறார் தூதா ராவ்.

அவளது இடுப்பைத் தன் விரல்களால் வருடிக் 'கிச்சு கிச்சு' மூட்டுகிறார்.

"போங்கள், தாத்தா!" என்று கூறியவாறு சிரிப்பை அடக்க முயன்ற மீராவை வாரி எடுத்துக்கொள்கிறார்.

"மீராக்கண்ணு, உன் வீட்டுக்காரன் யார் என்று சொல்லும்மா" என்று கெஞ்சுகிற குரலில் கேட்கிறார்.

மீரா தரையைப் பார்க்கிறாள். அவளது பெரிய இமைகள் கண்களைக் கவிந்து மூடியிருப்பது சொல்லொணாத சௌந்தரியமாக இருக்கிறது.

மாதுள மொட்டுப் போன்ற அவளது உதடுகளையே பார்த்துக்கொண்டிருக்கிறார் பாட்டனார்.

அவை மெல்ல அசைகின்றன. ஓவ்வோர் எழுத்தாக உதிர்கின்றன.

"கி..ரி..த..ர..நா..க..ர..ன்.."

"பிடித்தாயே புளியங்கொம்பை! கிரிதர நாகரனையா கலியாணம் செய்துகொண்டாய்? சந்திரமுகி! நீயும் ரத்தனும் அதிர்ஷ்டசாலிகள்தாம். தஹேஜ் கொடுத்தே ஓட்டாண்டியாகிவிடுவது நம்முடைய வழக்கம். நீங்கள் தஹேஜ் இல்லாமலே ரொம்பப் பெரிய மாப்பிள்ளையாகப் பிடித்துவிட்டீர்களே" என்றார் தூதா ராவ்.

தஹேஜ் என்றால் வரதட்சிணையும் மற்றச் சீர்செனத்திகளும். ராஜஸ்தானியர் வீண் ஜம்பக்காரர்கள் என்று சொல்லுமளவுக்கு இவ்விஷயத்தில் மிகையாகச் செய்வார்கள்.

"சந்திரா, இந்தச் சம்பந்தம் எப்படி ஏற்பட்டது. எப்போது நிச்சயதார்த்தமாயிற்று என்பதெல்லாம் எனக்குத் தெரிய வேண்டுமே!" என்றார் ராவ் தூதா.

அவர் எப்போதும் போர்க்களங்களையே நாடி வந்ததால் மேர்தாவில் அதிகம் இருப்பதில்லை. அவருக்கு மீராவின் பழைய கதையையெல்லாம் — இறைவன் மறைத்தருளியிருந்தது போக — சொன்னாள், சந்திரமுகி.

"ரூபகோஸ்வாமி இங்கிருந்து போனபின் ஒரு நாள் மாடத்தில் நின்றுகொண்டிருந்தோம். வீதியில் ஒரு மாப்பிள்ளை ஊர்வலம் போயிற்று. மாப்பிள்ளையையே விழி பிதுங்கிவிடும் போல் மீரா பார்த்துக்கொண்டிருந்தாள். குதிரையில் உட்கார்ந்துகொண்டு சரம் சரமாக மாலைகளை முகத்திலும் கழுத்திலும் தொங்கவிட்டுக்கொண்டு அவன்

போவது அவளுக்கு வேடிக்கையாக இருக்கிறது போலும் என்று நினைத்தேன்.

" 'என்னடி அப்படிப் பார்க்கிறாய்? இவன் யார் தெரியுமா?' என்று கேட்டேன்.

"அதற்கு உங்கள் பேத்தி எவ்வளவு வக்கணையாகப் பதில் சொன்னாள் தெரியுமோ? 'இவன் யாரென்று தெரியும் போலவும் இருக்கிறது; தெரியாது போலவும் இருக்கிறது' என்றாள்.

" 'இந்தக் கதை வேண்டாம். தெரியாதென்று ஒப்புக் கொள். இவன்தான் மாப்பிள்ளை. மாப்பிள்ளையென்றால் கல்யாணம் செய்துகொள்கிறவன் என்று அர்த்தம். அது சரி; கல்யாணமென்றால் என்னவென்பது உனக்குத் தெரியுமோ?' என்று கேட்டேன்.

"மீரா யோசிக்கலானாள். நீண்ட நேரம் யோசித்துக் கொண்டே யிருந்தாள். ஊர்வலம் நகர்ந்துவிட்டது. ஷெனாய் ஒலிகூடத் தேய்ந்துவிட்டது.

"மீரா அப்படியும் யோசனையிலேயே ஆழ்ந்திருந்தாள்.

"சேடிகள் பயந்துவிட்டார்கள். குழந்தையைப் பிடித்து உலுக்கினார்கள். மீரா முகத்தைத் தூக்கி என்னைப் பரிதாபமாகப் பார்த்தாள். அவள் கண்களில் நிரம்பியிருந்த நீர் காது மடல்களுக்குள் ஓடின. உதட்டைக் கோணக் கோண நெளித்துக் கொண்டாள். குழந்தையைக் கட்டிக்கொண்டேன். 'ஏண்டி, கண்ணூ! உனக்கு என்ன செய்கிறது?' என்று கேட்டேன்.

" 'எனக்கு ஒன்றும் செய்யவில்லை. உன் மாப்பிள்ளைக்கு இந்த மாதிரி ஊர்வலம் செய்யாததுதான் எனக்குக் கஷ்டமாக இருக்கிறது' என்றாள் அவள். 'என் மாப்பிள்ளையா, யாரடி அவன்?' என்றேன், ஒன்றும் புரியாமல். உடனே இவள் கள்ளச் சிரிப்புச் சிரித்துக்கொண்டே இப்போது உங்களிடம் சொன்னதுபோல் எழுத்தெழுத்தாக, 'கி..ரி..த..ர..நா..க..ர..ன்..' என்றாள்.

"அப்புறம் என்ன? ரூபகோஸ்வாமியிடமிருந்து இவள் எடுத்துக்கொண்ட கிரிதர விக்கிரகத்தை ரதத்தில் வைத்து ஊர்வலம் விட்டோம். உங்கள் பேத்தியின் லீலைகளைப் பார்த்தீர்களா?" என்று உற்சாகத்துடன் கூறி முடித்தாள் சந்திரமுகி.

ராவ்தூதாவுக்கு உற்சாகம் ஏற்படவில்லை. அவரது முகத்தில் விசாரத்தின் ரேகைகளாகச் சுருக்கங்கள் விழுந்தன. தமது மனத்தில் இருந்ததைச் சீராக உருவப்படுத்திக் கொண்டு பேசலானார்.

"சந்திரா! ரத்தனும் நீயும் நிரம்பக் கிருஷ்ண பக்தியுடன் இருப்பதற்கு நான் பெருமைப்படுகிறேன். ஆனால் ராஜபுத்திரர்களின் வாழ்க்கை பக்தியோடு நின்றுவிடவில்லை; நின்றுவிடவும் கூடாது. மிலேச்சர்கள் நம் நாட்டில் புகுந்து ராஜ்யங்களை ஸ்தாபித்து வருகிறார்கள். அவர்களைத் தடுத்து நிறுத்த வேண்டும். நமது மதத்தைக் காப்பதற்காகவே நம்முடைய பக்தியை ஓரளவில் குறைத்துக்கொள்ள வேண்டும். இப்படி நான் சொல்வது உனக்குப் புதிராக இருக்கலாம். ஆனால் பக்தியின் தன்மையை நன்றாக உணர்ந்தே நான் இதைச் சொல்கிறேன். பக்தனுக்கு எந்த மதமும் விரோதமல்ல; எவனும் அந்நியன் அல்ல. ஜகன்மாதாவின் கோயிலைத் துருக்கர் இடித்துத் தள்ளி மசூதி கட்டினால் அந்த மசூதியிலும் பக்தன் ஆண்டவனைக் கண்டுவிடுவான். ஆனால் இத்தகைய சமரஸ பாவம் நடைமுறை உலகுக்குப் பொருந்துமா? நம் பாரதத்துக்கே உரிய மரபுகளையும் பண்புகளையும் நாம் அந்நியரிடம் பறிகொடுத்து நிற்பது தகுமா? நம் தருமத்தைக் காக்கவேண்டுமானால் இப்போது வீரத்தின் மூலமே அதனைச் செய்யவேண்டும். பக்தி மிகவும் முதிர்ந்துவிட்டால் அதன் பின் வீரத்துக்கும் போருக்கும் இடமில்லை. சந்திரா! நான் சொல்வது உனக்குக் கசப்பாக இருக்கலாம். இருந்தாலும் என் உள்ளத்தில் இருப்பதைச் சொல்கிறேன். ரத்தனும் நீயும் ஓயாமல் பக்தி செய்தது போதும். இந்தக் குழந்தையையும் அந்த வழியில் அழைத்துப்போக வேண்டாம்."

"அப்பா, தாங்கள் சொல்வது சரியல்ல" என்று ரத்தன் சிங்கின் குரல் வந்தது. டாகுர் துவாரத்திலிருந்து நேரே அங்கே வந்து சேர்ந்திருந்தான் அவன்.

"எது அப்பனே சரியல்ல? பக்தி அளவு மீறினால் வீரம் நலிகிறது; இதன் விளைவாக நமது மதரட்சணமும் பங்கப்படுகிறது என்பது சரியல்லவா?" என்று நிதானமாக வினவினார் தூதா.

"அதுவும் சரியல்லதான். ஏனெனில், இதெல்லாம் கோவிந்தனின் திருஉள்ளப்படி நடக்கிறது. நாட்டில் எந்த விகிதாசாரத்தில் பக்தியும் வீரமும் இருக்க வேண்டும் என்பதைக் கோவிந்தனே தன் எண்ணப்படி நிர்ணயித்துத் தன் அலகிலா விளையாட்டை நடத்துவான். ஆனால் நான்,

'சரியல்ல' என்று சொன்னது இவ்விஷயமாகத் தாங்கள் கூறியதை அல்ல. மீராவை நாங்கள் பக்திவழியில் அழைத்துச் செல்வதாகச் சொன்னீர்களே, அதுதான் சரியல்ல என்றேன். ஏனென்றால் அவள்தான் எங்களைப் பக்தி வழியில் அழைத்துச் செல்கிறாள்" என்றான் ரத்தன்.

சந்திரமுகிக்குப் புல்லரித்தது. ராவ்தூதாவும் தமது பேத்தியின் பெருமை கேட்டு உள்ளூரப் புளகிக்கத்தான் செய்தார். ஆயினும் அதை அவர் வெளிக்காட்ட விரும்ப வில்லை. அவர் வந்த வழி அப்படி! சட்டென்று பேச்சை மாற்றினார்.

"சரி, ஸாவன் தீஜ் பண்டிகையில் என் பேத்தியை எவ்வளவு நாழி ஏமாற்றுவது! ஏய்....யாரடா அங்கே! பொற்சரிகை வேய்ந்த ஒரு ஜோடி தம்பதி வஸ்திரம் கொண்டு வா" என்றார்.

சித்திராலங்காரமான பேழையில் மீராவுக்கும் அவளுடைய அகமுடையானுக்கும் புதிய ஆடைகள் வந்து சேர்ந்தன.

"பேத்தி ராணி! அசட்டுத் தாத்தாவை மன்னித்து இதை வாங்கிக் கொள்" என்று கூறிப் பேழையை நீட்டினார் தூதா.

மீரா அதைத் தொடவில்லை.

"இது வேண்டாம். காலையில் அவர்களுக்குத் தந்த தோம்புத்துணிதான் வேண்டும்" என்றாள் தீர்மானமான குரலில்.

மீரா வேறு எப்படிப் பேச முடியும்?

"பட்டுச் சேலையைக் கிழித்தெறிந்துவிட்டு, கந்தையை உடுத்து உன்னிடம் வருவேன்" என்று பிற்காலத்தில் நந்த கோபாலனிடம் பாடப்போகிறவள் அல்லவா அவள்?

'ஸாவன் தீஜ்' என்பது சிராவண மாதத்தின் மூன்றாம் திதி. அன்றுதான் ஈசன் ஈசானியை மணந்ததாக ராஜஸ்தானத்தில் விழா கொண்டாடுவார்கள். எல்லாரும் சிவப்பு வஸ்திரம் உடுத்துவார்கள். சிவத்தின் திருமணம் என்றால் உள்ளத்திலும் உடலிலும் செம்மை பெற்றுத்தானே அதை பாவிக்க முடியும்?

நமது ஆவணிதான் ராஜஸ்தானத்தின் ஸாவன். மழைக் காலத்தை அழைத்து வரும் திருமணக் காலம் அது. வருஷ ருது என்றால் மகிழாதார் உலகில் எவரும் இல்லை. பாலைவனப்

பகுதி மிகுந்த ராஜஸ்தான மக்கள் அதை இரட்டிப்பு மகிழ்ச்சியுடன் வரவேற்பதில் வியப்பில்லை அல்லவா?

ஆனால் அதிக மகிழ்ச்சி என்னும்போதே அதன் நிழலாக அதிகத் துயரமும் சம்பவிக்கத்தான் வேண்டும். கொட்டும் மழையில் வெளியூர் சென்ற கணவன்மார் வீடு திரும்பவியலாதாகையால் அப்போது ஏற்படும் கார்காலத்தில் பிரிவுத்துயர் ராஜஸ்தான ஸ்திரீகளை வதைக்கும். பிரியனைச் சேர்ந்து பிரிவுத் துயர்தீர்ந்து மகிழவேண்டும் என்று ஏங்கிப் பாடுவார்கள். அவன் வந்தவுடன் ஆரவாரம் செய்து ஆனந்த கீதம் இசைப்பார்கள்.

மீராவும் பாடினாள். மற்ற ராஜஸ்தான ஸ்திரீகளைவிடப் பல மடங்கு விரகதாபத்துடன் பாடினாள். அதே போல், தன் நாயகனை அடைந்தபின் அவர்களைவிடப் பதின்மடங்கு ஆனந்தத்துடன் கானம் செய்தாள்.

மழையை நினைத்தவுடன் மாதவன் நினைவு வராமற் போகுமா? மேகத்தைக் கண்டபோதெல்லாம் கொண்டல் வண்ணனை நினைப்பது ஆழ்வார்களின் அநுபவம் மட்டுமல்ல; மீராவும் அதே நிலையில் உருகினாள். சிராவண மாதம் வந்தும் சியாமளன் வரவில்லையே என்று தவித்தாள். அந்த நிலையிலிருந்து மாறி, குழந்தையாகவே மழையைக் கண்டு அஞ்சினாள்; மீராவாகிப் பாடினாள்:

'சியாமள மஞ்சள் மஞ்சு நிரை கண்டு
சியாமளனே! அஞ்சினேன்;
உறுமிடும் மேகத்தில் குமுறும் நீரினைக் கண்டு
உறுதுணையே அஞ்சினேன்!
பார்க்குமிட மெல்லாம் நீர்மய மாயிற்று
பார்முழுதும் பச்சை பரவிப் பொலிந்தது;
பரஉலகில் வசிக்கும் பச்சையன் வாயிலில்
பரிதவித்து நனைந்து பாடுகிறாள்மீரா
பரிவுதீபம்கொண்டு பிரிவுக் குளிர்தீராய்!
பரமப்ரபுவே! என்றன் ஹரிஅவிநாசியே!'

இவள்தான் பர உலகுக்குப் போனாளோ அவன்தான் பூவுலகுக்கு வந்தானோ, இருவரும் சந்தித்தனர்.

கண்ணன் விழுந்து விழுந்து சிரித்தான். "மலையைப் பிடித்து மழையைத் தடுத்த கிரிதாரி நான் என்று கதை கேட்டு அவ்வளவு ஆனந்தப்பட்டு என்னைக் கொண்டாடினாயே, கடைசியில் நீயே இப்படி மழையில் ஒரேயடியாக நனைந்து நிற்கிறாயே!" என்று கேட்டுவிட்டு மீண்டும் சிரித்தான்.

"என் கஷ்டம் உனக்குச் சிரிப்பு. ஆனால் மிகவும் ஏமாளி யாக்கிவிடாதே. இந்தப் பாட்டில் 'கிரிதாரி' என்று நான் முத்திரை வைக்கவில்லை'' என்று பெருமை பேசிக் கொண்டாள் மீரா.

"ம்...அப்புறம்...!" என்றான் கண்ணன்.

"சொல்லிவிடட்டுமா?" என்றாள் மீரா மிடுக்குடன்.

"பேஷாக....." என்று ஊக்கினான் மாயன்.

"மழையைக் கண்டு நான் பயப்படுகிறேனே என்று நீ கேலி செய்ய வேண்டாம். நீ மழைக்குப் பயந்த கதையும் எனக்குத் தெரியும்" என்று கூறிக் கண்ணனின் கண்களை வெற்றிப் பார்வையுடன் நேருக்கு நேராகப் பார்த்தாள் மீரா.

அது ஓர் அற்புதமான கதை.

பிருந்தாவனத்தில் ஆநிரை மேய்க்கக் கண்ணன் சென்றிருந்த ஒருநாள் மாலை வந்தது. வானத்தில் கருமேகங்கள் சூழ்ந்து காற்றில் மொத்துண்டு அலைந்தன. வானமே ஒரு தமால விருட்சமாகிப் பந்து பந்தாக இலைக்கொத்துகளை அசைத்துக்கொண்டிருப்பதுபோல் இருந்தது. பாலகோபாலன் ஆம், மீரா கூறினாற்போல் பயந்தான்! அவனைத் தொடர்ந்து வந்துகொண்டிருந்த ராதையோ கலக்கமின்றி முகிலின் கருநிற அழகை ரசித்துக்கொண்டிருந்தாள். கண்ணனின் வண்ணத் தோடு அதை ஒப்பிட்டு மகிழ்ந்தாள். "ராதே, குழந்தை கோபாலனை ஆய்ப்பாடிக்கு அழைத்துப் போ'' என்று நந்தகோபன் கூறினான். அவனுக்கு வேறு வேலை இருந்ததால் அவளுக்கு அடித்தது அதிருஷ்டம்! கண்ணனுக்குக் காப்பாகச் சென்றாள் காரிகை. ஆனால் நேரே ஆய்ப்பாடிக்குச் செல்ல வில்லை. யமுனா தீர குஞ்சப்வனங்களில் அவனுடன் மனம் கொண்ட மட்டும் விளையாடி விட்டுத்தான் வீடு திரும்பினாள்.

இந்தக் கதையைத்தான் பெருமையுடன் நினைவு கூர்ந்து, கண்ணனின் கண்களை நேருக்கு நேர் பார்த்தாள் மீரா. அதற்காகக் கண்ணன் தன் கண்களைத் தாழ்த்திக் கொள்ளவில்லை.

"ஜயதேவர் இதை முன்னரே பறைசாற்றிவிட்டார் என்பதால் உனக்கு வெட்கமாக இல்லைபோல் இருக்கிறது" என்றாள் மீரா.

"வெட்கப்பட என்ன இருக்கிறது? நான் பக்தர்களின் காப்பில்தானே என்றுமே இருக்கிறேன்?" என்றான் எளிய பெருமான்.

"அப்படியானால் என்னை மட்டும் ஏன் அடிக்கடி விட்டுப் பிரிந்துவிடுகிறாய்?" என்று வினவினாள் மீரா.

"இதற்கு ஏற்கனவே கோபியரிடம் விடை சொல்லி யாயிற்று" என்று கூறி விடைபெற்றான் விநோதன்.

மீரா இக உலகுக்கு வந்தாள்.

டாகுர் துவார பூஜாரியிடம் சென்று கண்ணன் கோபியரிடம் கூறியது என்னவென்று கேட்டாள்.

அவர், நாத் தழுதழுக்கப் பாடினார்.

'யதா தனோ லப்த தனே விநஷ்டே
தத் சிந்தயான்யன் நிப்ருதோ ந வேத.'

'புதையலைக் கண்ட ஓர் ஏழை, அதை இழந்துவிட்டால் பின்பு அது ஒன்றைப்பற்றியே சந்ததமும் எண்ணுகிறான் அல்லவா? அதேபோல் என்னை இழந்தால்தான் அடியார்கள் என்னை விடாமல் ஸ்மரிப்பார்கள் என்பதற்காகவே நான் பிரிந்துபோகிறேன்' என்ற கண்ணனின் வாக்குத்தான் அது.

இழந்த செல்வத்தை மீண்டும் பெற்றாலே அதனிடமிருந்து பெறும் இன்பம் பேரின்பமாவதுபோல்தான் விரகத்திற்குப்பின் கூடுவதும்.

## 7. ரத்தன் சிந்திய ரத்தம்

கண்ணனைப் போல மாயாவி யாருண்டு?

மீராவின் விஷயத்தில், ஏழை இழந்த புதையலாக என்றும் அவளது நினைவில் நிற்பதற்காகவே அவளைப் பிரிந்த கண்ணன் மோர்தா விஷயத்தில் அதற்கு முற்றும் மாறாக நடந்து கொள்ளத் திருவுளம் கொண்டான் போலும்! மோர்தா மக்களின் நினைவிலிருந்தே தான் நழுவிவிட வேண்டும் என்பதுபோல் அந்த ராஜ்யத்துச் சம்பவங்களை உருவாக்கினான் அவன்! 'பக்தியைக் குறைத்துக்கொண்டு வீரத்தைப் பெருக்கிக்கொள்ளுங்கள்!' என்று கூறிய ராவ்தூதா வுக்கே கண்ணனும் உடந்தையாகி விட்டதுபோல் நிகழ்ச்சி களைச் சமைத்தான். அங்கும் ஒரு மாயம் செய்தான்!

முஸ்லீம்களின் ஆதிக்கம் பரவுவதைத் தடுப்பதற்காகவே ராவ்துரதா பக்தியைக் குறைத்து வீரத்தைப் பெருக்கவேண்டும் என்றார். ஆனால் இப்போது மோர்தாவில் பக்தி குறைந்து வீரம் பெருகியதற்குக் காரணம் அந்நிய மதத்தினரின் ஆதிக்கப் பரவல் அல்ல. ராஜபுத்திரர்களிலேயே இரு பிரிவினரான சிசோதியர்களுக்கும் ராட்டோர்களுக்குமிடையே மூண்ட பிளவு காரணமாகவே மோர்தாவில் — ஏன், ராஜஸ்தானம் முழுவதிலும் — வீர தீரப் போருக்கு அதிக அவசியம் உண்டாயிற்று.

இந்தப் பிரிவின் மூலத்தை அறியவேண்டுமாயின் மோர்தாவிலிருந்து மேலாருக்குச் செல்ல வேண்டும். ராஜ ஸ்தானத்தின் பல சிற்றரசுகளுக்கு மேற்பட்ட பேரரசாகத் திகழ்ந்த மேவாரின் புகழ்பெற்ற அரசர்களாகிய மகாராணாக்களின் வரலாற்றைப் பார்க்க வேண்டும்.

பாரதத்தின் வீர வரலாற்றில் திலகங்களாக ஜொலிக்கும் மேவார் ராணாக்கள் சித்தோரிலிருந்து ஆட்சி புரிந்த சிசோதியப் பிரிவைச் சேர்ந்தவர்கள். இவர்கள் சூரிய வம்சத்தவர்களாக, ராமபிரானின் வழித்தோன்றல்களாகக் கருதப்படுபவர்கள். 'ஹிந்துவா சூரஜ்' — ஹிந்து மதத்தின் சூரியன் — என்ற பட்டம் பெற்றவர்கள். இச் சிசோதிய வம்சம் கண்ட ஒரு சிம்மமாகப் பதினான்காம் நூற்றாண்டின் இறுதியில் மேவாரில் செங்கோலோச்சியும் போர் வாளோச்சியும் பெருமை படைத்தவன் லாகாசிங் என்ற லக்ஷ அல்லது லக்ஷ்மண சிம்மன். லட்சத்தில் ஒருவனாகப் பிறந்த வீரசிம்மம் அவன்!

பாரத தருமத்துக்கு அணிவித்த முப்புரிநூல் போன்ற பாவன ஸ்தலங்கள் கயை, பிரயாகை, காசி ஆகியன. இவற்றைத் 'த்ரிஸ்தலி' என்று சிறப்பித்துச் சொல்வார்கள். லாகா சிங்கின் காலத்தில் இவை முஸல்மான்களின் வசத்தில் இருந்தன. இவற்றை மீட்க வேண்டுமென்பதொன்றே அம்மாவீரனின் மகத்தான அபிலாஷையாக இருந்தது. தனது முதுமைப் பருவம் வரையில் இம்முயற்சியிலேயே அயராது ஈடுபட்டிருந்தான்.

அப்போதுதான் விதி விளையாடியது. விசுவநாதனுக்கும் வேணிமாதவனுக்கும் பணிபுரிவதிலேயே வாழ்வை அர்ப்பணித்திருந்த கிழ ராணா லாகாசிங்கை அவனது முதுமைப் பருவத்தே மணவினையில் ஈடுபடுத்தி விளையாடிற்று விதி. விளையாட்டே வினையான கதை அது.

ராவ்தூதாவின் வம்சமான ராட்டோர் குலத்தைச் சேர்ந்த ஒரு மூதாதை ரண்மல். ராவ்தூதாவைப் போலவே இவனும் மண்டோர் எனப்படும் மந்தவாரத்தைச் சேர்ந்தவன். இம் மகாரதன் தன் அருமைச் சகோதரி ஹம்ஸாபாயை லாகாவின் புத்திரனான சண்டனுக்குத் திருமணம் செய்விக்க விரும்பினான். கலியாணம் பேசுவதற்காகச் சித்தோருக்குச் சென்றான். தேங்காய் கொடுத்துவிட்டுத்தான் விவாகப் பேச்சுகளைத் தொடங்குவது ராஜஸ்தானியரின் வழக்கம். அதற்கேற்பக் கிழ ராணா லாகா சிங்கைச் சபா மண்டபத்தில் சந்தித்த ரண்மல் தேங்காயை அவர் கைகளில் கொடுத்து, "என் சகோதரி ஹம்ஸாபாயை ஏற்றுக்கொள்ள வேண்டும்" என்றான்.

லாகாசிங் சிரித்துக்கொண்டே தாடியை உருவியவாறு, "தேங்காயை என் கையில் கொடுத்தீர்கள். உங்கள் சகோதரியை ஏற்கவேண்டும் என்று என்னையே கேட்டுக்கொள்கிறீர்கள். கலியாணம் இந்தக் கிழவனுக்கா?" என்றார்.

ரண்மலும் அதை வேடிக்கையாகவே எடுத்துக் கொண்டு பட்டத்து இளவரசனான சண்டனைக் குறிப்பாக நோக்கினான். தனஞ்சயனும் சந்திரகுப்தனும் வாழ்ந்த நாடு இது என்பதைத் தனது தேகப் பொலிவாலும் வீரபராக்கிர மத்தாலும் நினைவூட்டும் சண்டன், தனது ஆசனத்திலிருந்து எழுந்தான். ரண்மலை நோக்கினான்; தந்தையையும் நோக்கினான். அவருடைய விளையாட்டு அவனுக்கு வினையாகப் பட்டது. 'தந்தையின் எண்ணத்தில் ஏன் திருமணத்தைப் பற்றிய எண்ணம் நிழலாட வேண்டும்?'

"தந்தையே! தங்கள் வாயிலிருந்து வந்த எதுவும் உண்மை யாக நடக்குமாறு செய்யத்தான் நான் இருக்கிறேன். தங்கள் எண்ணம் எதையும் நிறைவு செய்யத்தான் நான் இருக்கிறேன். திருமணத்தைப்பற்றிப் பேசிவிட்டீர்கள். தங்களுக்கு மண்டோர் இளவரசியைத் திருமணம் நடத்திப் பார்ப்பதுதான் இனி என் விருப்பம். பூஜ்ய ரண்மல் இணங்கினால் அப்படியே செய்துவிட ஆட்சேபம் ஏதுமில்லை" என்றான்.

மகாராணாவுக்குத் தூக்கி வாரிப்போட்டது. "சண்டா! எனக்காவது கலியாணமாவது! மரணலட்சுமியைத்தான் நான் மணக்க வேண்டும். அவள் வெகு விரைவிலேயே வரிக்க வந்து விடப்போகிறாளே, அதற்குள் த்ரிஸ்தலியை மீட்க வேண்டும் என்றுதான் துடிக்கிறேன். இந்தத் துடிப்புக்கு நடுவிலே சிறிது சிரித்தேன், ஹாஸ்யம் செய்தேன். அதைப் பெரிதுபடுத்தாதே.

உனக்காகத்தான் ரண்மல்ஜி வந்திருக்கிறார், கண்ணே!" என்றார்.

"எனக்கா! அது எப்படி இயலும் தந்தையே? நான் ஹம்ஸாபாயைச் சற்றுமுன் என் தாயாக பாவித்துவிட்டேனே? அந்தப் புனித உணர்வை எப்படி மாற்றிக்கொள்ள முடியும்? முடிந்தாலும்கூட, ஏன் மாற்றிக்கொள்ள வேண்டும்?" என்றான் சண்டன்.

ரண்மல் தன் பெயருக்கேற்ப ரணமல்லனாகவே மாறி விடுவான்போல் முகம் சிவந்தான். அவனது மீசை துடித்தது. உதடுகள் படபடத்தன.

திருமண நிமித்தமாகத் தேங்காய் தந்து அதை ஒரு தந்தையும் மகனும் அவமதிப்பதாகத் தோன்றினால் அதைவிட ஒரு ராஜ புத்திரனுக்கு வேறென்ன மானக்கேடு வேண்டும்? தன் தங்கை இப்படியா சீர்கெட்டுப் போய்விட்டாள்?

மகாராணா லாகா தேர்ந்த புத்திமான். ரணமல்லனின் உள்ளக் கொந்தளிப்பைப் புரிந்துகொண்டார். பெருந்தன்மை யுடன் அவனை நோக்கி, "உங்கள் உணர்ச்சியை நான் மதிக்கிறேன். அதே போதில் சண்டனின் உணர்ச்சியையும் மதிக்கிறேன். இவனுடைய தம்பி ராகவதேவன் மட்டும் இன்னும் சிறிது பெரியவனாக இருந்தால் அவனுக்கு உங்கள் சகோதரியைப் பாணிக்கிரகணம் செய்துகொள்வேன். ஆனால் நடக்காத விஷயத்தைப் பேசிப் பயனென்ன? தேங்காயை மறுதலிக்கும் பாபத்துக்கு நான் ஆளாகாதிருக்க வேண்டுமாயின் ஹம்ஸாபாயை நானே மணப்பதன்றி வேறு வழியில்லை..." என்று கூறியவர், மனவெழுச்சி அடைந்து, "விசுவநாதா, வேணிமாதவா..... விளையாடுகிறீர்களே!" என்று அரற்றிக்கொண்டே சிம்மாசனத்தின் சாய்மானத்தில் தலையை உருட்டலானார்.

ரண்மல்லுக்குத் தன் சகோதரியிடம் விசேஷமான வாஞ்சை இல்லை. மேவார் மகாராணாவின் சம்பந்தத்தை அவன் நாடியது, ஹம்ஸாபாயை ராஜஸ்தானச் சக்கரவர்த்தினி யாக்கிப் பார்ப்பதற்காக அல்ல. இந்தத் தொடர்பின் மூலம் தனது செல்வாக்கை உயர்த்தித் தன் குடியான ராட்டோர் களின் செல்வாக்கையும் உயர்த்தவேண்டும் என்பதே அவனது நோக்கம். சீசோதிய ராணாக்கள் மத்யபதம்* என்கிற மைய

* மத்யபதம் என்பதுதான் 'மேட்பட்' என்றும், 'மேபட்' என்றும், 'மேவட்' என்றும் திரிந்து இறுதியில் 'மேவார்' ஆயிற்று என்பர்.

ஸ்தானத்தை அடைந்ததிலிருந்து ராட்டோர்கள் நலிவுற்று விட்டனர். சோகை பிடித்த ராட்டோர் ரத்தத்துக்குப் புத்துணர்ச்சி தந்து சோபை ஊட்டவேண்டும் என்பதே ரண மல்லின் லட்சியம். தனது சொந்த கௌரவத்தைப் பெருக்கிக் கொள்ளும் ஆசையும் அவனுக்கு இல்லாமலில்லை. எனவே தன் சகோதரிக்கு வரனாக இளைய ராணாவைப் பெறுவதும் கிழ ராணாவைப் பெறுவதும் அவனைப் பொறுத்தமட்டில் ஒன்றாகவேதான் இருந்தது. இதில் அவனுக்கு 'இடறியது' ஓர் அம்சம்தான். லாகாசிங் சற்றுமுன் கூறியதுபோல் மரணலட்சுமி அவரை விரைவிலேயே மணந்து விட்டால் மறுபடியும் ராட்டோர்களின் செல்வாக்குக் குன்றிவிட வேண்டியதுதான். அவ்வாறாகாமல் செல்வாக்கை நிலைப்படுத்திக் கொள்ள ஒரு வழி காணவேண்டும். அதென்ன வழி?

"கார்த்திகேயனைக் கேட்கப் போய்ப் பசுபதியையே பெற்றதுபோல் இளைய ராணாவைக் கேட்க வந்த எனக்குத் தங்களையே அளித்துக்கொண்டது என் பாக்கியம். ஆனால்....." என்று இழுத்தான், ரணமல்.

அவன் மனத்திலிருந்ததைப் புரிந்துகொண்டான் பட்டத் திளவரசன் சண்டன். அந்தக் கணத்தில் அவன் சந்தனு குமாரனான பீஷ்மராகவே மாறினான். ராஜஸ்தானியர் என் றென்றும் பெருமைப்படும்படியாக வாசகங்களைப் பேசினான்:

"தந்தையே! பூஜ்ய ரணமல் தயங்குவதற்குக் காரணத்தை நான் புரிந்துகொள்கிறேன். இறைவன் அருளால் தங்களுக்கு ஹம்ஸாபாயிடம் புத்திரப்பேறு உண்டானால் அந்தப் பிள்ளைக்கே அடுத்த பட்டம் என்று வாக்குறுதி தாருங்கள். ரணமல் தமது தங்கையை உங்களுக்குத் தருவார். தேங்காயை மறுதலித்த அபக்கியாதி நமக்கு நேராமற் போகும். இதற்கு என்னால் ஒருபோதும் இடையூறு நேராது. ஏனெனில் நான் திருமணம் செய்துகொள்ளாமலே என் காலத்தை முடிப்பேன்" என்றான்.

வாக்குறுதி கொடுக்கும் நிலையில் லாகாசிங் இல்லை. வாக்கே குழறிப்போகும் உணர்ச்சிப் பரவசத்தில் இருந்தார் அவர். 'தனக்கு வந்த பெண்ணைத் தந்தைக்கு ஈந்ததோடு, தன் அரசுரிமையையும் இல்லற சுகத்தையும் அலாக்காகத் தியாகம் செய்யும் இந்தச் சத்புத்திரனைப் பெற என்ன பேறு செய்தோமோ?' என்று அவரது மனம் விம்மிப் பூரித்தது.

ரண்மல்லைப் பார்த்தான் சண்டன். இடையில் சொருகி யிருந்த வாளை உருவி, அதன் முனையால் தன் இதயத்தைத் தொட்டபடியே, "மேவார் ராஜ்யத்தின் அதிபதியான கைலாச பதி ஏகலிங்கரின்மீது ஆணை! நான் விவாகம் செய்துகொள்வ தில்லை; மேவார் ஆட்சி பீடத்தில் ஏறுவதில்லை. மண்டோர் இளவரசிக்கும் என் தந்தைக்கும் பிறக்கப்போகும் மகனையே மன்னனாக்கி அவனுக்கு நான் காவல் நிற்க இந்த வாளே எனக்குத் துணை புரியுமாக!" என்றான்.

ஏகலிங்கர் ஆலயத்தில் அதே சமயத்தில் ஆலாட்ச மணி ஒலிக்க, தீபாராதனை நடந்துகொண்டிருந்தது. திருவனந்த புரத்தில் பதுமநாபர்போல், மேவாரில் ஏகலிங்கர்தான் மன்னராகக் கருதப்படுபவர். அவரது திவானாகவே ராணா ஆட்சிபுரிவதாக ஐதிஹ்யம்.

வளர்த்துவானேன்? ஹம்ஸாபாய், லாகாசிங்கின் மகிஷி யானாள்; சித்தோர் மகாராணியானாள். அவளோடு தாம்பத்யம் நடத்துமாறு தந்தையிடம் பிடிவாதம் பிடித்து வென்றான் சண்டன். கிழ ராணாவுக்கும் இளைய ஹம்ஸாவுக்கும் மோகல் என்று ஒரு பிள்ளை பிறந்த அன்று தான் சண்டன் மனநிறைவு எய்தினான். சந்ததி வாய்த்தவுடன் தமது கடமை தீர்ந்தது என்ற திருப்தியுடன் த்ரிஸ்தலியை மீட்க மீட்டும் கயைக்குப் புறப்பட்டார் லாகா. அப்போது சண்டனே மோகலை அரச பதவியில் அமர்த்தி, தான் அவனுக்கு அடங்கிப் பணிபுரிவதாக விசுவாசப் பிரமாணம் செய்து கொண்டான்.

'கயா' என்றாலே 'செல்வது' என்று ஒரு பொருள். கயை சென்ற லாகா சென்றவர்தான். திரும்பவேயில்லை. திரும்பாத உலகுக்குச் செல்லுமுன் — போர்க்களத்தில் இன்னுயிரை விடுமுன் — லாகாசிங் தம் வாழ்வின் லட்சியத்தைப் பூர்த்தி செய்து விட்டார்! த்ரிஸ்தலியை முஸ்லிம்களிடமிருந்து விடுவித்து விட்டார்!

மோகலின் ஆட்சி தொடங்கியது.

எதிலும் குறை கண்டு பழி கூறும் பாழும் உலகம் மோகலுக்குத் துணைநின்ற சண்டனின்மீதும் பழி சுமத்தியது. அரசு கட்டில் ஏறாமலே சண்டன் சகல அதிகாரங்களையும் வகித்துத் தன் விருப்பப்படி மோகலை ஆட்டிவைப்பதாக ரண்மல்லும் மற்ற ராட்டோர்களும் புரளி செய்யலாயினர்.

மனம் நொந்த சண்டன், தானாகவே தன்னைத் தேசப் பிரஷ்டம் செய்துகொண்டு நாட்டை விட்டு வெளியேறி, தனது

பழங்கால நண்பனான மாளவ சுல்தான் முகமத் கில்ஜியிடம் சென்றுவிட்டான்.

ஹிந்து முஸ்லிம் மன்னர்களும் அவ்விரு மதப் பிரஜைகளும் விதி விலக்கின்றிப் பரஸ்பர விரோத பாவத்துடனேயேதான் இருந்தனர் என எண்ணினால் அதைவிடப் பெரிய தவறிருக்கமுடியாது. மன்னர்-மக்கள் இருவரிலும் சமரஸ நோக்குடனும், அன்புடனும் இரு மதத்தவரும் ஐக்கியமுற்றிருந்ததற்கும் நிறைய எடுத்துக் காட்டுகள் உண்டு. அவற்றிலொன்றுதான் ராஜபுதனத்துச் சண்டன் மாளவத்துக் கில்ஜியிடம் சென்றது. செல்லும்போதும் மோகலை நல்ல முறையில் வளர்க்கும் பொறுப்பை மறவாமல் அவன் தனது தம்பி ராகவதேவனை அவனுக்கு உறுதுணையாக வைத்து விட்டே வெளியேறினான்.

யமதருமனுக்கு முன் யாருடைய துணையும் பயன்படாதல்லவா? மோகல் பதின்மூன்றே ஆண்டுகள்தான் ஆட்சி புரிந்தான். காலனின் வலை ஒரு கோரக் கொலையாக அவன் மீது வந்து விழுந்து மாண்டான். இதற்கு ஓர் உட்பூசலே காரணமாக அமைந்தது.

மோகலுக்குச் சிற்றப்பர் முறையாக வேண்டிய சாசா, மைரா என்ற இருவரும் படைத்தலைமையில் முக்கியமான அந்தஸ்துப் பெற்றிருந்தனர். இவர்களின் அந்தஸ்தைக் கண்டு சிலருக்குப் பொறாமை உண்டாயிற்று. சாசா, மைரா ஆகியவர்களின் தாய் க்ஷத்திரிய ஸ்திரீ அல்ல, அவள் ஒரு மரத் தச்சரின் மகள் என்பதை அறிந்திருந்த அவர்கள் ஒரு நீசத்தனமான சதிச் செயலில் இறங்கினர்.

குஜராத் சுல்தானுடன் போரிடுவதற்காக மோகல் சிங் படையெடுத்துச் சென்றிருந்தபோது அவனுடன் இந்தச் சதிகாரர்களும் சென்றிருந்தனர். வழியில் கண்ட ஏதோ ஒரு விருட்சத்தைப்பற்றி வேண்டுமென்றே பேச்சை எழுப்பினர். "இந்த விருட்சத்தின் பெயர் தெரியுமா?" என்று கேட்டான் ராணா மோகல். உடனே சதிகாரர்கள், "இதெல்லாம் சாசா சாகேபுக்கும் மைரா சாகேபுக்கும்தான் நன்றாகத் தெரியும். அவர்களைக் கேட்டுப் பாருங்கள். ஆனால் அவர்களுக்கு இவ்விஷயம் தெரியும் என்று நாங்கள் சொன்னதாக வெளிப்படுத்தி விடக்கூடாது" என்றனர். சூதுவாது தெரியாத மோகல், படைத்தலைமை வகித்த இருவரையும் அழைததான். "இந்த மரத்தின் பெயரென்ன?" என்று கேட்டான். அவர்களுக்கு அது மானபங்கமாகத் தோன்றியது. தாங்கள்

தச்சர் குடியின் வழிவந்தவர்கள் என்பதால்தான் தங்களுக்குப் பிள்ளை முறையாக வேண்டிய ராணா தங்களை அவமானப்படுத்த வேண்டுமென்றே படை முகப்பிலிருந்து இந்த அற்ப காரியத்துக்காகக் கூப்பிட்டிருக்கிறான் என்று நினைத்தனர். சினத்தை அடக்கிக்கொண்டு, “எங்களுக்குப் போர் முறைதான் தெரியும்; மரத்தைப் பற்றிய விஷயம் தெரியாது” என்றனர். விவரமறியாத மோகல் அப்படியும் விடாமல், “காகாஜி (சிற்றப்பா அவர்களே)! நீங்கள் அப்படிச் சொல்லிவிட்டால் நான் நம்பி விடுவேனா? போர் முறைகளை விட மரத்தைப் பற்றிய மகாபாரதங்கள்தான் உங்களுக்கு அதிகம் தெரியும் என்பதை நான் அறிவேனே!” என்றான்.

சாசாவுக்கும் மைராவுக்கும் வெஞ்சினம் மூண்டது. விளைவு? குஜராத் படையெடுப்பை நடத்த வேண்டிய அவ்விரு சேனாதிபதிகளும் தங்கள் மன்னர் மீதே படையெடுத்தனர். அன்றிரவு மோகல் தன் முகாமில் உறங்கிக் கொண்டிருந்தபோது மஹிபா என்ற சிற்றரசனின் துணையுடன் சாசாவும் மைராவும் கூடாரத்தைச் சூழ்ந்து கொண்டனர். மோகலும் அவனது ராணிகளில் ஒருத்தியும் விசுவாசம் மிகுந்த தோதியாவும் (காவலாள்) கொல்லப் பட்டனர். இளவரசன் கும்பா மட்டும் தப்பி வந்துவிட்டான். அவனால் நடக்கவேண்டிய காரியங்கள் பலப் பல இருந்தனவே!

சாசாவையும் மைராவையும் கேள்வி கேட்குமாறு மோகலைத் தூண்டிய சதிகாரர்கள் இப்போது ரண்மல்லிடம் சென்றனர். “தங்கள் அருமைச் சகோதரி ஹம்ஸாபாயின் ஒரே மகனான மோகல்சிங் மகாராணாவை சாசாவும் மைராவும் கொலை செய்துவிட்டார்கள். மஹிபா இவர்களுக்குத் துணை புரிந்திருக்கிறான். இந்த அக்கிரமத்துக்குப் பழி தீர்த்துக் கொள்வது தங்கள் கடமை” என்று தூபம் போட்டனர்.

ரண்மல்லின் நெஞ்சு கொதித்தது. சாசா, மைரா, மஹிபா ஆகியோரை அழிப்பதைத் தன் ஜன்மப் பிரதிக்ஞையாகச் செய்து கொண்டான். மோகலின் மைந்தன் கும்பாஜியின் பட்டாபிஷேகத்துக்குங்கூட ஃபேண்டா எனப்படும் துக்கம் காக்கிற ஆடையுடன் தான் வந்தான் ரண்மல். ‘மோகலைக் கொன்றவர்களைப் பழி தீர்க்கும்வரை எனக்குத் துக்கநாள் நீங்காது’ என்று காரணம் கூறினான்.

கும்பாஜியும் தன் தந்தையைக் கொன்ற காதகர்களைப் பழி தீர்ப்பதில் உக்கிரமாக இருந்தான். சீசோதியர், ராட்டோர்

என்ற வித்தியாசமின்றி வீரர் அனைவருமே தங்களது பழைய ராணாவின் மரணத்துக்குக் காரணமானவர்களை அழிப்பதற்குத் துடித்தனர். இச்சமயத்தில் தனது சீசோதியத் துவேஷத்தை வெளிக்காட்டிக் கொள்ளாமல் வெகு சாமர்த்தியமாக இரு சாராருக்கும் தலைமை தாங்கிச் சாசாவையும் மைராவையும் கொன்றான் ரண்மல். அன்றே தன் துக்கவஸ்திரத்தைக் களைந்து கலியாணக் கோலம் பூண்டான். சாசாவின் சவத்தைத் திருமணப் பலகையாக்கி அதன்மீது அமர்ந்துகொண்டு, அதே சாசாவின் மகளை மணந்து கொண்டான், அந்தக் கிழ வீரன்! மஹிபா மட்டும் தப்பித்துக்கொண்டாள். அவள் மாளவ சுல்தானைத் தஞ்ச மடைந்தாள்.

சீசோதியரிடம் ரண்மல் கொண்டிருந்த வெறுப்புத் தீக்குப் பூர்ணாஹுதி செய்வதுபோல் ஒரு காரியம் நடந்தது. சாசா சிறைப்பிடித்து வைத்திருந்த ஐந்நூறு பெண்களை மீட்ட ரண்மல் அவர்களைத் தம் குடியினரான ராட்டோர்களுக்குப் பரிசாகத் தர உத்தேசித்திருந்தான். சண்டனின் தம்பியான ராகவதேவனால் இதைச் சகித்துக்கொள்ள முடியவில்லை. அப்பெண்களை அவன் விடுவித்துவிட்டான். 'அரசுரிமையை இழந்த ராகவதேவன் சீசோதியனாக இருக்கும் ஒரே காரணத்தால் தனக்கு மாறாக நடக்க முடிகிறதே' என்று ஆத்திரமடைந்தான் ரண்மல்.

ஆத்திரத்தை வெளிக்காட்டிக் கொள்வதனால் பயன் இராது என்பதை அவன் அறிந்திருந்தான். ஏனெனில் சித்தோர் முழுதுமே சீசோதியரின் கோட்டைதான். அதிலும் தனக்கு அரசுரிமை இல்லாதபோதும் தன் மாற்றாந்தாய் மகனான மோகலின் மகன் கும்பாஜிக்கு உதவி புரியும் உத்தமன் ராகவ தேவனிடம் சீசோதியர்களுக்கெல்லாம் தேவதா விசுவாசம். எனவே ராகவதேவனை எதிர்த்துப் படையெடுப்பது இயலாத காரியம் என்பதை ரண்மல் அறிந்திருந்தான். தனியாக அவனுடன் துவந்த யுத்தம் செய்தும் யாராலும் வெல்ல முடியாது. அவனது கைகளைக் கட்டிப் போட்டாலொழிய அவனோடு போர் புரிய முடியாது என்பதை ரண்மல் அறிந்திருந்தான். தந்திரத்தின் மூலம் தான் ராகவதேவனை அழிக்க முடியும் என்று கண்டான். ரண்மல்லின் மனத்தில் சூழ்ச்சி உருவாயிற்று. ராகவதேவனை நட்புக் காட்டி விருந்துக்கு அழைத்தான்.

விருந்துக்கு உட்காருமுன், "என் அன்பளிப்பாக இந்தப் புத்தாடையை அணிந்துகொண்டு உண்ண வரவேண்டும்"

என்று கூறி ராகவதேவனிடம் ஒரு மேலங்கியை நீட்டினான் ரண்மல்.

ராகவதேவன் அதை எடுத்து அணிந்துகொண்டான் கழுத்தை அதற்குரிய துவாரத்தில் விட்டுக் கொண்டாயிற்று. கைகளையும் அவற்றுக்குரிய இரு குழாய்களில் விட்டுக் கொண்டான். 'ஆகா, இதென்ன, விரல்கள் வெளிவரக் காணோமே!'

எப்படி வெளிவரும்? அந்த ஜிப்பாவின் கைகள் முனையில் தைக்கப்பட்டிருந்தன. இதைப் புரிந்துகொண்டு ராகவதேவன் தன் கைகளைப் பின்னே எடுத்துக்கொள்ள முயலுவதற்குள் ரண்மல் அவசரம் அவசரமாக, "சிசோதிய சிகாமணிக்குக் குளிர் உதவாது; கழுத்தை நானே மூடுகிறேன்" என்று கூறிக்கொண்டு கழுத்துப் பட்டையிலிருந்த சுருக்கை முடிந்துவிட்டான்.

ராகவன் எப்படி அங்கியைக் கழற்ற முடியும்? அவன் கையைக் கட்டிப் போட்டால்தான் அவனைக் கொல்ல முடியும் என்ற கருத்தை அப்படியே காரியமாக்குவதற்குத் தந்திரம் செய்த ரண்மல் அப் பாதகமான காரியத்தைச் சாதித்துவிட்டான். ராஜபுத்திர ரத்தினமான ராகவனின் ரத்தத்தைப் பீறியடித்தது ரண்மல்லுடைய அடியாளின் அறுவாள்.

எவ்வளவோ இரகசியமாக நடந்த போதிலும் இந்தக் கொலை விவரம் எப்படியோ வெளியாகிவிட்டது.

இதன்பின் ராட்டோர்-சிசோதியத் துவேஷம் மறைந்து நிற்க முடியவில்லை. அருமைச் சோதரன் ராகவதேவனின் மரணத்தால் மனம் குமுறிய சண்டனும் சிசோதியர்களின் வேண்டுகோளுக்கிணங்கி மாளவத்திலிருந்து சித்தோருக்கு வந்து அவர்களின் தலைவராகப் பொறுப்பேற்றார். அந்த வீர-தியாகியை மகாராணா கும்பா மரியாதையன்போடு வரவேற்று ஆதரித்தான்.

ரண்மல்லின் ஆத்திரம் மிகுந்தது. இரு குலங்களிடையே யும் பகை ஓங்கியது.

மண்டோர் அரசுடன் நெருங்கிய தொடர்புள்ளதும் ராட்டோர் குலத்தைச் சேர்ந்ததுமான மேர்தாவும் இப் பகைப் பூசலில் தலை கொடுக்க நேர்ந்தது. இதன் விளைவாகத்தான் மேர்தாவில் பக்தி குறைந்து வீரம் ஓங்கலாயிற்று. ஆனால் இதை உண்மையான வீரம் என்று எப்படிச் சொல்ல முடியும்?

போர் முழக்கமும் யுத்த ஆயுத்தங்களும் வெளிப்படையாகச் செய்யப்பட்டால் அதுவே வீரம்; அதிலோர் அழகுண்டு. ஆனால் இந்தப் பூசலோ பெரும்பாலும் ரகசியமாகச் சதிபோலவே வளர்க்கப்பட்டது. மேர்தா வீரர்கள் 'கசமுச'வென்று பேசிக் கொண்டதிலிருந்து ஏதேதோ ஊகித்தனர் ராஜகுலப் பெண்டிர். டாகுர் துவாரத்தை விடுத்துப் போர்க்கடவுளாகிய துர்க்கா தேவியைச் சரணடைந்து கணவன்மார்களுக்காகப் பிரார்த்தித்தனர்.

அப்படிப் பிரார்த்திக்காத ஒரே ஒரு ஸ்திரீ சந்திரமுகி தான். ஏனெனில் அவளுடைய கணவன் மட்டும் இந்தக் கசமுசப் பேச்சுக்களில் கலந்துகொள்ளவில்லை. வாட்டி எடுக்கும் வருத்தத்தில் வதைபட்டுக்கொண்டு அரண்மனையிலேயே அடைந்து கிடந்தான் ரத்தன் சிங். அவன் உள்ளம் மகள் மீராவைப் பார்த்துக் குமுறி ரத்தம் கக்கிக் கொண்டிருந்தது. கசாப்புக் கடையில் எதற்காக இந்த ஹம்ஸம் வந்து பிறந்தது என்று கண்ணீர் வடித்தான் அவன்.

## 8. திருமணமா? மறுமணமா?

"ஏன் இப்படி மனம் வெதும்பிக் கிடக்கிறீர்கள்? டாகுர் துவாரத்துக்காவது போகலாமே?" என்று ரத்தன்சிங்கை அழைத்தாள் சந்திரமுகி.

அவன் வேதனைச் சிரிப்புச் சிரித்தான். "டாகுர் துவாரத்துக்குச் செல்வதா, சதிக்கூடத்துக்கோ போர்க்களத்துக்கோ செல்வதா என்று நான் யோசிக்க வேண்டியதாகி விட்டது. அன்று நான் தந்தையாரிடம் பெரிதாகப் பேசினேன், ஒரு நாட்டில் வீரத்தையும் பக்தியையும் இறைவனே ஒரு விகிதாசாரப்படி கலந்து நிர்ணயிப்பான் என்று. நாடு மட்டும் அல்ல; ஒவ்வொரு தனிமனிதனும்கூட பக்தியையும் வீரத்தையும் தன்னிச்சைப்படி நிர்ணயித்துக்கொள்ள முடியாது போல்தான் தோன்றுகிறது. ஏனென்றால் இந்த ராஜகுலத்தில் பிறந்து விட்டால் அப்புறம் தனிமனிதனாகத் தன்னை நினைத்துக் கொள்வதற்கே இஷ்டமில்லைபோல் இருக்கிறது. நான் என்னைத் தனி மனிதனாக நினைத்து என்னுடைய சுய இயல்பு என்று ஒன்றைக் கருதி அவ்வழியில் செல்லப் பார்க்கிறேன். இதனால்தான் தந்தையார் என்னைச் சரியாகப் புரிந்துகொள்ளவில்லை. சோதரர்கள் மல்தேவும் ராய்மல்லும்

வீர்சிங்கும் என்னை வெறுக்கிறார்கள். ராஜஸ்தானத்தின் வீர பரம்பரைக்கே ஒரு களங்கமாக நான் வந்திருக்கிறேன் என்று கருதுகிறார்கள். மேர்தா மக்களை க்ஷத்திரிய தர்மத்தில் நடத்திச் செல்லவே பிறந்த ஒருவன் நான் என்றும், நான் ஒரு தனி மனிதன் என்பதை அறவே மறந்துவிட வேண்டும் என்றும் வற்புறுத்துகிறார்கள். அந்தத் தியாகம் புரிய என்னால் முடிய வில்லை. கண்ணனை எப்படித் தியாகம் செய்வேன்? ஆனால் கண்ணனையே கேட்டால் அவன் என்ன சொல்வானோ? அர்ஜுனனிடம் சொன்னது போல், 'யுத்தம் செய், அதுதான் உன் கடமை. நீ நேரடியாக என்னைப் பூஜிப்பதைவிட அதுவே எனக்கு உண்மையான பூஜையாக இருக்கும்' என்பானோ என்னவோ?

"சந்திரமுகி, என்னைப்பற்றிக்கூட எனக்குக் கவலை யில்லை. என்னுடைய பக்தி அற்பமானது. அதை ஒருகால் நான் விட்டு விடவும் கூடும். ஆனால் குழந்தை மீராவின் பக்தி எவ்வளவு அற்புதமானது? அவள் போயும் போயும் இந்த ராஜபுதனத்திலே வந்து இச்சமயம் பார்த்துப் பிறந்து விட்டாளே என்றுதான் துயரப்படுகிறேன். தகிக்கும் மணற் பரப்பில் விழுந்த நீர்த்துளிபோல் அவள் இந்தச் சூழ்நிலையில் சுவறிப் போவாளோ என்றுதான் துயரப்படுகிறேன்" என்று விம்மினான் ரத்தன்சிங்.

அச்சமயத்தில் அங்கே குழந்தை மீராவே வந்து சேர்ந்தாள். தகப்பனாருடைய தொங்கிய முகத்தைத் தன் தங்கக் கையால் தூக்கினாள்.

ரத்தன்சிங் துள்ளித் திரியும் அந்தக் குழந்தையைப் பரிதாபம் தோய்ந்த கண்களுடன் பார்த்தான்.

"மீரா! நல்ல வேளையாக நீ குழந்தையாக இருக்கிறாய்! அதனால் சந்தோஷப்பட முடிகிறது. இப்போதே முடிந்த மட்டில் சந்தோஷப்பட்டுவிடு!" என்றான். துக்கம் அவனைக் கவிந்து கொண்டது.

"ஏன் இப்படி எதையோ பறிகொடுத்த மாதிரி ஆகி விட்டீர்கள்? உங்களுக்கு என்ன வந்துவிட்டது என்றே புரிய வில்லையே" என்றாள் சந்திரமுகி.

"ஏன் பறிகொடுத்த மாதிரி என்கிறாய்! உண்மையிலேயே பறிகொடுத்தாயிற்று" என்றான் ரத்தன்.

"அப்பா, புதையல் கெட்டுப் போய்விட்டதா? கண்ணனும் புதையல் போலவே காணாமற் போவான், தெரியுமோ? அப்புறம் அகப்பட்டு விடுவானாம். பாகவதத்தில்

அப்படி இருப்பதாகப் பூஜாரி சொன்னார்" என்றாள் மீரா பளிச்சென்று.

"நான் அவனைத் தேடவே மறுக்கும்போது எப்படி அகப்படுவான் கண்ணே?" என்று துயரத்துடன் கேட்டான் ரத்தன்.

"அச்சச்சோ, இதுகூடத் தெரியாதா உங்களுக்கு? காணாமல் போன அப்புறம் அவனே நம்மைத் தேட ஆரம்பித்துவிடுவான்; அப்புறம் வந்து பிடித்துக்கொள்வான்" என்றாள் மீரா.

குழந்தையின் வாக்கு தெய்வவாக்காகப் பலித்தது. சதிக் கூடத்துக்கும் போர்க்களத்துக்கும் செல்லாத ரத்தன்சிங் டாகுர் துவாரத்துக்கும் செல்லவில்லை. ஆனால் கண்ணனே அவனைத் தேடிவந்தான்! ஒரு சிறிய நோயை வியாஜம் காட்டி, அவனை அதிகம் சிரமப்படுத்தாமல் தன்னிடம் எடுத்துக் கொண்டான்.

கணவனுடன் உடன்கட்டை ஏறுவதுதான் பொதுவாக ராஜபுதன ஸ்திரீகளின் வழக்கம். ஆயினும் குழந்தை மீராவை வளர்க்கும்பொருட்டு சந்திரமுகி உயிர்வாழ்ந்துதான் ஆக வேண்டும் என்று புத்திர சோகமுற்ற ராவ்தூதா விதித்து விட்டார்.

நாதனிழந்த சந்திரமுகி நாதமிழந்த வீணையாக உயிர் வாழ்ந்தாள். ஆனால் ராவ்தூதா நினைத்தாற்போல் மீராவை வளர்ப்பதற்காக அல்ல; மீராவால் வளர்க்கப்படுவதற்காகவே!

மீரா வளர்ந்தாள். பக்தியில் வளர்ந்தாள். அதாவது துயரத்தில் வளர்ந்தாள். ஆம், கண்ணனைக் கூடிய இன்ப பக்தி மெல்லக் கரைந்துபோய், கண்ணனைப் பிரிந்த துயர பக்தி யாகவே ஆகிவிட்டது அவளது வாழ்க்கை. 'புதையல் மறைவது போல் மறைவேன்' என்று மொழிந்த கண்ணன் அதன்பின் ஏனோ மீராவுக்குத் தரிசனம் தரவேயில்லை!

ஆரம்ப காலததில் கிரிதர விக்கிரகத்திலேனும் அவ்வப்போது உயிருடன் வாழ்ந்தான். அவனது கண்கள் ஒரு சமயம் சிரிப்பில் மலரும்; இன்னொரு சமயம் கோபத்தில் சிவக்கும்; பிறிதொரு சமயம் துயரத்தில் துடிக்கும்; மற்றொரு சமயம் சாந்தத்தில் சலனமற்று நிற்கும். அந்த அந்த பாவத்துக்கு அநுசரணையாக மீரா உபசரிப்பாள். அவனுடைய புருவம் இம்மி நெரிந்தால் என்ன பொருள், அவனது இதழ்க்கடை இம்மி நெளிந்தால் என்ன பொருள் என்பதெல்லாம் அவளுக்கு

மட்டுமே தெரிந்தது. ஏன், கண்ணன் நகைப்பதும் சினமுறுவதும் துக்கப்படுவதும் சாந்தி கூடுவதும் கூட அவளது கண்களுக்கு மட்டுமே தெரிந்தன.

விக்கிரகத்துடனேயே அறுபது நாழியும் வசித்தாள். அதற்குத் தைல ஸ்நானம் செய்விப்பாள். வாசனைப் பொடி தேய்ப்பாள். பிறகு அவனது காது மடல்களிலும்கூடச் செம் பஞ்சைத் திரித்து விட்டுச் சுத்தம் செய்வாள். அறுசுவை அன்னம் படைப்பாள் அமுதனுக்கு. அவள் கண்களை மூடிக் கொண்டால் மட்டுமே, அதில் ஒரு முந்திரிப் பருப்பையோ, சுளையையோ, பிடி அவலையோ அவன் எடுத்துக் கொள்வான். இதற்கெல்லாம் மேலாகத் தன்னையே நிவேதனமாக அவனுக்கு அளித்தாள் மீரா.

ஆனால் நாட்கள் செல்லச் செல்லச் சிலையில் பிரஸன்னமாவதைக்கூடக் கண்ணன் நிறுத்திக்கொண்டு விட்டான். மீராவைச் சோதனை செய்தான் என்று மட்டும் அதைச் சொல்லி விடலாமா? தன்னையே சோதனை செய்து கொண்டான் என்றும்தான் கூறவேண்டும்.

இந்தத் துயரத்தோடு இன்னொரு துயரமும் சேர்ந்து கொண்டது. சிசோதிய ராட்டோர் பிளவோடு, ரத்தன்சிங்கின் மறைவும் சேர்ந்ததால் டாகுர் துவாரத்திலும் அரண்மனையி லும் கண்ணன் விழாக்கள் யாவும் நின்றுவிட்டன. ஊரே பொலிவிழந்து போயிற்று. சதிகளில் இறங்கிவிட்ட மேர்தாவுக்குக் கோஸ்வாமிகளும் ஹரிதாஸர்களும் வருவது பெரும்பாலும் நின்று போயிற்று. பஜனைகளுக்கும் பக்தர் சேவைக்கும் ஏங்கினாள் மீரா. மழை காணாப் பயிராக வாடிக் கருகினாள்; மறுகினாள்; உருகினாள்.

அரண்மனையிலேயே அவளுடைய கிரிதர கோபாலனைப் பூஜிப்பதில்கூட அவளுக்கு ஏதோ ஒரு தயக்கம் ஏற்படலாயிற்று. ஈரமற்ற வீரமே அப்போது ராஜஸ்தானத்தின் தேவை எனக் கருதிய தாத்தா, கண்ணன் வழிபாட்டில் மனமார்ந்த விருப்பம் காட்டவில்லை என்பதைக் குழந்தை உள்ளம் புரிந்துகொண்டது. எனவே கண்ணனை வாவென்று அழைக்கும்போதே, 'அவன் வந்து விட்டால் எப்படி விருந்திடுவது? அவன் சயனிக்க எப்படிக் காசிப்பட்டு விரிப்பைப் போடுவது?' என்றும் கலங்கினாள் மீரா. 'அரண் மனையில் விருந்திட முடியாவிட்டால் என்ன? போரிலும் சதியிலும் இறங்காத சாதாரண மக்களின் வீடு வீடாகச் சென்று பிச்சை வாங்கி வந்து பிரியனுக்கு இடலாமே' என்று அடுத்த

கணம் எண்ணுவாள். ராஜபோகத்தையும் அதற்குள்ளே அமைந்த சோகத்தையும் விட்டு ஏதுமற்ற ஏழையாக, நிச்சிந்தையாக ஊர்தோறும் பிச்சை எடுக்க வேண்டும் என்று ஆசைப்படுவாள். 'கண்ணனுக்குக் காசிப்பட்டு மெத்தை விரிக்க முடியாவிட்டால் என்ன? காட்டு மலர்களைப் பறித்து வருவதை யாரும் தடுக்க முடியாதே! அந்த மரங்களும் ஆசை ஆசையாக மாதவனுக்கென மலர் தருமே! அதோடு கனி மரங்கள் உதிர்க்கும் பழங்களையும் பரமனுக்குப் படைக்கலாமே!' என எண்ணுவாள்.

இதெல்லாம் இருக்கட்டும். முதலில் கண்ணனை நேருக்கு நேராகக் காண வேண்டுமே! அதையும்கூட இச்சதிகார சண்டைக்காரர்கள் தவறாக எடுத்துக்கொள்வார்களோ? அப்படியாயின் உச்சி மாடத்துக்குச் சென்று பலகணி வழியாகவேனும் அவனைக் கள்ளத்தனமாகப் பார்க்க வேண்டியதுதான் என்று எண்ணுவாள்.

எண்ணமே பண்ணில் வரும். பாடுவாள்:

'வருவாய், வந்தென் விழி தன்னில்
பதிவாய், மோகன வடிவழகா!
உணவுக் குயிர்தரும் லவணம்போல்
உயிருக் குயிர்தரும் லாவண்யா!
நாவினில் இனிக்கும் மதுப்போலே
மனத்தினில் இனிக்கும் மதுர பதீ!
படிப்படி ஏறிப் பிச்சை புகுந்து
பணியாரம் பழம் படைத்திடுவேன்,
வனம் வனம் சென்று வணமலர் கொணர்ந்து
வண்டினம் மொய் சயனம் விரிப்பேன்,
உப்பரிகை உச்சிமாடம் தனில்நின்று
சாளரவழி உனைச் சால நோக்குவேன்,
குன்றை யெடுத்த என் குணக்குன்றே!
தாமரைப் பாதத் தாரகம் தாராய்!'

மீரா வளர்ந்தாள். மெய்யாகவே வளரத்தான் வளர்ந்தாளா? சொல்வதற்கில்லை. குழந்தையாக இருந்த போதே முழுமை பெற்றுவிட்டவளல்லவா அவள்? அப்புறம் வளர இடம் எங்கே இருந்தது? வளர முடியாமல் பல நெரிசல்களுக்கிடையே குமைய அல்லவா தொடங்கி விட்டாள்?

வளர்ச்சியோ தேய்வோ, இவையெல்லாம் உள்ளுலகத்தைப்பற்றிய விஷயங்கள். இருவேறு உலகங்களில் வசித்த மீரா,

வெளி உலகப் பார்வைக்கு எப்படி வளர்ந்தாள்? நன்றாகவே வளர்ந்தாள். பேதை பெதும்பையானாள்; பெதும்பை மங்கையானாள்; மங்கை மடந்தையானாள்.

மீரா வளர்ந்து வருகையில் ராஜஸ்தானத்தின் இரு பெருங்குடியினரிடையே துவேஷமும் வளர்ந்து வந்தது.

ராகவதேவனைச் சூழ்ச்சியால் கொன்ற ரணமல்லையும் அதே விதத்தில் ஒழிக்க வேண்டுமென்று சீசோதியர்கள் திட்டமிட்டனர். போர்க்களத்திலன்றிச் சதியின் மூலம் காரியம் சாதிப்பதைச் சண்டன் ஒப்பமாட்டார் என்பதால் அவர் அறியாமலே தங்கள் திட்டத்தை முடிக்க முற்பட்டனர்.

கிழடான பின்னும் ரணமல்லுக்கோர் ஆசைநாயகி பார்மலி என்று! அவளைக் கையில் போட்டுக்கொண்டனர் சதிகாரர்கள். அவள் ஒரு நாள் ரணமல்லுடன் சிருங்கார சாகஸங்கள் புரிவதுபோல் நடித்துக் கிண்ணம் கிண்ணமாக அவனுக்கு மது அளித்தாள்.

ரணமல் போதையேறிக் கிடந்தபோது, பார்மலி மிகவும் கொஞ்சலாக, "என்னை அடிக்கடி விட்டுவிட்டு ஓடிவிடு கிறீர்களே; இனிமேல் நீங்கள் என்னை விட்டுப் பிரியவே முடியாதபடி கட்டிப் போடட்டுமா?" என்றாள்.

"ஆகா, உன்னால் கட்டுப்பட நான் பாக்கியம் அல்லவா செய்திருக்கவேண்டும்? இந்தா, இதனால் என்னைக் கட்டிப் போடு" என்று கூறிய ரணமல் தனது வெகு நீண்ட தலைப்பாகையை அவளிடம் வீசினான். மது போதையில் ஊறியிருந்த ரணமல்லுக்கு மாது போதை யம பாசமாக அப் பாகை மூலம் வந்தது!

அதனால் அவனை வளைத்துக் கட்டிலுடன் கை சேரக் கட்டிப் போட்டாள் பார்மலி.

அடுத்த கணமே சீசோதிய வீரர்கள் திமுதிமுவென உள்ளே புகுந்தனர்.

அவர்களின் தலைவன் ரணமல்லைப் பார்த்துத் தீக்கங்குகளைக் கக்கிக்கொண்டு நகைத்தான். "எங்கள் ராகவ தேவ்ஜியின் கையைச் செயலற்றதாக்கிக் கொன்ற பாபி, இப்போது நீ எப்படி எங்களோடு போரிடுகிறாய், பார்ப்போம்!" என்று கூறி ரணமல்லின்மீது வாளைப் பாய்ச்சினான்.

மாவீரனான ரண்மல் அந்த நிலையிலும் கட்டிலோடு சேர்ந்து எழுந்து நின்று போரிட முயன்றான். காலுக்குத் தட்டுப்படும் பொருள்களையெல்லாம் சீய்த்துச் சீய்த்து சீசோசிய விரோதியர் மீது குறி தவறாமல் எய்தான். இருப்பினும் வயோதிகனான ஒருவன் கட்டுப்பட்ட நிலையில் இளைஞர் பலரை எதிர்ப்பது எவ்வளவு நாழிகைக்குச் சாத்தியம்? ராட்டோர்களின் இணையற்ற வீரன் ரண்மல் நெடுமரம் விழுவதுபோல் விழுந்து மாண்டான்.

இனி ராட்டோர்கள் சித்தோரில் தலைதூக்க முடியாது என்று கண்டுகொண்டான் ரண்மல்லின் மகன் ஜோதா. மேவாரிலிருந்து தங்களது பூர்விகமான மார்வாரின் எல்லைக்கே ஓடினான். அதன்பின் அவ்வப்போது தன் படையுடன் உள்ளே புகுந்து தாக்கிச் சிறுசிறு வெற்றிகளும் தோல்விகளும் அடைந்து வந்தான்.

சித்தோர் மகாராணா கும்பாஜியின் மாபெரும் சேனைக்கு ஜோதாவை அடக்குவது பெரிய காரியமல்ல. எனினும் ஜோதாவை ராணா எதிர்த்துச் செல்லவில்லை. அதற்கு ஒரு காரணம் உண்டு. ஜோதாவின் அத்தையான ஹம்ஸாபாய்தான் கும்பாஜி ராணாவின் பாட்டி. அவள் இன்னமும் உயிரோடிருந்ததுதான் கும்பாஜி ஜோதாவை அடியோடு அடக்கிப்போடாததற்குக் காரணம். ஹம்ஸா பாயின் சகோதரன் ரண்மல்லைக் கொலை செய்த வஞ்சக முறையில் சீசோதியத் தலைவர் சண்டனும் மிகுந்த அதிருப்தியுற்றிருந்தார். எனவே, அவர் கும்பராணாவிடம், தமக்கேயுரிய பெருந்தன்மையுடன், ஜோதாவை மிகவும் தாக்கிக் கஷ்டப்படுத்த வேண்டியதில்லை என்றும் அவ்வப்போது அவனைச் சமாளித்தாலே போதும் என்றும் கூறியிருந்தார். பெரியப்பா கிழித்த கோட்டை மீறாத கும்பாஜியும் இதன்படியே நடந்து கொண்டான். 'கொண்டார்' என்று பன்மையில் கும்பாவைக் குறிப்பிட வேண்டிய காலம் வரும் வரையில் இந்த ஜோதாத் தொல்லை நீடித்தது.

மடந்தை மீராவுக்குக் கல்யாணம் செய்ய வேண்டும் என்று ராவ்தூதாவும், சந்திரமுகியும் ஓயாமல் சிந்திக்கத் தொடங்கினார்கள்.

முன்னரே மணமான ஒரு கற்பரசியிடம் மறுமணம் பற்றிப் பேசினால் எப்படித் துடிப்பாளோ அப்படித் துடித்துப் போனாள் மீரா!

சந்திரமுகிக்கு மீராவின் உள்ளம் ஓரளவு புரியும்; ஓரளவு தான் புரியும். கண்ணனை வாஸ்தவமாகவே கடிமணம் புரிந்து கொண்டு வாழமுடியும் என்று சந்திரமுகியால் நினைக்க முடியவில்லை. மீரா கிரிதரனை வரித்தது விளையாட்டாக நிற்க வேண்டியதுதான் என்றே கருதினாள் அவள்.

"மீரா, உன் தந்தை இருந்திருந்தால் உன்னைப் புரிந்து கொண்டிருப்பாரோ என்னவோ? நான் உனக்குப் பல படிகள் கீழே நிற்பவள். உன் நிலை எனக்குப் புரியாது. ஆனால் என்னிலும் எத்தனையோ படிகள் கீழே நிற்கிறது உலகம். வயதுவந்த இளவரசி திருமணமாகாதிருந்தால் இதை உலகம் ஏற்காது. உன் தந்தை அடிக்கடி சொல்லுவதுபோல் தனிப் பண்புக்கு இடம் தரக்கூடாத ராஜ குலத்தவர் நாம். ராஜ்யத்தின் நற்பெயரே நம்மிடம்தான் இருக்கிறது. கண்ணனைத் தெய்வமாக வணங்கு. காந்தனாக நம்மை யொத்த ஒரு நரனை ஒப்புக்கொள், கண்ணே!" என்று மகளைக் கேட்டுக் கொண்டாள் சந்திரமுகி.

மீரா குமுறிக் குமுறி அழுதாள்.

"அம்மா, கண்ணனைத் தவிரக் காந்தன் யாருண்டு? யாரிடம் காந்த சக்தி இருக்கிறதோ அவனல்லவா காந்தன்? உள்ளவை அனைத்தையும் தன்னிடம் இழுத்துக்கொள்ளும் கண்ணன் ஒருவனேயல்லவா காந்தன்? ஆகர்ஷணம் செய்வதாலேயே அல்லவா அவனைக் 'கிருஷ்ணன்' என்கிறோம்? அவன் என்னை ஊசியைக் காந்தம் போல் இழுத்துக்கொண்டு விட்டான். அதிலிருந்து மீளுவது என் கையிலுள்ள விஷயமல்ல. இதையெல்லாம் நான் எப்படிச் சொல்லிப் புரிய வைப்பேன்? உடம்பு எனக்கு நாற்றக் குடிசையாகத் தெரிகிறது. இதற்குக் கலியாணமாவது கார்த்திகையாவது என்று தோன்றுகிறது. தாம்பத்தியப் பேச்சை எடுத்தால் குமட்டுகிறது. ஆனால் அதே சமயத்தில் கண்ணனை இதே உடலோடு சேரவேண்டும் என்று துடிக்கிறேன். அவனோடு சிருங்கார விழாக் கொண்டாடிக்கொள்ள ஆசைப்படுகிறேன். இது ஏன் என்று எனக்கே தெரியாதபோது உனக்கு என்ன சொல்லி விளங்க வைப்பேன்?" என்று நெஞ்சுடைந்து புலம்பினாள் மீரா.

மற்ற பக்தர்களுக்கு வெளிப் போராட்டம் மட்டுமே இருந்தது. வெளிப் போராட்டம் மட்டுமின்றித் தன் போக்கே புரியாத உள் போராட்டமும் மீராவிடம் சேர்ந்துகொண்டது.

புறத்திருந்தும் உள்ளே இருந்தும் இரு பெரும் மலைகள் அவளை நெருக்கின.

சந்திரமுகி மீராவை அநுதாபத்துடன் புரிந்துகொள்ள முயன்றாள். எனினும் தங்கள் குல வழக்கத்தை அவள் விட முடியவில்லை. கண் நிறைந்த கன்னிப் பெண்ணை கண்ணுக்குத் தெரிகிற ஒரு வரனின் கையில் ஒப்படைத்தா லன்றித் தாயுள்ளத்துக்கு நிம்மதி ஏது?

அருமைக் குமாரி கோதை மாதவனுக்கன்றியொரு மானுடருக்கு வாழ்க்கைப்படேன் என்ற போது

'கன்னி இருந்தாளைக் கொண்டு
நன்றும் கிறிசெய்து போனான்;
நாரணன் செய்த தீமை
என்றுமெங்கள் குடிக்குஓர்
ஏச்சுச்சொல் ஆயிடுங் கொல்லோ ?'

என்று பெரியாழ்வாரே பாடினாற்போலவே சந்திரமுகியும் அஞ்சினாள்.

பல அரச குமாரர்களின் சித்திரங்கள் வரவழைக்கப் பட்டன. மீராவின் முன் அவற்றை நீட்டுவாள் தோழி. தீயைக் கண்ட கண்நோவுக்காரன் போல் தவிப்பாள் மீரா.

ஜாதகங்கள் பல வரவழைக்கப்பட்டன. சோதிடர்கள் வரவழைக்கப்பட்டனர். ராவ்தூதாவும் சந்திரமுகியும் சோதிடனுடன் விவாதிப்பதைக் கேட்கும்போதெல்லாம் அலமாந்து போவாள் மீரா. புத்தி பேதலித்தாற் போன்ற நிலையில் ஒருநாள் தானே அவ்விடத்துக்கு வந்துவிட்டாள். கழுத்து முறிந்த கிளி கதறுவதுபோல் சோதிடரைப் பார்த்துப் பாடினாள்:

'சோதித்துச் சொல்லிடுவீர், சோதிடரே – பரஞ்
சோதியுடனே நான் சோடி சேர்வேனோ என்று (சோதித்து)

மாயனைப் பிரிந்துநான் மாமை தனைஇழந்தேன்
பரமனைப் பிரிந்துநான் பசலை படர்ந்திளைத்தேன்
பரிவுகொண்டே இங்கு கிரிதரன் வந்தாலே
பரசுக பாரத்தைத் தாங்குவனோ பேதையெனச் (சோதித்து)

அழுது குமுறுவதில் பழகிவிட்டேன் மிகவும்,
துன்பப் பிரிவைச் சிறு குன்றுபோலக் கடந்தேன்,

அன்பனைக் கூடுகிற இன்ப மேரு கிடைத்தால்
ஏறிச் செல ஏழைக்கு இயன்றிடுமோ என்று (சோதித்து)

ப்ராணனைத் துளைத்திடும் பாணம்எய்தான் நாதன்
ப்ரேமை என்ற புயலில் பேதுறச் செய்தான்
கிரிதர நாகரனின் திருதரும் சேவடியில்
சித்தம் வைத்த பித்தி சித்தி காண்பனோ எனச்
(சோதித்து)'

*கனக சபாபதியின் ஜாதகத்துடன் தன் ஜாதகம் பொருந்துகிறதா என்று ராமலிங்க வள்ளலார் பாடியதுண்டு. பக்தர்களின் பாவம் ஒன்றே!*

*கண்ணனுடன் தன் ஜாதகம் சேருகிறதா என்பது மட்டும் மீராவின் கவலையல்ல. அவனைச் சேரக் கிடைக்குமானால் அந்த இன்பத்தைச் சுமக்கும் திராணி தனக்கு உண்டா என்றும் சோதிடரைப் பார்த்துக் கேட்டாள்.*

*உணர்ச்சியின் உன்னத நிலையில் தானே பாட்டுப் பிறந்துவிட்டது. அந்த நிலையிலிருந்து அணுவளவு கீழே வந்து விட்டபின் மீராவுக்கே தன் செய்கை வெட்கமாகவும் வியப்பாகவும் இருந்தது. பாட்டனாரையும் அன்னையையும் ஏறெடுத்துப் பார்க்கவும் அவளுக்குக் கூச்சமாக இருந்தது. ஓடினாள் தன் கிரிதரன் சந்நிதிக்கு. அங்கேதான் அவள் மனம்விட்டு, மானம் விட்டுப் பாடவும் ஆடவும் வாடவும் முடியும்.*

*அவளைக் கிரிதரன் வாட வைத்தானா? அல்லது பழுக்கத்தான் போட்டானா?*

*கிரிதரனிடம் எவ்வளவோ மன்றாடினாள் மீரா. ஆனால் பாறையில் தூவிய விதைபோல், அந்த விதைக்கு வீணே வார்த்த நீர் போல் மீராவின் இன்ப நினைவுகளும் அவற்றுக்கு அவள் வார்த்த கண்ணீரும் அந்தக் கல்நெஞ்சக்காரனிடம் வீணாகிவிட்டன. மலையைத் தூக்கியவனே கல்லாகி விட்டானா?*

*அழுதழுது, பாடிப் பாடி மீராவின் தொண்டை வற்றியது. பாட முடியாவிட்டால் என்ன? ருக்மிணி செய்தது போல் கண்ணனுக்குக் கடிதம் எழுதலாமா என்று யோசித்தாள் மீரா. ஆனால் நடுங்குகிற கையால் எப்படி எழுத்தாணியை ஓலையில் ஓட்ட இயலும்? முதலுக்கு*

அவ்வோலையே தெரியாது கண்ணனீர் மாலையாய் வழிகிறதே!

தன்னால் எழுத இயலாததையும் உடைந்த குரலில் குருதி கசியப் பாடினாள் மீரா.

'கடிமலர்ப் பாதனைக் கடிமணத்துக்(கு) அழைக்கக்
கடிதம் எழுதுவதும் கடினம் மிகவாச்சு!
எழுதுகோல் எடுத்தால் நழுவுது(இ)ந் நெஞ்சு
நடுங்குது கரமும், அடங்குது எண்ணம்;
ஓலை தெரிந்திடுமோ மாலை நீர் பெருகிடில்?
வார்த்தை வந்திடுமோ ஆர்த்திமிகு உளத்தில்?
சிந்தித்தாலே மேனி சிதறிப் பறந்திடுமேல்
சீரார் திருவடியை நேராய்ப் பிடிப்பதெப்போ?'

தனது நிலை திரௌபதியின் மானபங்க நிலைக்கு இம்மியும் தாழ்ந்ததல்ல என்றே மீரா கருதினாள். திருமணமாகி விட்ட தனக்கு மீண்டும் விவாகம் செய்யும் சுற்றத்தினர், பாஞ்சாலியின் துகிலை உரித்த கூட்டத்துக்குச் சமமாகவே அவளுக்குத் தோன்றியதும் உண்டு. 'மான சம்ரக்ஷணம் தருக' என்று உருகி உலகநாதனைப் பிரார்த்தித்தாள்.

உலகநாதன் இன்று அவளுக்கு நாதனாக வந்து, கணவன் என்ற தனது அந்தஸ்தை நிலைப்படுத்திக் கொள்ள வேண்டும் என்பதே மீராவின் ஆசை. ஆனால் கூடவே ஓர் அச்சமும் எழுந்தது. அன்று பாஞ்சாலி ஆடை குலைந்து நிற்க, அவளது கணவன்மார் யாரும் காக்காதபோது அவள் கண்ணனைக் கடவுளாகக் கருதிப் பிரார்த்தித்தன்றோ வென்றாள்! தான் மட்டும் ஏன் கண்ணனையே கணவனாக எண்ணவேண்டும்? அவனது அணைப்புக்கு ஏன் ஏங்கவேண்டும்? இதுவே தவறோ?

தவறல்ல. ஆண்டாள் இப்படித்தானே பாவித்தாள்? அவளைப் பாலித்த கண்ணன் தன்னைக் கை விடுவானா?

ஆனால் ஆண்டாள் நிலைமை வேறு. 'வேள்வியில் இடப்பட வேண்டிய புனித அவி நான்; என்னை நாய்க்குத் தந்து விடாதீர்கள்' என்று அவள் சொன்னதை ஏற்கும் பக்குவத்தை முடிவிலே பெற்ற பெரியாழ்வாரை அவள் தந்தையாக அடைந்திருந்தாள். ராஜகுலத்தில் பிறந்த என் தாயார் பெரியாழ்வாரைப் போலப் பேச இயலுமா?

*'ஆனால் அவள் பேசியதும் உண்டே! ஆம், ஆதியில் எனக்குக் கண்ணனை நாயகனாகக் காட்டியதே அன்னையல்லவா? சாளக்கிராமத்தை என் 'அகமுடையான்' என்று அவள் கூறியபோது அந்தப் பதத்துக்கு என்ன பொருள் என்பதுகூட அல்லவா எனக்குத் தெரியாது?'*

*அன்னையிடம் சென்றாள் மீரா. "அம்மா, நீ செதுக்கிய சிலையை உன் கையாலேயே உடைத்தெறியலாமா?" என்று கதறினாள். "ஆதியிலேயே நீ என்னுடைய கிருஷ்ணப் பிரேமையை ஏன் தகர்க்கவில்லை? அப்படிச் செய்திருந்தால் இன்று எனக்கு எவ்வளவோ நிம்மதி கிடைத்திருக்குமே!" என்றாள்.*

'அரும்பிட்ட போதிலே அன்புப் பயிரினை நீ
அழித்திருந்தால் இந்தஅல்லல் இல்லைஅம்மா!
வித்து முளைத்தெழுந்து மெத்தப் பரந்து வட-
வ்ருட்சமாய் விரிந்தபின் வெட்டுவதும்ஏனோ ?
உச்சிக் கிளைக்கென்னை இச்சித்து ஏற்றினாய்,
பிடியைவிட்டால் இன்று பிழைப்ப தெப்படிஅம்மா ?
சுழல் கருவில்பட்ட சிறுதுரும்பென அவன்
நாம வெள்ளத்தில் என்றன் நாவும் சிக்குண்டது
மத்தவாரணம் எனப் பத்தி மது உட்கொண்டு
போதை கொண்ட எனக்குன் போதனை ஏறுமோ ?'

*சந்திரமுகி மகளின் நிலை கண்டு மனம் நொந்து புண்ணானாள். "கண்மணி! எனக்கு ஒன்றும் சொல்லத் தெரியவில்லை. உன் தந்தையுடன் நானும் போயிருந்தால் இந்தக் கொந்தளிப்பு எனக்கில்லாது இருந்திருக்கும். உனக்காகவே உயிரைக் கையில் பிடித்துக் கொண்டேன். உனக்காகவே இப்போது இந்தப் பாடு படுகிறேன். வா, உன் அகமுடையான் என்று நான் சொன்ன சாளக்கிராமம் எங்கு இருக்கிறதோ அந்த டாகுர் துவாரத்துக்கே வா! அங்காவது நமக்குச் சிறிது நிம்மதி கிடைக்கிறதா என்று பார்ப்போம்" என்றாள் சந்திரமுகி.*

**மா***லை மங்கும் நேரம். நீண்ட நாட்களுக்குப் பிறகு அன்னையும் மகளும் டாகுர் துவாரத்துக்குச் சென்றனர். முன்பு பரம மங்களமாகப் பொலிந்த அச்சூழல் இப்போது யாரும் கவனிப்பாரற்று முள்ளும் புதரும் மண்டிப் போயிருந்தது. மீரா, தன் உடம்பு உள்ளம் இரண்டிலுமே*

முட்களால் கீறப்பட்டுக் கண்ணபெருமான் சந்நிதியை நெருங்கினாள்.

அருகேயிருந்த புதரில் ஒரு சலசலப்பு எழுந்தது. அடுத்த விநாடியே செந்தழல் கண்களுடன் ஒரு புலி அங்கிருந்து வெளிப்பட்டது.

"ஆகா, என்னைக் கண்ணனுடன் சேர்க்க வந்தாயா?" என்று கூறியவாறு மீரா அதனை வரவேற்ற அதே சமயத்தில்......

எதிரெதிர்த் திசைகளிலிருந்து இரண்டு அம்புகள் வேங்கையின் உடலில் பாய்ந்து அதைச் சடலமாக்கி வீழ்த்தின.

அம்புகளில் ஒன்றுக்கு உரியவனாக ஒரு திசையிலிருந்து வந்தான் ஜயமல். அவன் மீராவின் பெரியப்பா வீர்சிங்கின் மகன்.

மறு திசையிலிருந்து இன்னோர் அம்புக்கு உரிமையாளராக மற்றொருவர் வந்தார். அந்தி மயக்கத்திலும் தேஜசு பொலியும் அவரது கட்டழகு புலனாயிற்று. முப்பத்தைந்து பிராயத்துக்கு அதிகமாகவே மதிக்கக்கூடியவர். எனினும் அவரிடம் இளமைப்புக்குரிய கௌரவத்தோடு சீரிளமைக்குரிய எழிலும் பொலிந்தது.

கம்பீரமும் கனிவும் மிகுந்த அவரது கண்கள் மீராவின் மீது நிலைத்தன. இறைவனின் லீலாவிநோதத்தை, கண்ணனின் மாயா விநோதத்தை யாரே தடுத்து நிறுத்த முடியும்?

# 9. வேங்கை வேட்டையா? மங்கை வேட்டையா?

புலியின் மீதே பார்வையுடன் வந்த ஜயமல் எதிரே நிற்கும் சுந்தர புருஷரைக் கண்டதும் ஒரு நிமிடம் திக்பிரமை அடைந்து நின்றான். மறுவிநாடி அவர் பாதத்தில் விழுந்து, "ஜேய் மஹா ராஜாதிராஜ்! என்னுடைய பாக்கியம் இன்று தங்களைக் கண்டேன்" என்றான்.

ஜயமல்லின் வணக்கத்தைப் பெற்ற வீர புருஷரின் கண்கள் மீராவிடமிருந்து விலகமாட்டாமல் விலகின. தன் பாதத்தில் தண்டனிட்ட ஜயமல்லைத் தூக்கி நிறுத்தினார்.

"நீயும் நானும் சண்டையல்லவா போடவேண்டும்? நீ ஏன் என்னை வணங்குகிறாய்?" என்று அழகிய நகையுடன் கேட்டார்.

"சண்டையா? தங்களோடு நான் போடுவதா? தாங்கள் என்னைத் தவறாக நினைத்து விட்டிருக்கிறீர்கள். முன்பு ரண்மல்லுடனும் இப்போது அவர் மகன் ஜோதாவுடனும் எங்கள் குடும்பம் சேர்ந்திருந்தாலும் நூறு சதவீதமும் சிசோதிய ரத்தம் ஓடுபவர்களே எங்கள் பகைவர்களேயன்றி, மற்றோரை நாங்கள் எதிரியாகக் கருதவில்லை. தங்கள் உடலிலும் இந்தக் குடும்பத்தின் ரத்தம் ஐம்பது சதவிகிதம் பாய்வதை....."

இடைமறித்துப் பேசினார் ஆணழகர். "நான் அந்த அரசியல் சண்டைகளைப் பற்றிப் பேசவில்லை. அது ஒரு மாதிரி முடிகிற தருணம் வந்துவிட்டது. இப்போது இந்த வேங்கையின் மீது நம் இருவரின் அம்புகளும் தைத்து அது இறந்திருக்கிறது. போர் மரபுப்படி, 'அது என் அம்பால் இறந்தது. எனவே அதன் உடல் எனக்குத்தான் சொந்தம்' என்று நான் வாதாட வேண்டும். 'இல்லை, என் அம்பால்தான் அது இறந்தது. எனக்கே அதன் உடல் சொந்தம்' என்று நீ மறுத்துப் பேச வேண்டும். சாட்சாத் சிவபெருமானிடமே அர்ஜுனன் இப்படிச் சண்டை பிடித்திருக்கிறான். நீயோ அப்படி யெல்லாம் சொல்லாமல் என்னை வணங்குகிறாயே!" என்று கூறிவிட்டுக் கம்பீரமாகச் சிரித்தார்.

பளிச்சென்று பதில் சொன்னான் ஜயமல். "அர்ஜுன னுக்குச் சண்டை பிடித்தபோது எதிரேயிருப்பவர் சிவபெருமான் என்று தெரியாது. எனக்கோ தாங்கள் யார் என்று தெரியுமே! இந்தப் புலி மட்டுமல்ல; நானும், என் குடும்பத்தினர் அனைவரும், எங்கள் பிரஜைகள் யாவரும் தங்களுக்கே உடைமையானவர்கள் அல்லவா?"

"அப்படியா? உங்கள் ராஜ்யப் பிரஜைகள் யாவரும் எனக்கு உடைமையா?" என்று பொருள் பொதிந்த சிரிப்புடன் வினவியவாறு மீராவைப் பார்த்தார் அந்த மாவீரர்.

மீராவோ புலி வந்ததையோ மாண்டதையோ எதிரே நடந்ததையோ கவனியாமல் இருளடைந்த டாகுர் துவாரத்தின் உள்ளே தன்னுடைய பார்வையைப் பதித்திருந்தாள். கண்ணனைக் கண்டு களிபேருவகை கொள்ள வேண்டியவள் காரிருளில் அக்கார்வண்ணன் புலப்படாததால் தன்னுள்ள மும் இருட்டிக் கண்ணும் இருட்டி, ஆயினும் எவ்வாறோ கீழே சாயாது நின்றாள்.

ஜயமல் சடக்கென்று சந்திரமுகியின் புறம் திரும்பினான். "சித்தி, ராஜஸ்தான பூமி முழுவதற்கும் உரிமையாளரான மகா பூஜ்ய மேவார் மகாராணா கும்பாஜி இவர்கள்தாம்" என்றான்.

ராணாவிடம், "இவர் என் காலஞ்சென்ற சிற்றப்பா ரத்தன்சிங்கின் பாரியை சந்திரமுகிதேவி. இவள் இவரது புதல்வி மீரா" என்றான்.

சந்திரமுகி தன் முகத்திரையை நன்கு இழுத்துப் போர்த்திக் கொண்டு, சிரம் தாழ்த்திக் கரம் குவித்துக் கூறினாள். "ராவல்ஜி, தாங்கள் மேர்தா வந்தது எங்கள் பாக்கியம். எனினும் எங்கள் ராஜ்யத்துக்கு இப்படி முன்னறிவிப்பில்லாமல், வரவேற்பு உபசாரங்கள் பெறாமல் வரலாமா?"

மேவார் ராணா கும்பாஜியின் கண்கள் மீராவை மொய்த்தன. சந்திரமுகியைப் பார்த்துக் குறும்புடன், "அதற்கென்ன, அல்லோலகல்லோல உபசாரத்துடன் உங்கள் ஊருக்கு மாப்பிள்ளை மாதிரி இன்னொரு முறை வந்தால் போகிறது!" என்றார்.

சந்திரமுகிக்கு ஆனந்தம் தாங்க முடியவில்லை. 'மாப்பிள்ளை மாதிரி என்றல்லவா சொல்கிறார்? கிருஷ்ணா, உன் கோயில் வாசலில் சொல்கிறார்! இது உன் திருவுள்ள மாகவே இருக்கட்டும். இந்தப் பைத்தியக்காரப் பெண்ணுக்குப் புத்தியைக் கொடு!' என்று பிரார்த்தித்துக் கொண்டாள்.

நினைவு மறந்து நின்றிருந்த மீராவைத் தட்டி, "கண்மணி, மகா பூஜ்ய மேவார் மகாராணாஜி வந்திருக்கிறார் பார். நம்மைப் புலி வாயிலிருந்து அவர்தான் காத்திருக்கிறார். நமஸ்காரம் பண்ணு" என்றாள்.

அப்போதுதான் மீரா கும்பராணாவைப் பார்த்தாள். தன்னையே நோக்கும் அவரது கண்கள், புலியின் பசித்த கண்களை விடப் பயங்கரமாக அவளுக்குத் தோன்றின! உடல் நடுநடுங்க, அன்னை சொன்னதற்காக அவரை வணங்கினாள்.

"ஜயமல், எனக்குப் புலி வேண்டாம், நீயே வைத்துக் கொள்; ஒரு மானைப் பிரதியாகக் கொடுத்தால் மகிழ்ச்சி அடைவேன்" என்று கூறிவிட்டுச் சரேலென்று புரவி மீது பாய்ந்து, அதிவேகமாக மறைந்துவிட்டார் சித்தோர் சிம்மாசனாதிபதி.

"சித்தி, மகாராணா இங்கே எப்படி வந்தார் என்றே தெரியவில்லை. இப்படிப் பக்கத் துணையில்லாமல்

வரலாமோ? ஆனால் மகாவீரர்; தாமொருவராகவே ஒரு படை முழுதும் எதிர்கொள்ளத் திறல் பெற்றவர்! அத் தைரியத்திலேயே தனியாய் வந்திருக்கிறார்! எதற்கு வந்தாரோ? இந்தச் சீமைகளில் ஜோதாவுக்கு எவ்வளவு ஆதரவு இருக்கிறது என்று அறிந்துபோக வந்திருப்பார் போலிருக்கிறது" என்றான் ஜயமல்.

"அதெல்லாமில்லை; டாகுர்தான் அனுப்பி வைத்திருக்கிறார்" என்றாள் சந்திரமுகி, தன் ஆசைக் கற்பனைக்கேற்க.

சந்திரமுகியும் மீராவும் ஆலயத்துக்கு வந்திருப்பதை அறிந்த பூஜாரி இதற்குள் அங்கு வந்து சேர்ந்தார். ஆலயத்துக்குள் சென்று தீபத்தை ஏற்றினார்.

அசைகின்ற கொழுந்தின் ஒளியில் டாகுரின் திருமுகத்தில் பலவிதச் சாயைகள் விழுந்தன. 'ஆமாம், நான்தான் ராணாவை அனுப்பி வைத்தேன்' என்று விக்கிரகம் தலையை ஆட்டிக் கூறுவதுபோல் இருந்தது.

மீராவுக்குத் தன் உடலிலிருந்த சக்தி அவ்வளவும் போய் விட்டது போன்ற பலவீனம் ஏற்பட்டது. புலியின்மீது பட்ட அம்பைவிடக் கூரிய அம்பு மகாராணாவின் பார்வை என்ற உருவில் தன்மீது பாய்ந்து வதைப்பதுபோல் இருந்தது அவளுக்கு. 'கண்ணா, உன் கண் அன்றி இன்னோர் ஆடவர் கண் அந்த பாவத்தில் என்மீது படலாமா?' என்று கூச்சமாகக் கூசி மனத்துக்குள் கதறலாகக் கதறினாள்.

# 10. 'சுபஸ்ய சீக்கிரம்'

"குழந்தாய்! தன்னந் தனியாக இப்படி ஆபத்துச் சூழ்ந்த இடங்களுக்குப் போகலாமா?" என்று சித்தோரில் மகாராணா கும்பரைக் கேட்டுக் கொண்டிருந்தார் பெரியப்பா சண்டன்.

"குழந்தை என்று என்னை நீங்கள் கூப்பிடும் வரையில் நான் தனியாகப் போகக்கூடாதுதான். ஆனால் என் குழந்தைகளுக்கே கலியாணப் பருவம் வந்துவிட்டதை என் மீதுள்ள வாத்ஸல்யத்தில் தாங்கள் மறந்துவிட்டீர்கள்" என்று பதிலிறுத்தார் கும்பாஜி.

"ஆம், ராய்மல்லுக்கும்தான் வயசு பதினெட்டாகிறது. விவாகம் செய்துவிட்டால் நன்றாகத்தான் இருக்கும். பேரன் அகமுடையாளின் கையினால் அன்னம் உண்ண இந்தக்

கிழவனுக்குக் கொடுத்து வைத்திருக்கிறதோ, இல்லையோ? அது போகட்டும். நீ போன காரியம் என்ன?" என்று கேட்டார் சண்டன்.

"நான் போன காரியமா? வெற்றிதான்! உங்கள் பேரனுக்குக் கலியாணம் கொண்டு வந்திருக்கிறேன்! பெண் யார் தெரியுமா? நீங்களே யோசித்துச் சொல்லுங்கள்."

ராஜநீதியில் தேர்ந்த சண்டன் அதிகம் யோசிக்கவில்லை. "ஜோதாவின் பெண்..... அவள் பெயர்..... சிருங்கார தேவிதானே?" என்று கேட்டார்.

"பெரியப்பா கண்டுபிடித்தது எப்படிப் பிழையாகப் போகும்? சிசோதிய-ராட்டோர் பகைமையைப் போக்க இதை விடச் சிறந்த உபாயம் எனக்குத் தோன்றவில்லை. தாங்களும் நிச்சயமாக இதற்கு ஒப்புதல் அளிப்பீர்கள் என்ற நம்பிக்கையில் தான் ஜோதாவிடம் இவ்விஷயமாகப் பேசி, வென்று வந்து விட்டேன்" என்றார் கும்பராணா.

"மிகவும் நல்ல காரியம் செய்தாய் குழந்தாய்! அந்நிய மிலேச்சரை எதிர்க்க வேண்டிய தருணத்தில் நமது உட் பூசல்களை எப்படியாவது தீர்த்துக்கொண்டேயாக வேண்டும் என்றுதான் நானும் ஓயாமல் நினைத்து துர்க்கா பரமேசுவரியிடம் பிரார்த்தித்து வருகிறேன். அவளும் செவி சாய்த்துவிட்டாள். இருந்தாலும் இது பெரிய அதிசயம்தான். ஜோதா எப்படி ஒப்புக்கொண்டான்? ரொம்பவும் விரோதமாக இருந்ததாக அல்லவா கேள்விப்பட்டேன்?"

"அது மிகவும் சுவாரசியமான கதை பெரியப்பா. நான் மண்டோர் எல்லையில் ஒரு பாழ்வெளியில் மாறுவேஷத்தில் சுற்றிக் கொண்டிருந்தேன். தூரத்தில் ஒரு ஜாட் பழங்குடியின் குடில் தெரிந்தது. பருக நீர் கேட்கலாமென்று அங்கே சென்றேன். குடிசையின் பின்புறத்தில் குதிரை வால் தெரிந்தது. சட்டென்று என்னை ஜாக்கிரதை செய்துகொண்டு, குடிசையின் உள்ளே கவனித்தேன். ஆச்சரியமாகிவிட்டது! ஜோதா ஒரு தாலத்தின் முன் அமர்ந்திருந்தான்! ஜாட் பெண்மணி ஒருத்தி அவனுக்குக் கூழ் வார்த்தாள். சூடாக இருந்த அந்தக் கூழின் நடுவிலே கையை வைத்த ஜோதா வெப்பம் தாங்கமாட்டாமல் கையை அவசரமாக எடுத்து வாயில் வைத்துக்கொண்டு உறிஞ்சினான். ஜாட்னி களங்க மில்லாமல் பெரிதாகச் சிரித்தாள். 'சாகேப்! நீங்கள் யார் என்று சரியாகச் சொல்லிக்கொள்ளவில்லை. இருந்தாலும் பசியோடு

வந்திருப்பவரிடம் பூர்வோத்தரம் கேட்கக்கூடாது என்று கூழ் படைத்தேன். இப்போது நீங்கள் சொல்லாமலே யாரென்று தெரிந்துகொண்டுவிட்டேன். ஜோதாவுக்கு உடன் பிறந்தவர் நீங்கள்' என்றாள். ஜோதா பதறிப் போய்விட்டான். தனது பதற்றத்தை வெளிக்காட்டிக் கொள்ளாமலே 'எதைக் கொண்டு அப்படிச் சொல்கிறாய்?' என்று கேட்டான். 'சூடாக இருக்கும் கூழில் ஓரத்திலிருந்து சிறிது சிறிதாக எடுத்துச் சாப்பிட்டாலே கை சுடாமல் இருக்கும். நீங்கள் நடு மையத்தில் கையை வைத்தீர்கள். ஜோதா சாகேப் மண்டோரின் எல்லைப் புறங்களில் படையெடுக்காமல் மத்தியில் தாக்குதல் செய்து மகாராணாவின் படையிடம் உதைபடுகிறாரே, அதுதான் எனக்கு நினைவு வந்தது. நீங்களும் அந்த ஜோதாவுடன் ஜோடியாகப் பிறந்தவராக இருப்பீர்கள் என்று நினைத்தேன்' என்றாள் ஜாட்னி. ஜோதா அதற்கு மேல் பேச்சை வளர விடாமல் ஒருவாறு வெளியேறினான். அடுத்தபடியாக அவன் எல்லைப் பகுதிகளில்தான் படையெடுப்பான் என்று ஒருவாறு அநுமானித்தேன்.

"இந்தப் படையெடுப்புக்குப் பின் ராஜஸ்தானியரின் ரத்தம் உட்பூசலில் வீணாகாமல் இருக்க ஏதேனும் செய்தேயாக வேண்டுமென்று முடிவு செய்தேன். அடுத்து அவன் படையெடுக்கக் கூடிய எல்லைப் பகுதியில் நம் படைப் பிரிவைப் பலப்படுத்திவிட்டு நானே அங்கே சென்றேன். இம்முறை ஜோதாவை வெறுமே உதைத்து அனுப்பாமல் சிறைப்படுத்தியே விட்டோம். அவனிடம், 'உன்னை விட்டுவிட நான் தயார். ஒரு ஜாகீரும் உனக்குத் தந்துவிடுகிறேன். எனினும், சீசோதியர்-ராட்டோர் பகை தீர இது மட்டும் போதாது. மிளகாயால் வந்த சிரங்கைப் போக்க மிளகாயையே அரைத்துப் போடுவது போல் இப்போது ஒரு வைத்தியம் செய்ய வேண்டும். முன்பு நம் இரண்டு ரத்தங்களும் கலந்ததால் தான் பேதங்கள் அதிகமாயின. இப்போது பேதங்கள் மறைவதற்காக மீண்டும் இவ்விரு ரத்தங்களும் கலக்க வேண்டும். என் இரண்டாவது மகன் ராய்மல்லுக்கு உன் மகள் சிருங்கார தேவியைத் தருகிறாயா?' என்று கேட்டேன். அவன் மனம் நெகிழ்ந்து போய்விட்டான். விவாக சம்பந்தத்துக்கு ஒப்புக்கொண்டு விட்டான்" என்று முடித்தார் கும்பாஜி.

"அருமையான காரியம் செய்தாய், குழந்தாய்! சிறைப் படுத்திய பகைவனைக் கொலைக் களத்திற்கோ காராக்கிருகத்திற்கோ அனுப்பாமல் மணமேடைக்கு அழைத்து விட்டாயே?" என்று ஆர்த்துக் கூறி அவரை ஆரத் தழுவிக்

கொண்டார் ராஜஸ்தானியரின் ஒற்றுமைக்காக இதயம் துடித்த சண்டன்.

"குழந்தாய் என்று நீங்கள் சொல்வதற்கேற்பக் குழந்தை யாகவே இன்னொரு காரியமும் செய்ய ஆசைப்படுகிறேன், பெரியப்பா!" என்று கூறித் தயங்கி நிறுத்தினார் ராணா.

"அதென்ன குழந்தைக் காரியம்?" என்று ஆவலுடன் வினவினார் சண்டன்.

சிறிது போது மறுமொழி பகராமலே தயங்கிப் பின்னர் பேசினார் கும்பன்.

"ஜோதாவிடம் நல்ல முறையில் விடைபெற்றபின், மண்டோரின் மற்றொரு மாவீரரான ராவ்தூதாவைப் பார்க்க எண்ணி மேர்தாவுக்குக் கிளம்பினேன். ஊருக்கு வெளியிலே ஒரு கண்ணன் கோயில். அங்கே நான் முன்னிரவு வேளையில் சென்றபோது புலியொன்று பதுங்கிக் கொண்டிருப்பதைப் பார்த்தேன். அதன் மீது அம்பு செலுத்தினேன். எதிர்த் திசையிலிருந்து இன்னோர் அம்பு வந்து பாய்ந்தது. ராவ்தூதாவின் பேரன் ஜயமல்தான் அதைச் செலுத்தியவன். புலி செத்து விழுந்தது. அந்தப் புலியின் வாயிலிருந்து ரத்தன் சிங்கின் மனைவியையும் மகளையும் காப்பாற்றியதாகத் தெரிந்து கொண்டேன். பெரியப்பா, அந்த மகளை நினைக்கும் போதுதான் நீங்கள் சொல்வதுபோல் வயதில் பின்னேறி விடுகிறேன். இது ஏன் என்று எனக்கே புரியவில்லை. ராஜகுல வழக்குப்படி, பெரும்பாலும் அரசியல் காரணங்களுக்காகவே நாலு ராஜ ஸ்திரீகளை மணந்தேன்; அனைவரையும் பறி கொடுத்தேன்.

"பதினாறாம் வயதில் என்னைவிட ஒரு பிராயம் சிறியவளான கும்பலா தேவியைக் கைப்பிடித்தவன், அப்புறம் மேலும் மூவருக்கு நாயகனானது மாத்திரமின்றி, முப்பது வயதளவிலே அவ்விவாகங்களுக்கு சாக்ஷியாய் நின்ற அக்னி பகவானுக்கே அந்நால்வரையும் ஆஹுதி கொடுத்தும் விட்டது தாங்கள் அறிந்ததுதானே? அன்றிலிருந்து பிரம்மசரிய நெருப்பான தங்கள் ஆசியில், காமாந்தகரான ஏகலிங்கஜியின் திருவருளில் மனத்தை உடல் வெறியிழந்த நெறியிலேயே நான் நிறுத்திவருவதும் தாங்கள் அறிந்ததே! ஈராண்டு முன்புகூடத் தங்கள் வாக்கையும் மீறி ராஜரீக நல்லுறவுக்காக ஒரு புதுமணம் செய்து கொள்ள நான் மறுக்கவில்லையா? அப்படியிருக்க, திடுமென, இப்போது, என்ன மாயையோ, என்னை விவாக

பந்தம் இழுக்கிறது! நாலாண்டே மனைவியாக வாழ்ந்தாலும் அதற்குள் கற்புக்கரசி எனில் அரசியாகவே பெயர் கொண்ட கும்பலாதேவியையும், அவளுக்குக் கிட்டத்தட்ட சமனான அபூர்வ தேவியையும் இழந்த பின்னும் இன்னொரு பெண்ணை விரும்புகிறேன் என்றால் அது எனக்கே அவமானமாகத்தான் இருக்கிறது.

“இருந்தாலும் தூதாராவின் பேத்தி விஷயத்தில் ஏனோ என் மனத்தைக் கட்டுப்படுத்திக் கொள்ளவே முடியவில்லை. இது கண்ணன் கோயில் முகப்பில் நடந்ததால் ஏதோ காரணார்த்தமாகத்தான் இப்படி ஓர் ஆசையை ஆண்டவனே உண்டாக்கியிருக்கிறானோ என்றுகூடத் தோன்றுகிறது. இதை உங்களிடம் சொல்லிச் சம்மதம் பெறுமுன் ராவ்தூதாவைப் பார்க்கக் கூடாது என்பதாலேயே அவரைச் சந்திக்காமல் இங்கே வந்துவிட்டேன்” என்றார் கும்பராணா.

சிறிது போது சண்டன், கும்பன் இருவருமே சிந்தனையில் ஆழ்ந்திருந்தனர். கடைசியில் சண்டன் கூறுவார்:

“கும்பா, நீ உன் சொந்தமான உணர்ச்சியை வைத்துப் பேசுவதிலேயே தேச க்ஷேமும் உள்ளடங்கியிருப்பது எனக்குத் தெரிகிறது. ஜோதாவின் மகளை ராய்மல்லும் ராவ்தூதாவின் பேத்தியை நீயும் மணந்துவிட்டால் அது இரட்டைச் சங்கிலிகள் கொண்டு சிசோதியரையும் ராட்டோர்களையும் கட்டிப் போட்டது போல் ஆகும். முதலில் உன் திருமணத்தை முடிப்போம். ‘சுபஸ்ய சீக்ரம்’ என்பார்களே! மீண்டும் உன்னை விரைவிலேயே மணமேடையில் பார்க்கிறேன்” என்று கூறியவாறு எழுந்திருந்தார் அந்த நைஷ்டிகப் பிரம்மசாரி.

## 11. அக்கினிப் பிரவேசம்!

மேவாரிலிருந்து அதன் பிரதம அமைச்சரின் தலைமையில் ஏகலிங்கரின் அர்ச்சகர்களும், சாரணர்கள் எனப்படும் கவிகளும், வீரர்களும் மேர்தாவுக்கு வருவதாக அறிந்து பேரானந்தமடைந்தார் ராவ்தூதா. என்ன விஷயமாக வருகிறார்கள் என்பது அவருக்கு நிச்சயமாகத் தெரியாது. இருந்தபோதிலும் அண்மையில் ஜோதாவுடன் மகாராணா விவாக சம்பந்தம் நிச்சயித்த செய்தி அவருக்கு எட்டியிருந்ததால் இதுவும் ஏதோ நல்ல காரியத்துக்குத்தான் முன்னோடி என்று ஊகித்தார்.

சாரணர்கள் சபையில் படாடோபமாகப் பிருதா வளிகளைக் கூறினர்.

மகாராஜ ராஜேசுவர, மத்யபதீசுவர, சத்ரபதி, ராஜகுரு, தானகுரு, சைலகுரு, ஹிந்துகுல சூரிய, சூரிய வம்ச பிரதாப, மகா பண்டித, மகாராணா கும்பாஜியின் வடிவழகையும் வீர பராக்கிரமத்தையும் கலை அறிவையும் பற்றி அற்புதமான வடமொழி சுலோகங்கள் சொல்லி, அப்படிப்பட்ட சிசோதிய வம்ச சிரோமணியான மகாராணா என்ற மகாசமுத்திரம் ராட்டோர் வம்சமென்ற மகாநதியிலிருந்து பிரிந்துவரும் மதுரமான ஓடையாகிய மீராவைத் தன்னில் கலந்துகொள்ள விரும்புவதாக வாசாலகத்துடன் முடித்தார்கள்.

ராவ்தூதா ஆனந்தக் கூத்தாடினார். மகன் மரணமுற்ற பின்னும் இவ்வளவு காலம் தாம் உயிர் வாழ்ந்தது வீண் போகாமல் பேத்தியைச் சித்தோர் சிங்காதனத்தில் அமர்த்திப் பார்க்கும் பாக்கியம் கிடைத்ததே என்று பேருவகை கொண்டார். பெண் வீட்டார் தேங்காயை எடுத்துச் செல்லாமல், பிள்ளை வீட்டாரிடமிருந்து தேங்காய் வந்ததைப் பெரும் கௌரவமாகக் கருதினார்.

விவாக சுபமுகூர்த்தம் நிச்சயிக்கப்பட்டது.

"டாகுரின் திரு உள்ளம்தான் இது" என்று மீராவிடம் அடித்துச் சொன்னாள் சந்திரமுகி. "அன்று டாகுர் துவாரத்தில் மகாராணாவைப் பார்த்தவுடனேயே என் மனத்தில் பட்டு விட்டது" என்றாள்.

புயல் காற்றில் அகப்பட்டுக்கொண்ட துரும்பு போல் மீரா பிடிப்பின்றித் தடுமாறினாள். கிரிதர விக்கிரகத்தின் கழலினைக் கைகளால் பற்றிக்கொண்டாள். ஆனால் எவ்வளவு நாழிகை பற்றிக் கொண்டிருக்க முடியும்? அவளையறியாமலே அவளது கைகள் பிடிப்பை இழந்து இற்று விழுந்தன. மீண்டும் பற்றிக் கொள்ள முடியாமல் புறங்கை எலும்புகளும் நரம்புகளும் நெகிழ்ந்து, சோர்ந்து போயின.

கண்ணனைப் பிடித்துக் கொள்வதோ அவனை விடுவதோகூடத் தன் கையில் இல்லை என்பதை ஸ்தூலமாகவே காட்டுகிறான் என்றே பட்டது அவளுக்கு. அவன் விட்டுவிட நினைத்தால் இவள் எப்படி அதன்பின் ஒட்டிக்கொள்ள முடியும்? 'விட்டுவிடாதே!' என்று வேண்டிக் கொண்டு கானம் செய்தாள்.

"கொள்ளுவதும் தள்ளுவதும்
என்வசம் இல்லை கண்ணா!
உன் பரம் என்பதனால்
தள்ளி விடாதே மன்னா!

பழ மரம்நீ – உன்னைப்
புகல் கொண்ட பட்சி நான்
சரோவரம் நீ – உன்னுள்
சஞ்சரிக்கும் கயல் நான்

மால்வரை நீ – உன் மேல்
மகிழ்ந்தாடு மயிலே நான்
பால் நிலா நீ – உன்னைப்
பருகும் சகோரம் நான்

ஆணிமுத்து நீ – உன்றன்
ஊடு செலும் இழை நான்
காஞ்சனம் நீ – உன்னைக்
கரைக்கும் அமிலமே நான்

ஆயர்பாடிச் செல்வா! மீராவின் ஆருயிரே!
ஆண்டவன் நீ எனக்கு, அடியாள் நான்
உனக்கு."

*"மீரா, இதென்ன அசட்டுத்தனம்? நடக்க வேண்டிய விஷயத்தை ஏற்க மறுக்கிறாய்? நடக்க முடியாத விஷயத்துக்காக இதயத்தை நொறுக்கிக் கொள்கிறாய்! உனக்கு என்ன வந்து விட்டது?" சந்திரமுகி எவ்வளவோ சொல்லிப் பார்த்தாள்.*

*மீரா அடங்கவில்லை. பூரண சந்திரனைப் பார்த்துக் கொந்தளிக்கும் கடலிடம், 'அடங்கியிரு' என்று யார் உத்தரவிட முடியும்? மீரா, அலை வீசி ஆடிப் புரண்டாள்; சீறி எழுந்தாள்; சோர்ந்து துவண்டாள்.*

*அவளுடைய பித்தத்தைத் தீர்க்க வேண்டும் என்று மருத்துவர்களை வரவழைத்தார்கள்.*

*மீரா சிரித்தாள். வெயில் மிகவும் அதிகமானால் அது காரணமாகவே கோடை மழை பொழியுமல்லவா? துக்கத்தின் எல்லையில் சிரிப்புப் பிறந்தது.*

*சங்கீதமும் பிறந்தது.*

"வைகுந்தனின்றேல் வாழகில்லேன் – அம்மா
மருந்து தந்தால் இந்நோய் பறந்திடுமோ அம்மா?
செல்லரித்த மரம்போல் செல்வனைப் பிரிந்தேஎன்
சித்தம் சிதைந்து பெரும் பித்தம் பிடித்து நின்றேன்
மருத்துவத்தால் என்றன் வருத்தம் தீருமோ? என்றும்
இயலாச் செயலினுக்கு முயலாதிரேன், அம்மா!
அமல நீரில் பிறந்த கமலமும் கமடமும்
கயலும் பிறப்பிடம்விட்(டு) அயலிடம் வாழுமோ?
கிரிதரன் இடம்தேடித் திரிந்து வனம் வனமாய்
மீராப்ரபுவைக் கூடிப் பேரானந்தம் பெறுவேன்."

*வைத்தியர் நோயும் நிவாரணமும் புரியாது தலையைத் தொங்கப் போட்டுக் கொண்டு வெளியேறினார்.*

*இளைத்து, வெளிறிப்போய், கண் சிவந்து கிடக்கும் மகளைக் காணக் காணச் சந்திரமுகியின் பெற்ற வயிறு உருண்டு புரண்டது. மீராவின் மதுர கண்டமும் உருண்டு புரண்டது.*

"கதறிக் கதறிக் கண்கள்
குதறிச் சிவந்திடுவேன்,
குதறிச் சிவந்திடுவேன்
பதறிப் பண் பாடிடுவேன்

கிரிதரனே எனக்கு
அரிதிற் கிடைத்த வரன்
பிறிதொரு மனிதரைச்
சிறிதும் கண்பார்ப்பனோ?

கூடல் எனும் கங்கை
ஊடல் எனும் யமுனை
இரு விழி வழியாய்
வழிய நீராடுவேன்

இனியன் நினைவிருத்தி
இதயக் கமலத்திலே
மீராவின் ப்ரபுவுக்கு
நீராஜனம் செய்வேன்!"

*மீரா கதறுவதற்கே விரும்பினாள்; மீரா கண்ணீர் பெருக்கவே விரும்பினாள்! எத்தகைய கண்ணீர்?*

கண்ணனைச் சேர்ந்த ஆனந்த வெண்மையில் பெருகும் தூய பளிங்கனைய கங்கைக் கண்ணீர்; அவனைப் பிரிந்த துயர் இருளில் பெருகும் கரிய யமுனைக் கண்ணீர். ஆம், அவனைப் பிரிந்து கண்ணீர் விடவும் அவள் உள்ளூர, தன் இதயத்தின் அடி ஆழத்தில் ஆசைப்படத்தான் செய்தாள்! ஏனெனில் அந்தப் பிரிவுக் காரிருளில் கண்ணனின் கார்மேனியைக் காணலாமல்லவா? அப்போது பெருகும் கண்ணீரில் அமிழும்போது அவனுடல் திளைத்த யமுனையிலேயே மூழ்குவதாக மகிழலாமல்லவா?

மீரா கண்ணனைக் குறித்துக் கண்ணீர் விடவே அவாவினாள். பூலோக மானிடருடன் தொடர்பு பட்டு, அதைத் தடுப்பதற்காகக் கண்ணீர்விட அவள் விரும்பவில்லை. அது தாங்கவொண்ணாத அருவருப்பாகவே அவளுக்குப் பட்டது.

சந்திரமுகி மீராவை அண்டுவதையே நிறுத்திவிட்டாள்.

திருமண ஆயத்தங்கள், தட்டுத் தடையின்றி முன்னேறிக் கொண்டிருந்தன.

கண்ணனின் காப்புக் கடைசி விநாடியிலாவது கிட்டியே தீரும் என்று நம்பி மீராவும் உயிரைக் கையில் பிடித்துக் கொண்டிருந்தாள். ஆம், உயிரை விடுவது அவளுக்குப் பெரிதாக இல்லை. ஆயின், தானே உயிர் விடுவது எனில் கண்ணன் தன்னைக் காப்பான் என்பதில் நம்பிக்கையில்லை என்றுதானே பொருள்? ஏன் அப்படி நம்பிக்கை இழக்க வேண்டும்?

நம்பிக்கை நிறைந்த நயனங்களுடன் கிரிதரனையே நோக்கியவாறு தீபாராதனை செய்து கொண்டிருந்தாள் மீரா. தீபமே தீபத்தைத் தூக்கித் தீபத்துக்கு ஆராதனை செய்வது போல் இருந்தது. தீபம் கையில் பிடித்தபடியே இருக்க, மீராவின் நினைவு முழுதும் கண்ணனிடமே நங்கூரமடித்தாற் போல் நிலைத்தது.

"ஹரீ! துயரப்படுவதற்கும் பிரார்த்திப்பதற்கும் கூடச் சக்தி இழந்து திரௌபதி இற்று விழுகிற இறுதி நேரத்தில் சேலை தந்து அவளது சீலத்தைக் காத்தாயே! என்னையும் இறுதிப்பொழுதில் ரட்சிப்பாய் அல்லவா?" என்று அவனை வாய்விட்டுக் கேட்டவாறு அப்படியே கண்களை மூடிக் கொண்டாள்.

*மூடிய கண்கள் மூடியபடியே இருந்தன. தீபத்திலிருந்து சுடர்கள் 'சுர் சுர்' என்று அவள் பாதத்தில் தெறித்தன; பாதத்தைத் தழுவிய காங்க்ரா என்னும் ஆடையைப் பற்றின. விநாடிகள்தாம்! மீராவைத் தீ சூழ்ந்துகொண்டது!*

"தீ, தீ" என்று அலறிக்கொண்டு சேடிகளும் சேவகர்களும் ஓடி வந்தனர்.

உள்ளே வெந்து கொண்டிருந்த மீராவுக்கு வெளியே வெந்தீ பரவுவது இதுவரை தெரியவில்லை.

சத்தம் கேட்டுக் கண்களைத் திறந்தாள். தன் ஆடையில் குதித்துப் பரவும் தீயைப் பார்த்தாள். குதித்து விளையாடும் குழந்தைக் கோமளன் தன் மீது ஏறி வருவதாக அவளுக்குத் தோன்றியது. தனது வலது கையால் தானாகவே தீக்கொழுந்தை அள்ளி எடுத்தாள்.

**தீக்குள் விரலைவைத்தால் நந்தலாலா – உன்னைத்**
**தீண்டும்இன்பம் தோன்றுதடா நந்தலாலா!**

என்று நம் தமிழகக் கவி பாடிய இன்பத்தை அநுபவித்தாள். ஆனால் அந்த இன்பத்தை இகவுலகில் அநுபவிக்க முடியாது. இகஉலகு நினைவு தப்பிய மானசிக லோகத்தில்தான் அந்த ஆனந்தத்தைத் துய்த்தாள் மீரா.

அவள் இகவுலகு திரும்பிக் கண்ணைத் திறந்து பார்த்த போது சுற்றிலும் உற்றார் உறவினர் கவலை கொண்ட முகத்துடன் அமர்ந்திருந்தனர்.

சந்திரமுகி விம்மி விம்மிப் பேசினாள்: "கண்ணே! நீ உன் உயிரை விட்டுவிட முயலுவாய் என்று தெரிந்திருந்தால் நான் இந்த விவாக ஏற்பாட்டை நிச்சயமாக நிறுத்தியிருப்பேனே? நீ இப்படிச் செய்யலாமா?" என்றாள்.

மீராவுக்கு விஷயம் புரிந்தது. 'திருமணத்தை ஆட்சேபித்துத் தானாகவே தீ வைத்துக் கொண்டதாக நினைக்கிறார்கள். அதனால் இப்போது திருமணத்தையே நிறுத்திவிடக் கூடத் தயாராக இருக்கிறார்கள்!'

மீரா எதை விரும்பினாளோ அது உண்மையிலேயே நடந்துவிடப் போகிறதா? இதை அறிந்ததும் அவளது உடலணுக்கள் அவ்வளவும் ஆனந்த நர்த்தனமிட்டனவா?

இல்லை.... இல்லை.....

தூய மீராவுக்கு, அசத்தியத்தின் மீது ஆனந்தத்தை எழுப்பிக்கொள்வது அசாத்தியமல்லவா? அசத்தியத்தின் மூலம் தன் எண்ணம் நிறைவேறுவதை அவள் ஏற்பாளா? கண்ணன் செய்யாத உதவியை ஒரு பொய் செய்வதற்கு அவள் அநுமதிப்பாளா!

அவள் தானாகத் தீ மூட்டிக் கொள்ளவில்லையே! அப்படி இவர்கள் நினைப்பதை அநுமதித்து, அந்தப் பொய்யினால் பலன் பெறுவது நியாயமா? மீராவின் மனச்சாட்சி சத்தியத்தின் நீதி மண்டபத்தில் வாய்விட்டுப் பேசியது.

"அம்மா, நானாக எனக்கு நெருப்பு இட்டுக் கொள்ள வில்லை; அப்படி நான் ஒருபோதும் செய்துகொள்ள மாட்டேன். அது அகஸ்மாத்தாக நிகழ்ந்த விபத்துத்தான்" என்றாள்.

கண்ணன் அதிசயமாக மீராவின் மனத்தை மாற்றி விட்டதாக எண்ணி மனம் நிரம்பிய சந்திரமுகி ராவ்தூதாவைப் பொருள் நிறைந்த பார்வை பார்த்தாள். ராவ்தூதா மற்றவர்களைப் பார்த்து, "இனி என்ன? விவாக ஏற்பாடுகளை நிறுத்தாமல் தொடர வேண்டியதுதானே!" என்றார்.

* * *

கண்ணன் தன் கண்கடையில் உருண்ட முத்துக்களைச் சுண்டி விட்டுக்கொண்டு மது மங்களனைப் பார்த்தான்.

"பிற மனிதர் தன்னைத் தீண்டக்கூடாது என்பதில் மீராவுக்கு இருந்த ஆர்வம் பெரிதுதான். அந்த ஆர்வத்துக்கு எள்ளளவும் குறைவின்றி அசத்தியம் தன்னைத் தீண்டக் கூடாது என்றும் அவள் தீவிரமாக இருந்தாள். சாதாரணத் தீயில் மட்டும் அவள் சிக்கவில்லை. சத்தியத்தில் அக்கினிப் பிரவேசம் செய்து உள்ளம் கருகாமல் வெளிவந்து விட்டாள்! இப்படிப்பட்ட ஓர் உத்தமியை நான் என்ன பாடு படுத்த வேண்டியிருக்கிறது? அன்று, நிர்மல சீதையை அக்கினிப் பிரவேசம் செய்ய வைத்தேன். இன்று மீராவையும் தீக்குளிக்கச் செய்துவிட்டேன். உலகு முழுதும் செய்யும் தீமையைத் தீய்க்கவே, உலகன்னையாக என்னில் வாழும் திருமகளை இப்படிப் புடம் போடுகிறேன்" என்று கூறி நாத்தழுதழுத்து நிறுத்தினான் கோவிந்தன்.

'அவன் பாடுபடுத்துவது அதிகமா? பாடுபடுவது அதிகமா?' என்று மதுமங்கள் வியந்தான்! 'அவனை இன்பமும்

துன்பமும் அணுகா என்பார்களே. அது உண்மைதானா?' என்றும் வியந்தான்.

யாரிடமும் பரிதாபம் கொள்ள யாருக்கும் உரிமை உண்டு. மன்னனிடம்கூட ஓர் ஆண்டிப் பரதேசி பரிதாபம் காட்டலாம். பரந்தாமனிடமே மதுமங்களனுக்குப் பரிதாபம் சுரந்தது.

"நீ இன்பம் துன்பம் எல்லாவற்றையும் கடந்து நிற்பவன்; வெறுமே நாடகமாடி எங்களை ஏமாற்றுகிறாய் என்றல்லவோ எல்லோரும் சொல்லிக் கொண்டிருக்கிறார்கள்? ஆனால் நீயோ இப்போது இப்படித் துன்பத்தில் அடிபட்டிருக்கிறாயே, அது எப்படி?" என்று கண்ணனைக் கேட்டான் மதுமங்களன்.

மாதவன் முத்து முறுவல் புரிந்து மறுமொழி சொல்வான்: "நாடகத்தில் ஒருவன் நடிக்கும்போது பல உணர்ச்சிகளைக் காட்டுகிறான்; பல சம்பவங்களில் ஈடுபடுகிறான். எனினும் இவை தனக்கல்ல என்று தெரிந்து, நடிகனுக்குத் தனித்தும் நிற்கிறான். ஆனால் அவனே ஒரு காட்சியில் கனிகள் உண்ணும்போதும், இன்னொரு காட்சியில் அடிபடும்போதும் அந்தக் கனிகளைப் பாத்திரம் மட்டும் உண்டதா, பாத்திரம் ஏற்றவனும்தானே உண்டான்? அடியைப் பாத்திரம் மட்டும் பட்டுக் கொண்டதா, பாத்திரமேற்றவனும் தானே பட்டுக் கொண்டான்? மது, உன்னிடம் ஏன் இப்படியெல்லாம் நான் பேச வேண்டும்? உனக்கே இதெல்லாம் தெரியும்."

எளிய மது யோசித்தான். அவனுக்கே தெரியும்போலத் தான் இருந்தது.

"சரி, எனக்குத் தெரியாத கதையைச் சொல். மீராவுக்குப் பிடிவாதமாகக் கலியாணம் நிச்சயம் செய்தார்கள்; அதற்கு அப்புறம்?"

## 12. மகாராணாவின் மகாராணி!

அப்புறம் என்ன?

விவாகம் நெருங்கி நெருங்கி வந்துவிட்டது. கடைசி கடைசி விநாடியிலேனும் கண்ணன் இரட்சிப்பான் என்று மீராவும் பொறுத்து பொறுத்துப் பார்த்தாள்.

மாடத்திலுள்ள தன் அறையிலிருந்து வெட்ட வெளியான வானத்தையே ஓயாமல் பார்த்துக் கொண்டிருந்தாள். தன் சிந்தனையும் ஸ்தம்பித்து அப்படி வெட்ட வெளியாகி விடவேண்டும் என்ற ஆசையின்மீதே பார்த்துக்கொண்டிருந்தாள்.

அவளுடைய சிந்தனை அடியோடு மரத்துப் போகாதவாறு ஆனந்த அமர்க்களங்கள் அவளை இவ்வுலகின் பயங்கர உண்மைகளுக்கு அவ்வப்போது இழுத்து வந்தன.

எதற்காக இப்படிக் கூச்சல் போட்டுப் பாடுகிறார்கள், ஆடுகிறார்கள், பேசுகிறார்கள், சிரிக்கிறார்கள், வாத்தியம் வாசிக்கிறார்கள்?

'தன்னொருத்தியின் இன்பத்தைப் பறிப்பதில் இத்தனை பேருக்கு இவ்வளவு இன்பமா? அந்த இன்பம் கரை புரண்டு, பாடும்படி இப்போது என்ன வந்துவிட்டது?'

மேர்தா அரண்மனையில் வெகு அபூர்வமாகவே நிகழும் 'தோரண் தூரண்' வந்துவிட்டது! அதற்காகத்தான் இத்தனை அட்டகாசங்களும்!

அரண்மனை வாயிலில் தோரணம் கட்டித் தொங்கவிடப்பட்டிருக்கிறது. மரச் சட்டங்களாலான ஒரு சம பக்க முக்கோணத்தின் மேல்முனையில் தோகை விரித்தாடும் மயில் சின்னம் பொறிக்கப்பட்டிருக்கிறது. அதற்குப் பேர் தான் தோரணம்.

தோரணத்தின் அருகே அவ்வப்போது ஓர் ஈட்டி பாய்ந்து பாய்ந்து விலகுகிறது. ஈட்டியை எய்வது யார்?

வேறு யார்? சாட்சாத் மேவார் மகாராணா கும்பாஜிதான். மேவாரின் துவஜமாகிய தகதகக்கும் சூரியக் கொடி பின்னால் பறக்க, பஞ்ச கல்யாணிக் குதிரை மீதேறிக் கும்பாஜி ராணாதான் கையில் ஈட்டியுடன் தோரணத்தை நோக்கி நோக்கிப் பாய்கிறார். அதனை அவர் ஈட்டி முனையாலே — கையை விட்டு ஈட்டியை எய்யாது, கையில் பிடித்தவாறே — குத்திக் கீழே தள்ளிவிட்டால் அதுதான் 'தோரண் தூரண்'. மீராவை அவர் மணப்பதற்கு முன் இதைச் செய்தேயாக வேண்டும்.

மகாவீரன் ஒருவனுக்கு இது என்ன பெரிய காரியம் என்று தோன்றலாம். தோரணத்தை அறுத்துத் தள்ளுவது எளிதுதான். ஆனால் அதற்கு எதிர்ப்பு இல்லாமல் இருக்க வேண்டுமே! எதிர்ப்பவர்கள் ஆடவ வீரர்களானால்

அவர்களை எல்லாம் கும்பாஜி நொறுக்கித் தள்ளிவிடுவார். ஆனால் மேர்தாவின் இளம் பெண்களல்லவா இவர் தோரணத்தை அணுகாதவாறு எதிர்க்கிறார்கள்?

அவர்கள் எப்படி எதிர்க்கிறார்கள்? வில்லும் அம்பும் கத்தியும் கேடயமும் தாங்கியா? இல்லை, இல்லை. மாடத்தில் நின்றுகொண்டு பல தாம்பாளங்களில் கொட்டி வைத்துள்ள பலாச புஷ்ப சூரணத்தைப் பிடிப்பிடியாக அள்ளிக் கும்பாஜியின் மார்க்கத்தில் தூவுகிறார்கள். அவர் கண்களிலெல்லாம் பொடிபடுகிறது. தோரணத்தை நோக்கி வந்தவர் சூரணத்துக்குப் பயந்து பின் வாங்குகிறார்.

குதூகலித்துச் சிரித்துக்கொண்டே யுவதிகள் பாடுகின்றனர்:

'தீராதி தீரரிவர் சூராதி சூரரிவர்
மீராவுக் கேற்றவர்தானோ?'

கும்பராணாவின் உடன் நிற்கும் மேவாரப் பெருமக்களெல்லாம் சிரிக்கிறார்கள். அவர்களுக்குத் தலைமை தாங்கும் சண்டன், "அப்பனே, இந்த மேர்தாச் சிறுக்கிகள் முன் நம் மானத்தைக் கப்பலேற்றுகிறாயே? அடுத்த வீச்சில் இந்தத் தோரணமே சூரணமாகி அவர்கள் கண்களிலெல்லாம் போய் விழவேண்டும்" என்று வேடிக்கைக் கோபத்துடன் ஆக்ஞாபிக்கிறார்.

கும்பா மீண்டும் ஆக்ரோசமாகத் தோரணத்தை நோக்கிப் புரவியைச் செலுத்துகிறார்.

மாடத்திலிருந்து கூடை கூடையாக அவர் தலையில் மலர்கள் கொட்டியபடி இருக்கின்றன. அதிலே திணறித் தவித்தபடி பின் வாங்குகிறார் கும்பாஜி.

'பூவைக் கண்டு பயந்தார்
பூப்பொடியைக் கண்டு பயந்தார்
பூவை கையைப் பிடிக்க – இப்
புவியில் இவர்க்கிணை உண்டோ?'

என்று பாடிக் கையைப் பெரிதாகக் கொட்டிக் கொண்டு கேலி செய்கின்றனர் மேவார் மங்கையர்.

கும்பா ரோஷத்தையெல்லாம் திரட்டிக்கொண்டு மீண்டும் பாய்கிறார். பூப்பொடியும் மலர்களும் மழையாக வர்ஷிக்கின்றன. ஆனால் அவர் பொருட்படுத்தவில்லை. ஈட்டி

முனை தோரணத்தைத் தொட்டுவிட்டது! ஆகா! தோரணம், 'மளார்' என்று முறிந்தது!

எங்கும் ஆனந்த பரவசம்தான். இவ்வளவு நாழிகை கேலி செய்த பெண்கள் இப்போது தோற்றுப்போனதால் முகத்தைத் தூக்கி வைத்துக்கொள்ளவில்லை. முன்னிலும் உற்சாகமாகப் பாடுகிறார்கள்.

'ஈட்டிகொண்டே புகழ் ஈட்டிய வீரர்
தோரணம் தாழ்த்தி ஆரணங்(கு) அடைந்தார்'.

என்று கானம் செய்கிறார்கள். "தோரணத்தை வீழ்த்தியது போல் மீராவையும் தன்னிடம் வீழ்த்திக்கொண்ட வெற்றி வீரர் வாழ்க!" என்று வாழ்த்தி வரவேற்கிறார்கள்.

மீராவுக்கு இவ்வளவும் பேய்க்கனாவாக இருக்கிறது!

அவளுக்கு அலங்காரம் தொடங்குகிறது. விஜய நகரத்திலிருந்து மேவார் மன்னர் தமது மணமகளுக்குத் தருவித்திருந்த அற்புதமான பட்டில் காங்க்ராவும் கஞ்சுளியும் தாமனியும் அணிவிக்கிறார்கள். அந்த ஆடைகளின் உடலிலெல்லாம் தூய பசும் பொற்சரிகை வேய்ந்திருக்கிறது. கரையாகவோ முத்துச்சரங்களே கோக்கப்பட்டிருக்கின்றன. சர்வாங்கங்களிலும் நவரத்தினங்கள் இழைத்த அணிகளைப் பூட்டுகின்றனர். அதில் 'பாஜுபந்து' என்கிற வங்கி சுமங்கலிகளுக்கே உரியது. அது முறையாக மீராவுக்கு அணிவிக்கப்படும்போது ஏனோ அவளது வயிறும் மேனியும் நெஞ்சும் ஒரு குலுங்குக் குலுங்குகின்றன. 'மாங்க்' என்று வகிடு நிறையச் சிந்தூரத்தை அப்புவதும் இனி அவள் 'கட்டுக்கழுத்தி' என்பதைக் குறிக்கும். மீராவின் வகிட்டைத் தொட்டவர்கள் அது ஏன் அப்படி எரிமலையாகக் கொதிக்கிறது என்று ஆச்சரியப்படுகிறார்கள்.

புஷ்பங்களைக் கணக்கு வழக்கின்றிச் சூட்டுகிறார்கள். அதன் கனமும் அதனின்று எழும் மணத்தின் கனமும் சேர்ந்து, நைந்து போயிருந்த மீராவைக் கிறங்கச் செய்கின்றன. அபலை நிலையின் எல்லை நிலையில் மிக மிக அசக்தியாகி மயங்கியே விடுகிறாள் மீரா.

கூடியிருந்தவர்களில் பலருக்கு அவளுடைய கண்ணன் காதல், தெரியாத, புரியாத விஷயம். தெளிந்து விளங்கும் அவளது திவ்ய வதனத்தைப் பார்த்து, "அடியம்மா, மகாராணாவை அடைகிறோம் என்ற நிம்மதி, திருப்தி, சாந்தி

பார்த்தாயோ? நிச்சிந்தையாகத் தூங்கிவிட்டாளே!'' என்கிறார்கள்.

மீராவின் அகக்கண் திறந்திருந்தது. அவ்வகவுலகில் அற்புதம் நிகழ்ந்தது! மேர்தா அரண்மனையை நோக்கி நித்திய கலியாணனாகிய கண்ணன் மாப்பிள்ளைக் கோலத்தில் வருகிறான்! ஆகா! இத்துணை ஆண்டுகள் எட்டிப் பாராமலே இருந்துவிட்டுக் கடைசி விநாடியில் வந்தேவிட்டான் காப்பாற்ற!

மீராவின் இருதயம் சில்லிட்டு உறைந்து விடும் போலிருக்கிறது. 'ருக்மிணியைக் காக்க இறுதி விநாடியில் அம்பிகையின் ஆலயத்துக்குத் தேரில் வந்ததுபோல் தன்னையும் காக்க வந்துவிட்டான்' என்ற ஒன்று மட்டுமே அவளுக்கு இப்போது புரிகிறது. ஓடிப் போய் அவன் காலில் முடிபட விழுந்து வணங்கி எழவேண்டும் என்ற எண்ணமும் ஏற்படுகிறது!

ஆ! இதென்ன? உறையும் நிலைக்கு வந்த மீராவின் இதயம் கரைகிறது! ஏனெனில், கண்ணன் அரண்மனை முகப்புக்கு வந்ததும் அறுந்து விழுந்த தோரணத்தையும் எங்கும் இரைந்து கிடந்த மலர் இதழ்களையும் பலாச சூரணத்தையும் பார்க்கிறான். உடனே அவனது திருமுகக் குறிப்பு மாறுகிறது. ஆனந்தம் மாறித் துயர மயமான ஒரு தயக்கம் அவனது வதனத்தில் படிகிறது.

அவ்வளவே! அவனது வெண்ணெய்ப் பாதங்கள் எதிர்த் திசையில் துவண்டு புரளுகின்றன! ஆஹா! வந்த வேகத்திலேயே திரும்பி ஓடுகிறான்!

''கான்ஹா, கான்ஹா!'' என்று கதறியபடி மீரா அவனைத் தொடர்ந்தாள். இதோ அவனை நெருங்கியாச்சு! அடுத்த விநாடி பிடித்துவிடலாம்!

"கான்ஹா, கான்ஹா!" என்று அலறியபடி விழித்துக் கொண்டாள் மீரா.

"ஏன் மீரா! என்ன கனவு கண்டாய்! கெட்ட கனவு கண்டால்தான் நல்ல பலன் என்பார்கள்" என்று சந்திரமுகியும் தோழிகளும் கேட்கிறார்கள்.

மீரா தன்னையே சபித்துக்கொள்கிறாள்.

'ஆகா, பைத்தியக்காரி, ஏன் விழித்துக்கொண்டு பாழாய்ப் போனேன்? அவனை அணைத்து நிறுத்துகிற சமயத்தில் ஏன் சண்டாளி எழுந்தேன்?'

*மீரா பாடினாள். உணர்ச்சி அடர்ந்து செறிகிறபோது மீராவுக்குப் பாட்டுத்தான் பேச்சு. பட்சிகள் பாடுவதென்றும் பேசுவதென்றும் வித்தியாசமுண்டோ?*

'இனிஅவனை அடைவ தெப்படியோ அறியேன்
கனியைத் தவறவிட்டேன், கைக்கெட்டும் தொலைவினிலே!
முன்வாசல் வரைவந்த மன்னவன் மனம்மாறிப்
பின்வாங்கிச் சென்றுவிட்டான்! பிராணனோ
செல்லவில்லை!
ஆதர வோடவனை அணைந்து அடிவணங்கிக்
காத வழிதொடர்ந்தேன்; கண்விழித்தே எழுந்தேன்.

உறங்குகின்ற மாந்தர் களவு தருவதுண்டு
உறக்கம் கலைந்ததனால் களவு தந்தவள்நானே!

மணமகனை இழந்த மாபாவியேன் தனக்கு
மணமிகு மாலையும் அணிபணியும் தகுமோ?

மோகனனை நித்தம் மோனமதில் காணும்
யோகினியாய்ச் சொல்வேன், யோசனை இனியில்லை.

கந்தத்துகில் கிழிப்பேன்; கந்தைதனை உடுப்பேன்
களைவேன் வளையல்களை; கலைப்பேன் அலைகுழலை!

நிரஞ்சனன் போனபின் அஞ்சனம் தீட்டுவரோ?
நிரந்தரம் இலையுதிர் நெடுமர மாய்நிற்பேன்.

இமைப்பொழுதும் இனிக் குமையவொண்ணாதம்மா!
நமையாளும் நாதனை நாடிக் கிளம்பிவிட்டேன்!

மீராவின் இறைவன் ஹரி அவினாசிதனை
நேராய் நெருங்கியபின் சேராதிருப்பேனோ?'

*சுற்றி இருந்தவர்கள் நிலைகுலைந்து விட்டார்கள். மணவினைக்குச் செல்லவேண்டிய பெண் மங்கலச் சின்னங்களை அழித்துவிட்டு வனத்துக்கு அல்லவா புறப்படத் தயாராகிவிட்டாள்?*

*சந்திரமுகி மீராவைப் பிடித்து உலுக்கினாள். தான் ஒரு போதும் ஒரு சொல் தடித்துப் பேசியிராத பெண்ணிடம் முதன் முறையாகச் சீறினாள்: "மீரா, நீ என்ன நம்முடைய குடியின் மானம் மரியாதையை அடியோடு அழிப்பதென்றே பிரதிக்ஞை செய்து கொண்டிருக்கிறாயா? இந்த வீட்டோடு உன்*

*செய்கைகள் நின்ற நாட்கள் போய்விட்டன. இப்போது அவை மிக மிக மேன்மை கொண்ட ஒரு புக்ககத்தையும் தொட்டு விட்டன. இதை நினைவில் வைத்துக் கொண்டு நம் மானத்தைக் காப்பாற்று."*

*மீரா கண்ணனிடம் மானசம்ரட்சணம் கோரினாள் என்றால், அந்த மீராவிடமே சந்திரமுகி மானசம்ரட்சணம் கோரினாள்!*

*ஆனாலும் அதை மீராவால் ஏற்கத்தான் முடியவில்லை. கண்ணன் இத்துணைக் காலம் செய்ததுபோல் ஒதுங்கியே இருந்தாலும் அவள் மனம் ஒருகால் மாறியிருக்கக் கூடும். ஆனால் ஒரு முகூர்த்த காலத்துக்கு முன் அவன் மணக்கோலத்தில் வந்து நின்றதை அவளால் எப்படி மறக்க முடியும்! எட்டாக்கனியைக் கிட்டத்தில் காட்டிவிட்டு அவன் தட்டிப் பறித்துவிட்டான். அந்தத் தாபம் அதற்குள் எப்படித் தீரும்? இந்த ஆசாபங்கத்தில் மீராவுக்கு இயல்பான அநுதாபமும்கூட அன்னையிடம் எழவில்லை.*

*'கண்ணனை நாடி ஓடிவிடத்தான் வேண்டும். அவனை எங்கே பிடிக்கிறேனோ அதுவே என் புக்ககம். வேறு ஏதோ ஒரு புக்ககத்துக்குப் போவது பற்றி அம்மா பேசுவது எவ்வளவு அர்த்தமற்றது?' என்றே கருதினாள். பாடினாள்:*

'கிரிதரனைத் தேடிக் கிளம்பிவிட்டேனம்மா
புக்ககத்தை அடையப் புறப்பட்டேனம்மா
சத்தியமாய் என்காந்தன் நித்தமணாளனே
தித்தித்தெனது கண்ணில் புத்தமுதாய்நிற்பான்
கணவ னவன்அளிக்கும் கஞ்சியும் கந்தையுமே
உணவும் உடுக்கையுமாய் உளம் உவந்தே ஏற்பேன்
'அமர்'என்றவன் காட்டும் இடுகாட்டு மூலையையும்
அமரப் பதவிதரும் அரியணை எனக்கொள்வேன்
சொல்செயல் சிந்தனைகள் சொந்தமாய் ஏதுமின்றித்
தொல்லை நெடும்பிறவித் தோழன் வயம்அளித்தேன்
அற்புத நாதனவன் அற்பப் பொருள்என்னை
விற்பனை செய்தாலும் விருப்போ(டு) ஒருப்படுவேன்!'

*மீராவுக்குத் தூக்கிவாரிப் போட்டது.*

*'மீரா, மீரா! அன்னையையும் கண்ணனையும் விடச் சத்தியத்தை நெருங்கிய பந்துவாய்க் கருதும் மீரா! நீ*

கடைசியில் என்ன பாடினாய், மீண்டும் பாடு! என்று அவளது உள்ளம் ஆர்ப்பரித்தது.

மெல்ல முனகிக் கொண்டாள்:

'அற்புத நாதனவன் அற்பப் பொருள்என்னை
விற்பனை செய்தாலும் விருப்போ(டு) ஒருப்படுவேன்!'

மோர்தா அரண்மனைக்குப் பாரதத்தின் பல கோடிகளிலிருந்தும் பரதேசிகள் வருவதுண்டு. அவர்கள் அந்த அந்தச் சீமைகளில் வழங்கும் அற்புதக் கதைகளைச் சொல்லக் கேட்டிருக்கிறாள் மீரா. தமிழகத்திலிருந்து வந்திருந்த சிவனடியார் அப்படியொரு கதை சொல்லியிருந்தார். நாயன்மார்களில் ஒருவரிடம் இறைவன் மாறுவேடத்தில் வந்து, 'உன் மனைவியை எனக்குக் கொடு' என்று கேட்டானாம். அவரும் சுணங்காது அப்படியே செய்துவிட்டாராம். அதனினும் அதிசயம், அவரது மனைவியும், 'கற்புக்கு லட்சணம் கணவன் சொற்படி நடப்பதுதான்' என்று கருதி, வேஷமிட்டு வந்த இறைவனுடன் புறப்பட்டாளாம்! 'தான் என்பதையே அழித்துக்கொள்ளும் அந்தக் கற்புநிலை என்னையறியாமலே என்னிடமும் ஊறியிருக்கிறதா? அதனால்தான் கண்ணன் என்னை விற்றாலும் மகிழ்ச்சியுடன் விற்கப்படுவேன் என்று பாடினேனா? சிவபெருமான் பிறர் மனைவியைத் தமக்காகக் கேட்டுச் சோதித்தார் எனில், கண்ணனோ தன் மனைவியைப் பிறருக்கு விற்றுச் சோதிப்பானா?

'என்னை நீ விற்க நினைத்தாலும் அதற்கு உடன்படுகிறேன் பிரபு, உடன்படுகிறேன்! சங்கீதம்தான் என் சத்தியம். ஏனெனில் அதுதான் என் இன்னுயிரான நீ! என் சங்கீதத்தில் எது வந்ததோ அதுவே உன் ஆணை; அதைக் காப்பாற்றுவேன் பிரபு.'

மீராவின் கண்களிலிருந்து ஒரே கோவையாக நீர் வழிந்து கொண்டேயிருந்தது. கண்ணனிடம் அன்பு வைத்ததற்குப் பிரதியாக அவள் கண்டது பிறந்த நாளாகக் கண்ணீர் விடுவது தானே?

சந்திரமுகி மீராவின் மனப் போராட்டத்தை உணர்ந்து கொள்ளாமலே பேசினாள்.

"மீரா, உன் ஒருத்தியின் கல்யாணம் இது என்று மட்டும் நினைத்துவிடாதே! சிசோதிய வம்சத்துக்கும் ராட்டோர் வம்சத்துக்கும் நடக்கிற கல்யாணம் இது. இன்று ராஜஸ்தானம்

வாழவேண்டுமானால் இது அவசியம் நடந்தேயாகவேண்டும். தாத்தா எவ்வளவு முறை இதை எடுத்துச் சொல்லியிருப்பார்? கீழே வரன் வீட்டார் யாவரும் வந்தாகிவிட்டது. உனக்கு மாமியாராக வரப்போகிற ஸௌபாக்கியதேவிக்கும் மகாராணாவின் தங்கை உதயாவுக்கும் ஏற்கெனவே மனக்கடுப்பு. நம்மிடம் சம்பந்தம் செய்துகொள்வது அவர்களுக்கு மட்டமாக இருக்கிறதாம். உன் விசித்திரப் போக்கையும் காட்டிவிட்டால் அதற்குத் தூபம் போட்டாற் போல் இருக்கும். இதோ பார், நான் உன் அன்னை. என் வாயால் நானே சொல்லிக்கொள்ள வெட்கப்பட்டாலும், நான்தான் உனக்கு முதல் தெய்வம். அப்புறம்தான் கண்ணன்."

மீரா அன்னையை அமைதியாகப் பார்த்தாள்: "நீ காட்டும் வழி, கண்ணன் காட்டும் வழி, என் சங்கீதம் காட்டும் வழி எல்லாம் ஒன்றாகத்தான் இருக்கிறது. இனி நான் மறுக்க வில்லையம்மா! இதோ மணமேடைக்குப் புறப்பட்டேன்."

முதல் முறையாக ராஜகுமாரியின் மிடுக்குடன் தோழிகளிடம் உத்தரவிட்டாள் மீரா. "அழுது கலைந்த மையைச் சரி செய், பவானி! உதிர்ந்துவிட்ட மகரிகா பத்திரத்தை மீண்டும் எழுதாமல் என்னடி செய்கிறாய், மாளவிகே? ஏ, மாதவி உள்ளங்காலில் இன்னும்தான் சற்று அகலமாக லாக்ஷாரசத்தைப் பூசேன். இடதுகாலில் ஒன்றும் தீப்புண் அதிகமில்லை. இன்னும் என்னவெல்லாம் அலங்காரம் செய்ய முடியுமோ அவ்வளவும் செய்யுங்களடி! மேவார் மகா ராணாவை மணக்கச் சர்வாபரண பூஷிதையாக இதோ நான் கிளம்பிவிட்டேன்!"

மீராவின் குரலில் இம்மிகூடத் துயரப் பசை இல்லை. அவளது பேச்சு என்றுமில்லாத அழுத்தத்துடன் வந்தது.

"என் கண்ணே கண்!" என்று அவளைக் கட்டிக்கொண்டாள் சந்திரமுகி.

திருமணம் நல்லபடியாக முடிந்துவிட்டது என்று ராவ் தூதாவும் சந்திரமுகியும் மகிழ்ந்தனர்; மேர்தா மக்களும் மேவார் ராஜகுலத்தினரில் பெரும்பாலானவரும் மகிழ்ந்தனர்.

ஹோமப் புகையோடு சிசோதிய-ராட்டோர்ப் புகைச்சல் அழிந்ததே என்று சண்டனும் ராணா கும்பனும் மகிழ்ந்தனர்.

அப்படியானால் உண்மையாகவே மீராவுக்கும் கும்ப ராணாவுக்கும் திருமணம் ஆகிவிட்டதா?

மணமகன் மணமகளின் கரம் பிடித்துப் பாணிக் கிரகணம் செய்துகொள்வதும், அவளது காலைப் பிடித்து ஏழடி வைத்து ஸப்தபதி செய்வதும்தான் விவாகத்தின் முக்கியமான அம்சங்கள் என்பது சாஸ்திரம். தீபச்சுடரில் சுடுபுண் கண்டிருந்த மீராவின் கரத்தையும் பாதத்தையும் கும்பராணா எங்கே பிடித்தான்? ஏதோ பாவனையாக ஒப்புக்குத்தானே பாணிக் கிரகணமும் ஸப்தபதியும் செய்தான்?

மீரா ஒருத்தியின் மனத்துக்குத் தவிர இது வேறு யாருக்கும் படவில்லை. படவேண்டிய முகாந்திரம் அவள் ஒருத்திக்குத்தானே இருந்தது?

'கண்ணன் என்னை விற்று விட்டானா, இல்லையா? ஏன் இப்படி எதையுமே ஐயமறச் செய்ய மாட்டேன் என்கிறான்? கூடிக் களிக்கும்போது திடுமென மறைந்துவிடுகிறான்! மறைவையேனும் நிரந்தரமாகக் காப்பாற்றுகிறானா? வேண்டாத சமயத்தில் மீண்டும் வந்து சேருகிறான்! இப்போது ஒரு வழியாகப் பிரச்னை முடிந்தது என்று நான் மனத்தைக் கல்லாக்கிக் கொண்ட சமயத்தில் ஏன் இந்தத் திருமணத்தைப் பற்றியே குழம்பும்படி செய்கிறான்? முடியாது; முடியாது, இனி குழம்ப முடியாது. நான் மேவார் மகாராணாவுடன் ஹாத்லேவா செய்த தருமபத்தினிதான். அப்படித்தான் வாழப் போகிறேன்.'

உடலை விட்டுப் பிரியும் உயிர்போல், தன்னை விட்டுப் பிரிந்து மேவார் செல்லும் மகளுக்குத் தடபுடலாகச் சீர் வரிசைகள் எடுத்தாள் சந்திரமுகி. மீராவோ இறுதிவரை ஒன்றை மட்டும் எதிர்பார்த்து எதிர்பார்த்து ஏமாறிப் போனாள். கிரிதர கோபால விக்கிரகம்தான் அது!

பிஞ்சுப் பருவத்திலிருந்து தான் அன்பு செய்த அம்மூர்த்தியை அளிக்குமாறு மீரா தாயைக் கேட்டுக் கொண்டாள். "அம்மா, அவனை நான் கணவனாக நினைத்துக் கேட்கவில்லை. மற்ற மங்கையர்போல் அவனைத் தெய்வமாக வைத்துப் பூசிக்கவும் நேசிக்கவுமே கேட்கிறேன் அம்மா. என்னை நம்பு. ஸ்திரீ தருமத்துக்கு விரோதமாக நான் நடக்க மாட்டேன்" என்று உருக்கமாகக் கேட்டுக்கொண்டாள் மீரா. "கண்மணி கிரிதரனைத் தருவாய்" என்று பாடினாள்:

'கிரிதரலாலனைக் கொடுத்தருள்வாயம்மா (கிரிதர)
பிரியனின் பதமலர் பூசனை யின்றிப்
பரிசப் பொன்மணிகளைப் பெரிதெனக் கொள்வனோ?
(கிரிதர)

ஆர மனம்ஒட்டும் பாதாரவிந்தம் விட்டு
சாரம் என்பதற்ற சம்சாரத்தில் மகிழ்வனோ ?
நாரி மீரா, ப்ரபுவின் மாறிலா ஒளியினில்
ஊறித் திளைத்துடலம் பூரித்தவள் அன்றோ ?'

சந்திரமுகி சஞ்சலமுற்றாள். "அருமை மகளே! உன்னை எவ்வளவோ வருத்திவிட்டேன். இனியும் உன்னை வதைக்கக் கூடாது என்பதுதான் என் ஆசை. ஆனாலும் மீரா, உன் புக்ககத்தாரின் மன நிலையை நான் மறப்பதற்கில்லை. அவர்கள் ஏகலிங்கர் மீதும் துர்க்காபரமேச்வரியின் மீதுமே தீவிர பக்தி கொண்டவர்கள். ராஜமாதா சௌபாக்கிய தேவி பரம சாக்தை. அவரது கணவர் மோகல்சிங் மகாராணா துவாரகைக்கு யாத்திரை சென்றபோதுகூட சௌபாக்கியதேவி அவருடன் செல்லவில்லை என்று கேள்விப்பட்டிருக்கிறேன். நீ கண்ணனை ஆராதிப்பதை அவர் அநுமதிப்பாரா என்பது மிகவும் சந்தேகமாக இருக்கிறது" என்றாள் சந்திரமுகி.

"பின்னால் எது நடக்கிறதோ, அது நடந்துவிட்டுப் போகட்டும் அம்மா. நாமாக முன்கூட்டி ஏன் துன்பத்தை வளர்க்க வேண்டும்? இங்கிருந்து பொன்னையும் மணியையும் யானை குதிரைகளையும் எடுத்துப் போய்விட்டு என் கிரிதரனை மட்டும் விடுவதென்றால் எப்படியம்மா?" தேம்பி யழுதாள் மீரா.

சந்திரமுகி, கிரிதர விக்கிரகத்தை ஒரு பேடகத்தில் வைத்தாள். "நீ இதை எடுத்துப் போகும் பிரஸ்தாவம் இப்போது உன் புக்ககத்தினர் காதில் விழவேண்டாம். சித்தோர் போனபின் நடப்பது நடக்கட்டும்" என்று சொல்லிப் பெட்டியை மூடினாள். இவ்வளவு நேரம் அவள் தடுத்திருந்த கண்ணீர் இப்போது பெருக்கெடுத்தது.

'ஆசை மகள் போகிறாள். அதன்பின் எனக்கு ஓர் ஆறுதலாக இருக்கக்கூடிய கிரிதரனும் போகிறான். கண்காணாத தேசத்துக்குப் போகும் குழந்தையின் விருப்பத்தைவிட என் விருப்பமா பெரிது?' சந்திரமுகி தன்னைத்தானே தேற்றிக்கொண்டாள்.

## 13. மனக்கதவம் மூடியது!

**மே**ர்தா அரண்மனையும் கம்பங் கொல்லைகளும் டாகுர் துவாரமும் பின்னே பின்னே ஓட மீரா ஏறியிருந்த புரவி வாகனம் சித்தோரை நோக்கி முன்னே முன்னே பறந்தது.

வாஞ்சையே உருவான ராவ்தூதாவும் சந்திரமுகியும் பூஜாரியும் மீராவின் நெஞ்சுக்குள் வாடிய முகத்துடன் நின்றனர். 'எல்லாப் பெண்களுக்கும் விதித்த ஒன்று இது. எல்லாப் பெண்களையும் போல் தானும் இதைத் தாங்கியே ஆகவேண்டும். ஆம்; நானும் எல்லாப் பெண்களையும் போலவேதான் எல்லா விதத்திலும்.' கல்லாக்கிக்கொண்ட மீராவின் நெஞ்சம் அவ்வப்போது இளகத்தான் தொடங்கும். தானே அதை மீண்டும் இறுக்கிக் கொள்வாள்.

ஊர்தி சென்றுகொண்டேயிருந்தது. மீராவின் மனச் சகடமும் உருண்டுகொண்டேயிருந்தது. அதில் சிந்தனை ஆரங்கள் எவ்வளவுதான் இருப்பினும் குடமாகக் கோவிந்தன் ஒருவனையே சுற்றித்தான் இன்னமும் எண்ணம் சுழன்றது! இலேசில் விடும் பாசமா அது!

'டடாக், டடாக்' என்று புதுப் புது பாதைகளில் — கரடு முரடான மலையும் பாலையுமான பாதைகளில் புரவிகள் ஓடிக் கொண்டிருந்தன. மீராவின் வாழ்வுகூடப் புதுப் பாதைக்குத்தான் திரும்பிவிட்டது! என்ன என்ன எதிர்பாராத திருப்பங்கள் இருக்குமோ? வறண்ட பாலையும் கரடுமுரடான மலையுமாகத்தான் அது இருக்குமோ? மீராவின் கண்கள் கரைந்தன.

"மீரா, வருத்தப்படாதே. கூடிய விரைவில் நாம் மீண்டும் உன் மனிதர்களையெல்லாம் சந்திக்கத்தான் போகிறோம். என் மகன் — இல்லை, நம் மகன் — ராய்மல்லுக்குச் சீக்கிரத்திலேயே ஜோதாவின் மகளை மணமுடிக்கப் போகிறேன். அப்போது உன் உறவினர்களையெல்லாம் நிச்சயமாகப் பார்ப்போம்."

'யார் பேசுவது? இதென்ன அசட்டுக் கேள்வி? வேறு யார் இப்படி அருகமர்ந்து, உறவுப் பரிவுடன் பேச முடியும்? மேவார் மகாராணாதான் பேசுகிறார்! என்னை அக்கினி சாட்சியாக மணந்த கணவர்தான் பேசுகிறார்! அவரைத் தவிர வேறு யார் என் அருகில் இவ்வளவு நெருக்கமாக அமர முடியும்? ஒரு வேளை நான் இன்னும் கண்ணீர் வடித்தால் அவரே என் கண்ணைத் துடைத்தாலும் துடைப்பார். துடைக்க அவருக்குச் சாஸ்திரப்படியும் சட்டப்படியும் உரிமை உண்டு. கிருஷ்ணா, கிருஷ்ணா, என்ன விளையாட்டு விளையாடுகிறாய் நீ!' பொடிப் பொடியாக உதிர்ந்து விழ இருந்த நெஞ்சை மீண்டும் கெட்டித்துப் பாறாங்கல்லாக்கிக் கொண்டாள் மீரா.

நல்ல வேளை! ராணா அவளைத் தீண்டவில்லை. ஏனெனில் அந்த ரதத்தில் சாரதிக்கும் அவர்களுக்குமிடையே

மறைப்பு இல்லை. 'இத்தனை பாபத்திலும் என்ன புண்ணியம் செய்தேனோ? எத்தனையோ தேர்கள் இருக்க இத்தேரில் இவர் ஏறினார்!'

போகிற மார்க்கங்களைப் பற்றி உற்சாகமாக மொழிந்து வந்தார் ராணா. மீரா சிலையாக அமர்ந்திருந்தாள். மாமன்னர் ஒருவரிடம் ஓர் இளம் பெண்ணுக்கு இருக்கக்கூடிய பயம், புது மணமான நங்கைக்கு இருக்கக்கூடிய நாணம் (பல நூற்றாண்டு களுக்கு முந்தைய கதை!), உற்றாரைப் பிரிந்த துயரம் இவையே மீராவின் மௌனத்துக்குக் காரணம் என்றுதான் கும்பா எண்ணினார்.

"மீரா, உன்னுடைய வெட்கத்தையும் பிரிவுத் துயரையும் நான் புரிந்துகொள்ள முடிகிறது. ஆனால் என்னிடம் உனக்கு அச்சம் இருக்குமோ என்றும் எண்ணுகிறேன். என்னைவிட நீ ஏறக்குறைய இருபது பிராயம் சிறியவள். அதோடு என்னை ராஜஸ்தானத்துக்கே பெரிய மன்னனாக உன்னிடம் பெரிதாகப் பேசியிருப்பார்கள். இது காரணமாக உனக்கு என்னிடம் பயம் உண்டாவது இயற்கை. ஆனால் நான் அஞ்சத் தக்கவனல்ல தேவி! உன் அன்புக்கே ஆசைப்படுபவன். பல மனைவிகளை மணந்து அவர்களை இழந்தபின்னும், இந்த இழப்பு இறைவன் ஆணை என்று தெளிந்த பின்னும், உன்னை நான் திருமணம் செய்து கொண்டிருக்கிறேன் என்றால் அதற்குக் காரணம் எனக்கே புரியவில்லை. ஆண்டவன்தான் ஏதோ நிமித்தமாக நம்மைச் சேர்த்து வைத்திருக்கிறான் என்றே நினைக்கிறேன். ஆண்டவன் அளித்த ஒரு பரிசு என்னிடம் பயப்படலாகுமா? மீரா! என்னைப் பூரணமாக நம்பி உன் மனம் திறந்து நடந்து கொள்ளவேண்டும். புதிய சூழ்நிலை உனக்கு எப்படி எப்படியோ இருக்கலாம். அதை ஒளிக்காமல் என்னிடம் மனம்விட்டுக் கூற வேண்டும், என்ன?" என்றார்.

சௌந்தரியமும் காம்பீர்யமும் ஒருங்கே கொண்ட மகாராணாவின் முகத்திலிருந்து சௌந்தரியமும் காம்பீர்யமும் ஒருங்கே இழையும் அன்பு வார்த்தைகளைக் கேட்டபோது மீராவுக்கு அனற்புண்ணின் மீது சிறிது சந்தனம் அப்பியதுபோல் இருந்தது.

'மனம் விட்டுப் பேசச் சொல்கிறாரே, பேசி விடலாமா? எல்லாவற்றையும் சொல்லிவிடலாமா?' என்றுகூட நாவு துடித்தது.

ஆனால் ஏதோவொன்று அவளைப் பேச வொட்டாமல் தடுத்தது. அவள் மனக்கதவத்தில் பலமாக ஒரு தாழ்ப்பாள் விழுந்தது.

அந்தத் தடுப்பு இல்லாதிருந்தால் மீராவின் வாழ்க்கை எப்படியெல்லாம் மாறியிருக்குமோ?

புதுமணம் செய்த மனைவியை நேரே சித்தோர் அரண்மனைக்கு இட்டுச் சென்றுவிடவில்லை மகாராணா கும்பர். 'அரன் மனை'க்குச் சென்ற பின்பே அரண்மனை புக நினைத்தார் அவர். மேவார் ராஜ்யாதிபதியான ஏகலிங்க பரமேச்வரனின் ஆலயத்துக்கே முதலில் தேர் பறந்தது.

சுற்றிலும் குன்றுத் தொடர்கள். அவற்றின் உச்சியிலெல்லாம் பெரிய தேனடைகள். இது ராஜஸ்தானம் தானா என்று வியக்கும்படி பல நீர்ச்சுனைகள். இதனாலேயே அங்கே செழிப்பாக மரம் செடி கொடிகள் வளர்ந்திருக்கின்றன. நாகலிங்கம், சரக்கொன்றை, வில்வம் ஆகியன போல் பரமேசுவரனுக்குப் பிரீதியான மரங்கள் அதிகம் இருக்கின்றன. மாமரங்களும் மண்டி இருக்கின்றன. அடர்ந்த மூங்கிற் புதர்களைத் தாண்டிச் சென்ற ரதம் நிசப்தமான, நிர்மலமான ஓர் இடத்தில் நிச்சலனமான மாலை வேளையில் நின்றது. உடன் வருவோரின் ஊர்திகளும் நிறுத்தப்பட்டன.

ஏகலிங்கர் ஆலயத்துக்குள் பிரவேசிக்கு முன் அதைப் பற்றிய வரலாறுகளையெல்லாம் மகாராணா மனைவிக்குக் கூறினார். அதுவே மேவார் ராஜ வம்சத்தின் வரலாறாகவும் இருந்தது.

இன்றைய லாஹூர் ஆதியில் லவபுரியாக இருந்தது. ஸ்ரீ ராமனின் புத்திரனான லவன் அங்கிருந்து ஆட்சி புரிந்து வந்தான். பல்லாயிரம் ஆண்டுகள் அவனது வம்சத்தினர் ராஜ்யபாரம் செலுத்தினர். வலபி ராஜ்யம் என்று அது பெயர் பெற்றது. கடைசியில் அந்த மகத்தான ராஜ்யமும் எதிரிகள் கையில் சிக்கியது. வெற்றி கிடைக்காது என்பதை ராமன் வம்சத்தினர் அறிந்தவுடன், 'ரணகளத்திலேயே உயிரை விடுவோமேயன்றித் தோல்வியுடன் தப்பி ஓடமாட்டோம்' என்று பிரதிக்ஞை செய்தனர். காவி வஸ்திரம் அணிந்து சமரிலேயே ஒரு மொத்தமாகத் தங்கள் அனைவரது உயிரையும் இழந்தனர். அவர்களுக்குப் பின்வாங்கிவிடவில்லை அரச குலப் பெண்டிர். எதிரிகள் ஊருக்குள் நுழைவதற்கு முன்பே ராஜஸ்திரீகள் அனைவரும் அக்கினியில் முழுகி வீரமாணம் எய்தித் தங்கள் பதிகளை வாழ்த்த வானுலகுக்கு விரைந்தனர்.

ராஜ வம்சம் இப்படிப் பூண்டோடு அழிய ஏகலிங்கரும் துர்க்காதேவியும் மனம் கொள்வார்களா? இந்த யுத்தத்தைப்

பற்றிய விஷயமே தெரியாத ஒரு ராஜஸ்திரீ தப்பினாள். அவள்தான் வலபி ராணி புஷ்பவதி. நீண்ட நாட்கள் கழித்து கருத்தரித்த தனக்கு நல்ல முறையில் சந்ததி உண்டாக வேண்டும் என்பதற்காகச் சில பணியாட்களுடன் கானகம் சென்று பவானிக்கு நோன்பிருந்தாள் அவள். விரதம் முடிந்தவுடன் தலைநகரம் நோக்கித் திரும்பலானாள். தலைநகரத்தில் போர் நடந்து அது பிறர் கைக்கு மாறிய துயரச் செய்தியும், தன் தலைவன் வீர சுவர்க்கம் புகுந்த செய்தியும் அவளுக்கு அப்போது தெரியா. வனத்திலிருந்து வரும் வழியிலேயே அவளுக்குப் பிள்ளைப் பேற்று நோவு தொடங்கிற்று. அதே சமயத்தில் இடியும் மின்னலுமாகப் பெரு மழையும் புயலும் தொடங்கின. கார்மேக இருட்டில் புஷ்பவதி பணியாட்களிடமிருந்து பிரிந்து காப்பிடம் தேடி ஓடினாள்.

திடீரென்று ஒரு மின்னல். 'இது இவ்வளவு நாழிகையாக வானில் வெட்டிய மழை மின்னல் அல்ல; தேவி பராசக்தியே அனுப்பிவைத்த மின்னல்!' என்று புஷ்பவதி உணர்கிறாள். அந்த மின்னலின் வெளிச்சத்தில் சற்றுத் தொலைவே ஒரு குகை தெரிகிறது.

புஷ்பவதி அந்தக் குகையை அடைந்தாள். தேவி ஒருத்தியையே மானசிகத் துணையாகக் கொண்டு குகைக்குள் புகுந்து ஒரு மகவைப் பெற்றெடுத்தாள். ஸ்ரீராமனின் புனித வமிசம் முடிந்து விடாமல் காத்துவிட்ட பெருமையுடன், தான் விதவை என்ற அபாக்கியத்தை அறியாத பெருமையுடன், அப்போதே கண்மூடிவிட்டாள் புஷ்பவதி.

குகைக்கு உரிய சிம்மம் அங்கு வந்து சேர்ந்தது. தேசு வீசும் குழந்தையைக் கண்டது. சிம்மம் தேவியின் வாகனமல்லவா? எனவே அம்பிகையின் திருஉள்ளத்தைப் புரிந்துகொண்டது. குழந்தையைத் தானே வளர்த்து ஆளாக்கியது!

குகையில் பிறந்து வளர்ந்ததால் குஹா என்று பெயர் பெற்ற இப்பிள்ளை பிற்காலத்தில் வலபி ராஜ்யத்தை மீண்டும் ஸ்தாபித்தான். குகாவையே மேவார் ராணாக்கள் தமது முதல்வனாகக் கொண்டனர். இதனால் இப்பரம்பரையினரை குஹிலாட் என்றும் சொல்வதுண்டு.

சிவபெருமானுக்கும் தேவிக்கும் பிரியமான குகப் பெருமானுக்குச் சமமாக மதிக்கப்பெறுபவன் இந்த குகன். இவன் வழிவந்த பப்பாவும் இதேபோல் ஈசன் அருளையும்

ஈசானியின் அருளையும் விசேஷமாகப் பெற்றவன். தேவத் தச்சனாகிய விசுவகர்மா செய்த சர்வாயுதங்களையும் கவசத்தையும் சாட்சாத் பரமேசுவரியே பப்பாவுக்குப் பூட்டினாள். பரமேசுவரனோ அவனுக்கு இருபுறமும் கூரிய 'கண்டம்' எனப்படும் வாளை அளித்தான். இதுவே மகாராணாக்கள் குலதனமாக வைத்து வழிபடும் ஆயுததேவதை. மௌரிய மன்னர்களின் சாமந்தனாக ராஜஸ்தானத்தில் இருந்துவந்த பப்பா, தேவப் பிரசாதமான கண்டம், கவசம் இவற்றின் விசேஷத்தினால் சித்தோரின் சுதந்திர மன்னனாக — மேவாரின் முதல் மகாராணாவாக — உருவானான். 'பப்பா ராவல்' என்று மரியாதையுடன் போற்றப் பெறும் இவனே குஹா பூஜித்து வந்த ஏகலிங்கருக்குப் பெரும் ஆலயம் எடுத்தவன். ஈசனின் ஆலயம்தான் மேவாரின் உண்மையான ராஜசபை. மகாராணா ஈசுவரனின் திவானாக ஆட்சி புரிபவன், அவ்வளவே!

கும்பாஜி கூறிய கதைகளில் மீராவின் மனத்தில் நின்றதெல்லாம் கண்டமும் கவசமும்தான். 'ஈசுவரனும் தேவியும் இவற்றை அளித்ததற்குக் காரணம் நிச்சயமாக இருக்க வேண்டும். தேச பரிபாலனத்திற்கு இவை அவசியத் தேவை என்று காட்டுவதற்காகவே இருக்க வேண்டும். ஆனால் கண்டத்தையும் கவசத்தையும் இட்டு நிரப்பி, உள்ளத்தைப் பண்படுத்த வேணுகானக் கண்ணனை அடித்தளமாகக் கொண்டு தம்புராவும், ஜாலராவும், காற்சிலம்பும் வேண்டாமா? இவற்றை மேவார் மக்களுக்குத் தர நடன சங்கீத விநோதனான கிரிதரன் மனம் கொள்வானா? அவன் மனம் கொண்டாலும் அவனது பிரவேசத்தை மகாராணா ஒப்புக்கொள்வாரா? பராக்கிரமத்தைப் போலவே பெருந்தன்மையும் தயாளமும் படைத்த அவர் ஒப்புக்கொள்ளக் கூடும். ஆனால் அவரது அன்னை சௌபாக்கியதேவிக்குக் கண்ணனின் பெயரைச் சொன்னாலே கோபம் வருமாமே!'

ஏகலிங்கர் மந்திரத்தை நோக்கிக் கணவனுடன் நடந்து சென்று கொண்டிருந்த மீரா திரும்பித் தான் வந்த ரதத்தைப் பார்த்தாள். அதன் பின்புறத்தில்தான் அவளது பேடகம் இருந்தது. அந்தப் பேடகத்துக்குள் இருந்த கிரிதாரியை நினைத்துக் கண் கசிந்தாள் மீரா.

ஏகலிங்கரின் ஆலயத்துக்குள் கும்பராணாவின் பக்தி உள்ளமும் கலாரசனையுமே உருவெடுத்தாற்போன்ற கும்ப மண்டபம் அவர்களை வரவேற்றது. தான் கட்டியது அது

என்று கும்பாஜி மனைவியிடம் சொல்லிக் கொள்ளவில்லை. எனினும் புராதனமான அந்த மந்திரத்தில் பளிச்சென்று புத்தம் புதிதாக விளங்கிய அம்மண்டபத்தைக் கண்டவுடனே அது தன் நாயகனின் திருப்பணி என்பதை மீரா புரிந்து கொண்டாள். 'பேடகத்தில் பதுங்கிக் கிடக்கும் என் கிரிதரனுக்கும் அவர் இதே போல் ஆலயம் எடுத்துத் தருவாரா?'

சுவாமி சந்நிதியின் முன் ஓர் அழகான நந்தி விக்கிரகம் நின்றது. உண்மையான ஒரு ரிஷபத்தின் உயரமும் பருமனும் கொண்ட அந்த விக்கிரகத்தை உயிருள்ளதாகவே எண்ணியோ என்னவோ, மடி கனத்த ஓர் உயிருள்ள பசுவும் அதன் அருகிலேயே நின்றது! மகாராணாவுக்காகப் பிடிக்கப்பட்ட தீவர்த்தியின் ஒளியில் கோமாதாவின் கண்கள் விளக்கு ஏற்றி வைத்தாற்போல் பளபளத்தன. எல்லாப் பசுக்களின் கண்களுக்கும் உரிய பளபளப்பு மட்டும் அல்ல அது. அதன் கண்களில் தேங்கியிருந்த நீரும் சேர்ந்து பளபளப்பை அதிகரித்தது. ராணாவும் மீராவும் அருகே வந்தவுடன் அது தீனமாக ஒரு முறை அலறிக் கண்களை மூடிக்கொண்டது. அழுத்தம் திருத்தமான அதன் தாடைகளில் நீர் உருண்டது.

மகாராணாவும் அவரது பரிஜனங்களும் விக்கித்துப் போனாற்போல் ஒரு கணம் நின்றனர். அந்தப் பசுவைக் காமதேனு என்று வணங்குவது அவர்கள் வழக்கம். காம தேனுவுக்கு நந்தினி என்னும் மகள் உண்டு என்பார்களல்லவா? நந்தியம்பெருமான் அந்த நந்தினியின் சகோதரனே, அதாவது காமதேனுவின் மகனே என்பது அவர்களிடை ஓர் ஐதிஹ்யம். அதனால்தான் நந்தியருகே அப்பசு நின்றது. இன்று நந்தியருகே நிற்கும் காமதேனுவுக்கு முன்பு இப்பசுவின் அன்னையும் பாட்டியும் காமதேனுக்களாக இக்கோயிலில் இருந்தன. இவளுக்குக் கிடாரி பிறந்தால் அதுவே எதிர்காலத்தில் காமதேனுவாகி இக்கோயிலில் ஏகலிங்கரின் அபிஷேகத்துக்குப் பால் தரும்.

இப்படிப்பட்ட புனித பரம்பரையில் பிறந்த கோமாதா புதுமணத் தம்பதியைக் கண்டவுடன் அலறினால் அது மிகவும் அபசகுனமாகக் கருதப்படுவது நியாயம்தானே!

மீராவுக்கு அப் பசுவைப்பற்றிய விவரங்களை யாரும் சொல்லவில்லை. எனினும், அதனைக் கண்டவுடனே, அதன் குரலைக் கேட்டவுடனே ஆயிரமாயிரம் ஆண்டுகளாகப் பழகிய பாந்தவ்யம் அவளை வந்து தொட்டது. கணவனோடும்

மற்றப் புக்ககத்தினரோடும் தான் வருவதையும் மறந்து அப்பசுவிடம் ஓடினாள். அதுவும் அவளை நோக்கி விரைந்தது. கோவை நெருங்க நெருங்க அவளது இதயத்தின் அடிமட்டத்தில் அடைத்து வைத்திருந்த கோபாலன் நினைவு அவ்வளவும்' பீறிட்டுக் கொண்டு வந்தது. அப்போதும் அந் நினைவை வெளியிட்டு மகாராணாவிடம் சொல்ல முடியாதபடி மனக்கதவம் பலவந்தமாக மூடிக்கொண்டது. இந்த எதிரெதிர் சக்திகளைத் தாங்கவொண்ணாத மீரா மூர்ச்சையானாள்.

கோலோகத்தில் கண்ணன் காமதேனுவைப் பரிவு மிகப் பார்த்தான். நயமிக்க குரலில், "அழாதே காமதேனு! நீ ஆனந்தத் தாண்டவம் ஆடப் போகும் நாள் நிச்சயமாக வரப் போகிறது. இன்று எந்த ராணாவுடன் என் ராதையைக் கண்டு நீ தாங்கமாட்டாது அலறினாயோ, அதே ராணாவின் முன்பே தாண்டவமாடப் போகிறாய்!" என்று ஆறுதல் கூறினான்.

## 14. மரணத்துக்குப் பின் மணம்!

மீரா கண்களைத் திறந்தபோது அவளுக்கெதிரே நக்ஷத்திர கணங்கள் கூட்டம் கூட்டமாகக் குலுங்கி நடனமாடின! 'இல்லை, தாராகணங்கள் ஆடவில்லை; நான்தான் குலுங்கி ஆடுகிறேன்; ரதத்தில் என்னை மல்லாக்கக் கிடத்தியிருக்கிறது. ரதம் செல்லும் குலுங்கலில் நான் குலுங்க, அதனால் வானவெளியெல்லாமே குலுங்குவதாகத் தெரிகிறது! ஆம், என் ஒருத்திக்கு ஏற்படும் வருத்தமோ இன்பமோ எதுவானாலும் அதுவேதான் வான்முகடு வரை வியாபித்தாற் போல் பிரமை ஏற்படுகிறது!' அழவே பிறந்த மீராவும் சிரித்துக் கொண்டாள்!

விச்வ வேதனையைத் தானொருத்தியே அநுபவித்துத் தீர்க்க அவதரித்தவள் தன்னொருத்தியின் வேதனையே விச்வரூபமெடுப்பதாக எண்ணியதும் அம்மாயன் லீலையே!

"என்ன மீரா, சிரிக்கிறாய்?" என்று குரல் வந்தது.

'மகாராணாவின் குரல் அல்ல. ஒரு பெண்மணியின் குரல். ஆனால் அவரது ஆண்குரலில் உள்ள கனிவுகூட இல்லாமல் வறட்சியாக ஒலிக்கிறது!'

பேசியது ராணாவின் தாய் சௌபாக்கியதேவிதான். மயங்கி விழுந்த மீராவை சௌபாக்கியதேவி சென்ற வண்டியில் கிடத்திப் பிரயாணத்தைத் தொடர்ந்திருக் கிறார்கள். அவளோடு அவளது மகள் உதயாவும் அதே ரதத்தில் இருக்கிறாள். மீராவின் கல்யாணத்தின்போது உதயா வாய் திறக்கவேயில்லை. கக்ரூன் இளவரசன் அசலசிம்மனுக்கு வாழ்க்கைப்பட்டு இளவயதிலேயே கைம்பெண்ணான உதயா யாருடனும் கலந்து கொள்ளாததை மீரா வித்தியாசமாக எண்ணவில்லை.

மாமியாரின் குரல் கேட்டவுடன் மீரா வாரிச் சுருட்டிக் கொண்டு எழுந்தாள்.

"உடம்பு எப்படியிருக்கிறது?" என்று சௌபாக்கியதேவி கேட்கவில்லை. "சிரித்தாயே, என்ன கண்டாய்?" என்றுதான் கேட்டாள்.

மீரா என்ன சொல்வாள்?

"ஒன்றுமில்லை...." என்று இழுத்தாள்.

"புத்தி சரியாக இருப்பவர்கள் ஒன்றுமில்லாததற்குச் சிரிப்பதில்லை" என்றாள் ராஜமாதா வெடுக்கென்று.

"நான் புத்தி சரியில்லாதவள்தானம்மா" என்றாள் நொந்த மீரா, தன்னையும் அறியாமலே.

"ஏகலிங்கஜி ஆலயத்திலே அதைத்தான் நிரூபித்தா யாக்கும்! கும்பாவின் புத்தியும் சரியில்லாததால்தான் இந்த வயதில் அவனுக்கு இப்படி ஒரு திருமண ஆசை வந்திருக்க வேண்டும்! அடி தாயே! ஆனால் இன்னொன்றும் எனக்குத் தெரியும். புத்தி சரியில்லாததாகக் காட்டிக் கொள்பவர்கள் ஒரு ராஜ்யத்தையே அசைத்து ஆட்டிப் படைத்துவிடுவதும் உண்டு."

மீரா வெலவெலத்துப் போனாள். குழறுகிற தன் நாவைச் சிரமப்பட்டு இயக்கி, "பாய்ஜிராஜ்! நான் ஏதாவது தப்பாகச் சொல்லியிருந்தால் மன்னித்துக்கொள்ளுங்கள்!" என்றாள்.

"அச்சச்சோ! மன்னிக்க நான் யாரடி தேவீ! நீதான் மேவார் மகாராணி. நான் வெறும் பாய்ஜிராஜ்தானே! நான்தான் உன்னிடம் மன்னிப்புக் கேட்கவேண்டும்"- வெடிப் புடன் வந்த சௌபாக்கியதேவியின் பேச்சு மீராவின் பஞ்சு இதயத்தைக் குத்திக் குளறியது. 'கிருஷ்ணா, இருக்கிற துன்பங்கள் போதாவென்று இது வேறு வைத்திருக்கிறாயா?'

சௌபாக்கியதேவியைப் பற்றி அன்னை சந்திரமுகி ஏதேதோ எச்சரித்துக் கூறியது மீராவுக்கு நினைவு வந்தது. மேவாருக்குச் சம சிம்மாசனமில்லாவிடினும், பெரியதொரு குறுநிலமாகக் கூட இல்லாத மேர்தா மன்னர் வீட்டு மகளை மணப்பதும், ராட்டோர் வமிசத்துடன் தொடர்பு கொள்வதும், வைஷ்ணவ சம்பிரதாயத்தில் பிடிப்புக்கொண்ட ரத்தனின் மகளைப் பெண்ணெடுப்பதும் சௌபாக்கியதேவிக்குப் பிடிக்கவில்லை என்பதே சந்திரமுகியின் அநுமானம். ஆனால் அதையெல்லாம் விடப் பெரிய காரணம் இப்போது மீராவுக்குத் தெரிந்தது. 'கும்பராணாவின் பத்தினிகளில் பட்ட மகிஷியாக இருந்தவர்கள் காலமாகி விட்டதால் ராஜமாதாவான சௌபாக்கியதேவியே மகாராணிபோல் சித்தோரில் அதிகாரம் வகித்திருக்கிறார். என்னால் அதற்குக் குந்தகம் வந்துவிட்டது என்று இப்போது நினைக்கிறார்! அதனால்தான் தமது வயதுக்கும் ஸ்தானத்துக்கும் உரிய கௌரவத்தை விட்டு இப்படிப் பேசுகிறார்!'

"மாதாஜி, நான் மகாராணி பதவிக்கு ஆசைப்பட வில்லை...." என்று மீரா தொடங்கியபோதே சௌபாக்கிய தேவி நிஷ்டுரமாகக் குறுக்கிட்டாள்.

"ஆமாமடியம்மா, உனக்கு அந்த ஆசை இம்மிகூட இல்லை. அதனால்தான் உங்கள் ஊருக்கு வெளியே கிருஷ்ணன் கோயிலில் கும்பனை வரவழைத்துச் சொக்குப் பொடி போட்டாய்! உனக்கு மகாராணிப் பதவி ஆசை உண்டோ? எனக்குத்தான் இத்தனை வயசுக்குப் பின்னும் அதிகார ஆசை விடவில்லை என்று குத்திக் காட்டுகிறா யாக்கும்!"

மீரா அழுவதற்கும் அப்பாற்பட்ட நிலையை அடைந்தாள். மாமியுடன் மௌனம் சாதிப்பதுதான் விவேகம் என்று தீர்மானம் செய்து கொண்டாள். இத்தனைக்கும் உதயா ஒரு வார்த்தைகூடப் பேசவில்லை. மீராவின் புறமே திரும்பாமல் வேறெங்கோ வெளியே பார்த்தபடி வந்தாள் அவள்.

குதிரைகளின் குளம்பொலியும் ரதச்சகடங்கள் உருளும் ஒலியும் தவிரச் சூழலில் ஒரே மௌனம். நன்றாக இருட்டி விட்டது. சந்திரன் இளவொளி வீசிக் கொண்டிருந்தான்.

எதையோ கண்டு சௌபாக்கியதேவியும் உதயாவும் கைகூப்புவதைக் கவனித்த மீரா, தானும் அத்திசையில் நோக்கினாள்.

ஒரு பொட்டல் காடு. ஆங்காங்கே முட்டுமுட்டாக ஏதோ கட்டுமானங்களும் இரட்டை இரட்டையாகச் சிலைகளும் தெரிந்தன.

மீரா புரிந்துகொண்டாள். அதுதான் மேவார் ராஜ குடும்பத்தினரின் மயானம். நினைவுக்கற்களும் உடன்கட்டை ஏறிய சதிகளுடன்கூடிய வீரர்களின் சிலைகளும் அங்கு நிரம்பி யிருக்கின்றன. ஏனோ அதைக் கூர்ந்து கவனிக்கவேண்டும் போல் மீராவுக்கு ஆவல் எழுந்தது. சந்திரனின் மங்கிய ஒளியிலும் அங்கு எழுப்பியிருந்த வீரத் தம்பதியரின் சிலைகளின் இருபுறமும் பொறிக்கப்பட்டிருந்த சூரிய சந்திர பிம்பங்கள் தெரிந்தன. மேவாரின் இந்தப் பழைய மகாராணாக்கள், அவர்களது மகாராணிகள் ஆகியோரின் புகழ் சூரிய சந்திரர் உள்ள வரை அழியாமல் இருக்கும் என்பது அதற்கு உள்ளர்த்தம்.

'இதேபோல எனக்கும் மகாராணாவுக்கும்கூட இங்கு ஒரு காலத்தில் சிலை எழுப்பப்படலாம். சீ! திருமணமாகி முதல் முறையாகப் புக்ககம் செல்லும்போது அமங்களமாக இப்படி ஏன் ஓர் எண்ணம்... இதில் என்ன அமங்களமாம்? 'மரணம் இயற்கை விதிதானே! அதோடு தனக்கு என்றென்றும் ஆறுதல் அளிக்கப் போவதும் அதுவேயல்லவா? ஆம், என் சிலை இங்கு ராணாவின் சிலைக்குப் பக்கத்தே நிற்கலாம். ஆனால் ஆவி! அது அப்போது கிரிதரனிடமல்லவா சென்றுவிடும்?'

மீராவின் தொன்றுதொட்ட ஆசை - அவள் நடுவில் சிறிது காலமாக அவ்வப்போது அடக்கிப் போட்டிருந்த ஆசை - மீண்டும் துருத்திக்கொண்டு எழும்பியது. இந்த உடல் போனபின் கிரிதரனைத் தான் அடையும்போது அவனைக் காந்தனாக, மாலையிட்ட மணவாளனாகவே கூடி ரமிக்க வேண்டும் என்ற தாபம் எழுந்தது. 'இந்த உடல் சாஸ்திரப்படி ராணாவுக்கு உரியதாக இருக்கலாம். உடல் போனபின் பிராணன் பிராணேசனிடம் பிரேமை செய்வதில் தவறென்ன?'

மீராவுக்குத் தற்கொலையைப் பற்றிய எண்ணம் எப்போதுமே எழுந்ததில்லை. அநுபவிக்க வேண்டியதை யெல்லாம் அநுபவித்தே தீருவது என்ற உறுதி அவளிடம் இருந்தது. ஆயினும் தனக்கு இயற்கையாகவே மரணம் நிகழாதா என்ற ஆசை இப்போது அவளுள் எழுந்தது. மரணந் தானே அவளது சாசுவதத் திருமணத்துக்கு உபாயம்?

தம்பதியாக நிற்கும் சிலைகளுக்கிடையே ஒன்றில் மட்டும் ஒரு விசித்திரத்தைக் கண்டாள் மீரா. கணவனின் சிலையை விட மனைவியின் சிலை பெரிதாக இருந்தது. அதோடு அந்தச் . சிலையின் இரு கைகளும் உடைக்கப் பட்டிருந்தன. எதிலும் அக்கறை இழந்திருந்த மீராவுக்கும் அதைப்பற்றி அறிய ஆவல் பிறந்தது.

பேசாமலே அமர்ந்திருந்த உதயாவைப் பார்த்து, "ஊதா அக்கா, அதோ பதியைவிட உயரமாக நிற்கிறாரே அந்தப் பதிவிரதை யார்? இந்தச் சிலை ஏன் பின்னமாயிற்று?" என்று கேட்டாள்.

ஊதா என்று அழைக்கப்பட்ட உதயாவும் வாய் திறந்தாள்: "அது பின்னமாகவில்லை மதனி! அப்படியேதான் செய்தது. அவள் எங்கள் குலத்தில் யாரோ ஒரு முப்பாட்டி. யுத்த பூமியில் அவளுடைய கணவனார் மாண்டவுடன் இவளும் அவரை அணைந்து தன் உயிரை மாய்த்துக் கொண்டாள். உயிர்விடுமுன் தனது இடதுகையால் வலது கையை வெட்டிக்கொண்டாள். அருகில் நின்ற கவியிடம் அதைத் தந்து, 'இதை என் தந்தையிடம் எடுத்துச் சென்று அவர் பெருமைப்படுமாறு நான் பதிவிரதம் காத்ததற்கு அடை யாளமாக, என் பரிசாக அவருக்குக் கொடு' என்றாள். பிறகு அவனைப் பார்த்து, 'இந்த இடது கையையும் வெட்டு' என்றாள். அவன் மனத்தை உறுதிப்படுத்திக்கொண்டு அந்தக் கற்பரசியின் ஆக்ஞையை நிறைவேற்றினான். 'இந்தக் கையை நீயே வைத்துக்கொள். அதில் எத்தனை கங்கணங்களும் மோதிரங்களும் இருக்கின்றன? 'அவர்' அணிவித்த மோதிரமும் இருக்கிறது. அவ்வளவையும் நீ சம்மானமாக எடுத்துக் கொண்டு என்னையும் என் பதியையும் பற்றிப் பாடு' என்றாள். அவள்தான் கணவனைவிடப் பெரிய வீராங்கனை என்பதால் இங்கே இவ்வளவு பெரிய சிலையாக வடிக்கப்பட்டிருக் கிறாள்."

மீராவுக்கு அந்த முப்பாட்டியின் கற்புப் புரிந்தது. ஆனால் அதில் கலந்திருந்த பயங்கரம்தான் அர்த்தமாக வில்லை. வீரம், வீரம் என்று சொல்லிக்கொண்டு இந்த ராஜ ஸ்தானத்தில்தான் எவ்வளவு பயங்கரங்களை இயல்பாக்கிக் கொண்டு விட்டோம்! 'கிருஷ்ணா! ஏகலிங்கரின் கண்டமும் துர்க்கா தேவியின் கவசமும் பெற்ற இந்த நாட்டில் உன்னுடைய வேணு கீதத்தின் ஆதார சுருதியில் சங்கீர்த்தனத் தம்புராவும் ஜாலராவும் காற்சிலம்பும் எப்போது ஒலிக்கும்?'

உதயா தொடர்ந்தாள்: "மதனி, உனக்கு முக்கியமான விஷயத்தைச் சொல்லவில்லையே! இந்த யுத்தம் எப்படி நிகழ்ந்தது என்று சொல்கிறேன். இவளை மணக்க ஆதியில் வேறொரு மன்னன் ஆசைப்பட்டான். இவள் அவனது வமிசத்துப் பெயரைக் கேட்டாலே அருவருப்பாள். அவன்தான் இவளுக்குக் கல்யாணமானபின், தன்னை அவமதித்தாளே என்ற ஆத்திரத்தில் படையெடுத்து வந்து இவளுடைய கணவனைக் கொன்றான். அப்படி இவள் அருவருத்து அவமதித்த மன்னன் யார் தெரியுமோ? உங்கள் மண்டோர் அரசர்களின் ஒருவர்தான்" என்று கூறிவிட்டு "ஹ,ஹ,ஹ!" என்று நகைத்தபடி கைகொட்டினாள் உதயா.

பேசாமல் இருந்து அலட்சியம் செய்த உதயா, கலகலவென்று பேசத் தொடங்கியது ஏன் என்று புரிந்து கொண்ட மீரா குன்றிப் போனாள். அதே சமயத்தில் உதயாவிடம் பரிதாபமும் கொண்டாள். 'அடி, அசட்டுப் பெண்ணே! மண்டோர் ராட்டோர்களை உன் தாயார் ஸௌபாக்கியதேவி மட்டம் தட்டிப் பேசினாள் அதில் ஒரு நியாயம் உண்டு. ஏனெனில், அவர் பரமார குலத்தைச் சேர்ந்தவர். நீயோ ஆதியில் மண்டோர் ராஜ குமாரியாயிருந்த ஹம்ஸாபாயின் சொந்தப் பேத்தியாயிற்றே! நீயே உன் குலத்தைப் பழித்துக்கொள்வதா?' என்று எண்ணினாள்.

எண்ணினாளேயன்றி ஏதும் பேசவில்லை. தன்னை ஒரு பகையாகக் கருதும் மாமியிடமோ நாத்தியிடமோ வாதிப்பதால் பகைதான் மேலும் வளரும் என்பதை அவள் புரிந்து கொண்டுவிட்டாள்.

முன்னால் சென்ற ராணாவின் தேர் நின்றது. அதை யொட்டிச் சென்ற மீராவின் ரதமும் சரக்கென்று நிறுத்தப் பட்டது.

கும்பாஜி இறங்கி வந்தார். மீரா ரதத்துக்குள்ளேயே எழுந்திருந்து நின்றாள்.

"பேஷ், நினைவின்றிக் கிடத்தப்பட்டவள் எழுந்து நிற்கிற அளவுக்குத் தெம்பாகிவிட்டாயே!" என்று கூறிய கும்பாஜி, அன்னையைப் பார்த்து, "அம்மா, மீராவுக்குப் பழரசம் ஏதாகிலும் கொடுக்கிறாயா? களைப்பு நீக்க உதவும்" என்றார்.

"பழரசம்தான் கொடுப்பாயோ, தேவாமுதம்தான் கொடுப்பாயோ, அது உன் பொறுப்பு. அந்திம காலத்தில் இப்படியொரு நோயாளிப் பெண்ணுக்குச் சுசுரூஷை செய்ய

என்னால் ஆகாதப்பா! உன் ரதத்திலேயே இவளை ஏற்றிக் கொள். அப்போதுதான் நாங்கள் இவளை என்ன செய்து விட்டோமோ என்று உனக்கும் கவலை இல்லாமல் இருக்கும்." சுள்ளெனப் பேசினாள் ராஜமாதா.

"வா மீரா, என் தேருக்கு! சித்தோருக்குள் நாம் தம்பதியாகப் பிரவேசிக்கவேண்டும் என்பதைத்தான் மாதாஜி இப்படி மறைத்துப் பேசுகிறார்" என்றார் ராணா.

அன்னையை அவர் விட்டுக்கொடுக்காமல் பேசியதிலும் அவரது இயல்பான பெருந்தன்மையைக் கண்டு மகிழ்ச்சி அடைந்தாள் மீரா.

கணவனின் ரதத்துக்கு அவள் சென்றதும் பணியாள் ஒருவன் பழரசத்தை ஒரு தங்கக் கிண்ணத்தில் நிரப்பி ராணா விடம் கொணர்ந்து கொடுத்தான்.

அதைக் கையில் வாங்கிக்கொண்ட ராணா, மீராவைக் குறும்புப் பார்வையுடன் பார்த்தவாறு, "மேவார் மகாராணிகள் தமது நாதனுக்குக் கொடுக்காமல் எதையும் சுவைப்பதில்லை" என்று கூறிக்கொண்டே, கிண்ணத்தில் தன் அதரத்தை வைத்து ஒரு வாய் பருகினார். பிறகு அதை அன்புடன் மீராவிடம் நீட்டினார்.

"இந்தா, இது வெறும் பழரசமல்ல. வாழ்க்கை இன்பத்தையே நிரப்பி இந்தக் கிண்ணத்தைத் தருகிறேன்" என்றார்.

அந்தக் கணத்தில் கிண்ணம் மட்டுமன்றித் தானுமே ஓர் எச்சிற்பாண்டமாகி நிற்பது போல் மீரா வெறுப்படைந்தாள்.

அவள் எவ்வளவோ சிரமப்பட்டுக் கல்லாக்கிக்கொண்ட சாஸ்திரீயக் கற்பு மீண்டும் தூள்தூளாகச் சிதறியது.

மீராவின் மனம் நடுங்கியது. அதன் பிரதிபலிப்பாகக் கரமும் நடுங்கியது.

தடாலென்று கீழே விழுந்தது கிண்ணம்.

தான் மீராவுக்குப் பரிசாகத் தந்த வாழ்க்கை இன்பம் கட்டாந்தரையில் ஓடுவதைப் பார்த்து மாவீரரான கும்பரும் கலங்கினார்.

**ரா**ஜ தம்பதியரை ஏற்றிக்கொண்ட பெருமையில் தேர்க் குதிரைகள் கன சந்தோஷமாக நாலுகால் பாய்ச்சலில் சென்று கொண்டிருந்தன. ஆனால் தேரில் வீற்றிருந்த ராஜ தம்பதியர் தாம் துணுக்குற்று மௌனமாகவே இருந்தனர்.

ஏகலிங்கர் ஆலயத்தில் மீரா பசுவைக் கண்டு மயங்கியது ஏன் என்பது கும்பாவுக்கு அர்த்தமாகவில்லை. மயக்கமுற்று அவள் விழுந்ததால் சுவாமி தரிசனம் செய்யாமலே வர நேர்ந்ததும் அவரது மனத்தை உழப்பியது. ஆயினும் தமது திட இயல்பைக்கொண்டு அதைச் சமாளித்துக் கொண்டார். மீரா எதற்கோ ஏங்கி வருந்துகிறாள் என்பதை ஊகித்த அவர் அவளிடம் வெகு வெகு இதமாக நடந்துகொள்வதே தான் செய்ய வேண்டியது என்று நினைத்தார். 'ஆனால் இதத்தை யெல்லாம் தேக்கித் தான் அளித்த கிண்ணத்தை வாங்கும் போது அந்தப் பெண்ணின் கை ஏன் அப்படி நடுங்க வேண்டும்? தன்னைக் கண்டு அவள் ஏன் அப்படிப் பயப்படுகிறாள்?'

• ராணா சொல்லாமலே தேரை நிறுத்தினான் பாகன்.

"இறங்கு மீரா, கற்பின் கர்ப்பக்கிருஹத்துக்கு இப்போது செல்லப் போகிறோம்" என்றார் மகாராணா.

கீழே இறங்கிய மீராவுக்குக் கற்பின் கர்ப்பக்கிருஹத்துக்கு இட்டுச் செல்லும் வழியில் காலை வைக்கவே கூசியது.

எப்படியோ சுதாரித்துக்கொண்டு கணவனின் பின்னால் சென்றாள்.

பின்னால் மற்ற சுற்றத்தாரும் தொடர்ந்தனர்.

கும்பர் நடந்ததையெல்லாம் மறந்து சகஜமாகப் பேசிக் கொண்டே வந்தார்: "மீரா, சித்தோர் ராணி பத்மினி தேவியின் புனிதப் பெயரை நீ நிச்சயம் கேட்டிருப்பாய். அந்தப் பத்தினித் தெய்வத்தின் மீது அலாவுதீன் பிரேமை கொண்டதையும் அதன் விளைவாகப் பிற மத மன்னர் பிரவேசித்திராத இந்தச் சித்தோர்க் கோட்டைக்குள் முதன் முதலாக மிலேச்ச மன்னனின் படை புகுந்து போரிட்டதையும் கேட்டிருப்பாய். பத்மினி தேவி தனது பதி பீம்சிங் யுத்தத்தில் மடிந்த செய்தியை இந்த இடத்தில்தான் கேட்டாள். 'மன்னர் வீரசுவர்க்கம் எய்தி விட்டார்' என்று அவளிடம் சேதி சொன்னான் பன்னிரண்டு வயதுப் பாலவீரன் பாதல். 'அப்படியா? இதோ நானும் அவரிடம் போகிறேன். ஆனால் அதன்முன் ஒன்று தெரிந்து கொள்ளவேண்டும். தற்பெருமை சிறிதும் அற்ற அவர், வீர சுவர்க்கத்தில் நான் அவரைச் சேர்ந்த பின்னும் தாம் புரிந்த போரின் பெருமையைத் தாமே சொல்லிக் கொள்ளமாட்டார். எனவே அதை மட்டும் உன் வாயால் சொல். கேட்டுவிட்டு அப்புறம் உயிர் விடுகிறேன்' என்றாள் பத்மினி. 'அதை நான்

எப்படி அன்னையே முற்றும் கூற முடியும்? அவரது பராக்கிரமத்துக்கு இலக்கான எதிரிகளில் ஒருவர்கூட இன்று அதை நினைந்து பாராட்டவோ பயப்படவோ மிஞ்சி நிற்கவில்லையே!' என்றான் பாதல். 'அவரது பிரேமைக்கு இலக்கான இந்த உயிர் மட்டும் எஞ்சி நிற்குமா என்ன?' என்று கூறி அக்கணமே பத்மினி உயிர் துறந்தது இதோ இந்தக் குகையில்தான்....."

ராஜ பரிவாரம் குகையை நெருங்கியது. அமாநுஷ்யமான ஓர் அச்சமும் பக்தியும் அந்த இறுக்கத்தில் நிறைந்திருந்தன.

ராணா கதையைத் தொடர்ந்தார்: "சிரஞ்சீவித்துவம் வாய்ந்த சித்தோர் சாம்ராஜ்யம் மீண்டும் தலை தூக்கியது. மீண்டும் படை எடுத்தான் அலாவுதீன். போருக்குப் புறப்படு முன் தேவியைப் பூஜித்தார் மகாராணா லக்ஷ்மணசிங். 'எனக்குப் பசி தாங்க முடியவில்லை; பன்னிரண்டு அரசர்களின் ரத்தத்தை நிவேதனம் செய்தால் சித்தோரைக் காத்துத் தருவேன்' என்றாள் தேவி. உடனே மகாராணாவின் பன்னிரு புத்திரர்களும், 'அப்பா! அரசு கட்டில் ஏறும் ஆசையே இல்லாதவர்கள் நாங்கள். என்றாலும் இப்போது எங்கள் பன்னிருவரையும் தலைக்கு மூன்று நாட்கள் சத்ர சாமர உபசாரத்துடன் ஆட்சி பீடத்தில் ஏற்றுங்கள். நாங்கள் தேவி விரும்பியபடி அரசர்கள் ஆகிவிடுவோம். அதன்பின் களப்பலியாகி எங்கள் ரத்தத்தைத் தேவிக்குத் தத்தம் செய்வோம்' என்றனர். புளகமுற்ற மகாராணா சிறு மாறுதலுடன் அவர்களின் விருப்பத்தைப் பூர்த்தி செய்தார். பதினொரு மக்களை அரியணை ஏற்றி அரசராக்கி, அதே கையோடு களப்பலியாகக் காளிகாதேவிக்கு அளித்தார். கடைசியில் ஒரு மகனைக் கொல்ல மட்டும் அவருக்கு மனம் வரவில்லை. ஒரு பிள்ளையேனும் உயிரோடு இருக்கும்போது தமது கண்ணை மூடவேண்டும் என்று நினைத்தார். அஜேயசிம்மன் என்ற அப்புதல்வனை வெளியிடத்துக்கு அனுப்பிவிட்டுத் தாமே பன்னிரண்டாமவராக யுத்த பூமி சென்று உயிரை ஈந்தார். மேவார் சைனியம் முழுவதும் போரில் அழிந்தது. அப்போது...."

ராணாவுக்கு மயிர்க்குச்செறிந்தது. நாத் தழுதழுக்கத் தொடர்ந்தார்: "அப்போது சித்தோரின் கற்பரசிகளான ஏழாயிரம் ராஜஸ்திரீகள்* தங்களுடைய பதிவிரதா தர்மம்

* ஏழாயிரம் என்பதைப் பதின்மடங்காகப் பெருக்கியும் சொல்வதுண்டு.

என்ற யக்ஞத்தில் ஆகுதியாவதற்கு எண்ணி இதே குகையிலேதான் குழுமினார்கள். குளிர்ந்த பாறாங்கற்களாக நாம் காண்கிற இதே இடத்தில்தான் பெரும் தீ மூட்டிக்கொண்டு அந்த அக்கினி வெள்ளத்தில் அவர்கள் அனைவரும் புகுந்தார்கள்.

"அதுவேதான் காளிகா தேவி இந்த ராஜ்யத்துக்கு அளித்த காப்பு! ஆம். அவள் சதிதேவியாயிருந்தபோது தட்சன் வேள்வியில் உயிர்த் தியாகம் புரிந்தவள் அல்லவா? இப்போது இந்த மகத்தான ஸதி வேள்வி மூலம் ராஜஸ்தானப் பெண்டிரின் உயிர்மூச்சான கற்புப் பெருமையைக் காத்துக் கொடுத்தாள்! அவர்களது தியாகத்தாலேயே அந்த ராஜஸ்தானம் மீண்டும் சுதந்திரப் பேரரசாக — மஹா ராஜ்ய ஸ்தானமாக — எழும்பச் செய்தும் காத்துவிட்டாள்!

"அத் தாய்மார்களின் புனித தேகம் அக்னிதேவனை மேலும் பாவனம் செய்த ஸ்தலம் இது."

ராணா கைகூப்பினார். அவரது கண்களிலிருந்து கண்ணீர் கரகரவென்று வழிந்தது. சௌபாக்கியதேவியும் உதயாவும் விம்மியழும் ஒலியும் கேட்டது. கற்பரசிகளின் கதையைக் கேட்கக் கேட்க மீராவுக்குக் குற்றவாளி உணர்ச்சியே விஞ்சி நின்றது. மிக மிக அசக்தமான நிலையில் அருகேயிருந்த ஒரு பீடத்தின்மீது சாய்ந்துகொண்டு முகத்தைப் புதைத்துக் கொண்டாள்.

"மீரா, வீரத்தின் விளைநிலமாகிய சித்தோரில் மயக்கமாகி விடாதே! மனத்தைக் கெட்டியாக்கிக் கொண்டு மீதமுள்ள கதையையும் கேட்டுவிடு."

ராணாவின் குரல் ககன மண்டலத்திலிருந்து ஒலிப்பது போல் கேட்டுக்கொண்டிருந்தது.

"ஏழாயிரம் பெண் தெய்வங்கள் பிராணத் தியாகம் செய்ததைப் பற்றிக் கேள்விப்பட்டதும் அலாவுதீனும் அயர்ந்து விட்டான். 'நானும் என் சேனைகளும் கைப்பற்றுவதற்கு எண்ணிய பெண்கள் எவ்விடத்தில் தெய்வத் தன்மையைத் தழுவினார்களோ அந்தத் திருத்தலத்துக்குச் சென்று அவர்களது சாம்பரையாவது என் கண்ணால் காண்பேன்' என்று கூறியவாறு அவன் இந்தக் குகைக்கு வந்தான்.

"ஆனால் மீரா, சித்தோர் ராஜ ஸ்திரீகளின் கற்பு ஒரு ஜன்மத்தோடு முடிவதில்லை. ஜன்ம ஜன்மங்களுக்கும் ஒரே கணவனையே அடையும் பதிவிரதைகள் அவர்கள்.

'ப்ரேத்யபாவே ஹி கல்யாண: ஸங்கமோ மே ஸதா த்வயா |
ச்ருதிர்ஹி ச்ரூயதே புண்யா ப்ராஹ்மணானாம் யசஸ்வினாம் ||
இஹலோகே ச பித்ருபிர்யா ஸ்த்ரீ யஸ்ய மஹாபல |
அத்பிர்தத்தா ஸ்வதர்மேண ப்ரேத்யபாவேபி தஸ்ய ஸா ||'

என்று வேதவாக்கிய ஆதாரத்தின் மீது ஸீதாதேவி கூறியது போல், மரணத்துக்குப் பின்னும் அதே கணவனுக்கு மனைவியாக இருப்பதுதான் சித்தோர் ராஜஸ்த்ரீகளின் லட்சியம். அவர்களை மரணத்துக்குப்பின்கூடப் பிற புருஷன் அணுக முடியாது. அலாவுதீன் அவர்களுடைய அஸ்தியைக் காண முடியுமா? இந்தக் குகை வாயிலை அவன் நெருங்கியது தான் தாமதம், எங்கிருந்து எப்படி வந்தது என்றே தெரியாமல், ஒரு பெரிய நாகசர்ப்பம் இங்கு வந்து படமெடுத்து நின்றது. அதன் மூச்சுக் காற்றில் அலாவுதீனுடன் வந்த காவலாட்கள் ஏந்தியிருந்த தீவர்த்திகள் அனைத்தும் அணைந்தன. தன்னைச் சூழ்ந்த காரிருளிலிருந்து தப்பி வெளியே ஓடினான் அவன்......"

மீராவைக் காரிருள் சூழ்ந்துகொண்டது. காரிருளில் கார் வண்ணனைக் கண்டு களிப்பது அவளது பழைய வழக்கம். ஆனால் இன்று கண்ணனையும் அவள் அணுக முடியவில்லை. 'சித்தோர் ராஜஸ்திரீகளின் கற்பு ஒரு ஜன்மத்தோடு முடிவதில்லை. ஜன்ம ஜன்மங்களுக்கும் ஒரே கணவனையே அடையும் பதிவிரதைகள் அவர்கள். அவர்களை மரணத்துக்குப் பின்கூடப் பிற புருஷன் அணுக முடியாது' என்ற வார்த்தைகள் — ஸீதாதேவின் திவ்விய வாக்கு — அவள் ஆதாரம் காட்டிய வேதவாக்கு — மீராவுடைய சிரத்தின் மூலை முடுக்குகளிலெல்லாம் முட்டி மோதிப் பரவி ஹாஹாகாரம் செய்தன!

"மரணத்துக்குப் பின்கூட மாதவனை நான் மணக்கக் கூடாதா?" பிரமித்த மீரா பீடத்திலிருந்து சரிந்தாள்.

## 15. தீபம் அணைந்தது!

**ரா**ஜமாதா சௌபாக்கிய தேவிக்கு வெறுப்புத் தாள முடியவில்லை. மீராவிடம் அவளுக்கு முதலிலேயே பிரியம் இல்லை. ஏகலிங்கர் கோயிலில் அவள் மயக்கமுற்றது சௌபாக்கிய தேவிக்குப் பெரிய அபசகுனமாகத் தோன்றிய தால் வெறுப்பு அதிகமாயிற்று. இப்போது மீரா மீண்டும்

ஜோஹர் குகையில் மூர்ச்சித்தபோது அவளுடைய மயக்கத்தைத் தெளிவிக்கக்கூட முயலாமல் ராஜமாதா வாயிலுக்குச் சென்று தேரில் ஏறிக் கொண்டாள். உதயாவும் அன்னையின் அடிச்சுவட்டை அப்படியே பின்பற்றினாள்.

கும்பராணாதான் மீராவின் முகத்தில் நீர் தெளித்து அவளை விழிப்புறச் செய்தார். சொல்லி முடியாத வெட்க உணர்ச்சியுடன் மீரா எழுந்திருந்தாள். அவளுக்கு ஆதரவாகக் கைத்தாங்கல் தந்து அழைத்துச் செல்ல அருகே வந்தார் கும்பர்.

"வேண்டாம், நான் சௌக்கியமாக இருக்கிறேன்" என்று முறுவலித்தவாறே கூறிய மீரா தேருக்கு நடந்தாள்.

மாமியும் நாத்தியும் ஆதரவாக இல்லாததற்கு ஆதங்கப் பட்ட மீரா, கணவன் இவ்வளவு ஆதரவாக இருப்பதற்கும் வியாகுலப்பட்டாள்!

சௌபாக்கியதேவியின் ரதம் இன்னும் புறப்படவில்லை.

"ஏன் அம்மா, இனி நேரே ரங்கமஹலுக்குப் போக வேண்டியதுதானே?" என்றார் கும்பாஜி.

ரங்கமஹல் என்றால் அரண்மனை.

"என்னை ஏன் கேட்கிறாய்? என்னைக் கேட்டால் துர்க்காதேவியின் மந்திரத்துக்குப் போகவேண்டுமென்றுதான் சொல்வேன். கிழங்களால் சாஸ்திர, சம்பிரதாயத்தை விட்டு விட முடிகிறதா? இந்தச் சித்தோர்க் கோட்டையைப் பார்த்துப் பார்த்து விஸ்தரித்தாயே! இதைக் காக்கிற அம்பாளைப் பார்க்க உனக்கே விருப்பமிருந்தால் செய். எனக்காக எதுவும் செய்ய வேண்டாம்!" என்று பொரிந்து கொட்டினாள் ராஜமாதா,

"ஏதோ நினைவுப் பிசகில் சொல்லிவிட்டேன் அம்மா. அவசியம் துர்க்கா பரமேசுவரியைத் தரிசித்துவிட்டே மஹலுக்குப் போவோம்" என்ற ராணா, மீராவைத் தேருக்கு இட்டுச் சென்றவரே, " 'துர்க்கா' என்றாலே 'கோட்டை' என்று அர்த்தம். சித்தோர்க் கோட்டையின் சிறப்பை நீ கேட்டிருப் பாய். ஆனால் இந்தக் கோட்டையினும் பெரிய காவல் நமக்குத் துர்க்கா தேவியின் கிருபைதான். இந்த ஊருக்குப் புதிதாக மணமாகி வருபவர்கள் அவளைத் தரிசனம் செய்துவிட்டுத் தான் அரண்மனைக்குச் செல்வது வழக்கம். நல்ல வேளையாக அம்மா ஞாபகப்படுத்தினார். சம்பிரதாயங்களை மட்டும் மறந்துவிட்டோமோ, அம்மாவுக்குத் தாங்காது" என்றார்.

தன்னை உற்சாகமாகக் காட்டிக் கொண்ட போதிலும் கும்பராணாவின் மனத்தில் பெரிதாகவே ஒரு குழப்பம் ஏற்பட்டிருந்தது. 'துர்க்காதேவியின் ஆலயத்தில் இந்தப் பெண் என்ன செய்யப் போகிறதோ? அம்மா இன்னும் எத்தனை ஆத்திரப்படப் போகிறாரோ?' என்று தனக்குள் கலங்கிக் கொண்டிருந்தார்.

**து**ர்க்காதேவியின் சந்நிதானம்.

தீமைகளை அழிக்கத் திவ்விய ஆயுதங்கள் தாங்கி நின்ற தேவியின் திருமுகத்தில் நலன்களையெல்லாம் வளர்க்கும் கம்பீரநகை குடிகொண்டிருந்தது.

சங்கமும் சக்கரமும் தாங்கி நிற்கும் தேவியைக் கண்ட போது மீராவுக்கு நாராயணனையே தரிசிப்பதுபோல் இருந்தது.

"ஸர்வ மங்கல மாங்கல்யே! சிவே! ஸர்வார்த்த ஸாதிகே!
சரண்யே! த்ர்யம்பகே! கௌரி! நாராயணி! நமோஸ்து தே!"

ராணாவும் அவரது அன்னையும் சோதரியும் மாவீரர் சண்டனும் மற்றும் அங்கே குழுமியிருந்த அனைவரும் பக்தி புஞ்சிதமாக தீர்க்கமான குரலில் கோஷித்துப் பாடிய போது, மீராவின் இனிய குரல் அவற்றிலிருந்து தனியாக ஒலித்தது. எதிலுமே இவர்களிடமிருந்து தனித்து இருக்கப் போகிறவள் அல்லவோ? மற்றவர்கள் நிறுத்தியபின்பும் மீராவின் மதுரக் குரல், 'நமோஸ்து தே' என்பதில் நீண்டதொரு கார்வையாக ரீங்காரமிட்டு நின்றது.

ராஜ மாதாவுக்கே சிறிது திருப்தி உண்டாகி விட்டது. மீராவின் இசைப் புலமையைப் பற்றி அவள் கேள்விப் பட்டிருந்த போதிலும் இதுவரை அவளை கானம் செய்யுமாறு சொல்லவில்லை.

இப்போது, "மீரா, தேவியின்மீது ஏதாவது பாடலோ சுலோகமோ சொல்லேன்" என்றாள்.

கும்பரின் மனம் அந்த ஒரு கணத்தில் விரிந்து மலர்ந்தது.

ஆனால் அடுத்த கணமே அது வாடும்படி ஆயிற்று!

மீரா பாடினாள். துர்க்கா ராகத்திலேயே பாடினாள். என்ன பாடினாள்?

"காத்யாயனி! மஹாமாயே! மஹாயோகின்யதீச்வரி!
நந்தகோப ஸுதம் தேவி, பதிம் மே குரு! தே நம:"

ஆயிரம் பல்லாயிரம் ஆண்டுகளுக்கு முன் குளிர் நடுக்கும் ஹேமந்த ரிதுவில், உஷக் காலத்தில் யமுனா நதிக் கரையில் மண்ணால் தேவியின் பிரதிமை செய்து வைத்து அதன்முன் நின்று கோபிகைகள் பாடிய சுலோகம் அது.

"நந்தகோபன் குமரனை எங்களுக்குப் பதியாகத் தருவாய்" என்று மனம் குழைய, நாத் தழுதழுக்கக் கோபிகைகள் தேவியை நோக்கி வேண்டிக் கூறிய சுலோகம் அது.

வரதாயகியான தேவியைக் கண்டதும் தன்னையும் அறியாமலே மீராவின் உணர்ச்சி கோபியரின் உணர்ச்சியில் ஐக்கியமாகி, அவள் அந்த சுலோகத்தைக் கண்ணும் கண்ணீருமாகப் பாடிவிட்டாள்.

கண்ணனை மணக்க வேண்டுமானால் அதற்கு அவனது சகோதரியான தேவியைத்தான் பிடிக்க வேண்டும் போலும்!

ருக்மிணியைப் பரமன் கவர்ந்து சென்று கடிமணம் புரிந்ததும் அவள் தேவியின் ஆலயத்துக்குச் சென்றபோது தான்.

ஸீதாதேவியும் பரமேசுவரியின் ஆலயத்துக்கு வருகையிலேயே முதல்முதலாகத் தாசரதியைக் கண்டு மனத்தைப் பறி கொடுத்ததாகத் துளஸிதாஸர் பாடியிருக்கிறார்.

ஆண்டாளோ தனது திருமணக் கனாவைப் பாடும் போது, தேவியே நாத்தியாக முறை கொண்டாடிக்கொண்டு தனக்குக் கூறைப் புடைவை உடுத்தியதையும் ஹாரம் சூட்டியதையும் **'மங்கலக்கோடி யுடுத்தி மணமாலை அந்தரி சூட்டக் கனாக்கண்டேன்'** என்று பாடியிருக்கிறாள்.

இதற்கு ஒரு தென்னாட்டு வைஷ்ணவ பக்தர் ரத்தன் சிங்கிடம் விளக்கம் சொன்னார்: 'மணமாலை என்றால் வெறும் புஷ்ப ஹாரம் மட்டுமல்ல. மங்கல சூத்திரத்தையே கோதை குறிப்பிடுகிறாள். எங்கள் பக்கத்தில் திருமாங்கல்யத்தில் கணவன் ஒரு முடிச்சுப் போடுகிறான் என்றால் நாத்தி இரண்டு முடிச்சுப் போடுவது வழக்கம்.'

மீரா கோதையாகி, கோதையின் அநுபவத்தை ஆழ்ந்து ரசித்திருக்கிறாள். மணமேடையில் தலை குனிந்து அமர்ந்திருக்கும் தன் கழுத்தை மாதவனின் இரு கரங்கள் மாங்கல்யத்துடன் சூழ்ந்து முடிவதையும், அவனது சகோதரி பராசக்தி மாணிக்கப் பரல்கள் சிலம்புவதுபோல் களித்துச் சிரித்தபடி மாணிக்கக் கங்கணங்கள் கலகலக்க மற்ற இரு

முடிச்சுகளைப் போடுவதையும், கோவிந்தன் அணிந்த துளசியின் மணமும் தேவி அணிந்த சம்பக, அசோக, புன்னாக, ஸௌகந்திக மலர்களின் மணமும் ஒன்றுகலந்து தன்மீது பருமனாகப் படிவதையும் மீரா எவ்வளவோ முறை மனோராஜ்யம் செய்து மகிழ்ந்திருக்கிறாள்.

இன்று துர்க்கையின் சந்நிதியில் அந்த மனவெழுச்சி அவ்வளவும் திரண்டு வந்துவிட்டது. பிறரைப் பற்றி நினையாமல் தாயைக் கண்ட குழந்தைபோல் தேவியின் முன் தன் மனத்தில் இருந்ததைக் கொட்டிவிட்டாள் மீரா.

'நந்தகோபன் குமரனைப் பதியாகத் தருக!' என்று அவள் துர்க்காதேவியிடம் வேண்டியது சௌபாக்கியதேவிக்கு மிகுந்த எரிச்சலை மூட்டிவிட்டது. அவளுக்குப் பராசக்தியைத் தவிர வேறு தெய்வத்திடம் ஈடுபாடு இல்லை. கண்ணனையோ சற்றும் பிடிக்காது. மணமான ஒரு பெண், 'எனக்குப் பதியை அளிப்பாய்' என்று கேட்டது இவையெல்லாவற்றையும்விட அவளுக்கு வெறுப்பாக இருந்தது.

"ரங்கமஹலுக்குப் போக இருந்தவர்களை வலுக்கட்டாயமாக ஆலயத்துக்குக் கூட்டி வந்த என் புத்தியைச் செருப்பால் அடித்துக்கொள்ளவேண்டும்" என்று சொல்லிவிட்டு, தீபாராதனைக்குக்கூடக் காத்திராமல் சந்நிதியிலிருந்து வேகமாக வெளி நடந்தாள் ராஜமாதா.

உதயாவும் அவளை விட்டுவிடாமல் பின் தொடர்ந்தாள். மீராவின் இரு வேறு உலகங்களுக்கிடையே எத்தனை வித்தியாசம்? ஓர் உலகில் அன்பே உருவான அம்பிகை அவளுக்கு நாத்தி. மற்றதிலோ?

சௌபாக்கியதேவியைவிட அப்போது மீராவிடம் அதிக எரிச்சலடைந்த இன்னோர் ஆன்மாவும் உண்டு.

அது மீராவேதான்!

'பத்மினியும் ஏழாயிரம் பதிவிரதைகளும் நாதனை நினைந்து உயிர்த் தியாகம் செய்த பூமியில் நின்றுவிட்டு ஒரு நாழிகைக்குள்ளேயே, அருகில் கணவனை வைத்துக்கொண்டு கோபாலனை மணாளனாகக் கேட்கிறேனே, நான் பாரத ஸ்திரீ பரம்பரைக்கே, ராஜஸ்தான மாதர் சமூகத்துக்கே, சித்தோர்ப் பெண்களின் புண்ணிய குலத்துக்கே ஒரு சாபக்கேடாக அல்லவா வந்திருக்கிறேன்! தேவி, உன்னை 'த்ர்யம்பகி' என்று போற்றுகிறோமே! அந்த மூன்று கண்களில் நெற்றிக

கண்ணைத் திறந்து என்னை எரித்துவிடேன்! பரமேசுவரனை உன் தந்தை அவமதித்தான் என்பதற்காக அவனது யாக குண்டத்திலேயே விழுந்து எரிந்தவள் அல்லவா நீ! அதனால், 'ஸதி' என்றே பெயர் பெற்றவள் அல்லவா? இன்றும் அக்கினியில் மூழ்கிக் கணவனை மறு உலகில் அடைபவர்களை உன் பெயரிட்டு அல்லவா 'ஸதி' என்கிறோம்! ஸதி தேவி! நானாக அக்கினியில் மூழ்க மாட்டேன். உன் கருணையில் எனக்கு நம்பிக்கை இருக்கிறது. நீயே என்னை எரித்து விடு. ஸதி தேவியின் சந்நிதியில் நிற்கத் தகுதியற்ற இந்தச் சதிகாரியைப் பஸ்மீகரமாக்கிவிடு!'

மீராவின் கொந்தளித்த மனம் இவ்வளவையும் புலம்பித் தள்ளியது.

ஆயினும் வெளிப்பார்வைக்குப் பட்ட மரமாகத்தான் நின்றாள் அவள். அடிபட்டுப் பட்டே பட்டுப்போன மரமாக நின்றாள்.

அர்ச்சகர் தீபாராதனைத் தட்டைக் கொணர்ந்தார். ராணா தீபத்தை ஒற்றிக்கொண்ட போதே, தான் அவரது தர்ம பத்தினி என்பதைக் கெட்டிப்படுத்திக்கொண்டு மீராவும் விரைவாக அவரது கரங்களுக்கு வெகு அருகில் தன் கரங்களைப் பரபரப்பாகக் கொண்டு போனாள்.

'அன்று அக்கினி சாட்சியாகப் பட்டும் படாமலும் கைப்பிடித்தது எனக்குப் போதவில்லை. இன்று ஸதியின் சந்நிதியில் தீபாராதனை அக்கினிக்கு முன்பாக அவரது விரல்களோடு என் விரல்களையும் ஒட்டி, தீபத்தை ஒற்றி அவரையே உறுதியாக மணப்பேன்' என்று சங்கற்பம் செய்து கொண்டாள் மீரா.

பேதை மீராவின் சங்கற்பத்துக்கு மேலாகத் தெய்வ சங்கற்பம் என்று ஒன்று இருந்தது.

மீராவின் கரம் வரும் திசையை எதிர்கொண்டு அர்ச்சகரும் அவசரமாகத் தட்டைக் கொண்டு வரவே மீராவும் அதைவிடப் பரபரப்புடன் தன் கரத்தை அதனருகே கொண்டு போனதால் ஆறத் தொடங்கியிருந்த அவளது விரல்களை மீண்டும் தீக்கொழுந்து 'சுரீல்' என்று தொட்டது.

அர்ச்சகர் தட்டைத் தவறவிட்டார்.

தீபம் அணைந்தது!

# 16. தத்தளித்த உள்ளங்கள்

**சி**த்தோர் மாநகரத்தில் ரங்கமஹலின் உப்பரிகையில் நறுமணம் வீசும் வத்திகளின் சூழலில், புஷ்ப ஜோடனை செய்த மஞ்சத்தில் உறக்கம் கொள்ளாமல் புரண்டு கொண்டிருந்தார் மகாராணா.

காற்று வீசியது.

அருகே தட்டம் தட்டமாக வைத்திருந்த பக்ஷ்ய-போஜ்யங்களிலிருந்தும் தீங்கனிகளிலிருந்தும் ஒரு நறுமணக் கலவை எழுந்து அவரது நாசியை நிரப்பியது.

ஏனோ அதுவே அவருக்குக் குமட்டியது.

கையைத் தட்டினார்.

இடது காலில் வெள்ளித் தடயம் பூண்ட **கோலா** எனப் படும் இரண்டு அடிமைகள் ஓடி வந்தனர்.

"இந்தப் பட்சணம், பழம், பால் எல்லாவற்றையும் எடுத்துப் போங்கள். கட்டிலில் சுற்றியிருக்கும் பூச்சரங்களையும் பிரித்துக்கொண்டு போங்கள். தலை வலிக்கிறது" என்றார் மகாராணா.

**கோ**லாக்கள் மறு பேச்சின்றி நொடியில் ராவல்ஜியின் உத்தரவை நிறைவேற்றினார்கள்.

வெளியே வந்தவுடன் அவ்விரு அடிமைகளும் ஒருவரை யொருவர் பொருள் புதைந்தவாறு பார்த்துக் கொண்டனர்.

'மகாராணி சாகேபாவை ஏன் காணவில்லை?' என்பது தான் அந்தப் பார்வையின் பொருள்.

வெறித்துக் கிடந்த பிறிதொரு மஞ்சத்தைப் பார்க்கக்கூட இல்லை மகாராணா. அவர் முப்பத்தெட்டு வயசு நிரம்பியவர். மனத்தை அதிகம் ஆடாமல் அடக்கத் தெரிந்தவர். எனவே தனிமை அவரை விசேஷமாக வதைத்துவிடவில்லை.

அந்தத் தனிமைக்கும் அவரேதான் காரணம். மீரா அன்று நீண்ட பிரயாணத்தில் களைத்து, இரண்டு முறை மயக்கம் அடைந்திருந்ததால் அவளை ராஜஸ்திரீகளின் காப்பில் இரவு விடுவதே உத்தமம் என்பது அவராகச் செய்த முடிவுதான். அதுவே சௌபாக்கியதேவிக்கும் திருப்தியாக அமைந்ததாகத் தெரிந்ததில் அவர் நிறைவு கொண்டார்.

ஆயினும் அவர் உறக்கம் கொள்ளாமல் தவித்தது ஏன்? அவருக்கே புரியவில்லை. மீராவை ஏதோ ஒரு மர்மம் சுற்றிச் சூழ்ந்திருப்பதுபோல் அவருக்குத் தோன்றியது. 'அவளோடு ஏன் என் வாழ்வைப் பிணைத்துக் கொண்டேன்? ஆகா, சம்பவங்கள் தாம் எவ்வளவு வேகமாக ஓடிவிட்டன! மேர்தாவில் கண்ணன் கோயில் வாயிலில் அவளைக் கண்டது நேற்றுப் போல இருக்கிறது! அன்று சுவாமி சந்நிதியில் என் மனத்தில் தாம்பத்திய எண்ணம் எப்படி உதித்தது! அன்று புலி மீது அம்பெய்து நான் அவளைக் காத்ததுகூடத் தெரியாமல் கண்ணனிடமே நினைவை வைத்து எத்தனை பக்தியாக, சோகமாக நின்றாள்? அந்த பக்தியை, அந்த சோகத்தை இல்லறத்தில் இணைக்கவேண்டும் என்ற இழிந்த எண்ணம் எனக்கு எப்படி உண்டாயிற்று? இது ஆண்டவன் சித்தம் என்று வேறு பழியைப் பகவான்மேல் போட முனைகிறேனே, இந்த ஈனத்தனத்தை என்னென்பது! நான் மகாவீரன் என்று பாரெல்லாம் புகழ்கிறது. ஆனால் நான் எத்தனை பலவீன மானவன்? அந்தப் பலவீனத்துக்குத்தானே இந்தப் பெண்ணைப் பலியாக்கிக்கொண்டேன்? அடுத்தமுறை மீராவைப் பார்க்கும்போது சொல்ல வேண்டும்: 'என்னைக் கண்டு நீ பயப்படாதே. பலவீனனைக் கண்டு யாராவது பயப்படுவார்களா? நான்தான் உன்னைக் கண்டு அஞ்ச வேண்டும், அதாவது உன் பக்திக்கும் சோகத்துக்கும் என் அச்சத்தை அளிக்கவேண்டும்' என்று மீராவிடம் சொல்ல வேண்டும்........."

அறைக் கதவின் கீல்கள் கிறீச்சிட்டன.

முன்னறிவிப்பின்றித் தன் அறையில் நுழைவது யார்?

ஆகா, யார், மீராவா?

கட்டிலிலிருந்து குதித்து எழுந்தார், கும்பா. தாம் சொல்ல நினைத்ததைச் சொல்ல மறந்து, "வா, மீரா! உனக்கு ஓய்வு தேவைப்படும் என்று நினைத்தேனே!" என்றார்.

"ஓய்வா? உங்களுக்கு உடல் நலம் சரியில்லாதபோதா? தலைவலி எப்படியிருக்கிறது?" என்றபடி அவரருகே வந்தாள் மீரா.

ராணாவுக்கு அதிசயமாகி விட்டது! தனியாகத் தன்னைத் தேடி நள்ளிரவில் வந்ததோடு, விசாரத்தோடு கேட்கிறாள்! அவளாக வாய் திறந்து தன்னிடம் பேசுவது இதுவே முதல் முறை. ஆயினும் எத்தனையோ ஆண்டுகள்

பழகியதுபோல் சகஜமும் அல்லவா தொனிக்கிறது? முன்பு அவளிடம் கண்ட, அச்சம், நாணம் எல்லாவற்றுக்கும் மேலாகக் கற்பு அல்லவா இப்போது திடமாகத் திண்ணிய குரலில் பேசுகிறது!

இதுகாறும் ஏதோ ஓர் ஐயத்தைக் கும்பாஜி பிடிவாதமாகத் தம் மனத்தின் அடித்தளத்திலேயே அழுத்திக் கொண்டிருந்தார். அது சிறிது தலைதூக்க முயன்றாலும் மிதித்துத் தரைமட்டமாக்கிக் கொண்டிருந்தார்.

இப்போது மீராவின் பரிவும் அங்கலாய்ப்பும் நிறைந்த குரலைக் கேட்டபோதுதான் ராணாவுக்குத் தெளிவு பிறந்தது. தன் மனத்தின் அடி ஆழத்தில் கூட அந்த ஐயம் தோன்றி யிருக்க வேண்டிய அவசியமே இல்லை என்று நினைத்தார். மீராவை மணந்ததில் தான் செய்த தவறு இப்போது அவருக்குப் பெரிதாகவோ பச்சாதாபப்படவேண்டிய ஒன்றாகவோ தோன்றவில்லை.

கும்பா சயனத்தில் சாய மீரா அருகே அமர்ந்தாள். என்றாலும் எதுவோ ஒன்று அவர் தலையை அவள் பிடித்துப் பார்க்கவொட்டாமல் தடுத்தது.

"எனக்குத் தலைவலி என்று யார் சொன்னது?" என்று கேட்டார் ராணா.

"கோலாக்கள் பேசிக்கொண்டதிலிருந்து தெரிந்தது."

"இங்கே நான் கோலாக்களிடம் சொன்ன விஷயம் அம்மாவின் அரண்மனை வரையில் எப்படி அதற்குள் பரவியது?"

"விஷயம் பரவவில்லை. நானாக இங்கே வந்தேன். கோலாக்கள் பக்ஷணங்களையும் புஷ்பங்களையும் எடுத்துப் போவதைப் பார்த்து ஏனென்று கேட்டேன். அவர்கள்தான் உங்களுக்குத் தலைவலி என்று சொன்னார்கள்."

'தனக்குத் தலைவலி என்று தெரியுமுன்பே அவள் தன்னை நோக்கி வந்திருக்கிறாள்' என்பது ராணாவின் உள்ளம் முழுதையும் வியாபித்தது. தன்னுடைய ஐயத்துக்கு இம்மியும் முகாந்தரம் இல்லையென்பது அவருக்கு மேலும் உறுதியாயிற்று.

"இப்போது எப்படி இருக்கிறது?" என்று இதமாகக் கேட்டாள் மீரா.

"நீ வந்தவுடனேயே, 'அடாடா இந்த மகாராணாவிடம் இனி நம் கைவரிசையைக் காட்ட முடியாது. இவரைக் காப்பாற்ற ஒரு மகாசக்தி வந்துவிட்டது' என்று நினைத்துத் தலைவலி ஓட்டமாக ஓடிவிட்டது;"

'கலகல'வென்று சிரித்தார் ராணா.

"அப்படி இருக்காது. 'இவள் தான் ஒருத்தி ராவல்ஜிக்கு நிரந்தரத் தலைவலியாக வந்திருக்கிறாளே, நாம் வேறு ஏன் இவரைப் பீடிக்கவேண்டும்?' என்றுதான் ஓடிவிட்டதோ என்னவோ?" என்று கூறிவிட்டுக் கலகலவென்று மீராவும் சிரித்தாள். ஆம், நம் மீராவும்கூட மானுடக் கணவனிடம் கேலி பேசிச் சிரித்தாள்!

"மீரா, நீ இங்கே ஓடிவந்து விட்டாயே! நாளைக்கு உன்னை அம்மாவும் ஊதாவும் கேலி செய்வார்கள் என்பதை மறந்து விட்டாயா!"

'கேலி செய்வது' என்றுதான் ராணா 'மரியாதை'யாகக் குறிப்பிட்டார். உண்மையில் அவர்கள் மீராவின் துணிச்சலையும் அடக்கமின்மையையும் குறித்து ஏளனம் செய்து எக்காளமிடுவார்கள் என்பது அவருக்குத் தெரியும். மீராவுக்கும் அது தெரிந்ததுதான்.

ஆயினும் அவள் அவரிடம் ஓடி வந்திருந்தாள்!

கல்லையும் இரும்பையும்விடக் கனமான ஏதோ ஒன்றாக மனத்தை இறுக்கிக்கொண்டு, தனது கண்ணன் காதல் அவ்வளவையும் தவிடுபொடி செய்துவிட்டு அவள் அங்கு வந்திருந்தாள் — ராஜஸ்தான ஸ்திரீகளின் பதிவிரதா தர்மத்தைப் பின்பற்றுவதற்காக.

மீரா கையைத் தட்டினாள்.

கோலாக்கள் உள்ளே ஓடிவந்தார்கள்:

"பழவகைகளும் பட்சணங்களும் பாலும் கொண்டு வாருங்கள்" என்றாள்.

அவளது குரலிலிருந்த மிடுக்கும் அழுத்தமும் ராணாவை அயர வைத்தன. 'என்னோடு தேரில் வந்த அதே பெண்ணா இவள்! அடேயப்பா! பெண்கள்தாம் எவ்வளவு அதிசயமான வர்கள்!'

'முன்பு பழரசக் கிண்ணத்தைத் தந்தபோது தவற விட்டாள்! இப்போது பால் நிறைந்த கிண்ணத்தில் வாழ்வின்

இன்பத்தைத் தேக்கித் தந்து ஈடு செய்வேன்' என்று எண்ணிய வாறு கண்களை மூடிக் கொண்டார்.

"ஏன் கண்ணை மூடிக்கொண்டு விட்டீர்கள்? என்னைப் பார்க்கப் பிடிக்கவில்லையோ?" எவரது கண் பார்வையை ஒரு காலத்தில் புலியின் வாய்க்குச் சமமாக நினைத்தாளோ அவரிடமேதான் மீரா கேட்டாள்.

"நல்ல கேள்வி கேட்டாய். உன்னைப் பார்க்கும்போது இப்படி ஓர் அற்புதப் பெண்ணை நனவுலகில் பார்க்க முடியாது; கனவில்தான் பார்க்க முடியும் என்று தோன்றுகிறது. கண்ணை விழித்துக் கொண்டிருந்தால் கனவு எப்படித் தோன்றும் என்பதால்தான் மூடிக்கொள்கிறேன்" என்று நயமாகச் சொல்லிக் கண்களை மூடினார் கும்பாஜி.

மெல்லிய காற்று வீசிற்று. "மீரா, இந்தக் காற்று வீசும் ரம்மியத்துக்கு உடம்பில் சந்தனம் இருந்தால் எவ்வளவு நன்றாக இருக்கும்? நல்ல வேளையாக சந்தனப் பேலாவை கோலாக்கள் தூக்கிப் போகவில்லை."

கும்பரின் உள்ளக் கருத்தைப் புரிந்துகொண்டாள் மீரா. சந்தனக் கிண்ணத்தைக் குனிந்து எடுத்தாள். அவள் குனிந்த போது தலையில் வைத்திருந்த ஒரு பூச்சரம் அவிழ்ந்து முன்னால் அவள் மேனியில் விழுந்து உரசிற்று. ஏனோ பண்டைய நினைவுகள் பேதை மீராவுக்குக் குபுகுபுவென்று வந்தன. கண்ணன் அவளுக்கு மணமாலையாகத் துளசிச் சரத்தைச் சூட்டியபோது அது இவ்விதந்தானே உடலில் உரசிற்று! அப்புறம் அதே மணமாலையால் கண்ணனின் மேனியை வளைத்துக் கட்டினாளே! அப்போது அவனது திருமார்பைச் சுற்றியிருந்த சரத்தின் முனைகள் இவள் கையிலிருக்க, அந்தச் சரத்தின் வழியாகவே அவனது மேனியின் கோமளம் இவள் கைகளில் பாய்ந்ததே! அதோடு உலகின் துயரையெல்லாம் தாங்கும் அவனது இதயத்தின் துடிப்பைக் கூட அந்த ஹாரத்தின் வழியே உணர்ந்தாளே!

'அம்மம்மா! அந்த வக்ஷஸ்தலத்தின் ஸ்பரிசத்தை அநுபவித்துவிட்டு...... இன்று.....!'

தீப்பட்ட மீராவின் விரல்கள் சந்தனச் சாற்றுக்குள்தான் இருந்தன. ஆனால் அவள் மனத்தில் அடைத்துக் கொண்டிருந்த கல்லும் இரும்பும் உருகிவிட்டதால் தீயைக் காட்டிலும் உக்கிரமாகச் சந்தனக் குழம்பு விரல்களை எரித்தது!

மீராவால் தாங்கவே முடியவில்லை.

அவளது உதரத்தின் அடியிலிருந்து நூறாயிரம் பந்துகள் புறப்பட்டுப் பம்மிக்கொண்டும் விம்மிக்கொண்டும் மேலே எழும்பின.

'மீராவின் தண்ணென்ற கை தண்ணென்ற சந்தனத்தை அப்பப் போகிறது' என்று கண்களை மூடிக்கொண்டு ஆசையோடு எதிர்பார்த்திருந்தார் ராணா.

'டப் டப் டப்!' துளித்துளியாக அவர் மார்பில் விழுந்தது! ஆனால் இவை ஏன் வெப்பமாக இருக்கின்றன!'

ராணா கண்களைத் திறந்தார்.

சந்தனக் கிண்ணத்தில் விட்ட கை ஸ்தம்பித்து நிற்க, அவரது மேனிக்கு மீதாக மாலைமாலையாகக் கண்ணீர் விட்டபடி அமர்ந்திருந்தாள் மீரா.

ராணாவின் காதல் பொங்கும் நயனங்களைக் கண்டதும் மீராவின் கண்களில் எல்லையற்ற பீதி பரவியது. 'வீல்' என்று கத்தி விட்டாள். சந்தனக் கிண்ணத்தைக் கீழே போட்டு விட்டு முகத்தைக் கைகளால் பொத்திக்கொண்டு விம்மி விம்மி அழத் தொடங்கினாள்.

வானவில்லின் மனோஹரத்தைப் பார்ப்பதற்காக மேகமண்டலத்தைப் பார்த்தவன் தலையில் இடி விழுந்தது போல் மீராவின் எதிர்பாராத செய்கையால் நிலை குலைந்தார் கும்பராணா. விக்கித்துப் போன அவருக்குத் தம்மைச் சுதாரித்துக் கொள்ளவே சிறிது போதாயிற்று. தம்மிடமுள்ள பொறுமை, அநுதாபம், மனத்திடம் அனைத்தையும் பெரும் பாடுபட்டுத் திரட்டிக்கொண்டு பேசினார்.

"மீரா, அழாதே! உன்னுடைய கர்ம பலனோ என்னுடைய பாபமோ நம்மை இப்படி ஒன்று சேர்த்து விட்டது. உலகின் கண்ணுக்கு நாம் தம்பதியாக ஒன்று சேர்ந்து விட்டாலும் நம் மனங்கள் ஒன்று சேரும் வரையில் உன்னை நான் ஒருபோதும் நிர்ப்பந்தம் செய்யமாட்டேன். உன் மனத்தில் இருப்பதையெல்லாம் என்னிடம் சொல்லுமளவுக்கு உனக்கு என்னிடம் நம்பிக்கை உண்டாகாவிடினும் என் மனத்தில் இருப்பதைத்தான் உன்னிடம் விண்டு சொல்கிறேன்' என்பதையாவது நம்பு. உன் தந்தையாக இருக்கக்கூடிய வயசு படைத்த நான், பல தாரங்களை இழந்தபின்பும் இல்லறத்தில் திருப்தி கொள்ளாமல் உன்னை நாடியதற்காக நீ என்னை வெறுத்து ஒதுக்கினால் அது பரம நியாயம்; ஒப்புக்கொள்

கிறேன். அல்லது உனக்கு இயல்பாக மனம் மண வாழ்க்கையில் ஈடுபடாமல் பெரியோர் சொல்லுக்காகவே நீ என் முன் கை நீட்டியிருப்பினும் உன் உணர்வை நான் மதித்து விலகுகிறேன். என்னைத் திருப்திப்படுத்தவேண்டும் என்றெண்ணி நீ உன் மனத்தின் போக்குக்கு விரோதமாக ஒருகாலும் நடக்க வேண்டாம் தாயே! நம் இருவரில் உன் போக்குதான் பவித்திர மானது. அதற்குத் தலைவணங்க நான்தான் கற்க வேண்டும். அது இயலாவிடில் நான்தான் அழவேண்டும். நீ அழவேண்டிய அவசியமேயில்லை. தேவி! உன்னை அன்னையின் அரண்மனைச் சயனக் கிருஹத்துக்கே இதோ அனுப்பி விடுகிறேன். அங்கே போய் நிம்மதியாகப் படுத்துத் தூங்கு."

நிம்மதி! நிம்மதியா? மீராவுக்கு இந்த ஜன்மத்தில் நிம்மதியா? நிம்மதியாக அவள் நித்திரை கொள்ள அந்த நீல நிறத்துப் பாலகன் விட்டுவிடுவானா? கல்லும் மண்ணும் உருகும்படி இதோ மகாராணா கூறும் வார்த்தைகளில் மனம் நெகிழ்வதைவிட அதிகமாக அந்தப் பிள்ளையை நினைந்தால் அல்லவா கரைகிறது? அதன்பின் உறக்கம் ஏது? மீளாநித்திரை கொண்டால்தான் இந்த மீராவுக்கு விடிவு உண்டு.

மீரா பாடினாள். நள்ளிரவின் மௌனத்தில் சோகத்தின் அடர்த்தியில் புண்ணுண்ட குரலில் பாடினாள்.

ராணாவின் அநுதாபம் அவளது இதயத்தைக் கிளறிவிட அவள் உள்ளம் திறந்து பாடிவிட்டாள்!

'சயனத்தில் ஈட்டி முனைகள்
நயனம் துயில்வதெப்படியோ?
வயமிழக்கும் அன்பு வெறியதனை
அயல்மனிதர் அறிவாரோ?

பூதல எல்லை கடந்த
நோதலற்ற பரவெளியில்
காதலன் சயனம் செய்கின்றான்,
ஏதலள் எங்ஙனம் செல்வேன்?

புண்ணுண்ட இதயத் தவிப்பை
இன்னொருவர் அறிவாரோ?
புண்படுத்திய புண்ணியவான்
கண்ணெடுத்தும் பாரானோ?

அத்திரத்தால் அகழ்பவனே
ரத்தினத்தின் இயல்பறிவான்;
யத்தனம் எத்தனை செயினும்
பித்தினைப் பிறரெவர் அறிவார்?

அருந்தி அன்புப் பித்தானேன்
திரிந்து திரிந்து திசைமறந்தேன்
மருந்து தருபவனும் மறைந்தான்
வருந்துவதன்றி வழியில்லை

காவலனின் அன்புக்கேங்கி
மாவலி கொண்டு நலிந்தேன்
ஸாம்வலியா இங்கு வந்தென்
ஆவலினைத் தீர்ப்பானோ?'

*மீரா என்ன பாடுகிறாள்? கும்பராணாவின் அடிநெஞ்சில் மூண்டிருந்த ஐயம் ஓங்கி எழுந்தது. 'வேறு யாரையோ அவள் நேசித்தாளா? அவளை வலுக்கட்டாயமாக எனக்கு மணம் முடித்தார்களா? அந்த யாரோ ஒருவன் யார்? 'ஸாம்வலியா' என்கிறாளே! சியாமளன் என்றால்......? கண்ண பெருமானா? அவனை எங்காவது மணந்து கொள்ள முடியுமா? இது எங்கேனும் சாத்தியமா?'*

*"மீரா, மீரா! உன் மனத்தில் இருப்பதைச் சொல், மீரா!" என்று மன்றாடினார் ராணா.*

*மீராவுக்கோ, 'நான் இப்போதே அதிகம் சொல்லி விட்டேன். பாழாய்ப் போன பாட்டு என்னைக் காட்டிக் கொடுத்து விட்டது!' என்றுதான் தோன்றியது. 'என் கண்ணனை பக்தி செய்வதையே மேவார் பொறுக்காதெனில் அவனிடம் காதல் கொள்வதை அது ஒருகாலும் சகிக்காதல்லவா? என்னுடைய கிருஷ்ணப் பிரேமையை ஒருநாளும் புக்ககத்தாரிடம் வெளியிடக்கூடாது என்று அன்னைவேறு உறுதிமொழி வாங்கிக் கொண்டிருந்தாளே! இந்த மனிதரின் முன்னிலையில் இருந்தால் என் மனம் இளகி விடும். மனத்தில் உள்ளது வெளியில் வந்துவிடும். எனவே இங்கிருந்து ஓடிவிட வேண்டியதுதான்!'*

*வெளியே ஓடினாள் மீரா. அந்த உப்பரிகையிலிருந்து தபதபவென்று இறங்கலானாள்.*

*ராணாவும் தொடர்ந்து வந்து மாடத்தின் கைப்பிடிச சுவரருகே நின்று பார்த்தார்.*

மீரா அந்த அரண்மனைத் தோட்டத்தினூடே புகுந்து அடுத்திருந்த சௌபாக்கிய தேவியுடைய மாளிகையின் உள்ளே புகுந்ததைக் கண்டார்.

தத்தளித்த ஓர் உள்ளம் ஓடிற்று. தத்தளித்த இன்னோர் உள்ளத்தை ஏந்திய ராணா சயனக் கிருகத்துக்குள் நுழைந்தார்.

மனம் தொய்ந்து போய்க் கட்டிலில் வந்து விழுந்தார் எதற்கும் கலங்காத கும்பராணா. அறைக்குள் ஏதோ காலடிச் சத்தம் கேட்டது.

கோலாக்கள் மீரா ஆக்ஞையிட்டபடி பழமும் பணியாரமும் கொண்ட தட்டுக்களும் பால் சொம்பும் கொண்டு வந்து ஒரு பீடத்தின்மீது வைத்தனர். வெறுமையாகக் கிடந்த இரண்டாவது மஞ்சத்தைப் பார்த்து விழித்தபடியே வெளியேறினர்.

ராணா அந்தப் பீடத்தைக் காலால் எற்றினார். பால் செம்புக்குள் இருந்த கிண்ணம் 'கிணுங் கிணுங்' என ஆடிற்று.

'மீராவுக்கு வாழ்க்கை இன்பத்தைப் பழரசமாகத் தந்து தோற்றது போதாது என்று பாலாக வேறு தரவா ஆசைப் பட்டாய்?' என்று தன்னைக் கேட்டு அக்கிண்ணம் சிரிப்பதாகவே ராணாவுக்குத் தோன்றியது.

# 17. "அநுதாபத்துக்கு ஒருவன்"

தூரத்தே தெரியும் சித்தோர்க்கோட்டை மதில்களைப் பார்த்தவாறே சிந்தாகுலமாக அமர்ந்திருந்தார் ராணா. 'இந்தக் கோட்டையைக் கட்டியதற்காக என்னைப் பாரெல்லாம் வியந்து புகழ்கிறது. ஆனால் மீரா தன் மனத்தைச் சுற்றி இதைவிட பலமான கோட்டையை அல்லவா கட்டிக் கொண்டிருக்கிறாள்? அதனுள் பிரவேசித்து, அந்தரங்கத்தை அறிவது எப்படி?'

மீராவும் அதே போதில் தான் தங்கியிருந்த ராஜமாதாவின் மாளிகை உச்சியில் வேதனை எண்ணங் களுடன் அமர்ந்து அதே சித்தோர்க்கோட்டை மதில்களைத் தான் பார்த்துக்கொண்டிருந்தாள். 'கிரிதரா, இத்தனை கோட்டை கொத்தளங்களைத் தாண்டி நீ எப்படி உள்ளே வரப் போகிறாய்? இல்லை.... நீ வந்துவிட்டாய். ஆனால் பேடகத்தில் பதுங்கி யாரும் அறியாமல் அல்லவா வந்திருக்கிறாய்? இது

என் மனத்துக்கு ஒவ்வவே இல்லையே? கண்ணையா, உன்னைத் திருட்டுத்தனமாகத்தான் நான் வணங்க வேண்டுமா?' என்று கண்ணீர் சிந்திக் கொண்டிருந்தாள்.

மன வியாதி பிடித்த புதிய ராணியைப் பார்த்துப் பெருமூச்சு விட்ட தாதி ரத்தினா ராணாவிடம் சென்றாள் — அவனுக்கும் மன வியாதி பிடித்திருப்பதைக் காணவே!

ராணாவை அவள் பலமுறை வணங்கி எழுந்த பிறகுதான் அவருக்கு இவ்வுலக நினைவே வந்தது. அவருக்கு இந்த நினைவு வருகிற வரையில் விசுவாசம் மிகுந்த அந்த மூதாட்டியும் விடாமல் வணங்கிக்கொண்டேயிருந்தாள்.

ராணாவுக்குச் சங்கடமாக இருந்தது. மகாராணா என்ன ஆணையிட்டாலும் — நெருப்பில் விழச் சொன்னாலும், கடல் மத்தியில் குதிக்கச் சொன்னாலும், விஷத்தைக் குடிக்கச் சொன்னாலும் — மறு பேச்சின்றி அதை நிறைவேற்றப் பிரதிக்ஞை பூண்ட மிகச் சில பணியாட்களில் ஒருத்தி அவள். தான் பிறந்த நாளாகத் தன்னைப் பேணியும் பணி புரிந்தும் வந்துள்ள ரத்தினாவை அவர் தாய்க்குச் சமமாக நினைத்திருக்கிறார். என்றாலும் ராஜகுல தர்மம் என்பது அவளை அவர் வணங்கவொட்டாமல் தடுத்தது. அவள் தனக்கு விழுந்து விழுந்து வணக்கம் தெரிவிக்கக் காரணமாக இருந்துவிட்டோமே என்பது கும்பரின் மனத்தை உறுத்தியது.

"போதும் ரத்தன், நமஸ்காரம். உன்னைக் கவனிக்காத குற்றம் போதாது என்று உன் முழங்காலை முறித்த குற்றத்தை வேறு செய்ய வேண்டுமா? சரி, விடிந்தவுடன் வந்திருக்கிறாயே, என்ன அவசர காரியம்?" என்றார்.

ரத்தினா சிரித்தாள். "ராவல்ஜி விடிவதற்கு முன்பே எழுந்திருந்து அநுஷ்டானங்கள் செய்து விடுவாரே! இன்று பிராதக்காலம் கழிந்த பின்பும் சயனத்திலிருந்து எழுந்திருந்து வரவில்லையே என்றுதான் பார்க்க வந்தேன்" என்றாள் மிகவும் சுவாதீனமாக.

"என்ன? பிராதக்காலம் முடியப் போகிறதா?" என்று பரபரப்படைந்தார் கும்பராணா.

"சுள்ளென்ற வெயிலைப் பார்த்தாலே தெரிய வில்லையா? ராவல்ஜி நன்றாக உறங்கிவிட்டார். நியாயம்தான், ரொம்பவும் நியாயம்தான்" என்று கண்களைச் சிமிட்டினாள் ரத்தினா.

ராணா புரிந்துகொண்டார். "நேற்று ராத்திரி மீராபாயின் அறைக்கு நீதான் காவல் இருந்தாயாக்கும். அதுதான் உன்னைக் கேலி செய்ய வைக்கிறது" என்றார். தமது ஆசாபங்கத்தை மறைப்பது அவருக்கு வெகு சிரமமாகத்தான் இருந்தது, ஆயினும் அவர் அவசியம் அந்தச் சாதனையைச் சாதித்தேயாக வேண்டும்!

"காவலா இருந்தேன்? ராணி சாகேபா அங்கேயிருந்து தப்பி இங்கு ஓடி வருவதற்கே நான்தான் உடந்தை. எனக்கு நன்றி சொல்லுங்கள், மகராஜ்! சாகேபா உறக்கமே வராமல் புரண்டு கொண்டிருந்தார். நியாயம்தானே? நான்தான் தைரியமாக அவரிடம் சொன்னேன்: 'ராஜமாதாவும், ராஜபேடி ஊதாவும் உலகமே புரண்டாலும் விழித்துக் கொள்ள மாட்டார்கள். நீங்கள் ராவல்ஜியைப் பார்த்துவிட்டு வரலாம்' என்றேன். அதோடு இரண்டு செவிட்டு ஊமைத் தாதிகளையும் சாகேபாவோடு இவ்விடத்துக்குத் துணை அனுப்பி வைத்தேன். ஆனால் சாகேபா ஏனோ வெகு சீக்கிரமே திரும்பிவிட்டார். அப்புற்மும் இரவு தூங்கவில்லை. நீங்களானால் விடிந்து பத்து நாழிகையாகியும் எழுந்திருக்க வில்லை." கிசுகிசு மூட்டுகிற குரலில் ரத்தினா பேசிக் கொண்டே போனாள்.

கும்பராணா தமது மனவெழுச்சிகளை அடக்கிக் கொண்டு, "ரத்தன் தேவி, உன் வாயில் நான் நன்றாக விழுந்து புறப்படும்படி செய்துவிட்டாள் மீராபாய். உனக்கும்தான் அறுபது வயசுக்குச் சிருங்காரப் பேச்சு வேண்டிக் கிடக்கிறது! இப்போதைக்கு என்னைத் தவிர வேறு யாரைக் கேலி செய்வாய்? இன்னும் கொஞ்ச நாட்கள்தான் என்னிடம் விளையாடுவாய். அப்புறம் ராய்மல்லுக்கு மணமாகிச் சிருங்கார தேவியை அவன் அழைத்து வந்துவிட்டால் என் பக்கம் நாடுவாயா?" விளையாட்டாகவே விடை சொன்ன ராணா. "சரி, காலையில் மீராபாயைப் பார்த்தாயா?" என்று கேட்டார்.

"பார்த்தது மட்டுமா? இன்றைக்குத்தானே சாகேபா புத்தமைப்புப் பெற்றுள்ள சொந்த மாளிகையில் பிரவேசிக்க முகூர்த்தம் வைத்திருந்தோம்! சூரியோதயத்தின்போதே முகூர்த்தம். நீங்களோ எழுந்திருக்கவில்லை. பாய்ஜிராஜ், ராஜபேடி இரண்டு பேரும் விழித்துக் கொண்டபோதிலும் கிருகப்பிரவேசத்துக்கு வரவில்லை. நான் தான் சாகேபாவைப் புதுமஹலில் கொண்டுபோய் அமர்த்தினேன்.

தட்சிணை தாருங்கள். தட்சிணை தந்தால்தான் காரியம் சாதகமாகும்" என்று கை நீட்டினாள் ரத்தினா.

கும்பராணா தன் கழுத்தில் நெளிந்த ஒரு ரத்தினச் சரத்தை எடுத்து ரத்தினாவின் கையில் போட்டார். ஒருகால் அதனால் காரியம் சாதகமாகுமோ என்றுகூட அவருக்கு ஓர் அசட்டு ஆசை! "சரி, இப்போது மீராபாய் எப்படி யிருக்கிறாள்?" என்றார்.

"ராவல்ஜிக்குப் பெண்டாட்டிப் பெருமை ரொம்ப அதிகமாக இருக்கிறது. சாகேபாவை நான் இப்போது வாய் கொள்ளாமல் வருணித்து நீங்கள் செவிகொள்ளாமல் அதைக் கேட்க வேண்டுமாக்கும்!"

"நான் இப்போது வருணனை கேட்கவில்லை ரத்தன். அப்படிக் கேட்கவேண்டுமானால் அதற்கென்றே பிறந்த சாரணர்களை வருணிக்கச் சொல்வேனேயன்றிக் கற்பனா சக்தியே இல்லாத ரத்தன் பாட்டியைக் கேட்பேனா? ராத்திரி முழுதும் தூங்கவில்லை என்றாயே, இப்போது அவள் உடம்பு எப்படியிருக்கிறது....?" ராணாவின் நாவு தயங்கித் தயங்கித் தொடர்ந்தது; "இப்போது அவள் உடம்பு எப்படியிருக்கிறது....., மனம் எப்படியிருக்கிறதென்றுதான் கேட்டேன்."

ராணாவின் குரலில் இருந்த தழுதழுப்பு ரத்தினாவின் உள்ளத்தைக் குலுக்கிவிட்டது. இவ்வளவு நாழிகையாக அவளும் மனத்துக்குள் ஏதேதோ ஐயங்களையும் கவலைகளையும் புதைத்துக்கொண்டுதான் விளையாட்டுப் பேச்சுப் பேசினாள். ராணாவை உற்சாகப்படுத்த வேண்டு மென்றே அப்படிப் பேசினாள். இப்போது அவளாலும் தாங்க முடியவில்லை.

வெளியே சிந்தாத கண்ணீரில் குரலைத் தோய்த்து மிகத் தணிவாகப் பேசினாள்: "ராவல்ஜி, சாகேபா இன்னமும் அப்படியேதான் இருக்கிறார். ஆனால் ஏகலிங்கஜி நம்மைக் கைவிட மாட்டார்."

ராணா விரிந்த நயனங்களுடன் ரத்தினாவை உற்றுப் பார்த்தார். "நான் மீராபாயை வந்து பார்க்கலாமா?" என்று கேட்டார்.

ரத்தினாவின் உள்ளம் பிளந்து போயிற்று. கைப்பிடித்த கணவன் கலியாணமான உடனேயே மனைவியை வந்து பார்க்கத் தயங்கும்படி ஆயிற்றா?

"ராவல்ஜி, நீங்கள் தாராளமாக வரலாம். சாகேபா ஒரு போதும் மரியாதை தப்பி நடக்கமாட்டார். இன்று காலைகூட நீங்கள் எழுந்தாயிற்றா என்று கேட்டுக் கொண்டேதான் இருந்தார். உங்களை நமஸ்கரித்துவிட்டுத்தான் தம் அரண்மனைக்குள் பிரவேசிக்க நினைத்தார். ராவல்ஜி, உங்களுக்கு நான் அதிகம் சொல்ல வேண்டியதில்லை. என்றாலும் ஒன்று சொல்கிறேன்: சாகேபாவுக்கு நீங்கள்தான் ஆறுதலாக இருக்க வேண்டும். உங்களையும் விட்டால் இந்த அரண்மனையில் அவர் தன்னந்தனியாகத் தவிக்க வேண்டியதுதான்!"

"ஏன், நானொருவன் இருக்கிறேனே!" என்ற குரல் கேட்டது.

கும்பராணாவின் இரண்டாவது புதல்வன் ராய்மல் உள்ளே நுழைந்தான். அவனைப் பெருமிதத்துடன் பார்த்தார் ராணா. 'ஆகா, அப்படியே சண்டன்ஜியின் முகவெட்டு! வீரத்திலும் குணசீலத்திலும்கூட அவருக்குப் பின்வாங்காதவன் தான்' என்று மகனைப்பற்றித் திருப்தியாக நினைத்துக் கொண்டார். ஆனாலும் மனத்தில் பட்டதையெல்லாம் அப்படியே கொட்டிவிடுவது ராய்மல்லின் இயல்பு. 'குழந்தைதானே! போகப் போகத்தானே கட்டுப்பாடு வரும்.'

"என்ன சொன்னாய், குழந்தாய்?" என்று மகனைக் கேட்டார் ராணா.

"சித்தியைப்பற்றித்தானே பேச்சு நடக்கிறது? பாட்டியும் அத்தையும் சித்திக்கு எத்தனை பிரதிகூலம் உண்டோ அவ்வளவும் செய்வார்கள், யாரேனும் அவளுக்கு அநுகூலமாக இருக்கவேண்டும் என்றுதானே மூடி மறைத்துப் பேசிக் கொண்டிருக்கிறீர்கள்? சித்தியிடம் தைரியமாக, பகிரங்கமாக அநுகூலத்துடன் அநுதாபத்துடன் நடந்துகொள்ள நானொருவன் இருக்கிறேன் என்றுதான் சொல்லுகிறேன்" என்றான் ராய்மல்.

யுவராணா பட்டவர்த்தனமாகப் பேசிவிட்டபின் ரத்தினா அங்கே இருக்கத் தயங்கினாள். "சாகேபாவிடம் நீங்கள் வருவதாகச் சொல்கிறேன்" என்று சொல்லிவிட்டு, ராணா அளித்த ரத்தினஹாரத்தை ராய்மல்லுக்குச் சூட்டி, அவன் கன்னத்தை ஒரு செல்ல இழைப்பு இழைத்து அங்கிருந்து நழுவினாள்.

"ராய்மல், என்ன இருந்தாலும் பாட்டியையும் அத்தையையும் பற்றி நீ இப்படிப் பேசக் கூடாதப்பா.

பெண்கள் விஷயத்தில் நாம் மிகவும் மிருதுவாக நடந்து கொள்ள வேண்டும், அப்பனே!" என்று இதமாகக் கூறினார் ராணா.

"போங்கள் அப்பா, உங்கள் மிருதுவும் நீங்களும்! முதலில், பெண்கள் பெண்களாக இருக்கவேண்டும். இரண்டாவதாக, மரியாதைக்கு உகந்தவர்கள் மரியாதை செலுத்தும் விதத்தில் நடந்துகொள்ள வேண்டும். நீங்கள் இவர்களிடம் மிருதுவாக நடந்து கொள்வது சித்தியிடம் கடுமையாக நடந்து கொள்வதற்குச் சமானமே. சித்தி மட்டுமல்ல. நாளைக்கு எனக்குக் கல்யாணமாகி ஜோதாஜியின் மகள் இங்கு வந்தாலும் இதே பாடுதான். அவளும் இதே மண்டோர் வம்சத்தவள்தான். இதில் மண்டோர் வம்ச வெறுப்போடு, வேறு பல வெறுப்புக்களும் கலந்திருக்கின்றன அப்பா. பாட்டிக்கும் அத்தைக்கும் தங்கள் அதிகாரம் புது மாட்டுப்பெண்களால் பறிபோகுமோ என்று ஆத்திரம். அதோடு..."

படபடப்புக்குப் பெயர்போன ராய்மல்லே நாவைச் சட்டென்று அடக்கிக்கொண்டான்.

"சொல் குழந்தாய். உன் இதயம் எனக்கு முழுதும் தெரிய வேண்டியதுதானே?" என ஊக்கினார் ராணா.

"அப்பா, என் மனத்தில் ஆழமாகப் பட்டதைத்தான் சொல்கிறேன். நீங்கள் தவறாக நினைக்கக் கூடாது. அத்தை இளம் விதவையாகிப் பிறந்தகத்தோடு வந்துவிட்டாள். எனவே வேறு யார் தாம்பத்தியத்திலிருந்தாலும் அத்தை, பாட்டி இருவருக்குமே கண்ணைக் கரிக்கிறது...."

கும்பராணா சிறிது நாழிகை சிலையாக அமர்ந்திருந்தார். 'வயதில் தன்னைவிட எவ்வளவோ சிறியவனாயினும் ராய்மல்லுக்குத்தான் எத்தகைய ஆழ்ந்த திருஷ்டி! அவன் சொல்வது எவ்வளவு வாஸ்தவம்! நேற்று மீராவை அன்னையின் மாளிகையில் சயனிக்கச் சொன்னபோது அன்னை, தங்கை இருவருக்குமே எவ்வளவு திருப்தி ஏற்பட்டது! விசித்திரமான மனப்போக்கு! ஆனால் அதை உதாசீனம் செய்வதற்கில்லை! ராய்மல்லுக்கு உள்ள கூர்ந்த திருஷ்டி எனக்கு இருந்திருந்தால் இந்தக் கல்யாணமே நடந்திருக்காதே!' இளமையிலேயே கைம்மை கண்ட உதயாவிடம் கும்பருக்கு ஒரு அநுதாபமே சுரந்தது. 'வீட்டோடு உள்ள விதவைப் பெண்ணின் உணர்ச்சிகளை மதிக்காமல்

நான் மீண்டும் மீண்டும் திருமணம் செய்துகொண்டு இன்பத்தைத் தேடியது எத்தனை கொடுமை!' மீரா ஒருத்திக்கு மட்டுமின்றி உதயா விஷயத்திலும் பெண் பாவத்துக்குத் தான் ஆளாகிவிட்டதாக ராணாவின் உள்ளத்தில் தைத்தது.

கண்ணீர் துளிக்க அமர்ந்திருந்த தந்தையைக் கண்டதும் ராய்மல் பதறினான். "அப்பா, நான் ஏதேனும் தவறாகச் சொல்லியிருந்தால் மன்னித்துவிடுங்கள்! உங்கள் உள்ளத்தில் எத்தனை கொந்தளிப்புகள் இருக்கும் என்பது சற்றும் தெரியாமல்....."

ராய்மல்லின் தோளில் கையை வைத்து அழுத்தி, அவனை சோகமயமாகப் பார்த்தார் ராணா. "என் மனத்தின் கொந்தளிப்பு எனக்குத்தான் தெரியும். உரிய சமயம் வரும் போது உனக்கும் தெரிவிக்க வேண்டியது கடமை என்றே நினைக்கிறேன். உன் உள்ளத்தில் இருப்பதை எனக்குத் திறந்து காட்டுமாறு சொன்னேனல்லவா? என் உள்ளத்தையும் உனக்கு நான் திறந்து காட்டுவதுதான் யுக்தம். வருங்காலத்தில் மேவார் ஆட்சி பீடம் ஏறவேண்டிய உனக்கும் எனக்கும் இடையில் எந்தத் திரையும் வேண்டாம்" என்றார் ராணா.

ராய்மல்லின் முகம் சரேலென்று கறுத்தது. "அண்ணா உதய்ஜி இருக்கும்போது அப்படி ஒரு போதும் சொல்லாதீர்கள் அப்பா" என்று உணர்ச்சியுடன் கூறினான்.

"ராய்மல்! இப்போதுதானே நமக்குள் ஒளிவு மறைவு வேண்டாம் என்றேன்? எனக்கு உதயா ஒரு தங்கையாக வாய்த்ததுபோல் உனக்கு உதயன் ஒரு தமையனாக வாய்த் திருக்கிறான். ஊதாவுக்காவது நடத்தையில் பிசகில்லை...." கும்பர் பெருமூச்சுவிட்டார். "ராணாவின் மூத்த மகன் என்ற ஒரே காரணத்துக்காக உதயனை நான் அரசனாக்கினால் அதைவிட இந்த ராஜ்யத்துக்கு நான் பெரிய தீமை எதுவும் செய்ய முடியாது. பெரியப்பா அவர்கள் உள்பட நம் அரசவையோர் எவருமே அப்படி ஒருவன் இருப்பதாக எண்ணவுமில்லை என்பது உனக்குத் தெரியாததா? நீ வேனன் கதையைக் கேட்டிருப்பாய். முறை தவறி ஆட்சி நடத்திய அவனைப் பெருமக்கள் கொன்று விட்டதாகவே புராணம் சொல்கிறது. அப்படி ஒரு பயங்கரம் நிகழாமல் தடுக்க வேண்டுமல்லவா?"

'மனிதர்கள் தடுக்கிற விஷயந்தானா அது?' என்று விதி சிரித்தது.

நீண்ட நேரம் ராணா, ராய்மல் இருவருமே பேசவில்லை.

'தன்னிடம் தந்தை எதையோ சொல்ல விரும்புகிறார்! ஆனால் சொல்ல வொட்டாமல் ஏதோவொன்று அவர் தொண்டையை அடைக்கிறது' என்று புரிந்து கொண்டான் ராய்மல். அவர் மனத்தை வேறு திசையில் திருப்புவதே இப்போது புத்திசாலித்தனம் என்று கருதினான்.

"சித்தியைப் பார்த்து வரலாமே!" என்று எழுந்திருந்தான் இளவரசன்.

மகாராணாவும் பேசாமல் உடன் எழுந்திருந்தார்.

மீராவின் புது மாளிகைக்குள் அவர்கள் பிரவேசித்த போது அவள் தன் பேடகத்தைத் திறந்து வைத்துக் கொண்டு அதிலிருந்த கிரிதர மூர்த்தியைப் பார்த்து உருகிக் கொண்டிருந்தாள்.

கிரிதாரியை அவள் ஒளித்துவைக்கத்தான் ஆசைப் பட்டாள். ஆனால் அவளால் கிரிதாரியை ஒளிக்க முடிந்தாலும்கூட இன்னொன்றை ஒளிக்க முடியவில்லை. கானம்தான் அது. மண்ணைப் போட்டு மூடினாலும் அதைப் பிளந்துகொண்டு முளை வெளிவரத்தானே வருகிறது? இன்னும் சொல்லப் போனால் மூடினாலன்றி முளையே வருவதில்லையே! கிரிதர மூர்த்தியைக் கண்டவுடன், கால தேச வர்த்தமானங்களின் நினைவிழந்து, தானாகவே மீராவின் மதுர கண்டத்தில் கானம் முளைத்தது.

'ஈனப்பிறவி என்று விட்டுவிடாதே – ஐயா
மானம் காத்தெனையாள் மகராஜ்!

இருண்ட வழியதனில் மருண்டு நிற்கும் மீராவின்
முடிமிசை உன்றன்சீர் அடியிணை பொருத்திப்
பாத ஒளிகாட்டிப் பாதகம் தீர்த்து
பாதையைக் காட்டிடுவாய் – உள்ளு–
– பாதையைத் தீர்த்திடுவாய்!

நலிந்து மெலிந்தவள் நான்; வலிவின் உறைவிடம் நீ
குணம் குன்றியவள் நான்; குணக்குன்றுநீ ஐய!
அலைகடலை எதிர்த்து அக்கரை சேர்ந்திட
பலமதனை அருள்வாய் – குண
நலமதனைத் தருவாய்!'

ஊருக்கெல்லாம் கும்பராணா மகராஜா. ஆனால் மீராவுக்கோ கண்ணன்தான் மகராஜன். விந்தையிலும் விந்தையாகக் கணவனிடமிருந்தே மானம் காக்கும்படி கண்ணனிடம் வேண்டிக் கொள்கிறாள்!

ராணாவுக்குக் குற்றவாளி உணர்ச்சி உண்டாயிற்று. அதைக் களைந்து கொள்ளச் சிறிது போதாயிற்று.

பாடல் முடிந்தபின்தான் மீராவுக்கு இரு நிழல்கள் ஆடுவது தெரிந்தது. பேடகத்தை மூடிவிட்டு, கண்களைத் துடைத்தபடி திரும்பிப் பார்த்தாள்.

முந்திய இரவு நடந்த விபரீதங்களை நினைத்து நடுங்கியபடி திரும்பிப் பார்த்த மீராவுக்கு ராணாவின் கண்களில் ததும்பிய கனிவின் கசிவைக் கண்டவுடன் ஆறுதலாக இருந்தது.

"மீரா, ராய்மல்லை உனக்கு இதுவரை சம்பிரமமாக அறிமுகம் செய்து வைக்கவில்லையே! சித்தியைப் பார்க்க அவனுக்குத்தான் நிரம்ப ஆவல்" என்று கூறிப் பிள்ளையை அறிமுகம் செய்து வைத்தார் ராணா.

"சித்தி! இப்படி அப்பாவின் பக்கத்தில் வந்து நில்லுங்கள்" என்று கூறி, அவள் அவ்வாறு வந்து நின்றவுடன் அவர்களை நமஸ்கரித்தெழுந்தான் ராய்மல்.

தோற்றம் முழுவதும் பரிவு கமழும் ராய்மல்லிடம் என்ன பேசுவது என்றே தெரியாத மீரா, "வாருங்கள்; நீங்கள் வந்ததில் மிகவும் சந்தோஷம்" என்று தயங்கித் தயங்கிக் கூறினாள்.

"சித்தி, நீங்கள் இப்படிப் பேசினீர்களோ நான் வரவே மாட்டேன். ஏனப்பா சித்தி இப்படிப் பேசலாமா?" என்று தந்தையை இழுத்தான் ராய்மல்.

அவன் கூறுவது ராணா, மீரா இருவருக்குமே புரியவில்லை.

"ஏனப்பா, சித்தி என்னை 'நீங்கள்', 'வாருங்கள்' என்றெல்லாம் பன்மையில் பேசுவது முறையா? எனக்கு இந்த மரியாதை வேண்டுமென்று நான் இங்கு வரவில்லை. அம்மா வேண்டுமென்றுதான் வந்திருக்கிறேன்."

ராணாவின் கண்களில் நீர்த் திரையிட்டது. கற்பின் உருவான கும்பலாதேவி குழந்தை ராய்மல்லைத் தன் மடியில் போட்டு விட்டுக் கண்ணை மூடியது நேற்று நடந்ததுபோல அவரது நினைவில் பளிச்சிட்டது.

ராய்மல்லின் சுவாதீனமான பேச்சு மீராவுக்குத் தெம்பளித்தது.

"அம்மா வேண்டும் என்று இப்போது சொல்கிறீர்கள்! நாளைக்கே அகத்துக்காரி வந்துவிடட்டும்; என்னை ஏறெடுத்துப் பார்ப்பீர்களா?" என்றாள்.

"என் பாட்டியின் காதில் இந்தப் பேச்சு விழுந்துவிடப் போகிறது. அப்பாவும் புதுமணம் செய்துகொண்டு வந்திருக்கிறார்" என்று கூறித் தந்தையைப் பார்த்துப் பரிகாசமாகச் சிரித்தான் ராய்மல்.

ராய்மல் எதையும் மனத்தில் வைத்துக் கொள்ளத் தெரியாமல் போட்டு உடைத்துக் கொண்டிருந்தான். ராணா பேச்சை மாற்ற நினைத்து, "என்ன மீரா, மாளிகை சௌகரியமாக இருக்கிறதல்லவா? ராய்மல், புதுக்கி யமைத்துள்ள இந்த மாளிகையைச் சுற்றிப் பார்ப்போமே!" என்று கூறியபடி உள்ளே நடந்தார்.

"அதற்குள் உள்ளே போகிறீர்களே, அப்பா? இங்கேயே சரிசெய்ய வேண்டியதை முதலில் கவனியுங்கள்" என்றான் ராய்மல்.

"ஏன், இங்கே என்ன சரி செய்யவேண்டும்?" என்று கேட்டார் ராணா.

"நல்ல கேள்வி கேட்டீர்கள். இந்தப் பேடகத்தை முதலில் திறக்கவேண்டும். நீங்கள் வந்தவுடன் சித்தி அதை மூடிவிட்டார். மகாராணாவுக்குத் தெரியாமல் அரண்மனைக் குள்ளேயே இரகசிய நடவடிக்கைக்கு இடம் தரலாமா? அதனால் முதலில் இந்தப் பேடகத்தில் ஒளிந்து கொண்டிருக்கும் கள்ளக் கண்ணனை அம்பலப்படுத்த வேண்டும். ஒருவேளை கள்ளனாயில்லாமல், பயந்தாங்குளியா யிருந்து, ஆதியில் கோபிகைகளுக்குப் பயந்தது போதாதென்று இப்போது பாட்டிக்குப் பயந்து பதுங்கிக்கொண்டிருக்கிறானோ என்னவோ? எவ்வாறாயினும் அவனை அம்பலப்படுத்தியே ஆகவேண்டும். ஏனப்பா விழிக்கிறீர்கள்? ஏன் சித்தி, நடுங்கு கிறீர்கள்? ஒரு பேரம்பலத்தைக் கட்டி அதில் இவனைப் பிரதிஷ்டை செய்யவேண்டும் என்கிறேன்" என்று சிரித்தான் ராய்மல்.

ராணா, மீரா இருவரும் கலகலவெனச் சிரித்துவிட்டனர். மீராவின் உள்மனத்திலிருந்த ஆசையை வெளியிட்டு விட்ட ராய்மல் தேவதூதனாகவே அவளது கண்களில் தோன்றினான்.

"மீரா, ராய்மல் சொல்லுவதை நான் நிச்சயம் கேட்டாக வேண்டும். கூடிய சீக்கிரமே இந்தக் கண்ணன் அற்புதமான ஆலயத்தில் அமர்ந்துவிடுவான்" என்றார் ராணா.

மீராவின் இதயம் துள்ளித் குதித்தது. அவளது முகமும் மலர்ந்தது.

"சித்தி, நாங்கள் வரும்போது நீங்கள் கண்ணீரில் கானம் செய்து கொண்டிருந்தீர்கள். இப்போது ஆனந்தத்தில் ஒரு பாட்டை மலர்த்துங்களேன்!" என்று கூறியபடி பேடகத்தைத் திறந்தான் ராய்மல்.

கிரிதரன் பிரசன்னமாகத் தரிசனம் தந்தான்! மீரா பேரானந்தத்துடன் பாடினாள்:

'அந்தமில் அழக, நந்தலால,
கண்ணில் வசிக்கவா, கண்ண, பால!

மோகன மூர்த்தி
சியாமள சீர்த்தி
நயனம்விரி நேர்த்தி

மயிற்பீலி மங்கலம்
மகரமீன் குண்டலம்
திலகமொளிர் முகமண்டலம்

அமுதம்பொழி அதரம்
அதில்குழல் இன்சுரம்
வைஜயந்தி வாழும் உரம்

உயிரைக் கவர் உதரம்
அதில் கிண்கிணி மதுரம்
குழலிசைக்கும் நூபுரம்

மீரா இதய பூபாலன்
அன்பர்க்கினிய க்ருபாலன்
அடியார்க்கருள் கோபாலன்'

ஆனந்த அருவியிலிருந்து வழிந்த பிரவாகமாக மீரா தன்னை மறந்து பாடினாள். நேற்றுத் தவியாயத் தவித்த மீரா இன்று இன்பப் பரவசத்தில் இன்னிசை எழுப்புவதைக் காணக் காண ராணாவுக்கு எல்லையில்லாத நிம்மதியும் திருப்தியும் சாந்தியும் உண்டாயின. ராய்மல் எவ்வளவு அறிவுக கூர்மையும்

அநுதாப மனமும் கொண்டவன்! எவ்வளவு லாகவமாக மீராவின் உள்ளத்தைப் புரிந்துகொண்டுவிட்டான்!

மகாலை மூவரும் சுற்றிப் பார்த்தனர்.

"இதென்ன அறை?" என்று கேட்டபடி ஒரு கதவைத் திறந்தான் ராய்மல்.

ஒற்றைத் தந்தக் கட்டில் போட்டு, அதில் பஞ்சணை விரித்திருந்தது.

தயக்கம் நிறைந்த கண்களுடன் ராணாவை நோக்கினாள் மீரா. அங்கிகாரம் நிறைந்த புன்னகையுடன் மீராவை நோக்கினார் ராணா.

ராய்மல்லின் உள்மனத்தில் அதன் அர்த்தம் வெகு வெகு இலேசாக நிழலாடியது.

மீராவின் மாளிகையிலிருந்து திரும்புகையில் கும்பராணா ஏதுமே பேசவில்லை.

"அப்பா, ராஜ்யபாரத்தை என் தலையில் சுமத்துவது பற்றிச் சொன்னீர்கள். அதைவிட உங்களது இதயபாரத்தைத் தாங்கிக் கொள்ளத்தான் ஆசைப்படுகிறேன்!" என்று பேச்சைத் தொடங்கினான் ராய்மல்.

ராணா மகனைப் பரிதாபமாகப் பார்த்தார். சட்டென்று சிலும்பிச் சிரித்தார். சிரிப்புத்தானா அது? விம்மலுக்கும் சிரிப்புக்கும் இடைநிலையில் ஏதோ ஒன்று அது!

ராணா எதுவும் சொல்லாமலே ராய்மல் சகலத்தையும் புரிந்துகொண்டு விட்டான்.

## 18. "என்னைத் தொடாதே!"

**மா**லை வேளை நெருங்கியது.

அலைபாயும் மனத்துடன் தோட்டத்தில் உலாவிக் கொண்டிருந்தார் ராணா.

'அன்னைக்கும் தங்கைக்கும் பிறரது இல்லற வாழ்வைக் கண்டாலே கடுப்பாயிருக்கிறது என்று ராய்மல் சொன்னது உண்மைதான். என்றாலும் மீராவிடம் ஏதாவது குற்றம் கண்டு பிடிக்கக் காத்துக்கொண்டிருப்பதால் அவர்கள் அவளது ஏகாந்தத்தையும் நிந்திக்கத்தான் நிந்திப்பார்கள். அவர்களை ஏன் இழுக்க வேண்டும்? நானும் ஒரு மனிதன்தான்.

ஏமாற்றமும் தோல்வியும் எனக்கும் தாங்க முடியாத உணர்ச்சிகள்தாம். 'இத்தனை வயசுக்குப் பெண்ணெடுத்தாயே! உன் ஆசை பூர்த்தியாகாமல் அபஜயம் அடைந்தாய் அல்லவா?' என்று விதிதேவதை சொல்லாமல் சொல்லிப் பெருமைப்படுமாறு ஆயிற்றே!...'

தூரத்திலிருந்து பிராம்மணோத்தமர்கள் ராத்ரீ ஸூக்தம் என்ற வேத மந்திரங்களை கோஷிப்பது காதில் விழுந்தது. கும்பருக்கு முன்தலைமுறைகளில் ராஜஸ்தானத்தில் வேதநாதமே குறைந்துவிட்டது. வீரக் கவிதைகளையே ராஜஸ்தானியர் விரும்பியதால் பிராம்மணர்களும் அத்தியயனத்தை விட்டுக் கவிபாடத் தொடங்கிவிட்டனர்; அல்லது சேனையில் சேர்ந்து விட்டனர். கும்பரின் தந்தையான மோகல்சிங் மகாராணாதான் தர்மத்தின் ஆணிவேரான வேதம் க்ஷீணிப்பதன் ஆபத்தை உணர்ந்தார். சித்தோரில் மீண்டும் வேத பாடசாலைகளை நிர்மாணித்தார். வேத மோதுபவர்களுக்கும் ஓதுவிப்பவர்களுக்கும் ஏராளமாக மானியங்கள் வழங்கினார். இதன்பின் மீண்டும் மேவாரில் வேத சப்தம் ஓங்கியது. மோகல் சிங் நிறுவிய பாடசாலை ஒன்றிலிருந்து தான் இப்போது ராத்ரீ ஸூக்த மந்திரங்கள் பரவிப் பொலிந்தன.

அந்தணோத்தமர்கள் இரவுத்தாயை வரவேற்கின்றனர். மகாராணா கும்பருக்கோ எப்பாடு பட்டேனும் நிசிக் கன்னியை நெருங்காமல் பிடித்துத் தள்ளவேண்டும்போல் இருந்தது.

அங்கே மீராவும் தனது மாளிகை உத்தியானவனத்தில் நிலைகொள்ளாமல்தான் சஞ்சரித்துக்கொண்டிருந்தாள். கண்ணனைக் கணவனாக பாவிக்காமல் தெய்வமாகவே பாவிக்கும் முயற்சியில் அவள் ஜயித்துவிடலாம்! ஆயினும் கணவனைக் கணவனாகப் பாவிக்கும் முயற்சியில் மட்டும் அவளால் ஜயம் காண முடியவில்லை! 'ஒரு பாத்திக்குப் பாய்கிற நீரைத் தடுத்து இன்னொரு பாத்திக்குப் பாய்ச்சுவது எளிதாக இருக்கலாம்! ஆனால் பிரேமையை அப்படிக் கண்ணனிடமிருந்து கும்பராணாவுக்குத் திருப்ப முடிய வில்லையே! அப் பாத்தியில் பாயாமல் நீரைத் தடுத்தால் நீரின் ஆதாரச் சுனையே வற்றி உலருகிறதே!

'காதல் நீர் வற்றி உலருகிறது! ஆனால் இந்தக் கண்ணீர் மட்டும் வற்றவே வற்றாதா? வேண்டாம், வற்ற வேண்டாம்!

ஏனெனில், நான் சுயநலமாக அழவில்லை! புண்ணிய புருஷர், மகாத்மா, மேவார் மகாராணாவின் கஷ்டத்தை நினைந்தே அழுகிறேன். என்னை அவர் எத்தனை ஆசையோடு மணந்தாரோ? அத்தனை ஆசைகளின் மீதும் மண்ணை வாரிப் போட அவருக்கு மனைவியாகிவிட்டபின் எனக்கேது உரிமை? அவருக்குப் பிரேமையைத் தர முடியாதென்றால் முதலிலேயே அவரை மணக்காமல் அல்லவா இருந்திருக்க வேண்டும்? கிரிதரா, கல் நெஞ்சுக்காரக் கிரிதரா! கடைசி விநாடியிலாவது நீ வந்து காப்பாய் என்று நம்பி நம்பித்தான் பாழானேன்; இல்லை அவர் வாழ்க்கையைப் பாழாக்கினேன். அவரே உனக்குக் கோயிலெடுத்துக் கும்பாபிஷேகம் செய்யப் போகிறார்! உனக்குக் கருணையும் கிருபையும் இல்லாவிட்டால் போகிறது; மானமும் வெட்கமும் இல்லாவிட்டால் போகிறது; நீதியும் தருமமும் கூடவா இல்லாமற் போய் விட்டன? எவ்வளவு சபித்தால்தான் என்ன? நீ என்னிடம் கோபித்துக்கொண்டு என் மனத்திலிருந்து வெளியேற மாட்டாய்! கண்ணீரைக் கொட்டிக் கொட்டிக் கும்பாபிஷேகம் செய்து உன்னைத்தான் என் மனத்தில் ஆணிவேர், சல்லிவேர் விட்டு வளரும் விருட்சமாக வளர்த்து விட்டேனே! நீ பெரிய தருவாக வளரும்போது உன்னுடைய நிழலில் நான் வளர்ச்சியை இழந்து நலிந்து சாகிறேன்!"

எவ்வளவு நாழிகைதான் உலவுவது? கால்கள் இற்றுப் போயின. இரவு மெல்லப் பரவத் தொடங்கியது. மீரா தன் மாளிகையின் சயன அறைக்குச் சென்றாள். நேற்றைய நினைவு வந்தது.

"ரத்தன், ரத்தன்!" என்று உரக்கக் கூவி அழைத்தாள் மீரா. சாதாரணமாக அந்தப் பெயரைச் சொல்லும்போதே மீராவின் குரல் கம்மும். அவளது தந்தையின் பெயரல்லவா? ஆனால் இப்போதோ கனமாக அழைத்தாள்.

"இதோ வந்தேன், ராணி!" என்று ஓடி வந்தாள் ரத்தினா.

"நான் தூங்கப் போகிறேன். எனக்கு உணவு கிணவு எதுவும் வேண்டியதில்லை. ஒரு சிறிய தீபம் தவிர மீதமுள்ள விளக்குகளையெல்லாம் அணைத்துவிட்டுப் போ. போகும் போது கதவை வெளியில் பூட்டிக்கொண்டு போய்விடு. நானே கதவை இடித்தாலும் பிரபஞ்சமே புரண்டாலும் விடிவதற்குள் கதவைத் திறக்காதே" என்று கண்டிப்பாக உத்தரவிட்டாள் மீரா.

கும்பராணா உலவிக்கொண்டிருந்த நந்தவனத்தில் கம்மென்று சம்பங்கி மணம் பரவி அவர் உள்ளத்தில் மோகக் கிளர்ச்சிகளை மூட்டியது. மரங்களில் கட்டியிருந்த கூடுகளி லிருந்து பட்சிகளின் கரகரத்த குரல்கள் போதையின் நிறைவை மந்தமாக வெளியிட்டன. தாழம் புதர்களிலிருந்து மிகவும் தீட்சண்யமான கந்தம் எழும்பி வந்தது. சாரையும் சர்ப்பமும் களித்துக் கும்மாளமிடுகின்றன! ராணாவின் நரம்புகளில் ஓர் அதிர்வு பரவியது.

தன்னிடமே அஞ்சியபடி நேரே தனது மாளிகையின் படுக்கையறைக்குச் சென்றார் கும்பராணா. "இன்று ராத்திரி எனக்கு உபவாசம்" என்று பணியாட்களிடம் கூறிவிட்டு, சயனக் கிருகத்தின் எல்லாக் கதவங்களையும் அடைத்துக் கொண்டார். அவற்றின் மேல்தாழ்ப்பாள், கீழ்த்தாழ்ப்பாள், பக்கத் தாழ்ப்பாள் யாவற்றையும் அடைத்துக்கொண்டார். தம் மனத்தையே அடைத்துக்கொள்வதாக நினைப்புப் போலும்! தலையிலிருந்து கால்வுரை வேர்வை வழிய, ஏதோ கொடும் பாவத்திலிருந்து தன்னை ரட்சித்துக்கொண்ட உணர்வுடன் மஞ்சத்தில் வந்து விழுந்தார் கும்பராணா.

கதவு இடிக்கப்படும் ஓசை கேட்டது.

'ஆ! இன்றைக்கும் வந்து என்னைச் சோதிக்கப் போகிறாளா? முடியாது, கதவைத் திறக்க முடியாது.'

தம் உடலை விறைத்துக்கொண்டு பஞ்சணையிலேயே கிடந்தார் ராணா.

"அப்பா, அப்பா! கதவைத் திறவுங்கள், அப்பா!"

ராய்மல்லின் குரல்தான்!

ஆபத்தான விஷயமில்லாமல் ராய்மல் வந்து கதவை இடிக்கமாட்டான் என்பது கும்பாஜிக்குத் தெரியும். என்றாலும் ராணா நிம்மதி அடைந்தார். அவர் எதிர்பார்த்த பேராபத்து இல்லை அல்லவா? அந்த மட்டும் க்ஷேமம்!

தாழ்ப்பாளை நீக்கிய ராணா, "வா ராய்மல், என்ன சமாசாரம்? இந்த வேளையில் வந்திருக்கிறாயே!" என்றார்.

"அவசர காரியம்தான் அப்பா! மோகல் மகாராணாவின் கொலைக்குக் காரணமான பாதகர்களில் சாகாவையும் மைராவையும் பழி தீர்த்ததோடு நாம் நின்று விட்டோம். அது எவ்வளவு தவறு என்பது இப்போது தெரிந்து விட்டது! சதிக்குக் காரணமான அந்த இன்னொரு

சண்டாளன் மஹிபாவை அப்போதே நாம் தேடிப்பிடித்து அழித்திருக்க வேண்டும். தவறிவிட்டோம். அதை இப்போது சொல்லிப் பயனில்லை. மாளவ சுல்தானிடம் தஞ்சம் புகுந்திருந்த மஹிபா இப்போது சுல்தானையே மேவாரின் மீது படையெடுக்கக் கிளப்பிவிட்டிருக்கிறான். சிறிது காலமாகவே சுல்தானும் அடியோடு மாறிப் போய்ப் பல விதங்களிலும் தெறிகெட்டு வருவதாகத் தெரியவருகிறது. ஆதாரபூர்வமான தகவல்கள் வந்திருக்கின்றன....." என்று பொரிந்து கொட்டினான் ராய்மல்.

"இப்போது என்ன செய்யவேண்டும் என்கிறாய், குழந்தாய்! பெரியப்பா சண்டன்ஜியையும், மந்திரி-பிரதானி களையும் கலந்தாலோசித்து முடிவு செய்வோம்" என்றார் ராணா.

"ஒருவாறு அந்த முடிவு நமக்குத் தெரிந்ததுதானே அப்பா? மஹிபாவை நம் வசம் ஒப்பிக்க வேண்டும் என்று நீங்கள் சுல்தானுக்கு நிருபம் அனுப்ப வேண்டியதே முதல் நடவடிக்கையாக இருக்கும். அதற்கு சுல்தான் இப்போது தடம் புரண்டு போயிருக்கிற போக்கில் ஒப்பமாட்டான். பிறகு என்ன, யுத்தம்தான்! ஆனால் அதெல்லாம் போகப் போக நடக்க வேண்டிய காரியங்கள். உடனடியாகச் செய்ய வேண்டியதற்கு நான் ஏற்பாடு செய்துவிட்டேன். இந்த விவகாரம் ஒரு வழியாகத் தீருமளவும் துர்க்காதேவிக்கு ஹவன் செய்ய ஏற்பாடு செய்துவிட்டேன். நாளையிலிருந்து ஹோமம் தொடங்கிவிடும். நீங்கள்தான் காப்புக் கட்டிக்கொள்ள வேண்டும்" என்றான் இளவரசன்.

ராணாவுக்கு உடம்பு புல்லரித்தது. ராய்மல்லை அப்படியே வாரிச் சேர்த்துக் கட்டிக்கொண்டு அவனுடைய தோளில் முகத்தைப் பதித்துக்கொண்டார். அவரது கண்களி லிருந்து வழிந்த ஆனந்தபாஷ்பம் ராய்மல்லின் தோளை நனைத்த அதேபோதில், ராய்மல்லின் கண்களிலிருந்து பெருகிய நீர் ராணாவின் கன்னங்களை ஈரமாக்கின.

போர்த்துடிப்பு மிகுந்த ராய்மல், தானே ரட்சை கட்டிக் கொள்ளாமல் தந்தையை யுத்தரங்கத்துக்கு அனுப்ப முற்பட்டு விட்டான்.

அதாவது, அவன் கும்பராணாவைக் காப்பாற்றி விட்டான்! ஆம். சண்டீஹோமத்துக்காகக் காப்புக் கட்டிக் கொண்டவர்கள் வேள்வி பூர்த்தியாகும் வரையில் பிரம்மசரியம் அநுஷ்டித்தாக வேண்டும்!

அங்கே மீரா கும்மிருட்டுச் சூழ்ந்த அறையில் அனலிடைப் புழுவாகச் சுருண்டுகொண்டிருந்தாள்.

கதவு திறக்கும் சத்தம் கேட்டது. பதறிவிட்டாள் மீரா. அவள் சொன்னதை ரத்தன் கேட்கவில்லையா? கேட்கவில்லை என்றால் என்ன அர்த்தம்? தன் உத்தரவுக்கும் மேலான மகாராணாவின் உத்தரவில்தான் அவள் கதவைத் திறக்கிறாளோ?

'இல்லை....கதவு திறக்கவேயில்லை. என்னுடைய பிரமை தான். பிரமையா? இதோ படீரென்று கதவு பிளந்துகொண்டு விட்டதே! கதவுதான்! ஆனால் இந்தச் சயனக் கிருகத்தின் கதவல்ல; என் நெஞ்சின் கதவே பிளந்து கொண்டு விட்டது! நான் அழுத்தி அழுத்திச் சாத்தியபோதிலும் அது தாபத் தீயில் வெடித்துத் திறந்துகொண்டுவிட்டது. அந்தக் கதவத்தைத் தள்ளிக் கொண்டு ஆகா, இதோ கிரிதரன் — என் ஐயன் கிரிதரன் — என் பிரபு கிரிதரன் — என் ஸ்வாமி கிரிதரன் என் முன்னே வந்து நிற்கிறான்!

மீராவினால் தன் கண்களையே நம்ப முடியவில்லை.

நேருக்கு நேராக, நெருக்கத்திலும் நெருக்கமாகக் கண்ணன் வந்து நிற்கிறான்! அவனுக்கே உரிய காரொளி அறையின் காரிருளைக் கிழிக்க, அவனது முடியிலும் திருமார்பிலும் கரங்களிலும் அணிந்துள்ள திருவாபரணங் களின் ஒளி அதில் மாற்றொளி முலாமிடுகிறது!

'அவனிடம் என்ன பேசுவது? வந்தாயே என்று வாழ்த்து வதா! இத்தனை நாட்கள் வராமல் இருந்தாயே என்று வைவதா? தன்னை நூறாயிரம் விதத்தில் வதைத்ததற்காக அவனிடம் கோபிப்பதா? அல்லது அந்த வதையை அற்பமாக்கிவிடும் இந்தத் திவ்விய தரிசனத்தைத் துதித்துப் பாடுவதா?'

கோபாலனின் பாதகமலங்களில் பனித்துளி போல் சில்லென்று விழுந்தாள் மீரா.

கண்ணனின் பாதத்தில் அவள் கண்களை மூடிப் பொருத்தியிருந்த போதிலும் அவனது திருக்கரங்கள் தனது தோளைப் பற்றி எடுத்து நிறுத்துவதற்காகத் தழைந்து தழைந்து வருவதை அவளுக்கு உள்ளுணர்ச்சி உணர்த்தியது.

சரேலென்று எழுந்திருந்தாள் மீரா! கண்ணனிடமிருந்து விலகி அந்த அறையின் மூலைக்குப் பாய்ந்து சென்றாள்!

பிரேமை கொழிக்கும் கண்களால் மாதவன் அவளைப் பார்த்தான். நேற்றிரவு ராணா அவளைப் பார்த்தபோது மீரா எப்படித் திகிலடைந்தாளோ அதே திகில் இன்றும் அவளைப் பற்றிக்கொண்டது.

இதயம் பிளந்து விடும்படி கானம் செய்தாள்:

'தொட்டுவிடாதே என்னை – கண்ணா!
விட்டு விலகிச் செல்வாய்

பிறருக்குரிய பெண் நான் – என்றன்
பிரேமையை இனி நம்பாதே!

பரதாரமான என்னை – உன்றன்
கரத்தினால் தீண்டி விடாதே!

கண்ணாரக் காதலைக் காட்டி – எனது
பெண்ணறம் தன்னைக் கொல்லாதே!

நந்த குமாரன் நிற்கும் எவ்விடமும்
பிருந்தாவனமே அன்றோ?
முறை மறந்(து) அநீதி செய்ய
இறையவனே, இது இடமோ?'

கிரிதரன் சிரித்தான்.

அவனுடைய உள்ளடங்கிய நுண்ணிய உதரமும் கழையனைய திருத்தோள்களும் குலுங்க, முல்லைப் பல்லொளி பவள அதரத்தில் பிரதிபலிக்கக் குலுங்கிக் குலுங்கிச் சிரித்தான்.

அந்தச் சிரிப்பொலி அடங்க அடங்க அதிலேயே அவனது மோகன மூர்த்தமும் அடங்கி அடங்கி மறைய லாயிற்று.

மீராவின் ஒவ்வொரு மயிர்க்காலிலும் ஓராயிரம் வெடிகள் வெடித்தன. 'ஐயோ, அந்தக் கால்கள்! அவை முற்றும் மறைவதற்குமுன் பிடித்துக்கொண்டுவிட வேண்டும். 'விட்டு விடாதே' என்று யாரிடம் அனவரதமும் முறையிட்டுப் புலம்பினேனோ, அவனையே, 'விட்டுப் போ' என்று துரத்துகிறேனே, பாவி! கூடாது. அவன் என்னை விட்டுப் போக விடக்கூடாது. அதோ, அந்தச் சரணயுகளங்களைப் பற்றிக்கொள்ள வேண்டியதுதான். கணவனின் பாதமாக எண்ணி அவற்றை நான் பற்ற மாட்டேன். என் தெய்வத்தின் பாதமாகக் கருதிப் பற்றிக் கொள்வேன். கையினால் பற்ற முடியாமல் அவை மறைந்து விட்டாலும், அவற்றின் ஸ்தூலமான ஸ்பரிச பாக்கியம் எனக்குக் கிட்டாவிடினும், என் மனமாவது அந்தத் திருவடிகளை விட்டு நீங்காமல் நிற்கட்டும்.'

மீரா அலறினாள்:

'மீராவின் அருள் நாகரனே!
வாராது வந்த பண்பாளா
ஆரா அமுத சரணத்தில்
மாறாதென் மனம் நில்லாதோ?'

* * *

**மா**தவன் குலுங்கக் குலுங்கச் சிரித்தான். அவனது நுட்பமான அதரமும் கழையனைய தோள்களும் குலுங்க, முத்துப் பல்லொளி பவள இதழில் மினுமினுக்க மீராவின் முன் எப்படிச் சிரித்தானோ அப்படியே மதுமங்களனின் முன்பும் இப்போது சிரித்தான்.

கண்ணனுக்குப் புத்தி தடம் புரண்டுவிட்டதோ என்று கூட மதுவுக்கு ஐயமாகிவிட்டது. "ஏன் கண்ணா, எதற்காக இப்படிச் சிரிக்கிறாய்?" என்று பயந்துகொண்டே கேட்டான் மதுமங்கள்.

"சிரிக்காமல் என்ன செய்யச் சொல்கிறாய்? மீராவின் போக்குத்தான் எத்தனை விசித்திரம் பார். 'வா வா' என்று என்னை அழைத்தாள். வந்தவுடன், 'போ போ' என்று துரத்தினாள். 'விடாதே' என்று புலம்பியவளே பிறகு, 'தொடாதே' என்று சூளுரைத்தாள். அவள் சொற்படியே நான் விட்டுப் பிரிந்தாலும், 'பாதத்தைத் தா' என்று மீண்டும் கதறினாள். 'முறை கெட்டவனே, பெண் தர்மத்தைச் சிதைக்க வந்தாயா?' என்று எரிந்த விழுந்த அவளே என்னை 'நாகரன்' என்று பண்பாளனாகவும் பாராட்டிப் பாடினாள். அவளது புத்தியை நான் எப்படி யெல்லாம் புரட்டிக் கலக்கியிருந்தால் அவள் இப்படி மாறுபாடாக நடந்திருப்பாள்?" என்றான் கண்ணன்.

"இதற்காக வருந்தாதே, கண்ணா!" என்றான் மது. "கடலைக் கலக்கிக் கடைந்துதானே அன்று நீ அமுதம் எடுத்துத் தந்தாய்? மீரா ஒரு சமுத்திரம்; அவள் மனத்தை நீ கலக்கினாலொழிய இசையமுதம் எப்படிப் பிறக்க முடியும்?" என்றான்.

எளிய மது சிததிராலங்காரமாகப் பேசிவிட்டான். எளிய தழைகளுக்கிடையே நானா வர்ண பேதங்களுடன் சித்திராலங்காரமான பூக்கள் மலர்வதுண்டு அல்லவா?

"அப்புறம் சொல், கிருஷ்ணா" என்றான் மதுமங்களன்.

"சொல்ல என்ன இருக்கிறது? மீரா என்னை ஆண்டவனாக மட்டும்தான் பாவிக்கத் தயாராயிருக்கிறாள். என்னால் அவளை நாயகியாகத்தான் பார்க்க முடிகிறது. நான் அந்த நோக்கில் அவளைப் பார்த்தால் தருமம் கெட்டவன் என்பது அவள் எண்ணம்!" கண்ணன் மதுமங்களனின் முகத்தைப் பார்த்தான்.

மீராவின் கருத்து தவறல்லவே என்பது போன்ற குறிப்புத்தான் மதுவின் முகத்திலும் நிழலாடியது.

"என்ன மது? சாஸ்திரோக்தமாக ராணாவின் தர்ம பத்தினியாகிவிட்டவள் மீரா. அதன் பிறகு அவளை நான் நாயகியாகப் பார்ப்பது அக்கிரமம்தானே? அந்த அக்கிரமத் துக்காக என்னை அவள் அருவருத்து ஒதுக்கித் தள்ளியது பரம நியாயம்தானே?" கண்ணன் சிரிக்கத் தொடங்கிவிட்டான்.

மாடத்தில் நின்றுகொண்டிருந்த மீராவின் கண்களி லிருந்து ஆறாக நீர் வழிந்தது. கனிகள் வெம்பி வெம்பி வாடிப் போனால் நீர் கசியுமே, அப்படி வெம்பி, வெதும்பி, வாடி வாடித்தான் மீரா கண்ணீர் உகுத்துக்கொண்டு நின்றாள்.

'தர்மம் எவனது இயல்போ, எவன் தர்மநாயகனோ, தர்மத்தின் ஸ்வரூபம் எவனோ அவன் அதர்மம் செய்திருப்பானா? அவனை அற்பப் பதரான நான் அக்கிரமக்காரன் என்று சாடி விரட்டுவதா? அப்படியும் அவன் ஏன் இன்று மீளவும் இங்கு வந்திருக்கிறான்? என்னை ஒரு பழிச்சொல் கூறாமல் என் கதை முழுதையும் சுவைத்துச் சுவைத்துச் சொல்கிறானே!"

"கண்ணா, என்னை இம்சிக்காதே, மேலே சம்பவங்களைச் சொல்" என்றான் மதுமங்களன்.

அப்புறம் அதிகமாகச் சொல்வதற்கு எதுவுமில்லை.

ஆட்சி புரிவோருக்கும் திடீர் கிறுக்குப் பிடிப்பது உண்டுதானே? மாளவ சுல்தான் முகம்மது கில்ஜி — பல்லாண்டு முன்னர் சண்டனுக்கு வரவேற்பளித்த அவனேதான் — அந்தக் கிழவனுக்குக் கிறுக்குப் பிடித்தது! திமிர்த்தனமும், மற்ற எல்லாத் தீமைகளும் அவனைப் பற்றிக்கொண்டன. எனவே அவனிடம் அடைக்கலம் புகுந்த மஹிபாவைக் கில்ஜி சித்தோரில் ஒப்பித்து விட வேண்டும் என்று கும்பராணா செய்தி அனுப்பியபோது அதற்கு அவன் இணங்கவில்லை.

உடனே போர் ஆயத்தங்கள் தொடங்கின. சீசோதிய-ராட்டோர் பகை ஒருவழியாகத் தீர்ந்து சாந்தமும் சமாதானமும் விரியத் தொடங்கிய போதில் மீண்டும் யுத்த லக்ஷ்மி பிரசன்னமாகிவிட்டாள்.

யுத்தம் வலுக்குமுன்பு அவசரமாக ராய்மல்லுக்கும் ஜோதாவின் மகள் சிருங்கார தேவிக்கும் திருமணம் நடந்தேறியது.

திருமணத்தின்போது தன் தாயைக் காணலாம் என்று ஆவலோடு வந்த மீரா அவளது மறைவுச் செய்தியைக் கேட்டு அதிர்ந்துபோனாள். மகளைக் கணவன் கையில் ஒப்படைக்க வேண்டும் என்பதற்காகவே உடன்கட்டை ஏறாமலிருந்த சந்திரமுகி, மீராவைச் சித்தோருக்கு அனுப்பிய பின் ஒரு சுப முகூர்த்தத்தில் — அது ராய்மல்லின் விவாக சுப முகூர்த்தத்திற்கு முந்தைய வாரம்தான் — சந்தன மரத் தண்டொன்றை ரத்தன்சிங்காகப் பாவித்து, அதைத் தகனம் செய்து, அந்த அக்கினியில் தானும் முழுகிப் பதிவிரதா லோகத்தில் இழைத்த சந்தனமாக மணந்துவிட்டாள்.

இச்செய்தி திருமண முகூர்த்தம் முடிந்த பின்னரே வந்தது. 'தாய் மறைந்ததும்கூட ஒரு விதத்தில் நல்லதுதான்! நான் மேவார் மகாராணியாக வாழ்வாங்கு வாழ்வேன் என்று அவள் எண்ணியிருப்பாள். நான் படுகிற இன்னலையும் சிறுமையையும் என் பைத்தியக்காரப் போக்கையும் அறியாமல் அவள் போனதே நல்லது' என்று மீரா மனத்தை திடப்படுத்திக் கொண்டாள்.

**சி**ருங்கார தேவியைச் சித்தோருக்கு அழைத்த கையோடு ராய்மல்லிடம் நாட்டு நிர்வாகத்தை ஒப்பித்துவிட்டு மாளவ சுல்தானோடு போருக்குப் புறப்பட்டார் மகாராணா. ஆயிரத்து நானூறு யானைகளும் ஒரு லட்சம் புரவிகளும் அவருடன் செல்ல ஆயத்தமாயின.

அது மீராவின் நெஞ்சை நெகிழ்வித்த ஒரு தினம். ஏகலிங்கர் ஆலயத்துக்குச் சென்ற மகாராணா போர்க்களத்தில் தமக்கு வீரசுவர்க்கம் கிடைத்தாலே மீராவுக்கும் தமக்கும் அமைதி கிட்டும் என்று பிரார்த்தித்துவிட்டுக் கிளம்பினார்.

பட்டமகிஷியிடம் விடைபெற்று, அவள் நெற்றியில் அணிவிக்கும் திலகத்துடனேயே யுத்தரங்கம் செல்வது க்ஷத்திரியர் வழக்கம். 'மீரா எப்படி நடந்து கொள்வாளோ?'

என்று ஐயத்துடனேயே ராஜ ஸ்திரீகள் குழுமியிருந்த மண்டபத்துக்கு வந்தார் ராணா.

ஆரத்தித் தட்டுடன் வந்த மீராவை உணர்ச்சிப் பெருக்கு மொத்தி மோதியது. 'மனம் போல மாங்கலியம் என்பார்களே, இவர் போருக்குச் சென்று நல்லபடியாகத் திரும்ப வேண்டுமே! கிரிதரா, உன்னை எவ்வளவுதான் ஒதுக்கினாலும் வேறு யாரிடம் வேண்டிக்கொள்வேன்? நீதான் அவரை மாளவத்திலிருந்து மீளவும் வெற்றிவீரராகக் கொண்டுவந்து சேர்க்கவேண்டும். இல்லாவிடில் என்னை நானே மன்னித்துக் கொள்ள முடியாது' என்று உள்ளம் நீராளமாக உருகிப் பிரார்த்தித்தாள்.

முதலில் சௌபாக்கியதேவியை நமஸ்கரித்தார் ராணா. அவள் அவர் உச்சந்தலையில் இரு கரங்களையும் அழுந்த வைத்து விட்டுப் பொற்காசு ஒன்றால் அவரது சிரத்தைச் சுற்றி அதனை வேதியர் ஒருவருக்குத் தாம்பூலத்துடன் அளித்தாள்.

"வென்று வா என்று உன்னிடம் நான் சொல்ல வேண்டியதேயில்லை. துர்க்கா பரமேசுவரி என்றும் உன்னுடன் இருக்கிறாள். இதுவரை நீ செய்த வீர சாகஸங்களுக்கு மேலாக இப்போது நான் கேட்கப் போகிறேன்" என்று நியாயமான கர்வத்துடன் உடல் பூரித்துக் கூறினாள் சௌபாக்கியதேவி. அர்ஜுனனுக்குக் குந்திதேவி ஆசி தந்து அனுப்பியதுபோல் இருந்தது அந்தக் காட்சி.

அடுத்து உதயா அண்ணனிடம் ஓடிவந்தாள். நீர் மல்கும் கண்களுடன், கனத்த நெஞ்சுடன் அவரது கைகளில் ரட்சையைக் கட்டினாள். அது வெறும் நூல் சரடல்ல. தங்கச் சரட்டில் நல் முத்து இழைத்த ஓர் அற்புத ஆபரணமாகவே இருந்தது. ஆம், அன்று ஸாவன் மாதத்தின் புனித நாள். 'ராகி' என்ற சுபதினம். தங்கள் சோதரரின் நல் வாழ்வுக்காகச் சகோதரிகள் நோன்பிருந்து ரட்சா பந்தனமாகச் சரடுகட்டும் நன்னாள் அது.

மீராவும் ராணாவிடம் வேகமாக வந்தாள். திருமணத்தின்போது ராணா அவள் கைகளில் கட்டியிருந்த சரட்டினை அவசரமாக அவிழ்த்தாள். தன் தலையில் செருகியிருந்த ஒரு சண்பகப் புஷ்பத்தை எடுத்து அதில் முடிந்தாள். ராணாவின் கரத்தைப் பற்றி அதில் அந்தச் சரட்டை மும்முறை சுற்றிக் கட்டினாள். அதற்கு மற்றவர்கள் என்ன அர்த்தம் செய்துகொண்டார்களோ? மீரா மனத்தில் நினைத்ததை ராணா நன்றாகப் புரிந்து கொண்டு விட்டார். ஒரு துச்சமான உறவை அவள் உச்சமாக்கி நிறைவு செய்துவிட்டாள்!

அதன் பின் மீராவின் மனத்திலோ உடலிலோ நடுக்கம் எதுவும் இல்லை. ராணாவுக்குப் பாங்காக ஆரத்தி சுழற்றித் திலகமிட்டு வணங்கி வழியனுப்பினாள்.

கும்பராணாவின் பிரார்த்தனைக்கு ஏகலிங்கர் செவிசாய்க்கவில்லை. அவருக்குப் போர்க்களத்தில் வீரமரணம் கிட்டவில்லை. விஜயலக்ஷ்மியே மாலையிட்டாள்.

ஸாரங்கபூரில் மகாராணாவின் படைகளிடம் கில்ஜியின் சேனை செம்மையான தோல்வி கண்டது. கில்ஜி பின் வாங்கினான். மாண்டுவிலுள்ள தன் கோட்டைக்குள் சென்று பதுங்கினான். மகாராணா அந்தக் கோட்டையை வளைத்துக் கொண்டு முற்றுகையிட்டார். அடிபணிவது தவிர வேறு வழி யில்லை என்று கண்டான் கில்ஜி. மஹிபாவை மகாராணாவிடம் ஒப்பித்துவிட முடிவு செய்தான். ஆனால் மஹிபா சாமர்த்தியமாகத் தப்பித்துக்கொண்டு கூர்ஜர சுல்தான் குத்புதீனைச் சரண் அடைந்தான். சில அரசியல்-ராணுவ காரணங்களால் கும்பர் கூர்ஜரப் படையெடுப்புப் பற்றி எண்ணவில்லை. அப்போதைய படையெடுப்பை மட்டும் தொடர்ந்து, மாளவத்தின் கில்ஜியை வென்று வாகை சூடி, அவனைக் கைதியாக்கினார்.

* * *

மதுமங்களிடம் கண்ணன் தொடருவான்:

''இன்னும் ஓரிரு தினங்களில் வெற்றி வீரராகக் கும்பராணா சித்தோர்க் கோட்டைக்கு வந்துவிடுவார். சண்டையும் சண்டிஹோமமும் வந்து மீராவையும் ராணாவையும் நடுவில் காப்பாற்றின! இப்போது மீரா வெற்றி வீரரான ராணாவை வரவேற்க ஓர் அன்புச் சகோதரிபோல் ஆவலாக இருக்கும்போதே இந்தச் சகோதரத்துவத்தை எப்படி நடைமுறையில் பயிலுவது என்று குழம்பிக்கொண்டிருக்கிறாள். அதுவும் இன்று மதனத் திரயோதசியா? அவளையும் ராணாவையும் சேர்த்துச் சேர்த்துப் பாடிய சிருங்காரக் கவிதைகளால் புண்ணாகியிருக்கிறாள்.

"ஹூம், ராணா வந்தபின் என்னவெல்லாம் நடக்கப் போகிறதோ?" பெருமூச்செறிந்தான் கண்ணன்.

"என்ன கண்ணா! உலகத்தையே ஆட்டிப் படைக்கிற நீ — எல்லாம் அறிந்த நீ — 'என்ன நடக்கப் போகிறதோ?' என்று கேள்வி கேட்கிறாயே! நான் கேட்கவேண்டிய கேள்வி அல்லவா அது?" என்றான் மதுமங்களன்.

"நீ கேட்டாலும் நான் விடை சொல்ல மாட்டேன். நீயாகவே பொறுத்திருந்து, இங்கேயே இருந்து பார்த்துத் தெரிந்துகொள்ள வேண்டியதுதான்" என்றான் கண்ணன்.

"அப்படியானால் என்னை இங்கேயே விட்டுவிட்டு நீ மட்டும் கோலோகம் செல்லப் போகிறாயாக்கும்!"

"ஆம், ஆயின், உன்னை இங்கே விட்டாலும் இந்த உருவத்தில் அல்ல."

சட்டென்று சம்பாஷணை நின்றது. மீரா காத்துக் காத்துப் பார்த்தாள். அதன்பின் கண்ணன் குரலோ, மதுவின் குரலோ கேட்கவேயில்லை.

மீரா ஓர் அசாதாரணமான உறுதியை உண்டாக்கிக் கொண்டு மாடத்திலிருந்து இறங்கி வந்தாள். கண்ணன் அமர்ந்திருந்த தடாகக்கரைக்கு வந்து சேர்ந்தாள்.

கண்ணனையும் அவன் தோழனையும் காணவில்லை. தடாகப் படிக்கட்டில், கரதாளத்தை* மட்டும் கண்டாள்.

'எங்கிருந்து வந்தது இது?' யோசித்தாள் மீரா.

'உன்னை இந்த உருவத்தில் இங்கு விட்டுச் செல்லப் போவதில்லை' — மதுவிடம் கண்ணன் கூறியது நினைவு வந்தது.

தன்னுடைய கதையை உருகி உருகிக் கேட்ட மதுவையே தாயன்புடன் எடுத்துக்கொள்வதுபோல் கரதாளத்தை எடுத்துக் கொண்டாள் மீரா.

அதைப் பார்த்துப் பேசினாள்: "இந்த உலகில் எனக்குத் தம்புராதான் ஒரே சகியாக இருந்தது. இன்று நீயும் வந்தாய். நீ வந்ததே எனக்கு சுபசகுனம். ஏனென்றால் தம்புராவை வைத்துக்கொண்டு ஏகாந்தமாக யாரும் அறியாமலே அழுது கொண்டிருந்தேன். இனி தாளம் கொட்டிச் சப்தமிட்டுப் பகிரங்கமாகவே நான் ஆடிப்பாடக் காலம் வந்துவிட்டது என்பதை நீ எனக்கு உணர்த்துகிறாயா?"

'ஆம் ஆம்' என்பது போல் ஆலய மணி ஒலித்தது.

பட்சிகள் கலகல த்வனியிடத் தொடங்கின. வான வீதியில் வண்ண உடை தரித்துப் பவனி வந்தாள் உஷை.

'பொழுது மட்டும் விடிகிறதா? எனக்கும் விடிவு பிறந்து விட்டதா?' என்று மீரா கேட்டுக்கொண்டாள்.

* சிப்ளாக் கட்டை

# 19. "அலக் நிரஞ்ஜன்"

அன்று சித்தோர் அல்லோலகல்லோலப்பட்டது. அரண்மனையிலிருந்து குடில்வரையில் எங்கும் மகிழ்ச்சி கொந்தளித்துக் கொண்டிருந்தது. ஆண் பெண் வித்தியாசமின்றி, பெரியவர், சிறியவர் என்ற வித்தியாசமின்றி அனைவரும் உவகைக் கடலில் மூழ்கியிருந்தார்கள்.

மகாராணா கும்பாஜி தமது வீரப் பிரதாப சாகஸங்களுக்கெல்லாம் சிரோமணியாக மாளவத்தை வென்று, அதோடு மட்டுமன்றி, மாளவத்தின் சுல்தானாகிய முகம்மது கில்ஜியைச் சிறைப்படுத்தித் தம்முடன் சித்தோர்க் கோட்டைக்கு அழைத்து வரும்போது அந்த மாவீரரை வரவேற்கத் தலைநகரம் முழுதும் ஆர்வ வெறியுடன் ஆயத்தமானதில் அதிசயம் என்ன?

சித்தோர்க் கோட்டையின் பல மதில்களில் விநாயகன், ஆஞ்சநேயன், ஸ்ரீ ராமன் ஆகியோரின் பெயர்களில் அமைந்த 'போள்' என்ற நுழைவாயில்களில் மக்கள் கட்டுக்கடங்காமல் குழுமி நின்றனர். வெற்றி வீரராகத் திரும்பும் ராவல்ஜியைக் கண்ணாரக் கண்டு போற்ற வேண்டும் என்று அவர்கள் விரும்பியது மட்டுமில்லை. தோல்வியுற்றுப் பிடித்து வரப்படும் கில்ஜியைக் கண்டு நகையாட வேண்டும் என்றும் விரும்பினர்.

மகாராணா மத்தகஜத்தின்மீது ஆரோகணித்து வருகிறார் என்றறிந்ததும் மக்களுக்குச் சற்று ஏமாற்றமாக ஆயிற்று. ஏனெனில் இதுபோன்ற சந்தர்ப்பங்களில் மன்னர் ரதத்தில் வருவதுதான் வழக்கம். அந்த ரதத்தின் பின் பகுதியில் தோல்வி கண்ட மன்னனைக் கயிற்றால் கட்டியிருப்பார்கள். ராணா யானை மீதமர்ந்து வந்தால் கில்ஜியை இந்தக் கோலத்தில் காண இயலாதே என்ற தாபம் சித்தோர் மக்களுக்கு உண்டாயிற்று.

மகாராணா கும்பர் வாரணேந்திரனின்மீது ஆரோகணித்துக் கோட்டை வாயிலுக்குள் பிரவேசித்தபோது, 'ஹர் ஹர் மஹாதேவ்! ஜேய், விஜயீ பவ், மஹா ராவல்ஜி!' என்ற ஒலி மக்கள் கண்டத்தின் உச்சத்தில் எழுந்து மேக மண்டலங்களைத் தொட்டது.

ஏகலிங்கர் ஆலயத்தின் பூஜாரி மகாராணாவுக்கு சண்டிகேசனிடமிருந்து பெற்ற சிவ நிர்மாலியங்களை அளித்தார். வயோதிகத்தினால் போர்க்களம் செல்ல

இயலாதிருந்த சண்டன் தன் பாதத்தில் பணிந்த கும்பரை ஆரத் தழுவிக்கொண்டார். தொண்டு கிழவியான பாட்டி ஹம்ஸாபாய் — கும்பரின் திருமணத்துக்கும் கூடச் சென்றிராதவள் — பேரனின் வெற்றி விஜயத்தைக் காண அங்கு வந்திருந்து அவரை உச்சி மோந்து ஆசிர்வதித்தாள். ராஜமாதா சௌபாக்கியதேவி பெற்ற உடல் புளகிக்கக் கும்பரின் சிரத்தில் இரு கரத்தையும் வைத்து, பொற்கழஞ்சால் அவரது தலையைச் சுற்றி, அதனை ஓர் அந்தணருக்கு அளித்தாள். உதயாவும் அண்ணன் கைகளை அன்போடு பிடித்து அழுத்திக்கொண்டு விம்மினாள். மீராவோ கையால் தொடாமலே கண்ணில் மட்டும் நிறைந்த வாஞ்சையைக் காட்டி அடக்கத்துடன் அவரை வரவேற்று, ஆலத்தி சுற்றி, திலகம் அணிவித்தாள்.

இத்தனை பேரும் ஆனந்தமுற்றிருக்கும்போது ராய்மல் மட்டும் தொங்கும் முகத்துடன் வந்து தந்தையை நமஸ்கரித்தான். "அப்பா, இவர்கள் யாவரும் ஸ்திரீகள்; பெரிய தாத்தா சண்டன்ஜி வயோதிகர். நான்தான் இளமை மிடுக்கிலும் ரணகளம் வராமல் உத்தர குமாரன்போல் அந்தப்புரத்தில் பதுங்கியிருந்து விட்டேன். எனக்குரிய வெற்றியை நீங்கள் அபகரித்து விட்டீர்கள்" என்றான்.

கும்பர் அவனது முகத்தை மிகுந்த பாசத்துடன் நோக்கிக் கன்னங்களை வழித்தார். "உன்னால்தான் எனக்கிந்த வெற்றி கிடைத்தது. சண்டீஹோம ரட்சையை என் கையில் கட்டிப் போருக்கு என்னை அனுப்பிவைத்ததே நீ அல்லவா? நான் மாளவத்தில் ஒரு வெற்றியைக் காணும்போதே சித்தோரில் இன்னொரு வெற்றியை ஈட்டி வைத்தவன் நீ அல்லவா?" என்றார்.

ராய்மல்லின் கண் கசிந்தது.

'கில்ஜி எங்கே?' என்று தேடிய லட்சோப லட்சம் கண்களுக்குத் தம்மை நம்ப முடியாத ஓர் அதிசயம் காத்திருந்தது.

கும்பராணாவின் யானையை அடுத்து வந்த இன்னொரு யானையின்மீது ஆரோகணித்து வந்தான் கில்ஜி. அவனுக்கு மனத்தில் எந்தவிதமான உரசலும் இருக்கக்கூடாது என்பதற்காகவும் மக்களால் அசம்பாவிதம் எதுவும் நிகழ்ந்துவிடக் கூடாது என்பதற்காகவும், 'பர்தான்' (பிரதான மந்திரி) தாரணகரும் அவனுடனே அம்பாரியில் அமர்ந்து உரையாடிக்

கொண்டு வந்தார். அந்தக் காட்சியின் உள்ளே கும்பரின் பெருந்தன்மை முற்றும் பொதிந்திருந்தது எனலாம். ஏனெனில் தாரணகர் ஒரு ஜைனர். ராணா தீவிர ஹிந்து சமயப் பற்றுள்ளவராயினும், தாரணகருக்கு ராஜநீதியிலிருந்த நிபுணத் தன்மையைக் கண்டு அவரையே பிரதமராக வைத்துக் கொண்டார். அதோடு மட்டுமின்றித் தாரணகர் வழிபடும் ரிஷப தேவர் என்ற ஜைன தீர்த்தங்கரருக்காகக் கும்பராணா தமது அற்புதக் கலைப்படைப்புக்களில் முதன்மை ஸ்தானம் வகிக்கும் சௌமுக ஆலயத்தை ராணாபுரியில் நிர்மாணித்துத் தந்திருந்தார்.

இந்த விவரத்தை யெல்லாம் மக்கள் பேசக் கேட்ட போது மீரா பூரித்துப்போனாள்.

சிறுபான்மையினரிடமும் அடிமைப்பட்டவர்களிடமும் ராணாவுக்கிருந்த தனியான பரிவையும் மதிப்புணர்ச்சியையும் மக்கள் போற்றிப் பேசினார்கள். கோலாக்கள் என்ற அடிமைகளுக்குப் பூர்வத்தில் கழுத்தைச் சுற்றிப் பெரிய வடம் இட்டு அடிமைத்தனத்தைப் பறையறைவது வழக்கமெனவும் கும்பராணாதான் இந்த வழக்கத்தை மாற்றி அவர்களின் இடது காலில் சிறிய தடயம் போட்டுக்கொண்டாலே போதுமென விதித்ததாகவும் அறிந்தபோது, 'எனக்கு மட்டும் அவர் சுதந்திரம் அளிக்காதிருந்துவிடுவாரா?' என்று மீரா தன்னையே கேட்டுக் கொண்டாள்.

நவதுர்க்கை, விநாயகர் முதலியவர்களை வணங்கி விட்டு, மண்டோர் இளவரசி சிருங்கார தேவி 'தஹேஜ்' கொண்டு வந்திருந்த ஆஞ்சநேயரையும் வழிபட்டுவிட்டு, லக்ஷ்மி போள், சாமுண்டா போள், தாரா போள், ராஜ் போள் முதலியவற்றைக் கடந்து ரங்கமஹல் வந்து சேர்ந்தார் கும்பராணா. அங்கு ராவ்தூதா தமது பேத்தியின் கணவரை வரவேற்பதற்காக மேர்தாவிலிருந்து வந்து காத்திருந்தார். முதுமை காரணமாக நலியாதிருந்த அந்த மகாரதரின் சக்தி, ரத்தன்சிங்கின் மரணத்துக்குப்பின் புத்திரசோகத்தில் பாதியாகி, மீராவின் புறப்பாட்டுக்குப் பின் கால்வாசியாகி, சந்திரமுகியின் மறைவுக்குப்பின் இப்போது வீசமாகி விட்டிருந்தது. கோட்டை வாயிலுக்கு வருவதற்குக்கூடத் திராணியற்றிருந்த அவர் ரங்கமஹலிலேயே காத்திருந்தார்.

"மேவார் செய்த பாக்கியமே! மேர்தா செய்த இரட்டிப்புப் பாக்கியமே! வாருங்கள் வாருங்கள்!" என்று

கும்பரைக் கைநீட்டி வரவேற்றார் ராவ்தூதா. அவர் கால்களில் விழுந்து பணிந்தார் ராணா.

"தகுதிக்குமேல் எவரையும் தலையில் தூக்கி வைத்துக் கொள்வதே அண்ணாவின் வழக்கம்" என்று கிசுகிசுத்தாள் ஊதா.

"நமக்கேனடியம்மா பொல்லாப்பு? வாயை மூடிக் கொண்டு கிடக்கவேண்டியவர்கள் நாம் என்பதை மறந்து விடாதே!" என்று மகளை அடக்கினாள் தாய்.

"நான் என்ன சொல்லிவிட்டேன்? அந்த மிலேச்சத் துருக்கனை யானைமேல் ஏற்றி அண்ணா அழைத்து வந்திருப்பது சகிக்கவில்லை. என் ஆற்றாமையைச் சொல்லிக் கொண்டேன்" என்று பேச்சை மாற்றிக்கொண்டாள் உதயா.

அறிவுக் கூர்மை மிகுந்த ராவ்தூதாவால் மீரா எத்தகைய சூழ்நிலையில் வாழ்கிறாள் என்பதை எளிதில் புரிந்து கொள்ள முடிந்தது. மீரா, புக்ககத்தில் எவர் தன்னை எப்படி நடத்தினாலும் முக்கியரான மகாராணா நல்லபடியே நடத்துகிறார் என்பதைத் தாத்தாவுக்கு நயன பாஷையில் புரிவிக்க விரும்பி, ராணாவைப் பார்த்துவிட்டுத் தாத்தாவை அர்த்தபுஷ்டியுடன் பார்த்தாள். அந்த அர்த்தத்தை அவர் வாங்கிக்கொண்டார்.

ராணாவுடன் உரையாடிக் கொண்டிருந்தபோது, "தாயை இழந்த மீராவை ஆறுதலுக்காக என்னுடன் மேர்தாவுக்கு அழைத்துப் போகட்டுமா?" என்று கேட்டார்.

தந்தை விடை சொல்லுமுன்பே ராய்மல், "ஆமாம், சித்திக்குக் கொஞ்சம் பிறந்தகத்துச் சீராட்டல் அவசியம்தான். நேற்று வந்த சிருங்கார தேவியே மண்டோர் போகத் துடிக்கிறாளே!" என்றான்.

ராணா அவனை நன்றியுடன் நோக்கி விட்டு ராவ்தூதாவுக்கு அநுமதி தந்தார்.

சம்பிரதாயப்படி ராவ்தூதா சௌபாக்கிய தேவியிடம் விஷயத்தைப் பிரஸ்தாவம் செய்தார். "குழந்தை சற்று இளைத்திருக்கிறாள்" என்று அவர் பேச்சைத் தொடங்கியவுடனேயே ராஜமாதாவுக்குப் பொத்துக்கொண்டு வந்து விட்டது.

"நாங்கள் உங்கள் பேத்தியைப் பட்டினி போட்டுக் கொல்லவில்லை. சாகிற காலத்தில் நான் எந்தப் புதிய பாரத்தையும் தலையில் போட்டுக்கொள்ள விரும்பவில்லை.

உங்கள் பேத்தி இருக்கும் திசைக்கே நான் போவதில்லை. அவனும்தான் அகமுடையாளின் மனம் கோணாமல் தாஸாநு தாஸனாக இருக்கிறான். என்னிடம் மரியாதைக்குக்கூடச் சொல்லாமல், பொண்டாட்டிக்காகப் பெரிய கோயில் கட்டுகிறான். பெண்டாட்டிக்காகப் பெரிய கோயில் என்றேனே! அவளையே அதில் பிரதிஷ்டை செய்தால்கூட நான் ஒன்றும் சொல்வதற்கில்லை. கிருஷ்ணனுக்காக இந்தக் கோயில் என்று பராபரியாகப் பேச்சுக் காதில் விழுகிறது. என்னை மதித்து யாரும் எதுவுமே சொல்வதில்லை. இந்தக் கோயில் கட்ட ஆரம்பித்தானோ இல்லையோ அந்த மிலேச்சனோடு சண்டை மூண்டது. மாகாளி சீற்றமடைந்தால் அப்புறம் இந்த ராஜ்யம் என்னாவது? இன்னும் என்ன அனர்த்தங்கள் வரப் போகின்றனவோ? அது சரி, ராஜ்யத்தைப் பற்றிக் கிழக்கோட்டானாகிய எனக்கு என்ன கவலை வேண்டிக் கிடக்கிறது? ராஜ்யத்துக்காகக் கவலைப்பட வேண்டிய மகாராணி உங்கள் பேத்தியல்லவா?" என்று அடுக்கிக்கொண்டே போனாள்.

ராவ்தூதா மிகுந்த பொறுமையுடன் தம்மைக் கட்டுப் படுத்திக் கொண்டார். "அம்மா, நான் சொல்வதைத் தப்பாக நினைக்காதீர்கள். கிருஷ்ணனுக்கு ஆலயம் எடுப்பதால் நன்மையே வந்தது என்றுதான் நினைக்கிறேன். கில்ஜி வாலாட் டியதனால் அல்லவா இன்று மாளவ சாம்ராஜ்யத்தையே நம் ஆளுகைக்குள் கொண்டுவர முடிந்தது?" என்று அவர் கூறி வரும்போதே இடைமறித்தாள் உதயா.

"நம் ஆளுகை என்று எங்களை ஏன் உங்களுடன் சேர்த்துக்கொள்கிறீர்கள்? எங்களுக்கு ஓர் ஆளுகையும் இல்லை. நானும் அம்மாவும் உங்கள் பேத்திக்கு அடங்கின சாதாரணப் பிரஜைகள்தான்" என்றாள்.

அந்த இளம் பெண் அவ்வளவு துடுக்காகப் பேசியும் கிழவர் தூதா பதில் பேசாமல் நாவைக் காத்துக்கொண்டார்.

"மீரா ஏதாகிலும் முன்பின்னாக நடந்துகொண்டாலும் நீங்கள் தவறாக நினைக்கக்கூடாது. அவளுடைய தாய் தந்தையர் அவளை விருப்பப்படியே விட்டு விட்டதால் ஒரு போக்கில் வளர்ந்துவிட்டாள் அவள். சிறிது காலம் நான் அவளை மேர்தாவுக்கு அழைத்துப்போய் உடன் வைத்துக் கொண்டு புக்கக வாழ்க்கைக்குப் பயிலுவிக்க விரும்புகிறேன். அதைச் சொல்லி அநுமதி பெற்றுப் போகத்தான் வந்தேன். தாயாரின் தேக வியோகத்தால் போலும், அவள் உடம்பு

மெலிந்திருப்பதைப் பார்த்துக் கொள்ளுப்பேரன் பிறக்கப் போகிறானோ என்று ஆசை ஆசையாய் நினைத்துப் பேச்சைத் தொடங்கினேன். நீங்கள் வித்தியாசமாக நினைத்துவிட்டீர்கள்" என்று மன்னிப்புக் கோரும் குரலில் கூறினார் தூதாராவ்.

"கொள்ளுப் பேரனாவது கொள்ளுப் பேரன்!" என்று பெருமூச்செறிந்தாள், சௌபாக்கியதேவி. "அவரவர்கள் வினை உடம்பை உருக்குகிறது. நான் ஓர் அப்பாவி; மனசிலிருப்பதைக் கொட்டிவிடுவேன். ராவ்ஜி, என் வாயைக் கிண்டிவிடாதீர்கள். பேத்தியை அழைத்துப்போவதற்கு என் அநுமதி தேவையே இல்லை. ஊதா சொன்னாற்போல் அந்த மகாராணியின் கீழுள்ள சாமானியப் பிரஜைகள்தான் நாங்கள்" என்றாள்.

நாம் கௌரவம் தரவேண்டிய ஸ்தானத்தில் ஒருவரை ஏற்றி வைக்கும்போது அவர்கள் கண்ணியமின்றிப் பேசி விட்டால், நமக்காக அன்றி அவர்களுக்காகவே நாம் சங்கடப் படுவதுண்டல்லவா? ராவ்தூதா அப்படித்தான் சங்கடப் பட்டார்.

வேரைப் பிடுங்கிப் பார்த்தால் செடி என்ன பாடுபடும்? ஒவ்வொரு மண்ணும் ஒரு பழங்கதையை நினைவுறுத்துகிற மேர்தாவுக்குத் திரும்பிய மீராவின் சித்தம் ஆதியில் அவள் கொண்ட கிருஷ்ணப் பிரேமையின் வேரையே கல்லிக் கல்லி அவள் கண்முன் காட்டியது. கண்ணன் காதலுக்கு அங்குரார்ப்பணம் செய்த தூதாசரஸ், அது இலைவிட்ட டாகுர்த் துவாரம், அதில் மொட்டிட்ட ரூபரின் வழிபாட்டுக் கூடம், அவனோடு அவள் துயின்ற மாளிகைச் சயனம் — ஒவ்வொன்றையும் காணக் காண பூகர்ப்பமாகக் குமுறிக் கனன்று கனத்தது மீராவின் இதயம்.

ராவ் தூதாவால் பேத்தியின் போக்கிலிருந்து எதுவும் திட்டவட்டமாகப் புரிந்துகொள்ள முடியவில்லை. முன் போலவே சோதிடனையும் வைத்தியனையும் வரவழைத்தார் அந்தக் கிழவர்.

"அம்பை எய்த பாவிக்குத்தான் அதற்குச் சிகித்ஸையும் தெரியும். நீ போய் வா; அப்பனே!" என்று கூறி மருத்துவரை அனுப்பி வைத்தாள் மீரா.

அப்புறம் சோதிடர் வந்தார்.

'நாலு வைத்தியரும் இனிமேல் நம்புதற்கில்லை என்றார்;
பாலத்துச் சோசியனும் கிரகம் படுத்தும் என்று விட்டான்'

என்று பாரதியார் பாடினார். மீராவையும் மாறாத பைத்தியம் என்றே வைத்தியர்கள் கைவிட்டனர். ஆனால் சோதிடர் மட்டும், 'கிரகம் படுத்தும்' என்று கூறவில்லை. முன்பு இதே சோதிடரிடம், 'பரஞ்சோதியுடன் நான் ஜோடி சேர்வேனா என்று சோதித்துச் சொல்வீர்!' என்று மீரா வேண்டிக் கொண்டிருக்கிறாள். அதிலிருந்து இன்றும் மாறாதிருக்கும் மீராவைக் கண்டு அநுபவஸ்தரான அந்தச் சோதிடர் விஷயத்தை ஊகித்தார். 'கிரகத்தின் சம்பந்தமே இல்லாத விஷயம் இது. கண்ணன் காதல் ஏற்படுவது கிரகத்துக்கு மேம்பட்ட அநுக்கிரகம் ஒன்றுக்கே உரிய விஷயம்' என்று தெளிந்துகொண்டார்.

"தேவி, தங்கள் மனோரதம் நிச்சயம் பூர்த்தியாகும்" என்றார்.

மீரா அவநம்பிக்கையுடன் சிரித்தாள்.

ஒரு வழியாக சிசோதிய-ராட்டோர் பகைமைகள் தீர்ந்த பிறகு மேர்தாவுக்குப் புதுவாழ்வு பிறந்தது. பகைமைகள் காரண மாகக் கண்ணன் கோயிலே பாலைவனமாவதைக் கண்டு துடித்து இறந்தான் மீராவின் தந்தை. ஆனால் இப்போது துவேஷங்கள் மாய்ந்ததால் மறுபடியும் மேர்தாவில் பக்தி பெருகியது. மீண்டும் பலதரப்பட்ட அடியார்கள் வரத் தொடங்கியிருந்தனர். அவர்களில் யோகம் பயிலும் கோரக் நாத சம்பிரதாயத்தினர் சிலர் மீரா அங்கிருக்கும் சமயத்தில் வந்து சேர்ந்தனர்.

"அலக் நிரஞ்ஜன்" என்று அவர்கள் கோஷித்துக் கொண்டு அரண்மனைக்குள் நுழைந்தபோதே மீராவுக்குச் சிரிப்பு வந்தது. அதே பொழுதில் ஓர் ஆர்வமும், குதூகலமும் கூட ஏற்பட்டன. கண்ணனின் மற்றொரு மாய லீலை அது!

'அலக் நிரஞ்ஜனாமே, அலக் நிரஞ்ஜன்!' என்று தனக்குத் தானே சொல்லிக்கொண்டு மீரா நகைத்தாள்.

'அலக் என்றால் 'காண முடியாதவன்' என்பது பொருள். ஆனால் நானோ அவனை நேருக்கு நேராகக் கண்டிருக்கிறேன். நிரஞ்ஜன்-மாசு இல்லாதவன் என்று இவர்கள் கூறுகிறார்கள். நானோ அவனை அஞ்ஜன வண்ணக் கரியவனாகவே அல்லவா கண்டேன்?' மீரா, யோகி கோஷ்டிக்கு முன் ஓடி வந்தாள்.

"இனிமேல் வீடு வீடாக 'அலக் நிரஞ்ஜன்' என்று கத்திக் கொண்டு சுற்றாதீர்கள். 'லக் அஞ்ஜன்' என்று கோஷித்துக் கொண்டு செல்லுங்கள்" என்றாள்.

அந்தக் கோஷ்டியின் தலைவர் மீராவை உற்று நோக்கினர்.

யோக சக்தி நிரம்பிய அவரது கண்களால் மீராவின் உள்ளப் பிணியை ஓரளவு அகழ்ந்து காண முடிந்தது.

"தேவீ! உங்கள் அநுபவத்தை முன்வைத்து 'லக் அஞ்ஜன்' என்கிறீர்கள். ஆனால் இந்த அநுபவத்தால் நீங்கள் கண்டிருக்கிற விளைவு என்ன? எல்லையற்ற கலக்கமும் துயரமும்தானே? உங்கள் தோற்றமே அதைச் சொல்கிறதே! ஆனால், 'அலக் நிரஞ்ஜன்' மார்க்கத்தில் செல்லும் எங்களைப் பாருங்கள். எங்களுக்கு எந்தக் கவலையும் இல்லை, எவ்விதக் குழப்பமும் இல்லை. பரம நிம்மதியாக, பரம சாந்தமாக, பரம திருப்தியாக இருக்கிறோம்" என்றார் யோகி.

மீரா சிந்தித்தாள்.

யோகி பேசினார்: "கண்ணில் தெரிபவனாக, உருவுள்ள கரியவனாகப் பரம்பொருளை பாவிப்பது பேதைமைதான் தேவீ! கண்ணில் தெரிவதாலேயே பிறகு அது மறைந்துவிடவும் கூடும். அதனால் மாளாத பிரிவுத் துயர்தான் ஏற்படும், யோகத்திலோ பிரிவுக்கு இடமேயில்லை. 'யோகம்' என்றாலே 'சேர்க்கை' என்றல்லவோ அர்த்தம்? பரம்பொருளை உருவற்றதாக, குணமற்றதாக நாங்கள் பாவிக்கிறோம். இதனால் உருவத்தின் தோற்றம் தருகிற ஆனந்தக் கிளர்ச்சியும் எங்களுக்கில்லை; அதன் மறைவில் காணும் துயரக் கிளர்ச்சியும் இல்லை. கிளர்ச்சியே இல்லாத சாந்த நிலையைத் துய்க்கிறோம். பரம்பொருளை எங்கோ வைத்துப் பார்த்தால் தான் அதைத் தேடும் முயற்சியும் அதில் காணும் தோல்விகளின் துன்பமும் உண்டாகின்றன. நாங்கள் பரம் பொருளை எங்கோ வைத்துத் தேடவில்லை; எங்களுக் குள்ளேயே கண்டுகொள்கிறோம். சுவாசத்தை அடக்கி, சிந்தையை அடக்கி மூலாதாரத்தில் உள்ள ஜீவ சக்தியை எழுப்பிச் சிரசுக்குக் கொண்டுவந்து அங்கே பரம்பொருளில் கரைந்து விடுகிறோம். அப்புறம் எங்களுக்கு ஏது துயரம்? சித்தம் அற்றுப் போன அந்தமில்லாத ஆனந்தம்தான், அமைதிதான் எங்களுடைய மாறா நிலை. தேவீ, நீங்களும் இந்த மார்க்கத்தில் முயன்று பாருங்களேன். இது மிக எளிய

மார்க்கம். பலன் கிடைப்பது சர்வ நிச்சயம். நான் உத்தரவாதம் தருகிறேன்" என்று உறுதியாகப் பேசினார் யோகி.

கண்ணனின் மாயமா? யோகியின் பேச்சு மீராவை அப்படியே கிழக்கு மேற்காக ஓர் அரைவட்டம் திருப்பி விட்டது! நம்பவொண்ணா மாறுதல்தான்! கிளர்ச்சிகளின் மோதல்களுக்கே பாலப் பருவத்திலிருந்து ஆளான மீராவுக்கு யோகத்தின் சாந்தநிலையில் திடுமெனப் பெரும் ஈடுபாடு உண்டாயிற்று. 'கண்ணன் என்ற உருவில் பரம்பொருளை நாடுவதால்தானே அவனிடம் காதலும் உண்டாகிறது? அந்தக் காதலால்தானே அகவாழ்வு, புற வாழ்வு இரண்டும் சிதைந்து சரிகின்றன? இந்தக் காதலிலிருந்து விடுதலை கிடைக்க வேண்டுமெனில் கண்ணனையே விட்டுவிட்டால்தான் முடியும். அப்படிச் செய்துவிட்டால் என்ன? உருவ வழிபாடு செய்வதால்தானே சித்தோரில் அதற்கு எதிர்ப்புகளும் மூளுகின்றன? வேண்டவே வேண்டாமே, இந்த உருவம்! யோகி சொல்வதுபோல் 'அலக்'காகவே, 'நிரஞ்ச'னாகவே பரம்பொருளை உபாசித்து விடுகிறேனே! ஆகா, என் பிரச்னைக்கு இவ்வளவு நல்ல ஔஷதம் இருக்கிறதா?' மீரா முடிவுக்கு வந்து விட்டாள்.

விந்தை! எந்த மேர்தாவில் பாலகியாக இருந்தபோது அகமுடையானாகச் சாளக்கிராமத்தைக் கண்டெடுத்தாளோ, அங்கேயே விவாகரத்தும் தேட ஆசைப்பட்டாள் மீரா! எந்த மேர்தாவில் நீல நிறத்துப் பாலகனின் கோல வடிவழகைக் கண்டு கண்டு களித்தாளோ, அதே மேர்தாவில் அந்தத் திரு உருவத்துக்கு மேல் சமாதி கட்டிவிட முயன்றாள் மீரா! எந்த மேர்தாவில் அன்பு, இன்பம், துன்பம், கோபம், தாபம், கானம் இவற்றின்மீது ஓர் உயிர்த்தொடர்பை மகாவிருட்சமாக வளர்த்துக் கொண்டாளோ, அதே மேர்தாவில் அத்தருவை வேரோடு வெட்டி எறிய முற்பட்டாள் மீரா!

**யோ**க சாதனை தொடங்கினாள் மீரா.

ஆனால் சாதனையின் சாத்தியமாகிய சத்திய வஸ்து அவளை அந்த வழியில் செல்லவிட்டதா, என்ன?

இவள் விவாகரத்துக்கு முனைந்தாலும் இவளை மணந்த அவன் உருவம் தாங்கி நிற்பதை நிறுத்தவில்லை. இவள் அன்புணர்ச்சிகளைப் புறக்கணிக்க நினைத்தாலும் அவன் அவற்றை மீண்டும் அவளுள் திணித்துக்கொண்டுதான் இருந்தான்.

மீரா பிராணாயாமம் செய்தாள். குண்டலினி சக்தியை மேல்நோக்கிக் கிளப்பினாள். ஆனால் அது அவளை அமைதிக்கா இட்டுச் சென்றது? அல்ல! பல கோசங்களைக் காட்டியது; அவற்றில் ஆரோகணித்துள்ள பல தேவதைகளைக் காட்டியது; அந்தத் தேவதைகளைச் சுற்றியுள்ள பல பரிவாரங்களைக் காட்டியது. அவையெல்லாம் மீராவிடம், 'உனக்கு இந்தச் சக்தியைத் தருகிறேன். அந்தச் சக்தியைத் தருகிறேன்' என்று முன்வந்தன. மீரா நடுநடுங்கினாள். 'ஐயையோ, அமைதியைத் தேடி வந்தேன். இப்போது முன்னிலும் அதிகமாக அல்லவோ அலைப்புண்டு கலங்குகிறேன்? முன்பு இருந்ததிலும் அதிகமாக அல்லவோ இப்போது உணர்ச்சிகள் கொந்தளிக்கின்றன? இந்த ஆரம்ப அநுபவங்களைக் கடந்து, சித்தத்தை மாய்த்து என் ஜீவனை சமாதிநிலையில் கரைப்பது நடக்கிற காரியமா? யோகி என்னை ஏமாற்றி விட்டார்! இது வெகு எளிதான மார்க்கம் என்று கூறி, கடக்க வொண்ணாத கானகங்களிலும் மலை முகடுகளிலும் என் கண்ணைக் கட்டி விட்டுவிட்டார்.'

இயற்கையை மீறி யாராலேனும் செல்ல முடியுமா? கொடிக்குக் கொழுகொம்பும் பந்தலும் வேண்டும். ஆயின் செடி வளர இவை தேவை அல்லவே! செடிக்கு உதவ நினைத்து அதை வளைத்து வளைத்துப் பந்தலில் சுற்றி விட்டால் என்னாகும்? முறிந்து முறிந்தல்லவோ அழியும்? அன்பு வழி, அழகு வழி கண்ட மீராவால் அன்பும் அழகும் அற்ற நிர்க்குண யோக மார்க்கத்தில் செல்ல முடியவில்லை. ஐம்புலன்களாலும் கண்ணனின் ஸௌந்தர்யத்தைத் தேடிக் கண்டுபிடித்து அநுபவித்த அவளுக்கு யோகியின் வறண்ட புலனடக்கம் பந்தமாக — மூச்சை முட்டச் செய்யும் அடைப்பாக — இருந்தது. அவளது இயற்கையான கான வழி அப்போதும் அடைபடாமல் திறந்துகொள்ள, அவள் தன் இன்னல்களைப் பாடினாள்.

நாற்புறமும் வழி அடைத்தாச்சு—இனி
நாரணன் இடம் செல வழியேது?
பள்ளமும் மேடும் நிறைந்த இப்பாதையில்
எள்ளள(வு)என் பாதம் பாவவில்லை
வழுக்கலும் சருக்கலும் மிகுந்த இப்பாட்டையில்
முழுக்கவும் செல்வது முடியவில்லை.

முத்தி நெறிக்(கு) இவ்வுத்தியில் முயன்றால்
சித்தத்தின் ஒருமை சிதையுதையே!

சந்தோ குறுகல்; எங்கோ இலக்கு;
அந்தோ கெட்டேன், அருள் தருவாய்!

கோசம் தொறும்பல கோடி தேவதை
மோசம் செய்தென்னை மயக்கினவே!
படிகள் தொறும் பல கொடியபாவனை
அடியெடுத் திடவும் இடறினவே!

கூர்ந்து ஓர்ந்து பெருமுயற்சி செய்தாலும்
ஊர்ந்து சென்றிடவும் இயலவில்லை!
விதியே! நேயனை வெகுதொலை வைத்து
சதிபுரிந்தெனைச் சாடுவ தழகோ!

சற்குரு ரூபரின் அற்புதச் செல்வன்
பொற்குவை யாய்வந்த ப்ரேம நாயகன்
கிரிதரன் அன்றிச் சிறியவள் மீரா
பிறிதொரு வழியில் பிழைப்ப துண்டோ?

*யோகியிடம் தன் கஷ்டங்களைத் தெரிவித்தாள் மீரா.*

*முதலில் உறுதியாக வாக்குக் கொடுத்தவரே இப்போது மீராவை இவ்வழியில் நிலைப்படுத்த இயலாது என்று கண்டார். அவருக்குப் பக்தி நெறி புரியாது. இவளுக்கோ யோக நெறி வராது. யோகி தவித்தார். மேர்தாவை விட்டே வெளியேறத் தயாரானார்.*

*அவரது உத்தேசத்தைப் புரிந்துகொண்ட மீரா அவரிடமே பாடினாள்:*

போய்ச் சேருவாய் யோகி! – உன்
வாய்ச்சாலகம் போதும்!

அன்பு வழியதனை அடைத்து விட்டாய்
துன்புறும் சாதனை விளக்குகிறாய்
மடுவெனப் பிரேமையை மடுத்தருந்தியவர்
கடுநெறி நஞ்சைக் குடித்திடுவாரோ?

அந்தமில் ஆனந்தம் அடைய மீராவின்
சொந்த வழியதனைச் சிதைக்க முன்வந்தாய்!
எந்தஊர் வழக்கிது? சுந்தர பக்தியைப்
பந்தம் புரிந்தபின் பரநிலை வருமோ?

*யோகி போய்ச் சேர்ந்தார்.*

*விம்மி விம்மி அழுதாள் மீரா. 'இயல்பான பிரேமை மார்க்கத்தில் நான் சென்றால் அது ஸ்த்ரீ தருமத்துக்கு விரோதம். பிறவழியிலும் போக முடியவில்லை. 'அழைத்துச் செல்கிறேன்' என்று அறுதியிட்டுச் சொன்ன யோகியும் பாதி*

வழியில் விட்டுப் போய்விட்டார். நானேதான் அவரை விரட்டி விட்டேன்! இனி யாரை அடைவேன்? எப்படி வழி காண்பேன்?'

யோகிகளுக்கெல்லாம் ஈசனாக 'யோகேச்வரன்' என்றே பெயர் கொண்ட கண்ணனிடமே முறையிடுவதற்காக டாகுர்த்துவாரத்துக்கு ஓடினாள் மீரா. 'இங்கேதானே என் இயற்கை வழியைக் குழிபறிக்க ராணாஜியை அனுப்பி வைத்தாய்? எனக்கு நீ கதி காட்டும் வரையில் இங்கேயே கிடந்து பிராணனை விடுவேன்!' என்று சங்கற்பம் செய்து கொண்டாள். டாகுரை நோக்கிக் குருதி பெருகும் குரலில் கானம் செய்தாள். யோகம் என்றால் சேர்க்கைதானே? அச்சேர்க்கை தரும் சேவகனையே மீராவின் அகம் 'யோகி!' என அழைக்கக் கானம் செய்தாள்.

யோகியே, உன்பதம் ஏகியே இன்புற
நோகிறேன்; நோக்கிஎன் நோயினைத் தீர்!

யோக வழியதனில் போக யத்தனித்தேன்
பலகுடில் புகுந்தேன், 'அலக்'கென்(று) அலறினேன்
ஆசனம் புரிந்தேன், ச்வாசம் அடைக்கினேன், ஆசை
பலிக்கவில்லை!

சதுரத்தனம் காட்டி மதுரமதாய்ப் பேசி
நடுவழியில் என்னைப் படுத்திச் சென்றான்யோகி
மித்திரனாய் வந்தான், சத்துருவாய் சென்றான், சற்குரு
வருவானோ?

யோகம் என்பதும்உன் போகமே என்(று) அநு–
ராகத்தில் சொல்வர் என் வேகத்தைத் தீர்ப்பரோ?
கிரிதரன் கழலினில் ஒருதரம் சேர்மனம் பொருந்திடுமோ
பிறிதில்?

பொழுது சென்றுகொண்டேயிருந்தது. டாகுர் சந்நிதியை விட்டு மீரா நகரவில்லை.

ராவ் தூதாவும் மற்ற பரிஜனங்களும் மீராவை நெருங்கவே முடியவில்லை. கண்ணனே வந்து தன் ஐயப்பாடுகளைத் தீர்க்கும் வரை அங்கிருந்து நகருவதில்லை என்று அவள் கொண்டிருந்த சங்கற்பத்தின் உறுதியானது பிறர் அவளை அண்டவொட்டாமல் அவளைச் சுற்றி அக்கினிப் பிழம்பாக ஜொலித்தது.

வந்தான் கண்ணன், கடைசியிலே!

"கான்ஹா! கான்ஹா! என்னை என்ன பாடுபடுத்தி வதைக்கிறாயடா கான்ஹா!" என்று கதறித் தீர்த்துவிட்டாள் மீரா.

"என் பாடுகள் இல்லாமல், ஏன் நானே இல்லாமல் அமைதி பெறத்தான் யோகமார்க்கம் இருக்கிறதே!" என்றான் கண்ணன். மீராவின் மகத்தான வேதனையிலும் அவனுக்கு எப்படித்தான் குறும்புப் பேச்சும் அரும்புச் சிரிப்பும் வந்தனவோ!

"ஐயோ கண்ணா என்னைக் கொல்லாதே! ஏதோ அந்தப் பாவி யோகி சொன்னானே என்று..."

"உஷ்..." என்று மூக்கின்மேல் விரலை வைத்து மீராவை அடக்கினான் மாதவன்.

"அவனை ஏன் பாவி என்கிறாய்? யோகம் அவன் வழி. அவனையோ அவன் வழியையோ வையாதே! அவனும் என்னிடம் வருவான்; அவ்வழியும் என்னிடம் சேர்க்கும். ஆனால் அவன் உன் குரு அல்ல; அது உன் வழியுமல்ல. ஒவ்வொரு பிணிக்கும் ஒவ்வொரு மருந்துபோல், ஒவ்வொரு மனப்போக்குக்கும் ஒவ்வொரு வழி வைத்திருக்கிறேன். மருந்தை மாற்றி உண்டுவிட்டு யார்மீது குறை சொல்லி என்ன பயன்?" என்றான் **'வணங்கும் துறைகள் பல பலவாக்கி வைத்த'** வைகுந்தன்.

"அப்படியானால் எனக்குள்ள மருந்தைக் கொடு. இல்லாவிடில் விஷத்தையாவது கொடு!" என்றாள் மீரா.

கண்ணன் சிரித்தான். "உனக்கு விஷம் கொடுக்கப் போகிற நாள் வருகிறபோது வரட்டும். ஆனால் நான் கொடுக்க மாட்டேன். மருந்தையும் நான் தரமாட்டேன். அதற்கென்று ஒரு குரு வரவேண்டும்."

"குருவா? உன்னைவிட எனக்கு குரு யார்?" என்றாள் மீரா.

"பிரிய மீரா, நான் உனக்குக் குருவாகவேண்டும் என்று சொல்லாதே. யார் உனக்குக் குருவாக வந்தாலும் அவர் நானே என்று தெரிந்துகொள். நான் உனக்கு உபதேசிக்க மாட்டேன். ஏனென்றால் அப்போது என்னைவிட நீ உயர்வாகி விடுவாய். என்ன புரியவில்லையா! ராமனாகவும், கிருஷ்ணனாகவும் வந்தபோது நானே வசிஷ்டர், விசுவாமித்திரர், சாந்தீபனி, உபமன்யு முதலிய மானுடர்களிடமிருந்துதான் உபதேசம் பெற்றேன். அப்படியிருக்க, உனக்கு மட்டும் தெய்வமே நேரில்

உபதேசிக்கலாமா? உனக்கான மானுட குரு வந்து சஞ்சலத்தைத் தீர்த்து வைப்பான். ஆனாலும் குருவை மானுடனாக நினைத்துவிடாதே!" என்று கூறி மறைந்தான் கிரிதரன்.

சத்குரு வருவாரோ என்று மீராவும் ஆவலாகக் காத்திருக்கலானாள்.

## 20. ஸத்குருநாதனாய், ஸ்ரீராமநாமனாய்!

"தாத்தா, எனக்கு நல்ல வரனாகப் பார்த்துக் கலியாணம் செய்துவைக்க ஆசைப்பட்டீர்கள். சாக்ஷாத் மகாராவல்ஜி தேடிக்கொண்டு வந்தார். இப்போது எனக்கு ஒரு நல்ல குருவாகப் பார்த்து உபதேசம் செய்வியுங்களேன்" என்று ராவ்தூதாவை வேண்டிக்கொண்டாள் மீரா.

அவளது சாம்பிய முகத்தையும் சோகம் போர்த்திய தேகத்தையும் கண்டு பெருமூச்செறிந்தார் தூதாராவ்.

"வாரணாசியில் ஒரு மகான் இருக்கிறாராம். ராம பிரானைக் கண்ணாரக் கண்டவராம். கண்ணாரக் கண்டதை வாயாரப் பாடி மகிழத் தெரிந்தவராம். அவருக்குச் சொல்லியனுப்புகிறேன், குழந்தாய்" என்றார்.

மறுநாள், "தாத்தா, வாரணாசி மகானுக்கு இந்த மடலைச் சேர்ப்பிப்பீர்களா?" என்று கேட்டு ஒரு லிகிதத்தைக் கொடுத்தாள் மீரா.

ராவ்தூதா அதைப் பிரித்துப் படித்தார்:

'குழந்தைநாள் முதலாய்ப் பழகிப் பந்தமுற்று
கிரிதரர்க்கே நான் உரியவள் ஆனேன்

ஆதிகாலத்திலிருந்து தீதில் நெறி காட்டும்
சத்சங்கமதனில் பத்திமை புரிந்தேன்

அயல்மனிதர் என் இயல்புணர்ந்தாரில்லை
இல்லத்தினர் தரும் தொல்லை அளவில்லை

உறுதிப்பட்டேவிட்ட உறவினை முறித்திடச்
சக்திஇல்லாஎனக்கு உத்திசொல்லி அருள்வீர்!'

மடலில் கண்ணீர் விழுந்தது.

அது ராவ்தூதாவின் துயரத்துக்குச் சின்னம்.

மடலில் கண்ணீர் விழுந்தது.

ஆனால் இது ராவ் தூதாவின் துயரக் கண்ணீர் அல்ல.

வாரணாசியில் வாழும் மகாபுருஷரின் ஆனந்தக் கண்ணீரே அது. கங்கைக் கரையில் வாழ்ந்த அந்தப் புண்ணியாத்மாவிடம் ராவ்தூதாவின் தூதன் மடலைத் தந்தவுடன் அதனைப் பார்த்துவிட்டுக் கண்ணீர் சொரிந்தார் அவர்.

'பாலப் பருவத்திலிருந்து இந்தப் பெண் கிரிதரனுக்கே உரியவளாகி விட்டாளாமே? அந்த உறவை முறிக்கவே முடியவில்லையாமே! சாமானிய மாந்தருக்குக் கிட்டுமா இந்த பாக்கியம்?' என்று வியந்து மகிழ்ந்து கூறினார் அந்த பக்தசிகாமணி. கங்கையிலும் நிர்மலமான அவரது திரு மேனியைக் கண்டு, கங்கையினும் இனிய அவரது வாக்கினைக் கேட்டு மெய்ம்மறந்தான் தூதன்.

அவரிடமிருந்து உபதேசம் பெறவே மீரா விரும்புகிறாள் என்று தெரிவித்தான்.

அவரோ அவளுக்குக் குரு ஸ்தானம் வகிக்கத் தயங்கினார்.

"ஞானபக்தியின் சிகரத்தில் வசிக்கும் ஒரு மகானிடம் உன்னை அனுப்பி வைக்கிறேன் அப்பா. அவரிடம் இந்த லிகிதத்தைக் கொடு. அவரே மீராபாய்க்கு வழிகாட்டக் கூடியவர். இதோ, நான் மீராபாய்க்கு ஓர் உத்தரம் தருகிறேன், இதை அவளிடம் சேர்த்துவிடு" என்று கூறி மறுமொழி எழுதித் தந்தார் அந்த மகனீயர்.

தாம் குறிப்பிட்ட அந்த மகானிடம் — ஞானபக்தியின் சிகரத்தில் வசிப்பவரிடம் — செல்ல வழியும் சொன்னார்.

அவர் குறிப்பிட்ட இடத்துக்குப் போய், அவர் குறிப்பிட்ட பெயருள்ளவரிடம் வந்து சேர்ந்தான் தூதன்.

அது ஒரு சேரி. அங்கு, குறிப்பிட்ட பெயருள்ளவர் ஒரு முதியவர். "ஹரே கிருஷ்ணா, ஹரே கிருஷ்ணா!" என்று கூறியவாறு அவர் மாட்டுத் தோலைச் செதுக்கிச் செருப்புத் தைத்துக்கொண்டிருந்தார்.

தூதனுக்குத் தூக்கிவாரிப் போட்டது. ஆள்மாறாட்டம் செய்துவிட்டோமோ என்று தயங்கினான்.

"தாங்கள்.....?" என்று அவன் இழுத்தபோதே, பாதரட்சை புதுக்கிக்கொண்டிருந்த பெரியவர், "நான் ஒரு சமார் சேவகன்" என்றார்.

சமார் என்றால் சக்கிலி வகுப்பைக் குறிக்கும். இவரா மேவார் மகாராணிக்கு உபதேசம் செய்வது?

தூதன் கலவரத்துடன் தான் இன்னார் என்பதையும் இன்ன விஷயமாக வந்திருப்பதாகவும் கூறி மீராவின் கடிதத்தை அவரிடம் கொடுத்தான்.

தோல் மூட்டையை அப்படியே தோளில் சுமந்தபடி, "ஹரே கிருஷ்ணா!" என்ற ஒரே வாக்கோடு தூதனைத் தொடர்ந்து புறப்பட்டு விட்டார் அந்தக் கிழவர்.

தூதன் முதலில் கங்கைக் கரையில் கண்ட மகாபுருஷர் தான் 'ராமசரித மானஸ்'த்தை அருளிய கோஸ்வாமி துளசி தாசர் என்றும், அவர் மீராவின் குருவாகத் தேர்ந்தெடுத்த சேரி வாழ் சக்கிலியர்தான் ராமானந்தரின் சீடரும் கபீர்தாசரின் நண்பருமான ரயிதாஸர் என்றும் சொல்வதுண்டு. 'துளசிதாசரும் ரயிதாஸரும் சமகாலத்தவர்களா? இவர்கள் கும்பராணாவின் காலத்தில் இருந்திருக்க முடியுமா?' என்ற ஆராய்ச்சியில் நாம் இறங்க வேண்டியதில்லை. என்றைக்கும் இந்நாட்டில் மகான்கள் இருந்திருக்கிறார்கள்; மீராவைப் போல் சங்கையுற்றுப் பொறி கலங்கியவர்களுக்கு வழிகாட்டிப் பரம உபகாரம் புரிந்திருக்கிறார்கள். அவர்களது பெயர் என்ன என்பது பற்றிக் கவலையில்லை. அநாமதேயமாக இருக்க ஆசைப்பட்ட அவர்கள் அனைவரும் ஒரே திருக்கூட்ட மரபைச் சேர்ந்தவர்கள் என்பதொன்றே நமக்குப் போதும்.

சக்கிலியர் ரயிதாஸரை அரச மாளிகைக்குள் அழைத்துச் செல்லத் தயங்கி வாசலிலேயே நிறுத்தி வைத்தான் தூதன். 'தான் ஏதோ தவறு செய்துவிட்டோமோ?' என்ற பயம் அவனை இன்னமும் விட்டகலவில்லை.

மீராவிடம் சென்று துளசிதாசர் தந்த உத்தரத்தை மட்டும் அளித்துவிட்டு நின்றான்.

புறாச் சிறகுகள்போல் படபடக்கும் இதயத்துடன் மீரா அதனைப் பார்த்தாள்:

'வைதேகி ராகவனைக் கையேந்திக் கும்பிடாப்
பந்துமித்திரர் உனக்குச் சொந்தமில்லை யம்மா!

அத்தனை நீத்தான் ப்ரஹ்லாதன்
அண்ணனை நீத்தான் வீடணன்
அன்னையை நீத்தான் பரதாழ்வான்
ஆசானை நீத்தான் மாவலி

ஐயன் ராமனை அடைந்திட உதவும்
வையகத் தோரே உறவினராம்!
அஞ்சனமே கண்ணைப் புண்செய்திடுமேல்
நஞ்சினை நயனத்தில் தீட்டுவரோ?

ராமையன் இணைப் பாதப்போதினிலே
ப்ரேமை புகட்டும் புண்ணியரே
நேசம் மிகுந்த உறவினராம்;
தாசன் துளசியின் மதம் இதுவே.'

மீராவுக்கு ஓரளவு தெம்பளித்தது அக்கடிதம். ஆனால் பூரணமாகத் தெம்பு பெறவில்லை அவள்.

"இந்த மடலை மட்டுந்தான் அவர் தந்தாரா? எனக்கு உபதேசிக்க வரமாட்டாரா?" என்று ஆதுரமாகத் தூதனை வினவினாள்.

"அவர் வரமாட்டார். ஆனால்....."

"ஆனால் என்ன?"

"வேறொரு...."

"வேறொருவரைக் காட்டிக் கொடுத்தாரா? அதைச் சொல்லாமல் ஏன் மென்று விழுங்குகிறாய்? அவர் கூறிய அந்தப் பெரியவரை அழைத்துவராமல் ஏன் நீ மட்டும் வந்தாய்? அப்பனே, நான் அணு அணுவாகச் செத்துக் கொண்டிருக்கிறேன். காலஹரணம் செய்யலாமா?"

"இல்லையம்மா, கோஸ்வாமி துளஸீதாஸர் குறிப்பிட்ட அந்த இன்னொருவரை நான் கையோடு அழைத்துத்தான் வந்திருக்கிறேன்...."

மீரா மேலே கேட்காமல் அப்படியே துள்ளிக் குதித்தாள். "எங்கே அவர்?" என்று கேட்டுக்கொண்டு நடக்கலானாள்.

தூதன் நடுங்கிக்கொண்டே மகலின் வாயிலை அடைந்தான்.

அங்கே தோல்மூட்டையைப் பிரித்துக் கீலணி செய்யத் தொடங்கிவிட்டார் ரயிதாஸர்.

'ஹரே கிருஷ்ணா!' என்று கூறியபடி மீராவை நிமிர்ந்து பார்த்தவரின் கைக் குத்தூசி தோலில் துளையிட்ட நிலையில் அப்படியே நின்றது.

மீராவும் அப்படியே நின்றாள்.

அந்த நிமிடமே தாயைக் கண்ட சேயானாள் அவள்! நா வறண்டபோது ஞானப்பாலைத் தர அன்னை வந்துவிட்டாள்!

ஞான தாயகனான குரு, அன்னை மட்டும்தானா? ஆன்ம நாயகக் கண்ணனும் அவரேதானே?

அவர் தோலில் இட்டிருந்த ஒவ்வொரு துளையும் முரளீ தரனின் வேணுவிலுள்ள துளையாகவே அவளுக்குத் தோன்றியது. 'ஹரே கிருஷ்ணா!' என்று கூறும் அவரே கிருஷ்ண பரமாத்மாவாகத்தான் அவளது கண்களில் தோன்றினார்.

சத்குருவின் தரிசனம் ஒன்றே அளிக்கக்கூடிய பரமானந் தத்தில் மூழ்கிப் பாடினாள் மீரா:

'குருபெருமானே! விரைவோடு வந்து
பருகுவிப்பாய் பரமா்னந்தப் பாலினை!

நீரினை இழந்த மீனமதே போல்,
சூரியன் காணாச் சக்கரவாகமாய்,
உனது சங்கமின்றி உவகையில்லாமல்
மனது வாடி என்றன் நினைவு கெட்டேன்

உபதேசம் பெற்று உள்ளம் உவந்து
சுபமங்கள கீதம் இசைத்திடுவேன்;
குரல் கசியக் குயிலாய்க் கூவிடுபோதிலும்
இரகசிய இன்பம் இயம்பி விடேன்!

நன்னாள் இதுவே, பொன்னார் திருவடி
இல்லம் பதித்து அல்லல் தீர்த்தாய்!
பாதகம் தீர்க்கும் உன் பாதத்தூளி பெற
மெய்உருகி இருகை எடுத்துத் தொழுதேன்.'

கடல் தகித்து ஆவி மேலே மேலே அலமாந்து திரியும் போது வான மண்டலத்தில் துகள் கிடைத்துவிட்டால் போதும்! ஆவி அதனைச் சுற்றிக் குளிர்ந்து அப்படியே பற்றிக்கொண்டு, கனத்து, பிந்துவாகிப் பொழியும். மீராவின் ஆவி தாபமூண்டு வழி தெரியாமல் தவித்தபோது, அது குளிர்ந்து கனத்துப் பொழிய ஒரு பற்றுக்கோடாகக் குருவின் பாத தூளி கிடைத்தது.

இனி மழைதான்!

'ஐயோ, சக்கிலியனிடம் மீரா உபதேசம் வாங்கிக் கொள்ளப் போகிறாளாமே!' என்று சிலர் பேசிக்கொண்டனர்.

மீரா சிரித்துக்கொண்டே விடையிறுத்தாள்: "பாதரட்சைக்குப் பயனாகும் தன்மை மாட்டுத்தோலுக்கு ஏற்பட்டிருக்கிறது. அந்தப் பயனை மாட்டுக்குத் தந்து, அந்தப் பயனின் விளைவை மனிதருக்கும் தரும் சக்கிலியனா தாழ்ந்து

விட்டான்? செத்த மாட்டின் தோலைக் கொண்டு மானுட குலத்தின் வெயில் தீர்க்கப் பாதரட்சை தைப்பவர் இவர். உயிருள்ள தோலைப் போர்த்துக்கொண்டே ஆவி செத்துப்போன மக்களையும் ரட்சித்து, அவர்கள் பிறரின் தாபம் தீர்க்கும் ரட்சையாக்கிவிடுவார்."

ரயிதாஸர் மீராவுக்கு என்ன உபதேசமளித்தார்? அதை யார் முற்றும் கூற முடியும்? சூரிய வெப்பம் செடிக்கு என்ன சக்தியைத் தருகிறதோ, அப்படி ஒரு சக்தியை மீராவுக்குத் தந்து விட்டார் ரயிதாஸர். அவள் பசுமை குலுங்கப் பூத்துப் பழுக்க ஏதோ அற்புத வழி செய்து விட்டார்!

யோகியைப் போல் சிக்கலான மார்க்கத்தில் அவர் மீராவை நீள நெடுகப் பயிலுவிக்கவில்லை. ஈர விறகைப் பற்ற வைக்க நீண்ட நாழிகை விசிற வேண்டுமேயன்றிக் கர்ப்பூரத்தை ஏற்றச் சிரமம் ஏது? குருமுகமாகத் திருநாமம் மீராவின் செவியில் பாய்ந்தவுடனேயே தீக்கொழுந்தை வாங்கிக் கொள்ளும் கர்ப்பூரமானாள் மீரா.

குருவின் வாக்கிலிருந்து வந்த அந்தத் திருநாமம் என்ன? வேறு எதுவாக இருக்கமுடியும்? ஸ்ரீராமநாமம்தான்! ரமிக்கச் செய்யும் தெய்வம் ராமன்தானே? மாதவனாயினும் மகாதேவனாயினும் ரம்யமாக வரும்போது — அடியாரிடம் தான் இன்புறுபவனாக இருந்துகொண்டு, அவர்களைத் தான் இன்புறுத்துபவனாக இருக்கும்போது — ராமன் என்றே போற்றப்பட வேண்டியவர்தாமே? சகலபுவனங்களில் உள்ள மாந்தருள்ளங்களிலும் இன்பமயமாக இருந்து ரமிப்பவனே ராமன் என்றல்லவா தியாகையரும் தமது **'ரமிஞ்சுவா ரெவருரா ?'** பாடலில் கூறுகிறார்? இந்தத் தேசத்தில் ஆயிரமாயிரம் ஆண்டுகளாக, ஆயிரம் பல்லாயிரம் கோடி மக்கள் துன்பமுற்றபோது தெரிந்தும் தெரியாமலும் கூறுகிற நாமம் ராமநாமம் அல்லவா? நாராயணனின் அஷ்டாட்சர மந்திரத்துக்கு உயிரூட்டும் 'ரா' என்ற அக்ஷரமும் சிவபஞ்சாட்சரிக்கு ஜீவன் தரும் 'ம'காரமும் சேர்ந்த 'ராம' நாமமேயல்லவோ சம்ஸாரத்திலிருந்து கடத்துவிக்கும் தாரக நாமமாகக் கருதப்படுகிறது? தேவிக்குப் பரமேசுவரனே உபதேசித்த நாமமல்லவா அது? தான் பெற்ற இன்பத்தை இவ்வையகமும் பெற வேண்டும் என்று தேவி கேட்டுக் கொண்டதன்மீது, வையங்களின் பதியாக, விசுவநாதனாக, வாரணாசியில் வதியும் பரமேசன் அங்கு மரிக்கும் புண்ணிய சாலிகளின் வலச்செவியில் தனது மதுர வாக்கால் ஓதும் மணி நாமம் ராமநாமமே அல்லவா?

வண்ணமும் ஒளியும் நிறைந்த பிரபஞ்சத்தில் பல பல மூர்த்தியாகப் பரம்பொருளைக் கண்ணால் பார்த்த அதே மகா புருஷர்கள் ஒலிமயமான சப்தப் பிரபஞ்சத்திலும் புகுந்து பரம் பொருளைப் பல மந்திரப் பெயர்களாகக் காது மூலம் கேட்டார்கள். கண்ணில் பச்சை வண்ணக் கோதண்ட பாணியாகக் கண்டவனையே காதில் 'ராம' என்கிற சப்தத்தால் கேட்டார்கள். அந்த ராமநாமத்தை மீராவின் செவியில் ரயிதாஸர் ஓதியவுடன் அவள் தேநிலவு கண்ட சந்திரகாந்தக் கல்லாக உருகினாள். உருகி ஓடும் போது அவளில் கிருஷ்ணசந்திரன் பிரதிபலித்தான். ஆம், அவன் வெள்ளிய மதியம் அல்ல; கரியமதி. கிருஷ்ண வண்ணத்திலேயே பூரணசந்திரனாக இருக்கும் அதிசயன் அவன்! அவனது பிரதிபிம்பம் தன்னுள் தேங்கியவுடன் உருகிய மீரா இறுகி, அவனை அப்படியே தன்னுள் உறைவித்துக் கொண்டு விட்டாள்!

மகாமந்திர உபதேசம் பெற்றவுடனேயே கிரிதர கோபாலன் தன் கண்முன் நின்றதை மீரா பாடுகிறாள். பூவுக்கு மணமும் வண்ணமும் ஒன்று சேர்ந்தே கூடுவதுபோல், பரம் பொருளின் மணமாகிய நாமத்தை அவள் பெற்றவுடனே அதன் வண்ணமாகிய அவன் உருவையும் கண்டுவிட்டாள். இங்கு நாமத்துக்கும் ரூபத்துக்கும் மாறுபாடு ஏது? கண்ணால் கண்டால் ரூபம்; அதையே காதால் கேட்டுவிட்டால் நாமம். கண், காது யாவற்றையும் ஆளும் ஆன்மாவின் மூலம் அநுபவிக்கத் தொடங்கிவிட்டாலோ இன்னும் பெரிய அற்புதங்கள் நிகழும்! நாமத்தைக் காணமுடியும்! ரூபத்தைக் கேட்க முடியும்!

அமரசாம்ராஜ்யத்தில் பிரவேசித்த மீரா, இன்னும் எத்தனை எத்தனையோ அநுபவங்களை எய்தினாள். யோக மார்க்கத்தில் பரிசிரமப்பட்டும் பெற இயலாத ஜீவசக்தியின் இயக்கங்கள் இப்போது எளிதாகக் கைகூடின. ராமநாம த்வனியானது சூரியரச்மிபோல் அவளது ஆதார கமலங்களைத் தீண்டி மலரவிட்டு அவற்றின் மூலம் குண்டலினி சக்தியைச் செலுத்தி, அவளது சிரசுக்குள் மணமேடை அமைத்து அங்கு மாதவனையும் அவளையும் ஜோடி சேர்த்தது. பிறகு ஜோடியும் மறைந்து தேனும் சுவையும் போல் ஒன்றாகிவிட்டது.

பிரயாசையின்மீது நாம் உண்டாக்கும் ஒலிகளுக்கு அப்பாற்பட்டும் அவற்றுக்கு ஆதாரமாகவும் எப்போதும் இடையறாமல் இதயாகாசத்தில் ஒலித்துக் கொண்டிருக்கும்

நாதப் பிரம்ம விளக்கமான அநாஹத த்வனியையும் மீரா மாந்தினாள்.

'ஹம்' என்று நாம் வாயை மூடுகையில் சுவாசம் உள்ளே செல்லும்; 'ஸ்' என்னும்போது வெளிச்செல்லும். 'ஹம்', 'ஸ்' - இரண்டும் சேர்ந்துதான் 'ஹம்ஸ'மாயிற்று*. நாம் சுவாசித்துக் கொண்டிருக்கும் சகல வேளைகளிலும் இந்த 'ஹம்'மையும் 'ஸ்'ஸையும் நாமறியாமலே ஜபித்துக்கொண்டிருக்கிறோம். நாமாக உணர்ந்து ஜபிக்காமல் உள்ளே அனவரதமும் நடக்கும் சுவாசத்தின் இந்த ஏற்ற-இறக்க ஆட்டத்தைத்தான் அஜபா நடனம் என்றும் ஹம்ஸ நடனம் என்றும் கூறுவது. நாம் அறியாமலே இப்படி நம்முள் நடனமாடுபவனைத்தான் 'தியாகராஜன்' என்கிறோம். தான் இருப்பதே நமக்குத் தெரியாதபடி அவன் மறைந்துகொள்வது மகத்தான தியாகமல்லவா? இந்தத் தியாகத்தினாலேயே அவனைத் தியாகராஜன் என்கிறோம். தியாகராணியான மீரா, பரம யோகிகளுக்கே கிடைக்கும் இந்த ஹம்ஸநாதத்தையும் நடனத்தையும் நாமத்தாலேயே தெளிவாகக் கண்டு கொண்டாள். **'ஸத்குரு ஸபத லகாயா அம்ஸ் ரீ த்யான் லகாயா துன் மே(ம்)'** என்று இதைப் பாடியும் இருக்கிறாள்.

ஸத்குரு கிடைத்ததையும் மந்திரம் கிடைத்ததையும் அதன் விளைவாகத் தனக்குக் கிடைத்த அநுபவங்களைப் பற்றியும் மீரா பாடல்களாகப் பாடிப் பாடிப் புளகமுற்றாள்.

'மார்க்கம் தெரியவில்லை; மர்மம் அறிந்திடத்
தீர்க்கமாய்த் தேடினேன் நெடுங்காலம்

துயராறு மருந்து – உயர்குரு தந்தார்
மயிர்க்கால் தொறுமோர் உயிர்ப்பு உண்டாச்சு!

ஸத்குருவிற்கிணை வைத்தியருண்டோ?
தத்துவ வேத புராணமும் சாற்றுதே!

கிரிதர நாகரன் மீராப் பிரபுவினை
குருஅருள் புகட்டிட அமருல கடைந்தேன்'

என்று பாடி ஆசானின் அடிமலரை வணங்கினாள்.

குரு தந்த ராமநாமச் செல்வத்தைப் புகழ்ந்து கானம் செய்தாள்.

* இதற்கு மாறாக 'ஹ'காரத்தால் சுவாஸம் வெளிச் செல்வதாகவும், 'ஸ'காரத்தால் உட்செல்வதாகவும் சொல்வதுமுண்டு.

'நாம ரத்தினத்தை அடைந்தேன்—ராம
நாமரத்தினத்தை அடைந்தேன்
மதிப்பிட வொண்ணா சேமநிதியது;
கதியாம் சற்குரு கருணையுடன் அளிக்க (நாம)

ஜன்ம ஜன்மங்களுக்கும் குன்றிடா நிதியதை
ஜகம் முழுதும் தந்து வாங்கிவிட்டேன்! (நாம)

செலவு செய்திடினும் செல்லாத செல்வமது
களவு போகாதது, கணந்தொறும் வளர்வது (நாம)

சத்தியப் படகினைச் சத்குரு வலித்தார்
சத்தற்ற பவக்கடல் கடத்துவித்தார்
மீராவின் பிரபு கிரிதர நாகரனின்
மாறாப் புகழ்பாடி மகிழ்ச்சியில் அமிழ்வேன்' (நாம)

*தன் நாவுக்கினித்த ஸ்ரீராம நாமத்தின் பெருமையைப் பல படித்தாக ஏத்தினாள்:*

'ராமநாமம் எனும் சர்க்கரைக் கட்டியே!
தேமதுர அமுதே! நாவினில் உறைவாய்!

ராமன் திருப்பெயரை ப்ரேமையுடன் பஜிக்க
உப்பற்ற உணவாய்ச் சப்பிட்ட துலகம்

ராகவன் நாமத்தை ராகத்துடன் இசைக்கும்
சீலமறிந்தோரிடம் காலனும் வருவனோ?

வையகமே, மீரா ஆணையினைக் கேட்டு
ஐயன் நாமம் சொல்லி அடியிணை அடைவாய்!'

*'ராமநாமமே கற்கண்டு'* என்று *தமிழகத்தில் குழந்தையும் தித்திக்கச் சொல்லுமே! 'ராமநாமம் பாயசம்; கிருஷ்ண நாமம் சர்க்கரை'* என்றெல்லாம் *புரந்தரதாஸரும் பாடுவார்!*

*ஜன்மாவுக்குப் பூரணத்துவம் தருவது நாமம்தான்* என்று *கண்டுகொண்ட மீரா மற்றவர்களும் முழுமை பெற அந்த வழியைக் காட்டினாள். இக் கலியுகத்தின் பிரத்தியேகப் பெருமருந்தாகக் கூறப்படுவதே நாம உபாஸனைதானே?*

'ஹரி நாமம் அதனை
அறியாப் பிறவி வீண்

தீபமில்லாத தேவாலயம்போல்
நிலவு இல்லாத நீல வானம்போல்

லவணம் இல்லாத உணவதுபோல
காந்தன் இல்லாத காமினி யவள்போல்

சேயினை இழந்த தாயவள்போல
வேரினை இழந்த தருவினைப்போல

நீரினை இழந்த நீரஜம்போல
பெயரினை இழந்த பிறவியும் வீணே!'

என்று நாம மாகாத்மியத்தை எடுத்தியம்பினாள்.

இனி எது எப்படிப் போனாலும் யார் என்ன சொன்னாலும் பொருட்டில்லை என்கிற பாவனையில் வீறு கொண்டும் பாடினாள்.

'ஹரி நாமம் அறிந்து மனம் நிறைந்தேன்
புரியா உலகிதனைப் புறக்கணித்தேன்

தைத்தது இதயத்தில் சத்தியத்தின் பெயர்
பைத்தியமென்று பார் பரிகசித் தாலென்ன?

மாமந்திரமது செவியில் சிந்தியவுடன்
சாமளன் என்முன் ஸ்வச்சமதாய் நின்றான்

தெளிவுற வழியினைக் குருபரன் காட்டிட
எளிமையினைத் தொட்டேன் அரசபோகம் விட்டேன்'

என்று தனக்குக் கிட்டிய மந்திரோபதேசத்தையும் அந்த மகோன்னதத்தால் தனக்குக் கிட்டிய எளிமையையும் வியந்து பாடினாள். உன்னதம் செய்கிற அதிசயம், அந்த உன்னதத்தை எய்தியவர் தாழ்ந்து பணிந்து விடுவதுதானே? உன்னதத்தை எய்தும் மேகம் கனத்தவுடன் பாருக்கு மழையாக இறங்கி வர வேண்டியதே இயற்கை விதி அல்லவா? மெல்லிய மலர்கள் கனத்துக் கனியானவுடன் கிளை வணங்கித் தழைந்துவிட வேண்டியதே பிரகிருதி நியதி அன்றோ? தாரஸ்தாயியில் சஞ்சரித்து உச்சத்தைத் தொட்ட பின் மந்தரஸ்தாயியின் நாதக் குமுறலில் தோய்வதே அல்லவா சங்கீத செளந்தரியத்தின் லட்சணம்? உச்சத்தை அடைந்த மீரா எளிமையிலேயே நிறைவு கண்டாள். நானாவண்ண பேதங்களும் கலந்து எளியதொரு தெளிவாக, வெண்மையாக மாறிவிடுவதுபோல் பலப்பல அநுபவ ஆனந்தங்களும் ஒன்று சேர்ந்து எளிமை என்ற ஒன்றாக ஆகிவிட்டன.

ஒரே பொருளாகி விடும்போது பார்ப்பது, பார்க்கிறவர், பார்க்கும் வஸ்து எல்லாம் எது? அப்போதுதான் உட்பார்வையில் பாராது பார்க்கும் பரமாநுபவம் வாய்க்கிறது. இதுவரை பல முறை சியாமளனைக் கண்டுள்ள மீரா, உபதேசம் பெற்றவுடன் அவனை ஸ்வச்சமாகப் பார்த்தது இந்தப் பாராத பார்வை நிலையில்தான். அதையும் பாடினாள் மீரா.

'குருபெருமானின் திருவடி தன்னில்
பொருந்திய தென்மனம் திரும்பவொண் ணாமல்

ஆசான் அடியிணை அரணெனக் கொண்டேன்
அகில சராசரம் கனவெனக் கண்டேன்

கடலாம் பவமும் காய்ந்து உலர்ந்தது
கடந்து செல்வது இனிக் கடினமில்லை!

மந்திரப் பொருளின் மகிமையில் நயனம்
அந்தர்முகம் சுழல உள்ள வெளிதனில்
மீராவின் பிரபு கிரிதர நாகரனை
பாராதே பார்த்துப் பரவசமானேன்.'

*உலகம் வெறும் கனவு என்று கூறுவது அத்வைதம் என்பார்கள். அது பக்திக்கு விரோதம் என்றுகூட விநோத வாதம் செய்பவர்களும் உண்டு. மீரா பாக்கியசாலி. அவள் தத்துவ ரீதியில் அத்வைதமா, விசிஷ்டாத்வைதமா, சுத்தாத் வைதமா, த்வைதமா என்றெல்லாம் மண்டையை உடைத்துக் கொள்ளவில்லை.* 'காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கி'*னாள். அவளுக்கு எல்லாத் தத்துவ மார்க்கங்களுமே ஒவ்வொரு நிலையில் உண்மையான பிரத்யட்ச அநுபவமாக வாய்த்தன. ஆனால் குறிப்பாக அவள் சென்றது அன்பு வழிதான். அவள் அவ்வப்போது அத்வைத அடைவு பெற்றாலும் அதிலே அவளை நிலைப்படுத்தாது பெருமான் பக்தியன்புக்கே திருப்பி விடுவான். அன்பு வில்லில் பகவானின் பெயர் என்னும் அம்பைப் பூட்டியே சாட்சாத்கார இலக்கில் பதித்து விட்டாள் அவள். இதையும் உள்ளங்கை நெல்லிக்கனியாகப் பாடுகிறாள்:*

'மனத்தினில் உறைந்தது ராமனின் நாமம்
மனனம் செய்தவனை ரசிக்கச் செய்வேனடி (மனத்தினில்)

நற்கருமம் புரியா துர்ப்பாக்கியை மீரா
அற்புதனைப் பாடச் சொற்காணாப் போதினில் (மனத்தினில்)

சற்குரு கருணையில் தற்காப்படைந்தேன்
துர்மதியனைத் தூர விலக்கினேன் (மனத்தினில்)

ப்ரேமைத் தனுசதனில் நாமஅம்பே தொடுத்தேன்,
ஞானம் கையுறை யாக்கி, கானத்தினால் எய்தேன் (மனத்தினில்)

தனுவைத் தாளமாக்கி மனத்தை வாத்தியமாக்கி
இனியன் நினைவைப் பாடி எழுப்பினேன் உயிரினை
(மனத்தினில்)

அன்பனின் திருமுன்னர் ஆனந்த நடம் செய்து
அமர சாம்ராஜ்யமதில் அமர இடம்கொண்டேன் (மனத்தினில்)

விந்தை புரியும் கோவிந்தனே! உனது
லீலையைப் பாடினேன், பாலனம் புரிவாய்! (மனத்தினில்)

மீராவின் பிரபுவைப் பேரால் பிடித்துவிட்டேன்
சரண தூளியதனை சிரத்தினில் ஏந்தினேன்'

உடலில் உயிரின் லயம் ததும்ப, உயிரில் ஆன்மநாதம் வழிய, அந்த நாதத்தை நெடும் பண்டைக்கால நேய நினைவுகளில் தோய்த்து இசையாக்கிய மீரா, இந்த நினைவுகளுக்கெல்லாம் மேலாக ஒன்றையே நினைக்க விரும்பினாள். இறைவனுக்கும் மேலான அவனது நாமம்தான் அது.

'பேராசை கொண்டேன் உன் பேர்மீது!
திண்மை செறிந்த கல்லில்
மென்மை நிறையும் நாமம்
பொறித்திட மிதந்தது
விரிகடலதனிலே!
நாம மகிமையினால்
ராமசேது உண்டாச்சு!

கணிகை செல்லக் கிளிக்கு
மணிப் பெயர்தான் புகட்டி
மரண காலத்தில் அது
ஸ்மரணம் செய்யக் கேட்டு
வைகுந்தம் சேர்ந்திட்ட
வைபவம் அறியீரோ?
ஆதிமூலப் பிரான்
பாதிப் பெயர் சொன்ன
வாரணந்தனைக் காத்துத்
தாரணமளித்திடக்
கருடனை விட்டோடிப்
புருடன் வந்தானடி!
கால பாசம் கண்டு
ஓலமிட்டே மகனை
அழைத்த அஜாமிளன்
பிழைத்ததும் பெயரால்!
பார் முழு(து) அறியும்
பேரதன் பெருமை!
நம்பியின் பெயர் தந்த
எம்பிரான் குருதனை
நம்பிப் பின்தொடர்ந்தேன்
கொம்புப் பழம் பெற்றேன்!
இனியொரு செயலிலை,
இனியன் பரம் அனைத்தும்.'

*ரயிதாஸர் பூங்காற்றுப்போல், வந்த சுவடு தெரியாமல் மறைந்துவிட்டார்! பூங்காற்றின் சுவட்டைக் காண முடியா விட்டால் என்ன? அதன் மணம்தான் மீராவினுள் நிறைந்து விட்டதே!*

# 21. "ஸர்வ தர்மான் பரித்யஜ்ய"

மணம் நிறைந்த மீரா டாகுர் துவாரத்துக் கண்ணனிடம் பேசினாள்: "ஐயனே, உன் திருவிளையாடலை நான் அறிய முடியாது. ஆயினும் அதில் ஓரிரு துளிகளை அறிந்துவிட்டாற் போன்ற ஒரு பாவனையை உண்டாக்கி விட்டாய். பிறப்புரிமை யாக உன் பாந்தவ்யத்தை எனக்குத் தந்தவன் நீ. குருவோ சாதனையோ தேவையில்லாமலே எனக்கு உன்னை ஆதியில் காட்டிக் கொடுத்துக் கொண்டவன் நீ. ஆனால் இந்தப் பாரத வர்ஷத்தில் குருவுக்கும் சாதனைக்கும் உள்ள மகிமையை வலுப்படுத்தவே, இயல்பாக எனக்கு உண்டான பரமாநுபவத்தை நலிவுறச் செய்து, பின்பு குருமுகமாக, இந்த யுகத்துக்கேயான நாமஜப சாதனை மூலமாக அதே அநுபவத்துக்குப் புத்துயிர் தந்திருக்கிறாய். நானாகவே உன்னைப் பெற்றேன், அப்படிப் பெற முடியும் என்ற அகம்பாவத்தை நீக்கி, என்னைச் சிஷ்யையாக்கி விநயத்தின் வழியில், நம்பிக்கையின் வழியில் என்னை நடத்திச் சென்று உன்னைத் தந்து கொண்டாய். இன்னும் என்னவெல்லாம் இனிக்க இனிக்கத் திட்டமிட்டிருக்கிறாயோ? உன் திருஉள்ளப் படியே நடத்திக் கொள், ஐயே!"

கிருஷ்ண விக்கிரகம் 'கலகல'வெனச் சிரித்தது. கண்ணனே அங்கே பிரசன்னமாகிவிட்டான். "என் திரு உள்ளப்படி நடத்திக் கொள்ளலாம் என்கிறாயே! நான் உன் கற்புநெறியைச் சிதைக்க வந்த அதருமக்காரன் என்று கருதிச் சித்தோரில் என்னை விரட்டினாயே! அந்த உன் எண்ணம் மாறிவிட்டதா?" என்றான்.

"கண்ணா! என்னை ஏன் சோதிக்கிறாய்? உன்னை அதருமக்காரன் என்று நான் நினைத்தது உண்மைதான். ஆனால் குருநாதன் அருளில் இப்போது உண்மை தெரிகிறது. நீ தருமம் அதருமம் இரண்டுக்குமே அப்பாற்பட்ட பரம்பொருள். உன் செயலைத் தருமத்திலோ அதருமத்திலோ

உரைத்துப் பார்ப்பதே அயுக்தம். நீ எது செய்தாலும் ஏற்றுக்கொள்கிறேன், ஐயா!"

"புத்திசாலியாகப் பேசிவிட்டாய். ஆனால் புத்தி அதிக தூரம் செல்லாது மீரா. ஓரிடத்தில் அதுவும் நின்றுவிடும். நான் தருமத்துக்கு அப்பாற்பட்ட பரம்பொருள் என்றாய். அதனால் உன்னை நான் மணக்கலாம். ஆனால் நீ? நீ எப்படித் தருமத்தை விட்டு என்னை மணக்க முடியும்?" என்றான் கண்ணன்.

மீரா ஸ்தம்பித்துவிட்டாள்! ஸ்தம்பனம் நீங்கியபின் குருநாதனும் திருநாமமும் தந்த சாந்தி அவ்வளவும்கூட வெறும் மாயப் பிரமைதானோ என்றெண்ணுமளவுக்குத் தடுமாற்றம் கண்டாள்.

'தருமத்துக்கும் அதருமத்துக்கும் அப்பாற்பட்ட கண்ணன் தருமத்தை விடலாம். நான் எப்படி விடமுடியும்?' இந்த வினா மீராவைக் கொக்கி போட்டு நெரித்தது.

பரிதாபமாகக் கண்ணனின் முகத்தைப் பார்த்தாள். அவனோ பரிகாசமாக நகைத்தான்.

"உன் கேள்விக்கு நான் விடை சொல்ல மாட்டேன். நீயே கண்டுபிடித்துக்கொள்ள வேண்டியதுதான்" என்றான்.

"அவ்வளவு தகுதி எனக்கில்லையடா அப்பனே! என்னை வதைக்காதே! உன் கனி வாய் திறந்து நீயே சொல்" என்று கண்ணீரும் கம்பலையுமாகக் கையெடுத்துக் கும்பிட்டுப் பிரார்த்தித்தாள் மீரா.

"தகுதியா, உனக்கில்லையா? நீ எவ்வளவு பெரியவள்! யோக மார்க்கமெல்லாம் பயின்றவளாயிற்றே! ஒரு பிராணாயாமம் செய்தால் உன் உள்ளம் ஒருமைப்பட்டுவிடும்! அந்த நிலையில் எதுவும் தெற்றெனத் தெரிந்துவிடுமே!" என்றான் கிருஷ்ணன் கண்களை அகல விரித்து.

"நான் யோகம் செய்து பாழாய்ப் போனது உனக்கு இவ்வளவு நையாண்டியாகவா ஆகிவிட்டது?" நெஞ்சு வலிக்கக் குறைப்பட்டுக்கொண்ட மீரா, அப்படியே கண்ணன் மடியில் முகத்தைப் பதித்துக்கொண்டு கதறி அழலானாள்.

"அச்சச்சோ! கல்யாணமான பெண், பிற புருஷன்மீது படலாமா? நான் உன்னைத் தொட்டுத் தடவி ஆறுதல் தர மாட்டேன், அம்மா! தருமத்தைக் காப்பாற்ற வேண்டும் அல்லவா?" என்று இன்னமும் இம்சைக் குறும்பு செய்தான் கண்ணன்.

அதற்காக மீரா அவன் மடியை விட்டு முகத்தை எடுக்கவில்லை. மனம் கொண்டமட்டும் அழுது தீர்த்தாள்.

அக் கண்ணீர் வெள்ளத்திலேயே அவளது உள்ளத்தையும் அறிவையும் மூடியிருந்த பல படலங்கள் கரைந்து ஓட அவன் அருளினான். மழை நின்றதும் வீசுகிற தெள்ளிய வெயில்போல் அவளது அகத்தில் ஒரு தெள்ளிய ஒளி வீசியது.

கண்ணனின் மடியினின்று எழுந்தாள். டாகுர்த் துவாரத்தின் ஒரு தூணில் சாய்ந்து கண்களை மூடிக் கொண்டாள். கண்ணன் அவளைக் குறும்பாகப் பார்ப்பது அந்த மூடிய கண்களுக்கும் புலனாயிற்று. அகக் கண் பார்வை பெற்று விட்டாள் மீரா. தெளிவுற்ற அவளது அகத்தில் நூறு, ஆயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட நிகழ்ச்சிகள் பிரதிபலித்தன,

"தருமம் அறியாக் குறும்பனே!" என்று கண்ணனை அழைத்தாள்.

ஆனால் இப்போது அவள் மீராவாக இருக்கவில்லை. ஆண்டாளாக இருந்தாள்.

'தருமம் அறியாக் குறும்பனைத்
தன்கைச் சார்ங்கம் அதுவேபோல்
புருவ வட்டம் அழகிய
பொருத்த மிலியைக் கண்டீரே?
உருவு கரிதாய் முகம் சேய்தாய்
உதயப் பருப்ப தத்தின்மேல்
விரியும் கதிரே போல்வானை
விருந்தா வனத்தே கண்டோமே!'

என்று நாச்சியார் திருமொழியைப் பாஷை கடந்த பரம நிலையில் பாடுகையிலேயே அவளுக்குத் தருமம் என்பதற்குப் புது விளக்கமும் புரிந்தது.

கண்ணன் தன்னை மணக்க வருவது அதருமம் என்று மீரா கருதுகையில், கண்ணன் தன்னை மணக்க வராததே அதருமம் என்று கருதிக் கோதைநாயகி, 'தருமம் அறியாக் குறும்பனை' என்று அவனை ஏசினாள். ஆம். அவனுடைய தருமம் ஆன்மாக்களை மணப்பதுதான். தன்னிடமிருந்து பிரிந்தவற்றைத் தன்பால் ஆகர்ஷிப்பதுதானே தருமம்? இச்சேர்க்கையாகிய யோகத்தைத் தருவதால்தானே அவன் யோகேச்வரன்?

ஆனால் அவனுடைய தருமத்தைப் பற்றி இப்படிப் பன்னிப் பன்னிப் பேசுவானேன்? பெண் தருமத்தைப் பற்றியல்லவா கேள்வி? இதோ அவனே ஸ்திரீ தருமத்தைப் பற்றி வேறு விதமாகப் பேசிவிட்டானே!

இப்போது மீராவின் மன அரங்கில் வேறு காட்சி! ஆண்டாள் மறைந்தாள். பிரேம பக்தியின் உச்சத்தை எய்திய கோபிகைகள் அவள் உள்ளத்தில் தோன்றினர். அவளுமே அவர்களில் ஒருத்தியானாள். ஆம், ராதையாகத்தான்!

கோபியரின் செவிகளில் கண்ணனின் குழலிசை நிறைந்தது. அவ்வளவுதான். அவர்கள் தங்கள் கணவன்மாரை மறந்துவிட்டு, அவர்களுக்குச் செய்யவேண்டிய கைங்கரியத்தையும் விட்டு, கண்ணன் குழலூதும் யமுனா தீரத்துக்கு ஓடினார்கள்.

கண்ணன் அவர்களிடம் தருமம் பேசினான்!

'பர்த்து: சுச்ரூஷணம் ஸ்த்ரீணாம்
பரோ தர்மோஹ்யமாயயா |
தத்பந்தூனாம் ச கல்யாண்ய:
ப்ரஜானாம் சானுபோஷணம் ||

து:சீலோ துர்பகோ வ்ருத்தோ
ஜடோரோக்யதனோபி வா |
பதி:ஸ்த்ரீபிர்ந ஹாதவ்யோ
லோகேப்ஸுபிரபாதகீ ||

அஸ்வர்க்ய மயசஸ்யம் ச
பல்கு க்ருச்ரம் பயாவஹம் |
ஜுகுப்ஸிதம் ச ஸர்வத்ர
ஔபபத்யம் குலஸ்த்ரியா: ||

"பெண்களின் மகத்தான தர்மம் கணவனுக்குப் பணிவிடை செய்வதுதான். அவனது உறவினருக்கும் சுசுரூஷை புரிய வேண்டும். குழந்தைகளைப் பேணி வளர்க்க வேண்டும். ஒழுக்கமற்றவனாயினும், அதிருஷ்டமற்றவனாயினும், இளமையற்றவனாயினும், ரோகியாயினும், தரித்திரனாயினும் கணவனைப் பேணினாலொழியப் பெண்களுக்குப் புண்ணிய லோகம் இல்லை. குலஸ்திரீ யொருத்தி பரபுருஷனுடன் சேர்ந்தால் அப்போதே அவள் மேலுலகையும் புகழையும் இழக்கிறாள். இதைவிட அபவாதம் இல்லை. இதைவிட அருவருக்கக்கூடிய வேறெதுவும் இல்லை" என்கிறான் கண்ணன்.

*கோபியர் அதற்கும் விடை கூறலாயினர். மீரா தன் நாடி நரம்புகள் கோடியும் அதிர, ஒவ்வோர் உடலணுவையும் செவியாக்கிக்கொண்டு கூர்ந்து கேட்டாள். அவளை வாட்டி வதைக்கும் வினாவுக்கல்லவா எழுத்தறிவற்ற அந்த ஆய்ச்சி யர்கள் விடை சொல்லப் போகிறார்கள்?*

*'அழுகையிலும் சுஸ்வரம் தவறாதவர்கள்' என்று பிரம்ம நிஷ்டர் போற்றும் கோபியர் மதுர மதுரமாகப் பேசுகிறார்கள்.*

'யத்பத்ய பத்ய ஸுஹ்ருதா மநுவிருத்திரங்க
ஸ்த்ரீணாம் ஸ்வதர்ம இதி *தர்மவிதா* த்வயோக்தம் |
அஸ்த்வேவ–மேத–துபதேசபதே த்வயீசே
ப்ரேஷ்டோ பவாம்ஸ்–தநுப்ருதாம் கில பந்துராத்மா ||'

*'தர்மவித்' என்று, அதாவது, 'தருமம் அறிந்தவனே' என்று கோபியர் கண்ணனை அழைக்கக் கேட்டவுடன் மீராவுக்குப் புல்லரித்தது. 'தானும் ஆண்டாளும் அவனை அதருமக்கார னாகச் சொன்னபோது, எழுத்தறிவற்ற இடைச்சியர் அவனைத் தர்ம வித்தாகக் காண்கிறார்களே, இன்னும் என்ன சொல்லப் போகிறார்களோ!'*

*கோபியர் பேசுகிறார்கள்: "தர்மம் அறிந்தவனே! கணவ னுக்கும் குழந்தைகளுக்கும் உறவினருக்கும் பணி புரிவதே பெண்களின் ஸ்வதர்மம் என்று நீ சொன்னாயல்லவா? அதனாலேயே உன்னைச் சேர்ந்து நாங்கள் பணிபுரிய அநுமதிப்பாய். ஏனெனில் உன் உபதேசத்துக்கு மையம் நீயே அல்லவா! உன்னைவிட உறவினர், அன்பர் யாருண்டு? நீயே அல்லவா எல்லா உறவினர்களுமாகி, அதோடு எல்லா உறவுகளையும்விட நெருங்கிய ஆன்மாவாக ஒவ்வொருவரிட மும் இருக்கிறாய்?"*

*மீராவின் மனத்தில் மேலும் காட்சி மாறியது. முற்காலத்தில் மேலும் ஆயிரமாயிரம் ஆண்டுகளைச் சென்றடைந்தாள் அவள்.*

*கண்ணன் யாக்ஞவல்கிய முனிவராக அமர்ந்திருக் கிறான். அவனெதிரே முனி பத்தினி மைத்ரேயியாக மீரா.*

*யாக்ஞவல்கியர் மைத்ரேயிக்கு உபதேசிக்கிறார்:*

*"ப்ரியே, கணவனிடமும் மனைவியிடமும் புத்திரர் களிடமும் அன்பு செய்வது அவற்றின் பொருட்டாகவே என்றா நினைக்கிறாய்? அல்ல. அவை ஒவ்வொன்றிலும் ஆன்மாவாக ஒரே பொருள் இருக்கிறது. அந்த ஆன்மாவோடு பிரிவற்றது உன் ஆன்மா. ஆன்மாவை ஆன்மா அன்பு செய்து*

ஒன்றுவதே அதன் ஸ்வதருமம். இது காரணமாகவே உலகத்தில் பலவகைத்தான அன்புகள் தோன்றியுள்ளன."

மீராவின் உள்ளம் தூய ஸ்படிகமாகிவிட்டது.

'ஆம், எல்லா உறவாகவும் இருப்பவன் அவன். அவன் எல்லா ஜீவரிடமும் உட்புகுந்திருப்பதாலேயே மனைவிக்குக் கணவனிடமும் கணவனுக்கு மனைவியிடமும் அன்பு ஏற்படுகிறது. இதுபோன்ற பல சிறிய பிரியங்களைக் காட்டி, இவற்றின் வழியே அவன் சிறுகச் சிறுகத் தன்னிடம் ஜீவனுக்குப் பிரியத்தை உண்டாக்கிக் கடைசியில் பிரியாத ஒருமை இன்பத்தைத் தருவான். உலக வாழ்வில் அந்த அன்பு தடம் புரண்டுவிடக் கூடாது என்றே கற்பு நெறியைப் பெண்டிருக்குப் பரம தருமமாக வைத்தார்கள். ஆனால் அந்தத் தருமமும் அவனை அடைய ஒரு சாதனம்தான். சாதனத்தின் முடிவாகிய அவனையே இதோ கையும் மெய்யுமாக அடைந்த பிறகு எந்த நெறிதான் எடுபடும்? நோய் தீர்ந்த பின் பத்தியம் எதற்கு? உச்சியை அடைந்தபின் ஏணி எதற்கு?'

மீரா பூரணமாகப் புரிந்துகொண்டு விட்டாள்!

அவள் புரிந்துகொண்டதை அப்பூரணன் புரிந்து கொள்ளாமற் போவானா?

"மீரா!" என்று பிரேமை பொங்க அழைத்தான் கண்ணன்.

ஸ்படிக மணிகளாக மீரா தூய ஆனந்தக் கண்ணீரை வழிய விட்டுக்கொண்டு அவனை நோக்கினாள்.

"மீரா, நீ என்னை குருவாக வந்து உபதேசிக்குமாறு கேட்டுக்கொண்டாயல்லவா?" என்றான்.

மீராவுக்கு உள்ளம் சிலிர்த்தது. அவள் தன் வயம் இழந்தாள்.

ஆதிகுருவான பரமாத்மாவின் கம்பீரமான, கனமதுர மான உபதேசம் அவளது இதயவெளியில் பாய்ந்தது!

"ஸர்வ தர்மான் பரித்யஜ்ய
மாமேகம் சரணம் வ்ரஜ!"

"எல்லாத் தர்மங்களையும் விட்டுவிட்டு என்னையே சரணடைவாய்!"

ஆகா, பார்த்தனுக்குக் கீதோபதேசம் செய்த பரமன், அதன் சிகரமாக, கடைசி சுலோகமாகக் கூறிய மகா மந்திரம் மீராவுக்கும் அவனிடமிருந்தே உபதேசமாகிவிட்டது!

பார்த்தனிடம், 'ஸ்வதர்மத்தைவிடாதே, ஸ்வதர்மத்தைக் காப்பாற்று' என்பதையே மீண்டும் மீண்டும் வற்புறுத்திக் கூறி விட்டுக் கடைசியில் அவ்வாறு தருமத்தை அநுஷ்டிப்பதன் உறு பயனாக, **"எல்லாத் தருமத்தையும் விட்டு** என்னிடம் அடைக்கலம் புகுவாய்" என்று கண்ணன் கூறினானே! அதன் பொருள் என்ன என்பது மீராவுக்குப் புரிந்துவிட்டது.

இனி ஸ்திரீ தர்மமில்லை; குலதர்மமில்லை; ராஜ தர்மமில்லை; அவனை அடைவதொன்றுதான் தர்மம்!

"எல்லா தர்மங்களையும் விட்டேன். பிரபோ! என் தர்மத்தின் மர்மத்தைப் புரிந்துகொண்டேன். அதோடு மட்டு மின்றி உன் தர்மத்தையும் மர்மத்தையுங்கூட உன்னருளால் புரிந்துகொண்டு விட்டேன், ஐயனே! பாரதப் போரில் நீ தருமத்தையும் மீறி மாயம் புரிந்து பஞ்சபாண்டவரைக் காத்தாய் என்றும், சுக்ரீவனின் பொருட்டுத் தர்மத்தை மீறி வாலியை வதைத்தாய் என்றும் உன்னைப் பழிப்பவர் இருக்கலாம். ஆனால் அடியாரிடம், 'தர்மம் விட்டு என்னைச் சரணடைக' என்று கூறிய நீயும் அவர்கள் பொருட்டு, தர்மத்தை விட்டாய்; ஸர்வ தர்ம பரித்யாகத்தை அவர்களோடு பரிவர்த்தனை செய்து கொண்டாய் என்பதைப் பேதையாகிய எனக்கு, அறியாச் சிறுமியான எனக்கு உணர்த்திவிட்டாய்! உலகுக்கு வழிகாட்ட நீ உத்தமர்களை அனுப்பிவைத்து அவர்கள் மூலம் உலக தருமங்களை அநுஷ்டித்துக் காட்டுகிறாய் என்று கேள்விப்பட்டிருக்கிறோம். ஆனால் உலக தர்மங்களையும் கடந்த நிலையில் வாழ்ந்து காட்டுவோரையும் நீ படைக்கத்தான் செய்கிறாய்! அப்படிப்பட்டோருள் ஒருத்தியாக அடியாளைத் தேர்ந்தெடுத்துவிட்டாய்! பாகவதத்தையும் பாரதத்தையும் என் கண்முன் காட்டி என்னை வாழ்வித்து விட்டாய், பரமகுருவே!" என்று திக்கித் திணறிக் கூறியதும், கூறாததுமாகக் குழறிவிட்டு கண்ணனின் சிவந்த தாளிணையைத் தன் சிரத்தின்மீது சூடிக் கொண்டாள் மீரா.

தங்களைச் சுற்றி தருமம் என்கிற பெரிய கட்டுப்பாட்டை எழுப்பிக்கொண்டு, கூட்டுப்புழுப்போல் வாழ்ந்த மகான்கள் பலர். புழுவின் கூட்டிலிருந்துதான் பட்டு கிடைக்கிறது. மகான்களின் தருமக் கட்டுப்பாட்டிலிருந்து மக்களுடைய மனத்தின் மானத்தைக் காப்பாற்றும் பட்டு வஸ்திரம் கிடைக்கிறது. கூட்டுக்குள்ளேயே புழு மரித்தால்தான் பட்டு கிடைக்கும். ஆனால் எல்லாப் புழுக்களும் மரித்துவிட்டால்?

பிறகு அந்தத் தியாக சந்ததி உருவாவதும், எதிர்காலத்த வருக்குப் பட்டு கிடைப்பதும் எப்படி? அதற்காகவே கூட்டைப் பிளந்து கொண்டு சில புழுக்கள் வண்ணத்துப் பூச்சியாகப் பறந்து போகத்தான் வேண்டும். அப்படிக் கூட்டைப் பிளந்துகொண்டு போன பட்டுப் பூச்சிகளில் ஒன்றே மீரா.

"மீரா, உன்னிடம் பாகவதமும் பாரதமும் பூர்த்தி பெற்று விட்டன. ராமாயணமும்கூட உன்னிடம்தான் நிறையப் போகிறது. உன்னுடைய மன உளைச்சலைப் பாரதமும் பாகவதமும் தீர்த்தன. நான் ராமாயணத்தில் உற்ற உளைச்ச லைத் தீர்க்க நீ வந்திருக்கிறாய்!" பரிவொழுகக் கூறி, மீராவைத் தன் அமுதக் கரத்தால் பற்றி எடுத்து நிறுத்தினான் கோவிந்தன்.

மீரா ஆச்சரியம் நிறைந்த விழிகளால் அவனையே உறுத்து நோக்கினாள்.

"அதை இப்போது சொல்லமாட்டேன்; சமயம் வரும் போது நீயே தெரிந்துகொள்வாய்" என்றான் அச்சுதன்.

"உன் விருப்பம் கண்ணா!" என்றாள் மீரா.

கண்ணன் தன்னுடைய புதிய விருப்பத்தைச் சொன்னான். அவன் விருப்பம் அதிசயமாக இருந்தது! மீராவைக் கல்யாணம் செய்துகொள்வதுதான் அவனது விருப்பமாம்! அதுவும் மேர்தாவில் அல்ல! சித்தோரில் மீராவின் கணவன் எடுப்பித்த ஆலயத்தில்தான் அவளை மணப்பானாம்!

ஏனாம்? இதே மேர்தாவில் ஆதியில் அவளுடைய பிஞ்சுப் பிராயத்திலேயே அவன் கலியாணம் செய்து கொண்டதை அவள் சித்தோரில் ரத்து செய்துவிட்டாளே! அதனால்தானே இந்தப் புதுக் கல்யாணமே? அதை 'ஆகி வராத' இந்த மேர்தாவில் செய்து கொள்வானேனென்றுதான் சித்தோரையே தேர்ந்தெடுத்திருக்கிறான் போலும்! இது நம் ஊகந்தான்! 'ஏனாம்?' கேட்டோமே! அதற்குப் பதிலான அநுமானம்.

ஆனால் 'ஏன்' என்று மீரா கேட்கவேயில்லை! அவள் எப்படிக் கேட்க முடியும்? கேள்விகளுக்கு விடை பிறப்பது தருமத்தின் எல்லைக்குள்தான்.

இதுவோ? 'ஸர்வ தர்மான் பரித்யஜ்ய' அல்லவோ?

# 22 காற்றில் வந்தது கானம்!

மீராவுக்கு இக உலக நினைவு வந்தபோது ஆனந்தச் செய்தி கிடைத்தது.

கும்பராணாவிடமிருந்துதான் செய்தி வந்திருந்தது. சித்தோரில் மீரா பூஜித்த கிருஷ்ண விக்கிரகத்துக்காக ராணா எழுப்பி வந்த கோயில் பூர்த்தியாகி விட்டதாம். மீரா புறப்பட்டு வந்துவிட்டால் கிருஷ்ண ஜயந்தியன்றே கும்பாபிஷேகம் செய்துவிடலாமாம்.

மீரா புறப்பட்டாள் — தன் கலியாணத்துக்காக!

அன்புத் தாத்தா ராவ்தூதாவுக்கு அவள் அவ்வளவு மகிழ்ச்சியுடன் புறப்பட்டதில் எல்லையில்லாத மனத் திருப்தி உண்டாயிற்று.

"தாத்தா, இனி என்னைப்பற்றி உங்களுக்குக் கவலையே வேண்டாம்! நான் எப்படி நடந்துகொண்டாலும் மகாராவல்ஜி அரவணைத்துக்கொண்டு போய்விடுவார்" என்றாள் மீரா.

பேதை மீரா வரப்போகும் சோதனைகளை அப்போது அறிந்திருக்கவில்லை. அந்தச் சோதனைகளைக் கேட்டுத் துடிக்கும் துர்ப்பாக்கியம் ராவ்தூதாவுக்கும் இல்லை! நிறைந்த மனத்துடன் பேத்தி புக்ககம் கிளம்பியதில் மனம் நிறைந்த அந்தப் பெரியாரின் வாழ்க்கைப் பயணமும் சிறிது காலத்திலேயே நிறைந்துவிட்டது.

"கும்பாபிஷேகத்துக்கு அனைவரையும் அழைக்க வேண்டும்" என்று மீரா திரும்பத் திரும்ப ராணாவிடம் சொன்னாள்.

"சரி, அம்மாவையும் உதயாவையும் அவசியம் அழைத்து விடுவோம்" என்றார் கும்பாஜி.

"அனைவரையும் அழைக்க வேண்டும்" என்று மீளவும் அழுத்திச் சொன்னாள் மீரா.

"நீ என்ன சொல்கிறாய் மீரா?" என்று தெரியாதவர் போல் வினவினார் ராணா.

"ஆமாம். மூத்த பிள்ளை உதயசிங்கை நான் பார்க்க வேண்டாமா?" என்று வினவினாள் மீரா.

"மீரா, என் இதயத்தில் மிக மிக நொந்து குழைந்து போயிருக்கும் ஒரு பாகத்தைத் தொட்டு விட்டாய்! உதயனைப் பற்றி நான் பேசும்படி செய்யாதே. அவனைப் பற்றி நான் பேசுவதென்றால் அது ஏச்சாகத்தான் இருக்கும். அவனை நான் ஏசுவதற்கு அவள் விடமாட்டாள்" என்றார் கும்பராணா நாத்தழுதழுக்க!

'அவள்' என்று அவர் குறிப்பிட்டது கற்புக்கரசியான அவரது முன்னாள் பட்டமகிஷியும் உதயனது அன்னையுமான கும்பலா தேவியைத்தான் என்பதை மீரா புரிந்துகொண்டாள். கற்புக்கரசியாயினும் தாய்ப்பாசம் அடியோடு அற்றுவிடுமா?

"நானே பூஜ்ய கும்பலா தேவியாகித்தான் பேசுகிறேன், ஸ்வாமி! என் ஜேஷ்ட புத்திரரைப் பார்க்க வேண்டும் என்கிறேன். நான் அவரைப் புதல்வராக ஸ்வீகாரம் செய்து கொள்வதற்குக் கண்ணன் சந்நிதியைக் காட்டிலும் வேறு சிறந்த இடம் உண்டா?" என்று பிடிவாதமாகப் பேசினாள் மீரா,

கணவனிடம் மனைவி ஸ்தானத்தை மறுத்தவளே பிள்ளை வரம் கேட்டாள்!

"சரி, உன் விருப்பப்படியே செய்கிறேன். அப்புறம் ஈசுவர சங்கற்பம் இருக்கவே இருக்கிறது" என்றார் ராணா. எதனால் அவர் நாவில் அப்படி வந்ததோ?

ஜன்மாஷ்டமி. சித்தோரில் கிரிதர நாகரனின் ஆலயத்துக்குக் கும்பாபிஷேகம் நிச்சயித்த புண்ணிய தினம் அது. மேவார் சாம்ராஜ்யம் என்றும் கண்டிராத வகையில் வைஷ்ணவ சாதுக்களும் நாமசங்கீர்த்தன கோஷ்டிகளும் யோகிகளும் பைராகிகளும் குழுமிச் சித்தோரை வைகுந்தமாக்கியிருந்தனர். சௌபாக்கிய தேவிக்கும் உதயாவுக்கும் அன்று எவ்வளவு எரிச்சல் மூண்டிருந்தது என்பதைச் சொல்லத் தேவையில்லை. எனினும் மீராவும் ராணாவும் மீண்டும் மீண்டும் அழைத்திருந்தபடியால் வேண்டா வெறுப்பாகக் குடமுழுக்கு விழாவுக்கு வந்திருந்தனர்.

அன்று இயற்கையே கண்ணனின் திருவுருவம் போலத் திகழ்ந்தது. மழை பெய்து ஓய்ந்திருந்தாலும் இன்னமும் எங்கும் சில்லென்று கனமான கருமேகங்கள் சூழ்ந்திருந்தன. அவற்றின் இடையே ஒளிர்ந்த வான வில்லோ கண்ணனின் குழலில் சூடிய மயிற் பீலியாகவே தோன்றியது. சின்னஞ் சிறு நுண் துளிகளாகத் தூற்றல் விழுந்துகொண்டிருந்தது. ரங்க மஹலின் விஸ்தாரமான புல்வெளியில் இளவெயில் படிவதும்

நிலத்தோடு நிலமாகக் காற்று வீசுவதும் அவ்வப்போது மேகங்களின் நிழல் வந்து மேவுவதும் பசுமையிலேயே நூறு நூறு நயபேதங்களைப் பகுத்துக் காட்டியது. நிலத்தைப் பண்படுத்தப் பரவியிருந்த நுண்ணிய செம்மண் ஆங்காங்கே நீரில் குழைய, மண்ணின் நிறத்தில் நீரும் குழைந்து சிவந்து சின்னஞ்சிறு வடிகால்களாக ஓடுவதைக் காண்கையில் மீராவின் உள்ளம் குப்பென்று சிலிர்த்தது. கண்ணனோடு கலக்கும் இன்பத்துக்கு ஓர் உவமையைக் கண்டுவிட்டது அவளது கவியுள்ளம். மண் வண்ணத்தில் ஊறிய நீராக அவள் கண்ணனின் மணிவண்ணத்தில் ஊறவேண்டும். நீரில் ஊறிய மண்ணாகக் கண்ணன் அவளது கண்ணீரில் ஊறவேண்டும்.

கண்ணனின் நிறத்தில் தோய்ந்துவிடுவது பற்றி மீரா பலப்பல பாடல்களில் குரல் கொடுக்கிறாள்.

'செம்புலப் பெயனீர் போல
அன்புடை நெஞ்சந் தாங்கலந் ததுவே'

என்று இதையே சங்கத் தமிழும் சொல்லும்.

ஆலயத்தை நெருங்குகையில், அங்கே கோயில் கொள்ளுவதற்காக கிரிதரனே அடியெடுத்து வைத்து நடந்து வரும் ஒலி மீராவுக்கு ஸ்பஷ்டமாகக் கேட்டது. கும்பாபிஷேகம் செய்யும் வேதவித்துக்களுக்குப் பின்னால் அவள் கும்ப ராணாவைத் தொடர்ந்து கோபுரத்துக்கு ஏறியபோது கண்ணன் வருவதைச் சிகரத்திலிருந்து கண்டு களிகொள்ளவும் விரும்பிப் பாடினாள்.

'காதாரக் கேட்டேன் இந்நாள் – ஹரி
பாதாரவிந்த ஒலி

மண்டபம் ஏறிக் கண்டிடுவேன் என்
மன்னவன் நடையெழிலை

மயிலும், மண்டூகம், அன்றிலும் அகவின;
குயிலும் பொழிந்த(து) இனிமை;
வானம் சொரிந்தது தண்பூஞ் சிதறல்;
நாணம் விட்டாள் மின்னல் நங்கை!

தரணியும் தரித்தாள் நவநவப் பசுமை
வருணனின் அன்பு வண்ணத்தில்;
நாகரனே, மீரா மனம் பசுமை பெற
வேகமே, வேந்தே! வந்திடுவாய்!

சிகரத்துக்குக் கும்பாபிஷேகம் நடந்தது. ஆனந்த சிகரத்தில் மீராவின் இதயத்துக்கும் கும்பாபிஷேகம் நடந்தது.

கும்பாபிஷேக நீர்த் துளிகளில் நனைந்து நின்ற கோபுரத்தைப் போன்ற ஒரு மகோன்னதத்துடனேயே மீராவும் கீழிறங்கிச் சந்நிதிக்கு வந்தாள்.

ஆம், கோபுரமாகவேதான் அவள் இருந்தாள். நேற்று வரை மென்மை மட்டுமின்றி ஓரளவு நொய்ம்மையும் பலவீனமுமாக இருந்த மீரா இன்று கம்பீரத்தின் உருவாகி விட்டாள். வாடிய பயிர் தண்ணீர் பாய்ந்தவுடன் தலை நிமிர்ந்து நிற்பது போல் கும்பாபிஷேக நீர் புரோக்ஷணமானவுடன் மீராவும் தலை நிமிர்ந்து விட்டாள்.

அன்று மீராவுடைய கிரிதரநாகரன் பிரதிஷ்டையானது மட்டுமல்ல. கிரிதரன் காப்பாற்றிய பசுக்களின் தலைவியான காமதேனுவையும் அழகிய ஜயபுரிச் சலவைக்கல்லில் செதுக்கச் செய்து அதனையும் விக்கிரகத்தின் பக்கலில் பிரதிஷ்டை செய்வித்தார் கும்பராணா. 'கோ' இல்லாமல் 'கோவிந்தன்' ஏது? காமதேனு சேர்ந்தபின் கிரிதரனுக்கே ஒரு முழுமை கூடினாற்போல் இருந்தது. கிரிதரனை கம்பீரமாக முகம் தூக்கிப் பார்க்கும் காமதேனுத் தாயாகவே மீராவும் ராணாவின் கண்களுக்கு க்ஷணநேரம் தரிசனம் தந்தாள்! உச்சி வானில் தங்கும் சூரியனைக் காண்பதற்காக முகம் நிமிர்த்தி கன ஒய்யாரமாக நிற்கும் சூரியகாந்திப் பூப்போல நிற்கும் மீராவைக் கண்டு கும்பராணா எவ்வளவுக்கு அதிசயித்தாரோ அவ்வளவுக்கு ஆனந்தமும் கொண்டார்

கண்ணனைப் பேழையிலிருந்து வெளியே கொண்டு வந்து ஆலயத்தில் அமர்த்தக் காரணமாயிருந்த ராய்மல்லோ அதைவிட அதிகமாக அகமகிழ்ந்தான். எல்லோரையும்விட சேடி ரத்தினாவுக்குத்தான் சொல்லி சாத்தியமில்லாத மகிழ்ச்சி.

ஆனால் இவர்கள் மகிழ்ச்சியை யெல்லாம் வற்ற வைப்பது போல் கோபுர மீரா நடக்கத் தொடங்கினாள்.

நடக்கத் தொடங்கினாளா? நடனமாடவே தொடங்கி விட்டாள்!

மேர்தாவில் அவள் 'ஸர்வதர்மான் பரித்யஜ்ய' உபதேசத்தைக் கேட்க மட்டுமே செய்தாள். அதை இப்போது தான் அவள் நடத்தியே காட்டத் தொடங்கிவிட்டாள்! புத்தி பூர்வமாகவா அப்படிச் செய்தாள்? அல்ல. அவளது இதயத்தில் ஊறியிருந்த கண்ணனின் உபதேசமே அவளைச் செயற் படுத்திற்று.

*பேடகத்தில் மறைந்து கிடந்த கண்ணனுக்கு நாடறிய அபிஷேக, அலங்கார, அர்ச்சனாதிகள் முடிந்தவுடன் மீரா ஸ்திரீ தருமத்தைத் துறந்து, பத்தினிப் பெண்ணின் தருமத்தைத் துறந்து, மகாராணியின் தருமத்தைத் துறந்து, சகல தருமங்களையும் துறந்து சந்நிதியிலேயே நாட்டியமாடினாள்! குழந்தைப் பருவத்தில் முகூர்த்த காலம் லஜ்ஜை விட்டவள் இப்போது நிரந்தரமாக வெட்கத்தை விட்டு நிருத்தியம் செய்யத் தொடங்கினாள்! கற்றுக் கொள்ளாமல் ஆடிய அந்த நடனத்தின் சத்தியத்தை நிலைநாட்டிப் பாடவும் தொடங்கினாள், குளக்கரையில் கண்டெடுத்த சிப்ளாக் கட்டையைத் தட்டிக்கொண்டு!*

'கிரிதரன் முன்பு நான்
திருநடம் புரிவேன்

காதலும் பிரேமையும் காற்சிலம்பாக்கி
சீதல நினைவினைச் சீலையாயுடுத்து (கிரிதரன்)

ஆடிப் பாடி என் அன்பு ரசிகனை
ஆனந்த வெள்ளத்தில் ஆழ்த்திடுவேன்
அடியார் கணத்தின் திருஅடி பணிந்து
அடைக்கலம் அநுதினம் கொள்வேன் (கிரிதரன்)

உலக வெட்கமுறை உதறித் தள்ளினேன்
குலத்தின் கௌரவம் குப்பையில் கொட்டினேன்;
பிரியன் சயனத்துக்குப் புறப்பட்டேன் இதோ!
ஹரியின் கருநிறத்தில் கரைந்திடுவேன்!'

*மீராவின் ஆடலும் பாடலும் அங்கு கூடியிருந்தோரில் பலரது உள்ளத்தைச் சில்லிட்டுப் போகச் செய்தன!*

*'ஏராளமான பொது மக்களும் ஆண்டிப் பரதேசிகளும் குழுமியுள்ள இடத்தில் ராஜஸ்தான சக்கரவர்த்தினி நடனமாடுவதாவது? 'பிரியன் சயனத்துக்குப் புறப்பட்டு விட்டேன்?' என்று பாடுவதாவது? என்ன பயங்கரம்? தேவி, வேண்டாம் இந்தப் பக்தி வெறி!' என்பது போல் மீராவைக் கெஞ்சும் கண்களுடன் பார்த்தாள் ரத்தினா.*

*மீராவோ இந்த உலகக் கட்டுப்பாடுகளை, அவள் வார்த்தைப்படியே குப்பையில் கொட்டிவிட்டாள்! தனக்காகப் பரிதாபப்படும் தாதியிடம் கானம் செய்யலானாள்.*

'நாணம் கொள்ளக் காரண முண்டோ,
நாதனுக்குரிய நன்னெறிச் சேர்ந்தபின்?'

அவளுடைய நாதன் கும்பராணா என்றும் அவனிடம் ஒழுக வேண்டிய தருமத்தை அவள் மீறி விட்டான் என்றும் உலகம் நினைக்கும் போது, மீராவோ பரம திருப்தியாக நாதன் வழியில் நிற்பதாகப் பாடினாள்.

'நாணம் கொள்ளக் காரண முண்டோ,
நாதனுக்குரிய நன்னெறி சேர்ந்தபின்? (நாணம்)

அற்புத நாயகனின்
கற்பில் நிலைத்தபின்
வெளியுலகம் காணக்
களிநடம் புரியவே (நாணம்)

மருமஞான அம்(பு)என்
நிருமல மனத்தை ஊ(டு)
உருவித் துளைத்திட்டு
மறுபுறம் போந்தபின் (நாணம்)

குளவிக் கொட்டாய்ச் சுற்றம்
உளம் புண்செய்தாலும்
மானம் மரியாதையை
வானத்தில் விட்டபின் (நாணம்)

கிரிதரப் பிரபுவுக்கு
உரியவள் ஆனபின்
பரிகசிக்கும் உலகைச்
சிரித்து மன்னிப்ப தன்றி (நாணம்)'

அசுர வேகம் என்பதற்கும் மேலாக தேவ வேகம் என்று ஒன்று உண்டு போலும்! அந்த வேகத்தில் மீரா ஆவேசத்தில் ஆடிப் பாட, அதைப் பார்த்து வியப்பதையும், வியர்ப்பதையும், விசனிப்பதையும், வெட்குறுவதையும் தவிர அங்கு குழுமியிருந்த எவராலும் காரியத்தில் எதுவும் செய்ய இயலவில்லை! அவர்களது உணர்ச்சிகள் அவரவரது மனத்தோடு நின்றன.

'சுற்றத்தினர் என்ன செய்தாலும் என் வழிதான் நடப்பேன்' என்று ஓர் இளம் பெண் ஆணையிட்டால் யாருக்குத் தான் கோபம் வராது? சௌபாக்கிய தேவிக்குக் கேட்பானேன்?

உதயாவோ வெட்க உணர்ச்சியில் குன்றிப் போய்விட்டாள். 'இளமையில் கைம்மை அடைந்த நான் இன்றுவரை அவசியமிருந்தாலொழிய வெளி உலகுக்கு வருவதில்லை. முகத்திரையின்றி ஆடவர்முன் வருவதில்லை.

யௌவனம் துளும்பி நிற்கும் மதனியோ பெண் குலமே வெட்கப்படும்படியல்லவா நடந்து கொண்டு விட்டாள்?' முன்பு காரணமில்லாமலே மீராவிடம் ஆத்திரம் கொண்ட உதயாவுக்கு இப்போது காரணத்துடனேயே ஆத்திரம் கொள்ள வாய்ப்புக் கிட்டிவிட்டது. தருமங்களை விடுகிற நிலையையும் மருமம ஞான அம்பின் போக்கையும் ஊதா அறிய முடியுமா?

ஊதா மட்டும்தானா? கும்பாபிஷேகம் செய்த கும்பராணாவுக்கே குழப்பமாகி விட்டது. மணமான நாளிலிருந்து மீராவைப் புரிந்துகொள்ளாமலே தவித்தவர் அவர். நடுவே சிறிது காலம் புரிந்துகொண்டாற்போல் ஆறுதல் பெற்றிருந்தார்! இப்போது புண்ணை மூடிய தழும்பு விண்டு போய் மீண்டும் குருதி பெருகத் தொடங்கி விட்டது. 'அன்றொரு நாள் பரவெளியில் சயனம் செய்கின்ற காதலனைப்பற்றிப் பாடினாள். இன்று இத்தனை ஆயிரம் மக்களுக்கெதிரே அவனது சயனத்துக்குத் தானும் செல்வதாகப் பறைசாற்றுகிறாளே? அப்படியானால் இவள் மெய்யாகவே கிருஷ்ண பரமாத்மாவையா காதலிக்கிறாள்? இது என்ன சாத்தியமற்ற ஆசை?'

மீராவிடம் மற்றவர்களுக்கு வெறுப்பு மிகுந்த போதிலும் கும்பருக்குப் பரிதாபமே ஏற்பட்டது,

மீராவின் செயலினால் சொல்லொணா அவமானமும் அதிர்ச்சியும் அடைந்து அனைவருமே — பிரிய ராணாவும் அதிப்பிரிய ராய்மல்லும் அதைவிடப் பிரியமான ரத்தினாவும் கூட — கண்ணன் கோவிலிலிருந்து வெளியேறினர். பிழைப்புக் காக ஆண்டி வேஷம் போட்டவர்களும் அரச கோபம் ஏற்பட்டு விடுமோ என அஞ்சி வெளியேறினர். அர்ச்சகர்களும் கூட விரைவாகப் பூஜைகளை முடித்துக்கொண்டு சென்று விட்டனர். உண்மையான அடியார்கள் சிலர் மட்டுமே நீண்டபோது அங்கிருந்துவிட்டு முன் மாலையில் சென்று விட்டனர்.

குட முழுக்கின்போது நடைபெற்ற 'அசம்பாவிதம்' வெளியில் பரவி விட்டதால் புதுக் கோயில் தரிசனத்திற்குப் புது அடியார்கள் எவரும் வரவேயில்லை.

மாலை மயங்கியது.

அப்போது ஆலயத்தில் இருந்தது இரண்டே ஆத்மாக்கள் தாம். ஒன்று தூய்மையே உருவான மீரா. மற்றது தீமைகளுக்கு உருவமாகச் சொல்லப்பட்ட யுவராணா உதயன்.

கிருஷ்ணப் பிரேமையில் மீரா சுற்றுச்சூழலையும் காலத்தையும் மறந்திருந்தாள். விக்கிரகத்தில் உயிர் கொண்டு வாழ்ந்த அவளுடைய பிரியனுக்காக ஆடுவதும், பாடுவதும், அவனோடு பேசுவதும், பேச்சற்ற சமாதியில் ஆழ்வதுமாக இருந்தாள்.

தகாத துர் எண்ணத்தின் வேகத்தில் உதயனும் கால தேச வர்த்தமானங்களை மறந்து மீராவுடனேயே தனித்து நின்று விட்டான்! இருக்கிற இடர்ப்பாடுகள் போதாதென்று இவளாகவே அழைப்பிதழ் அனுப்பி வருவித்துக் கொண்டது இது!

மீராவுக்குக் கிருஷ்ணபோதை தெளிந்தபோது நன்றாக இருள் சூழ்ந்துவிட்டது. கும்பாபிஷேகமான அன்றைக்கே மாலை வழிபாடுகள் வைபவமாக நடைபெறாமல் அர்ச்சகர் அச்சத்துடன் ஒப்புக்குப் பூஜை முடித்துப் போய்விட்டார்!

ஆனால் பூஜை எதுவும் மீராவுக்குத் தேவையாக இருக்க வில்லை. சித்தோரில் வந்து அவளை மணப்பதாக வாக்குத் தந்திருந்த கிரிதரனே அவளுக்குத் தேவைப்பட்டான்.

கிரிதர மூர்த்தத்தை நெருங்கி நடந்தாள்.

அவள் முன்னர் ஒரு நிழல் விழுந்தது.

உதயன் வந்து நின்றான் — அவளுக்கு அண்மையில்.

"ஆகா, யுவராணாவா? சுவாமி தரிசனத்துக்கு மீண்டும் வந்தீர்களா? வாருங்கள்" என்று குழந்தைபோல் கவடின்றி அழைத்தாள் மீரா.

உதயன் கடகடவென்று சிரித்தாள்.

மீராவுக்கு இனம் விளங்கவில்லை.

"உனக்குத்தான் புத்தி கெட்டு விட்டதென்றால் எனக்குமா புத்தி கெட்டுவிட்டதென்று நினைத்தாய்? சுவாமி தரிசனம் செய்கிற வயதா இது?" என்று கேட்டு விட்டு மீண்டும் சிரித்தான் உதயன். "எல்லோரும் ஒதுக்கி வைத்திருந்த என்னைக் கும்பாபிஷேகத்துக்கு வருந்தி வருந்தி அழைத்தாய் அல்லவா? அதற்குப் பரிசு தரவேண்டாமா?" என்று கூறி அவளை நெருங்கினான்.

மீராவைப் பாபி நெருங்கிய ஆபத்தை நினைத்தாலே, இன்று அவள் சரிதம் நடந்து முடிந்து எத்தனையோ ஆண்டுகளுக்குப் பின்பும் நம் நெஞ்சம் நடுங்குகிறது! தன்னந் தனியான மீராவைக் கயவனிடமிருந்து காப்பாற்ற நமக்கே

கையும் காலும் துடிக்கிறது. கைப்பிடித்த கணவனிடமும்கூடத் தன் தூய்மையைக் காத்துக் கொண்ட மீரா, உதயனின் கொடூரத்தைக் கண்டு எப்படிப் பொறி கலங்கியிருப்பாள் என்று துடிக்கிறோம்.

ஆனால் அதிசயத்திலும் அதிசயமாக மீராவின் பொறி கலங்கவில்லை! எல்லாத் தருமங்களையும் விட்டுவிட்ட அவளை இனித் தரும காரியம், அதரும காரியம் எதுவுமே தொடாது. அதைத் தெரிந்துகொண்டு தெள்ளிய தெளிவுடனே நின்றாள் மீரா. ஆனால் உலகில் தர்மாதர்ம வேகங்களுக்கு உட்பட்ட மற்ற ஆன்மாக்களை அவள் மறக்கவில்லை. உதயன் இழைக்கவிருக்கும் அதருமத்தால் தனக்கு ஊறு இல்லை என்றாலும் அவனுக்கே அதனால் ஏற்படக் கூடிய பாபத்தை அவள் மறக்கவில்லை. அந்தப் பாபத்துக்காகப் பரிதாபம் கொண்டாள். பாய வருகிற புலியையே அம்பு தைத்த புறாவாகக் கருதிப் பரிவுடன் பார்த்தாள்.

மீராவின் முகத்தையே மன விகாரத்துடன் பார்த்துக் கொண்டிருந்த உதயனுக்கு அதில் கமழத் தொடங்கிய பரிவின் பிரபையும் ஸ்தூலமாகத் தெரியலாயிற்று. அப்பேர்ப்பட்ட பரிவு! அது தாயார் பூதேவியின், சீதேவியின், சீதையின், ராதையின், கோதையின் அபரிமிதமான பரிவல்லவா? அந்தத் தாயர் மட்டும்தானா?

அந்தப் பிரபையில் மெல்ல மெல்ல அவனது உள்ளத்தில் சூழ்ந்திருந்த இருளும்கூட விலகத் தொடங்கியது.

ஆடாமல் அசையாமல் தன்னையே நோக்கும் மீராவின் திவ்விய வதனத்தையே கண்ணீர் மல்கப் பார்த்துக்கொண்டு நின்றான்.

மீராவின் வதனமா அது? எத்தனையோ ஆண்டுகளுக்கு முன் மண்ணோடு மண்ணாகிவிட்ட அவனுடைய சொந்தத் தாயார் கும்பலா தேவியின் திருமுகம் அல்லவோ அது?

இதயத்தை ஆயிரம் பாம்புகள் பிடுங்கினாற்போன்ற ஒரு நோவு உதயனுக்குள் பரவியது.

"அம்மா, அம்மா! நீ இறந்துவிட்டாய் என்று தவறாக நினைத்துவிட்டேன். உலகெலாம் தூற்றும் என்னைவிட்டு நீ மட்டும் இன்னும் போகவில்லையா? மகா பாதகம் செய்ய இருந்த என்னைக் காப்பாற்றினாயே, அம்மா!" என்று அலறியபடி மீராவின் பாதத்தில் பணிந்தான் அவன்.

சாந்தமான குரலில் மீரா பேசினாள்: "எழுந்திருங்கள் யுவராஜ்! உங்கள் அன்னை கும்பலா தேவியாகவே நான் இருப்பேன் என்று மகாராணாவுக்கு வாக்குத் தந்தேன். வாக்கை நிறைவேற்றிக் கொடுத்துவிட்டான், கருணைக் கண்ணன்! அம்மாவுக்கும் பிள்ளைக்கும் இடையே வெட்கம் என்ன? வெட்கத்தை விட நான்தான் குரு இருக்கிறேனே!"

நிலத்திலிருந்து முகத்தை எடுக்காமலே பேசினான் உதயன். "நான் மீண்டும் உன் முகத்தைப் பார்க்க மாட்டேன். ஏனெனில் அப்படிப் பார்க்கும்போது எனக்கு மாதாவைத் தரிசனம் செய்கிற பாக்கியம் கிடைக்காமல் உன்னை மீரா வாகவே...! சித்தி, என்னை மாற்ற நீ முயலாதே. என்னிடம் பரிவும் காட்டாதே. நான் தூர்த்தன். தூர்த்தனாக இருக்கவே விரும்புபவன்." என்று விசும்பியபடியே ஓடிவிட்டான் உதயன்.

அவனைப் பற்றி மீரா சிந்திக்கவே இடமின்றிக் காற்றிலே மிதந்து வந்தது வேணுகானம்!

வேணுகானம்தான் மீராவாகப் பிரிந்து வந்துவிட்டதே என்கிறீர்களா? **அதுவும் அவனது மாயலீலையில் அங்கம்தான்!** பூர்ணத்திலிருந்து பூர்ணத்தையே கழித்த பின்பும் பூர்ணம் அப்படியே எஞ்சி நிற்கும் என்ற மறைமொழியை மறவாதீர்கள்!

# 23. கல்யாணப் பரிசும் கர்மக் கார்முகிலும்

**க**ண்ணன் பிறந்தது கிருஷ்ணாஷ்டமியின் நடுநிசியில் தானே? அதே வேளையைத்தான் அவன் திருமண முகூர்த்தமாகவும் நிச்சயித்திருந்தான் போலும்! அதற்காகத் தான் குழலிசைக் கானத்தைக் காற்றிலே அனுப்புகிறான். முன்பு கோபியரை ராஸலீலைக்கு அழைக்கவும் வேணுகானத்தைத்தானே காற்றில் அனுப்பிவைத்தான்?

குழலிசையைக் கேட்கக் கேட்க மீராவின் நெஞ்சு நெக்குருகியது. எத்துணை காலமாயிற்று அந்த அமிருதப் பிரவாகத்தில் நனைந்து! பண்டைக் காலத்தை நினைவு கூர்ந்தாள். பிஞ்சுப் பருவத்தில் இவள் துளசிச் சரத்தை எடுத்து அவனுடைய வேணுவுக்குள் திணித்தாள். 'நீ என்று என்னைக் கல்யாணம் செய்துகொள்ள மனம் வைக்கிறாயோ, அன்று இந்தச் சரத்தைக் குழலிலிருந்து எடுத்து என் கழுத்தில்

வரமாலையாகப் போடு. அன்றைக்கே நானும் இந்தக் காலியான குழலுக்குள் சப்த ஸ்வரங்களாகப் புகுந்து கொள்வேன்' என்றாள். அதன் பிறகு அவன் அவளைக் கள்ளத்தனமாக — அவள் அறியாமலே — கலியாணம் செய்து கொண்டான். இன்றோ அவளறியுமாறே திருமணம் செய்து கொள்ள வரப்போகிறான்! ஆகா, கிட்டக்கூடிய அநுபவமா அது! பனித்த கண்களுடன் கர்ப்பக் கிருஹத்தைப் பார்த்தாள் மீரா.

விக்கிரகத்திலிருந்து பரந்தாமனே திருமணக் கோலத்தில் இறங்கி வந்தான் — குழலூதியவாறு, அதற்கேற்ப நடனமாடிய வாறு!

அவளருகே வந்து, "நீ எல்லாவிதத்திலும் என்னைப் போலவே ஆகிவிட்டாய்! நான் உருவமுள்ளவன் என்கிறார்கள் சிலர்; நான் ஒரு நிலையில் உருவுள்ளவன், இன்னொரு நிலையில் உருவற்றவன் என்றும் பிறிதொரு சாரார் கருதுகிறார்கள். மஹாநுபூதிமான்களோ நான் ஒரே சமயத்தில் உருவுள்ளவனாகவும் உருவற்றவனாகவும் இருக்கிறேன் என்று கண்டிருக்கிறார்கள். இதேபோல், 'நீதான் என் குழலின் கானம்; ஒன்று நீ ராதாவாக, ஆண்டாளாக, மீராவாக இருக்கமுடியும், அல்லது என் குழலிசையாக இருக்க முடியும்' என்றுதான் நினைத்து வந்தேன். இப்போதோ நீ ஒரே சமயத்தில் என் கானமாகவும் இருக்கிறாய், மீராவாகவும் இருக்கிறாயே, அதெப்படி?" என்றான் கண்ணன்.

"கிரிதரா, நீ மகா தற்பெருமைக்காரன். நானே கானமாகி விட்டால் உன் கானத்தைக் கேட்டு உன் நாத வித்தகத்தைப் பாராட்ட முடியாது என்பதால் என்னையே இரண்டாகப் பகுத்து மாயம் செய்கிறாய். உன் மாயம் இப்போது எனக்கு வேண்டாம்! நீ செய்யக்கூடிய சத்தியம்தான் வேண்டும்."

"அதென்னது நான் செய்யக் கூடிய சத்தியம்!"

"வேறென்ன? நீயே வாக்குக் கொடுத்தபடி என்னை மணப்பதுதான்" — வெட்கம் விட்ட மீராவுக்குக்கூட இதைச் சொல்லும்போது முகம் கவிழ்ந்தது.

"நானும் உன்னை மணக்கத்தான் வந்தேன். ஆனால் மீரா, யோசித்துப் பார்த்தால், 'இதெதற்கு? இந்த நீசமான தேக உறவு?' என்றுதான் தோன்றுகிறது."

"என்ன பிதற்றல் பிதற்றினாய்?" என்று வெகுண்டெழுந்த மீரா, கண்ணனின் வாயைப் பொத்தினாள். அவனுடைய

பட்டு இதழ்கள் தனது கையில் பட்ட இன்ப அநுபவத்தையும் மறுத்துவிட்டுத் தொடர்ந்து பேசினாள்:

"கிருஷ்ணா, நீ என்னைச் சோதித்ததற்கு அளவேயில்லை. இனியும் சோதிக்க முடியும் என்று நினைக்காதே. என் சித்தத்தைக் குழப்பவேண்டும் என்றுதானே உன்னைக் கூடுவது நீசமான தேக உறவு என்கிறாய்? உன் உடலைக் கூடுவதும் மானுட காயத்தைக் கூடுவதும் ஒன்றுக்கொன்று தொடர்பே இல்லாத விஷயம் என்பது எனக்குத் தெரியாதா என்ன? உன்னைக் கூடுவது நீசமாயின் நைஷ்டிக பிரம்மசாரியான நாரதர் காந்தாஸக்தி என்ற நாயக-நாயிகா பாவத்தை பக்தியின் சிகரமாக வைப்பாரா? உன் தேகத்தைச் சேர்வது பௌதிகமான சிற்றின்பமாயின் பிரம்மசரியத்தின் உருவமான சுகதேவர் கோபியருடன் நீ செய்த ராஸலீலையை மோக்ஷ இன்பமாக அநுபவித்துப் பாடியிருப்பாரா? கிருஷ்ணா, உன் மர்மம் எல்லாம் அறிந்தவள் நான். உன் உடல் இன்னது என்பதை அறிந்தவள் நான். உன் உயிர் வேறு, உடல் வேறு அல்ல. கவிதையில் எப்படிச் சொற்கள் கருத்தைப் பொதிந்து கொண்டிருக்கின்றனவோ — சொல்லையும் கருத்தையும் எப்படிப் பிரிக்க முடியாதோ — அப்படியே பிரேம-ஞான-சக்தித் தத்துவத்தைப் பொதிந்துகொண்டு அதிலிருந்து பிரிக்க வொண்ணாமல் திகழ்வதல்லவா உன் திருமேனி! மந்திரங்களே யன்றோ உன் எலும்புகள்? ஸ்வரங்கள் அன்றோ உன் உடலணுக்கள்? சுருதியல்லவா உன் குருதி? ஆத்மா-உடல் என்ற மாறுபாடு ஜீவர்களுக்குத்தானே ஒழிய உனக்கல்லவே! உனது லீலைகள், குணங்கள், நாமம், ரூபம் யாவுமே சச்சிதானந்தமல்லவா?

"நீ சுந்தரமாக இருக்கிறாய் எனில் அந்தச் சௌந்தரியத்தை நாயகி பாவத்தில் அன்றி வேறெப்படி அநுபவிக்க முடியும்? நீ தாயாகவோ தந்தையாகவோ குருவாகவோ அருள் புரியவேண்டுமாயின் இந்தச் சுந்தர ரூபம் தேவையில்லையே! அழகில்லாவிடினும் தாயையும் தந்தையை யும் குருவையும் நாடிவிடுவோமே! உனக்குச் சௌந்தரிய ரூபம் இருக்கிறதென்றால் அது நாங்கள் நாயகியாக இருந்து அநுபவிப்பதற்காகவே ஏற்பட்டதுதானே? ஆம், இதை நீயேகூட மாற்றமுடியாது. உன்னுடைய இனிய அதரங்கள் அநுபவிக்கப்படாமல் போகலாமா? உனது பிரேமை பொங்கும் பார்வைக்குத் தக்க பாத்திரமின்றி அது வீண் போகலாமா? நீ புருஷ ரூபமாக உருவெடுத்திருப்பது

பயனின்றிப் போகலாமா? கண்ணா, நீ பயனற்றவனாக இருக்க முடியாதெனில் உன் அங்கங்களும் அங்கங்களின் சௌந்தரியமும் பயனற்றதாக இருக்க முடியாது. அவ்வாறெனில் நாங்கள் உன் நாயகியாகத்தான் இருந்து தீரவேண்டும். சௌந்தரியத்தை அநுபவிக்கும் சிருங்காரத்தின் மூலமே நாங்கள் சச்சிதானந்த பதம் பெறுவதைத் தடுத்து வதைத்துச் சோதிக்காதே! விதேக முக்தி தரும் உன் விவாகத்தைத் தேகத் தொடர்புள்ளதாகச் சொல்லி வஞ்சிக்காதே!" என்று ஆவேசமாகப் பொழிந்து தள்ளினாள் மீரா.

ஐயனுடன் இணைவது விதேகமுக்தி என்பதை ஜனக விதேகியின் மகளான ஜானகியைவிட யார் நன்கு உணர முடியும்? ராமனிடம் வைத்த மோஹத்தால் ஸோஹம் பாவனை பெற்றாள் வைதேகி என்கிறார் தியாகையர் 'ஏவர மடுகுதுரா' என்ற கிருதியில். சாதாரண மோகம் அஞ்ஞானத்தில் ஆழ்த்தும். இறைவனிடம் வைத்த மோகமோ, 'அவனே நான்' என்கிற ஸோஹம் பாவத்தை — சச்சிதாநந்த முக்தியை — அளிக்கும்.

"எல்லாம் சரிதான். என்னிடம் தத்துவமும் உருவமும் பிரிக்க முடியாமல் ஒன்றியிருக்கலாம். ஆனால் உன் விஷயம் என்ன? உன்னுடைய கரசரணாதி அங்கங்கள் மானுடமானவைதாமே! அவற்றால் நீ எப்படி என்னைத் தூய்மையுடன் சேர இயலும்?" என்று மடக்கினான் கண்ணன்.

"மீரா ஏமாளியில்லை. கண்ணா, ஏமாளியில்லை" என்று பஹுவேகத்துடன் மொழிந்தாள் அவள். "என் தேகம் மானுடமான, பௌதிகமான, லௌகிகமான நாற்றக் குடில் தான். அத்தேகத்தினால் நான் மற்ற மானுடர்களுடன் தொடர்பு கொண்டால், அது நீசமானதுதான். ஆனால் செம்மண்ணில் கலந்த நீர்போல் உன்னிடம் சேர்ந்தவுடன் என் அங்கங்களும் உன் செம்மையை — நீலம் பழுத்த செம்மையை — பெற்றுவிடுமே, ஸ்வாமி! அனலில் விழுந்த கரியும் அனலாவது போல் உன்னைச் சார்ந்தபின் என் பௌதிக தேகமும் தத்துவமயமாக அன்றோ ஆகிவிடும்? ஸ்பரிச வேதியில் தங்கியவுடன் இரும்பும் பொன்னாவதுபோல் உன்னைத் தொட்டவுடன் என் மேனியும் உன் மயமாக, தன்மயமாக அல்லவா ஆகிவிடும்?" மீரா உறுதி நிறைந்த குரலில் மாதுரிய பாவத்தின் லக்ஷணத்தை அறுதியிட்டுக் கூறினாள்.

மேனியை மேனி மணக்கும்போது ஜீவனின் மேனியிலுள்ள சிற்றம்பல வெளியும் பரமாத்மப் பரவெளியோடு ஒன்றிவிடுமே! இதைத்தான், **'தஹரம்பு கருக கரமுந பட்டெ ஜானகி'** என்று 'சீதாராம கலியாணத்'தில் வியக்கிறார் தியாகையர்.

அப்புறம் கண்ணன் அவளைத் திருமணம் செய்து கொள்வதன்றி வேறு வழியில்லை! உண்மையில் அது அவனே விரும்பி நிச்சயித்ததுதானே?

ஆகா, அது எப்பேர்ப்பட்ட அற்புதத் திருமணம்!

வேதமந்திரங்களும் காண முடியாத வேதநாயகன் மந்திரங்களைத் தன் மணிமுகத்தால் கூறி, மந்திர த்வனியும் அதன் சக்தியும் ஒன்றுவதுபோல் மீராவை மணந்தான்.

பகலை இரவு தழுவுவதுபோல் மீராவின் பொற் கரத்தைக் கண்ணனின் நீலக் கை பற்றியபோது, அகில உலகங்களுக்குமே தம்மை ஒரு காக்கும் கரம் இதமாகப் பிடித்துவிடுவதுபோல் இருந்தது. ஆம், அது அண்ட சராசரங்கள் அனைத்திற்காகவும் நிகழ்ந்த திருமணம்!

சகல புவனங்களிலும் நாதமென்ற தோரணம் நாட்டிட, ஊர்வலத்துக்குப் பதில் பிரபஞ்சத்தையே பவனி வந்தான் மாப்பிள்ளை மாதவன் — இந்திரன் உள்ளிட்ட தேவர் குழாம் தொடர!

உலகைத் தாங்கும் ஆதிசேஷனையே மங்கல சூத்திரமாக்கி மீராவின் கழுத்தில் கண்ணன் அணிவிக்க, அனந்தனின் முடியில் ஒளிர்கின்ற நாகரத்தினங்களே திருமாங்கலியமாகப் பிரகாசித்தன.

ஸப்தபதியில் மீராவின் அடியை மாதவன் தன் கரத்தால் பற்றி ஏழு முறை எடுத்து வைத்தபோது, பூலோகம், புவர் லோகம், ஸுவர்லோகம், மஹர்லோகம், ஜனலோகம், தபோ லோகம், சத்தியலோகம் ஆகிய இந்த ஏழிலுமே அவள் உலாவினாள். ஸப்த ஸ்வர உலகில் சஞ்சரித்தாள்.

சூரியனை வேள்வித் தீயாக்கி நட்சத்திரக் குவியல்களை அவல் பொறிகளாக வாரி எடுத்து மீராவும் கண்ணனும் லாஜ ஹோமம் செய்தனர்.

சந்தியாகாலத்தை அள்ளி எடுத்து மீராவுக்கு நலுங்கிட்டான் நாரணன். சந்திரனைச் சந்தனமாக்கி அவனுக்குப் பூசினாள் மீரா!

உலகங்களையே பந்தாக்கி இருவரும் உருட்டிக் கொண்டார்கள்!

அகிலாண்ட கோடிப் பிரம்மாண்ட நாயகனின் நாயகியாக அவனோடு விசுவவெளியில் நடனமாட முன்வந்தாள் மீரா!

"இரு, மீரா! '**காதலையும் பிரேமையையும் காற் சிலம்பாக்கி**' ஆடப்போவதாக முன்னொருகால் பாடினாயே! இதோ, கல்யாணப்பரிசாக உனக்குக் காற்சிலம்பு தருகிறேன். அதைக் கட்டிக்கொண்டு ஆடு" என்றான் மாதவன்.

கலகலவெனச் சிரித்தான். அந்தச் சிரிப்பே கிண்கிணிப் பரல்களாயின. மீரா ஆனந்தக் கண்ணீர் வடித்தாள். அந்த நீர் முத்துக்களின் இனிமையையும் தனது சிரிப்பு மணிகளுக்கு ஊட்டி, அப்படியே சலங்கைச் சரமாக வாரி எடுத்து மீராவின் பாதத்தில் கட்டினான் புருஷோத்தமன்.

மீராவும் கண்ணனும் சராசரமனைத்துக்கும் அதிபர்களாகச் சஞ்சரித்து ஆனந்த நிருத்தியம் புரிந்தார்கள். சராசர இயக்கமே சிவ-சக்தி நிருத்தியம்தானே?

நாட்டியம் ஓய்ந்தபோது நள்ளிரவு நன்கு கடந்து விட்டது. மீரா ஆனந்த லோகத்திலிருந்து இப்பூலோகத்துக்கு வந்தாள்.

அவளுடைய உள்ளுணர்ச்சியை மாயாவிப் பரந்தாமன் ரகசியமாகத் தூண்டிவிட்டிருந்ததன் விளைவாக அவளது எண்ணம் இப்படிப் படர்ந்தது: 'இம்மாயாவிப் பாவி என்னை இங்கேயே தள்ளிவிட்டுச் சிறிது பொழுதிலேயே மாயமாய் நழுவிவிடுவான். பதினைந்து கடிகைக்குள் பொழுதும் விடிந்து விடும். ஆனால் எனக்கோ அது இன்றிரவு இதுவரை அநுபவித்த பெரு விடிவுக்கு வெடிவைக்கும் அந்தகாரமே ஆகும். மாமி, நாத்தி, அவர்களுடைய கட்சியிலுள்ள முக்கியஸ்தர்களிலிருந்து பாமரர்கள்-பணியாட்கள் உள்ளிட்டவர் வரை எல்லோராலும் மொத்துப்பட்டு, துவைபடும் படலம் தொடங்கிவிடும்.'

இதுகாறும் மேவாரிலிருந்த அம் மாற்றுணர்ச்சியாளர்கள் இழைத்த கொடுமைகளைப் பொறுமை உருவாகப் பொருட் படுத்தாமலே வாழ்ந்த பெண் பாவை, இன்று அவள் விரும்பியபடி அந்தப் 'பாவி' அவளுக்கு அளித்த ஆனந்தாதீத அநுபவம் காரணமாகவே அவ்விரு வேறு உலகங்களுக் கிடையே இருந்த தலைகீழ் மாறுபாட்டைத் தீவிரமாக

உணர்ந்தாள். தண் கடலிலிருந்து பொறி மணலில் எறியப்பட இருந்த மீனமாகப் பதைத்தாள்.

அதேபோதில் கொடுமைகள் ஓங்க ஓங்க, மேலும் மேலும் தன்னுடைய கர்ம பாரம் குறைகிறது என்று அவள் ஆலோசித்தறிந்தாள். அதிலேயே ஓரளவு நிம்மதியும் மகிழ்ச்சியும் கொண்டாள். இதுவரை எண்ணிலாத் துயரம் அநுபவித்தாயிற்று. இனி அநுபவிக்க வேண்டியது சிறிதுதான் இருக்கும் என எண்ணி, "கிருஷ்ணா! இன்னமும் நான் தீர்க்க வேண்டிய கர்மா எவ்வளவு இருக்கிறது?" என்று வினவினாள்.

கிருஷ்ண பரமாத்மன் அவளுக்கு ஆகாசத்தைக் காட்டினான். அங்கே அவனது நிறம் போலவே சியாமளமாக ஒரு மேகம் வானில் ஒரு பகுதியைக் கவ்விக் கொண்டிருந்தது.

"மீரா!" என்று கண்ணன் அழைத்தான், கரும்புக் கனிவுடன். "அந்தக் கார்மேகம் எவ்வளவு விஸ்தீர்ணமுள்ள தென்பதை நன்கு கவனித்துக்கொள்" என்றான்.

அப்படியே மீரா மேகத்தை நன்கு கவனித்தாள்.

"மீரா! இதோ நீ கண்ணுக்கு மை இட்டுக் கொண்டிருக்கிறாயே! இப்படி ஒருமுறை இட்டுக் கொள்வதற்காக நீ சிமிழிலிருந்து எடுக்கும் மை அந்த மேகத்தில் எவ்வளவு பங்கு இருக்கும்?" என்று கேட்டான் கண்ணன்.

"கிருஷ்ணா! கணக்கே எடுக்க முடியாத அவ்வளவு நுண்ணிய பங்காக அல்லவா அது இருக்கும்?"

"மீரா! இதுவரை நீ அநுபவித்த துயரமெல்லாம் அவ்வளவு நுண்ணிய அளவுக்கே உன்னுடைய கர்மச் சுமையைக் குறைத்திருக்கிறது. இனி தீர்க்கவேண்டிய கர்மா எவ்வளவு இருக்கிறதெனில்..... அந்தக் கார்முகில் முழுதையுமே நீ மையாக்கித் தினந்தினமும் இட்டுக் கொள்ள வேண்டு மென்றால், எவ்வளவு இருக்கும்? அவ்வளவாகும்."

அதிசயமான சகிப்புத் தன்மையுடன் கஷ்டங்களைத் தாங்கி வந்த மீராவாலேயே இதைத் தாங்க முடியவில்லை. "ஹே ப்ரபோ! நான் என்ன பாபம் செய்து இவ்வளவு கர்மச் சுமைக்கு ஆளானேன்? இவ்வளவு பெரிய சுமை தீருவது எப்படி ஸாத்தியம்?" என்று அலறினாள்.

பரமாத்மா பரிவுடன் பதில் சொன்னான். "மீரா! நீ உன் ஒருத்தியின் பூர்வ கர்மாவைத் தாங்கும் ஜீவன் அல்ல. பக்த ஜனங்களுக்கெல்லாம் ஒரு மாதாவாக இருந்து, அவர்களது கர்மாவில் நீ பங்கு வாங்கி அநுபவித்து, அந்த அளவுக்கு

அவர்களைத் துயரங்களிலிருந்து விடுவிக்கவேண்டும் என்று தியாக ஸங்கல்பம் கொண்டே ஜன்மித்திருக்கிறாய். அதனால்தான் உனக்கு இவ்வளவு கர்ம பாரம் ஏற்பட்டிருக்கிறது.

"ஸரி, கான்ஹா! இது எப்படி, எப்போது தீரும்?"

"தீரும் தீரும்! நீ மட்டும் உன் பொறுமையை விடாமல், எது நேர்ந்தாலும் ஏற்பாயாகில் தீர்ந்தேவிடும். தீரத் தீர நான் சொன்ன கண் மைக் கணக்குப்படி அந்த மேகம் குறையும். ஆம், மீரா! அந்த மேகம் அங்கேயே இருக்கும். தினம் அதில் எவ்வளவு குறைகிறது என்று பார்த்து வா."

தொடர்ந்தும் மீராவுக்குக் கொடுமைக்கு மேல் கொடுமையாக, சோதனைக்கு மேல் சோதனையாக நடந்தபடி இருந்தன. மீராவும் அவற்றை முகம் கொடுத்து வரவேற்றாள். ஆயினும் பிரதி தினமும் அவள் அந்தக் கர்ம உருவான கார் மேகத்தைப் பார்த்து வருகையில் அதில் ஏதோ மயிரிழைகள் தான் குறைந்து வந்தன. அப்புறம்...

கண் மையாக அம் மேகக் கருமை முழுதையும் அவள் ஒரே வழிப்பில் வழித்துத் தீற்றிக்கொண்ட மாபெரும் கொடுமையும் நடக்கத்தான் செய்தது! அந்த நாளுக்கு நாம் இப்போதே செல்வானேன்? சராசர அதிபனின் ராணியாக அவள் பிரம்மாண்ட வெளியில் நிருத்தமிட்ட நாளுக்கே திரும்புவோம்.

அகிலாண்ட கோடி பிரம்மாண்ட நாயகனின் தனிப்பெரும் நாயகியாக இருந்து அடையும் இன்பம் மீராவுக்குத் திருப்தி அளிக்கவில்லை. எளிய மீரா அவனுக்கு எளிய முறையில் பணி செய்யவே ஆசைப்பட்டாள். இதையே தான், 'தாஸனமாடிகோ' என்று புரந்தரதாஸர் பாடினார். புலருமுன்னே திருக்கோயிலில் அலகிட்டு மெழுகி, 'சங்கரா' என்று அலருகிற வரத்தையே எத்தனையோ நூற்றாண்டு களுக்கு முன் அப்பரும் வேண்டினார். பணிபுரிகிற ஆசையில் மீரா கண்ணனை நோக்கிக் கானம் செய்தாள்!

'பணியாளாய் என்னைப்
பணித்திடுவாயே, ஐயே! (பணி)

பணியாளாகி மண்ணைப் பண்செய்து
மணிமலர்த் தோட்டம் வளர்ப்பேன்,
பனிமலர் மாலையை அணியவரும் உன்னை
அநுதினமும் கண்டின்புறுவேன்!

பிருந்தாவனமாய்க் கொடிவீடமைப்பேன்,
எந்தாய் நீ இனிதெழுந்தருள!
விந்தை நிறைந்த உன் முந்தைய லீலையை
சுந்தரமாய்ப் பண்ணிசைப்பேன்!

படுகையருகிலே பசு(ம்) வனமெடுப்பேன்
நடுநடுவே பாத்தி இடுவேன்;
கண்டாங்கிச் சேலையைத் துண்டாக்கி அணிந்து
கண்டே உன்னை உள்ளம் களிப்பேன்

பவ்வியமாகப் பணி செய்யும் எனக்குன்
திவ்விய தரிசனம் தருவாய்,
ஊதியமாக உன் உள்நினைவளிப்பாய்,
பக்தியை மானியம் அருள்வாய்!

பீதக ஆடையும் தோகையும் மாலையும்
ஊதுகுழலுமணி நாதன்
தரிசனமும் உள்நினைவும் பத்தியும்
நிறைவு செய்யும் என்றன் நெஞ்சை

தியானம் புரிந்திட யோகி வருவான் – உத்
தியான வனந்தனுக்கே!
பத்தரும் முத்தரும் சித்தரும் வருவர்
நித்தம் சத்சங்கம் பெறுவேன்

திரைகடல் ஆழமும் குகையின(து) ஆழமும்
நிறைந்தவன் மீராநாதன்;
ப்ரேம நதிக்கரையில் சோக நடுநிசியில்
சாமளன்வந்(து) இன்பு செய்வான்.'

*ராஜஸ்தான் மகாராணி மீரா எளியவளாகத் தோட்டம் போடும்போது, அந்தத் தோட்டத்தைத் தேடித்தான் வலிய சாதனைகள் செய்யும் தவயோகியரும் வருவார்களாம்! ஆண்டவனோடு மெய்யடியாரையும் பச்சைப் புல்லைக் காட்டியே அவள் அழைத்துக்கொண்டு விடுவாளாம், சாமானிய மாந்தர் பசுவை அழைப்பதுபோல்!*

*கண்ணன் சிரித்துப் பேசினான்:* "ஸ்வரங்கள் புஷ்பிக்கும் உன் இதயத்தைவிட எனக்கு வேறு நந்தவனம் எதற்கு மீரா? உன் இதயத்தில் என்றும் இருப்பேன். ஆனால் வெளிப்பட உன்னோடு இனி இருப்பதற்கில்லை. இதோ செல்கிறேன். இனியும் உன்னோடு பேசிக் கொண்டிருந்தால் ஊர் விழித்துவிடும். உன் மானம் போய்விடும்."

"மானமா? போவதா? சர்வ தர்மங்களையும் விட்டபோது என் மானத்தையும்" என்று தொடங்கிய மீரா நாக்கைக் கடித்துக்கொண்டாள். தர்மங்களைத் தான்

விட்டதாகச் சொல்வதும் ஓர் அசம்பாவமாகவே அவளுக்குத் தோன்றியது. அதுவுமன்றித் தர்மங்களை விடுவதென்பது முனைந்து முயன்று செய்கிற காரியமாகவும் அவளுக்குத் தோன்றவில்லை. இலையுதிர் காலத்தில் மரங்கள்தாம் இலைகளை உதிர்க்கின்றனவா? அல்லது இலைகளே தாமாக மரத்தை விட்டு உதிர்கின்றனவா? தர்மங்களைச் சாதகன் விடுவதா? அவனுடைய பக்குவத்தால் தர்மங்களே சாதகனை விடுவதா? கடைசியில் இவை யாவும் அவனருளால் நிகழ்வது அல்லவா?

"மானமோ, அவமானமோ, அபிமானமோ எதுவானாலும் இனி உன் பொறுப்பு. கட்டின பெண்டாட்டியின் மானம் போகாமல் பெயரைக் காப்பாற்றிக்கொள்வது உன் சாமர்த்தியத்தில்தான் இருக்கிறது" என்று சொல்லி மீரா இசைத்தாள்:

'பாணிக்கிரகணம் செய்தபின் – இனி
நாணம் காப்பதுன் கடன், நாதா!

கடக்கவொண்ணாத சம்சாரக்கடலினிடை
கப்பலாய் வந்தென்னைக் காப்பாய்!

துணை யிழந்தோரைத் தூக்கிவிடுவதில்
இணையில் வேந்தனே, இறையவனே!

ஆதரவற்றவர்க்(கு) அரும்பலமாகி
போதகம் தந்திடும் ஜகத்குருவே!

பக்தி செய்தவர்க்குப் பல்யுகமாக
சத்திய இன்பம் சாதித்தாய்!
சரணத்திலே சரண்புகு மீராவுக்(கு)
அரணாய் மானம் ரட்சிப்பாய்.'

கண்ணன் இதற்கு ஒன்றும் விடை சொல்லவில்லை. கெட்டிக்காரன்! வரப்போவதை அறிந்திருந்ததால் வார்த்தையைக் கொடுத்து மாட்டிக்கொள்ளாமல் தப்பித்துக் கொண்டான்.

மீராவிடமிருந்தே தப்பி மறைந்துவிட்டான் மாதவன்!

## 24. பைத்தியத் தம்பதி!

பலபலவென்று பொழுது விடிந்தது.

மீரா, ஆலயத்திலிருந்து புறப்பட்டு மாளிகைக்கு நடந்தாள். அவளது நெஞ்சத்தில் இரவு நடந்த அற்புதங்களே

*கமகமத்துக் கொண்டிருந்தன. 'சர்வேசுவரன் என்னை வந்து மணந்து கொண்டானா? அது கனவா, நனவா? கனவு என்று உலகம் நினைக்கும். ஆனால் அதைவிட நனவு எனக்கு எதுவுமில்லை.*

*மீராவின் எதிரே சௌபாக்கியதேவி, சேடியர் புடைசூழத் தென்பட்டாள். துர்க்கா பரமேசுவரிக்குக் காலை வழிபாடு செய்ய பாய்ஜிராஜ் செல்கிறாள்.*

*கண்ணன் என்கிற சமத்துவத்தைப் புத்தம் புதிதாகக் கலியாணம் செய்துகொண்ட மீராவுக்கு அப்போது பாய்ஜி ராஜும் அன்புருவாகவே தோன்றினாள். யாரிடம் எது சொல்கிறோம் என்பதுகூடத் தெரியாமல் மாமியிடம் சென்று ஓரே மகிழ்ச்சிப் பரவசமாக அவள் பாடினாள்.*

'சொப்பனத்தில் மணந்தாரம்மா!
ஒப்பரிய உலக நாயகர் என்னைச் **(சொப்பனத்தில்)**

கனவினிலே மணந்தாரம்மா!
தினம்தொழும் தீனர்கள் நாயகர் என்னைக் **(கனவினிலே)**

கண்ணிமைக்காத நான் கனவு காண்பதுமுண்டோ?
எண்ணிப் பார்த்தாலிது உண்மைதானோ அம்மா?

அத்தன் வருகையொன்றே சித்தத்திலே நிறைத்து
பித்தம் பிடித்தவளாய் நித்தம்வழி பார்த்தேன்;
கனவோ? நனவோ? கன்னல் வலைவீசி
மணந்து கொண்டாரென்னை மன்னர் கோபாலன்

கங்கையிலும் சிறந்துபொங்கிடும் அமுதினில் – மண
மங்கை புரிந்தேன் உயர் மங்கலஸ்நானம்,
பஞ்சடைந்த நெஞ்சில் ரஞ்சகம் நிறைந்தது,
மஞ்சள் பூசாமலே காஞ்சனமானேன்!

மூப்பற்றதேவர் முப்பது கோடியுடன்
மாப்பிள்ளையாய் ஊரொப்ப உலா வந்தார்;
தோரண வீதியில் வாரணமென வந்து
பூரண சுமங்கலிப் பேறெனக் களித்தார்!

ஊர்வலமானபின் ஆர்வமிக்க மீரா
நீர் வ(ண்)ணனைச் சேர்ந்தாள்; பூர்வஜன்ம பாக்யம்!

*ஆண்டாள், தன் கனவுக் கல்யாணத்தை அருமைச் சகியிடம் கூறினாள்! மீராவோ கொடுமை மாமியிடம் அல்லவா கூறினாள்? மீராவின் 'பிதற்றலை'க் கேட்கச் சகிக்காமல் சௌபாக்கியதேவி மேலே காலை அடித்து நடந்தாள்.*

'ஆம், ஊர் உலகத்துக்குப் புரியாதுதான்! அவனைப் பற்றி முரண் முரணாக எத்தனை சொன்னார்கள்! அத்தனையையும் தள்ளி அல்லவா அவனை நான் பெற்றுவிட்டேன்? அன்பைக் கொடுத்து அவனை விலைக்கு அல்லவா வாங்கி விட்டேன்? முன்னொரு சமயம் அவன் என்னை உடைமை யுரிமையுடன் பெற்றுக் கொண்டதால் இன்னொருவருக்கு விற்றாலும் அதை ஏற்றுக்கொள்வதாகப் பாடினேன். ஆனால் இப்போதோ அவனுக்கு என்னால் ஒரு பயனும் இல்லை என்பதும், அவன் என்னை வாங்கவோ, விற்கவோ வேண்டிய அவசியமே இல்லை என்பதும் தெரிந்துவிட்டது. நான்தான் அவனை வாங்கியிருக்கிறேன். இந்த உண்மையை நாடு நகரம் அறிய நகரா முழக்கி அறிவிக்க வேண்டும்போல் உள்ளத்தில் நமைச்சல் எடுக்கிறதே!'

மீரா தன் நமைச்சலில் மாமியாரின் முன்பே ஓடி நின்றாள். ஆனந்த பாஷ்பத்தில் சிக்கிய புஷ்பக் குரலில் மீண்டும் பாடினாள்.

'ராமனை வாங்கிவிட்டேன் – அம்மா
சியாமனை வாங்கிவிட்டேன்!

இரகசியம் இல்லை; களவியல் இல்லை;
முரசறைந்தே அவனை வாங்கிவிட்டேன்!

கறுப்பன் என்றார் சிலர்; வெளுப்பன் என்றார் சிலர்;
விரித்த கண்ணால் பார்த்து வாங்கிவிட்டேன்!

கிராக்கி என்றார் சிலர்; மலிவு என்றார் சிலர்;
தராசிலே நிறுத்து வாங்கிவிட்டேன்!

பெரியனென்றார் சிலர்; சிறியன் என்றார் சிலர்;
சரிஎடை தவறாமல் வாங்கிவிட்டேன்!

பணிஅணி அனைத்தும் பாஜுபந்துவுங்கூட
பணமாய் அளித்(து)அவனை வாங்கிவிட்டேன்!

விந்தை விற்பனையிதில் நந்தனை வாங்கியது
முந்தைப் பிறப்புக்களின் முறைமையன்றோ அம்மா?'

சிலர் அவனைக் கறுப்பு என்றார்களாம்; சிலரோ வெளுப்பு என்றார்களாம்? திருமாலாக பாவித்தவர்கள் கறுப்பு என்றிருப்பார்கள்! பரமேசுவரனாக பாவித்தவர்கள் வெளுப்பு என்றிருப்பார்கள். மீராவோ அவனைத் திருமாலென்றோ, பரமேசுவரன் என்றோ ஒரு விதத்திலும் பெயரிட்டு உருவத்தைக் கட்டுப்படுத்திப் பார்க்கவில்லை. அவள் அன்பு என்ற ஏதோ ஒரு வண்ணமாகவே அவனைக் கண்டாள். அந்த

வண்ணத்தில் தானும் ஊற விரும்பினாள். இதுதான் அவளுடைய திருக் கலியாணம்.

சௌபாக்கிய தேவிக்கு இதெல்லாம் புரியுமா? மாராண்ணாவுடன் கொண்ட மானுட விவாகத்தை விலை கொடுத்து, அதாவது, முறித்துப் போட்டே தான் திவ்விய விவாகம் கொண்டதைத்தான் பாஜுபந்து முதலிய அணிபணிகளைக் கொடுத்ததாக மீரா பாடினாள்! பித்தி, மாராணாவின் மாதாவிடமே பாடினாள்! 'பாஜு பந்துவைக் கொடுத்தேன் என்று ஒரு சுமங்கலி சொல்லப்படுமா?' என்றே பாய்ஜிராஜ் துணுக்குற்றாள்!

ஆம், ராணாவின் பத்தினி மீரா என்பதற்கு அடையாள மாக அவளுக்கு அணிசெய்திருந்த பாஜுபந்துவையும் மற்ற சௌமங்கலிய ஆபரணங்களையும் கண்ணன் எடுத்துச் சென்று விட்டான்! 'தோட்டம் போடுகிறேன். எனக்குப் பக்தியைக் கூலி தா' என்று இவள் கேட்டாள்! அவனோ இவளிடமிருந்த நகைகளைப் பறித்துக்கொண்டு போய்விட்டான்!

சௌபாக்கியதேவி மீராவை ஒரு பார்வை பார்த்துவிட்டு விடுவிடுவென நகர்ந்தாள்.

அப்பப்பா! அந்தப் பார்வை! எப்படித்தான் மீரா பஸ்மமாகாதிருந்தாளோ?

ஆயினும் அது அவளை நனவுலகுக்குத் தள்ளத்தான் செய்தது. மாமியின் நேத்ராக்கினி ஜ்வாலை, அவளுடன் சென்ற பாங்கிமாருக்குத் தன்னைக் குறித்து எழுந்த வெறுப்பு, வெட்கம், பரிகசிப்பு ஆகியவற்றின் அலைச் சிதறல்கள் யாவற்றையும் அவள் உணர்ந்தாள்.

தன்னுடைய கர்ம பாரம் தீர இது கணிசமாக உதவியிருக்கும் என்ற நைப்பாசையுடன் அந்தக் கர்மக் கார்மேகத்தைப் பார்த்தாள்.

அதுவோ குறைந்ததாகவே தெரியவில்லை!

**சௌ**பாக்கியதேவிக்கு வந்த ருத்ரகோபம் சடுதியில் அடங்கவும் செய்தது. 'பைத்தியத்தைக் கோபித்துப் பயன் என்ன?' — அவள் துர்க்கா பரமேசுவரியின் கோயிலுக்குக் கூடப் போகவில்லை. நேரே மகன் கும்பனின் அரண்மனைக்குத்தான் விடுவிடென்று சென்றாள். அன்னை தேடி வந்திருக்கிறாள் என்பதை அறிந்ததும், ஆயிரம்

சிந்தனையுடன் அவளிடம் வந்து வணங்கிப் பாதங்களைத் தொட்டுக் கண்ணில் ஒற்றிக் கொண்டார் கும்பாஜி.

சௌபாக்கியதேவி சுற்றி வளைக்காமலே பேசினாள்: "அப்பனே! மீரா விஷயம் நம் கை மீறிப் போய்விட்டது. நீயும் தான் அவள் இஷ்டப்படியெல்லாம் செய்து பார்த்தாய். எதிலும் அந்தப் பெண்ணைச் சரி செய்ய முடியவில்லை. அவளுக்குப் பைத்தியம் முற்றியிருக்கிறது. அவள் தன் மானத்தைக் காத்துக்கொள்ளாவிடில் தவறில்லை; பைத்தியத்தின் போக்கு அது என்று உலகம் மன்னித்துவிடும். ஆனால் அவளால் ராஜஸ்தானம் அடைகிற மானக்கேட்டை நாம் தடுக்காவிட்டால் நம்மை மன்னிக்காது. இனியும் இதை அநுமதிப்போமாயின் நாமும் பைத்தியம்தான்" என்று சொல்லிவிட்டு விடுவிடென வெளியேறினாள் சௌபாக்கிய தேவி.

'பைத்திய'த்தைப் பார்க்க ராணா விரைந்தார்.

அப்போதும் பைத்தியம் பாடிக்கொண்டுதான் இருந்தது.

எந்த வெறியாயினும் வெறித்தனத்துக்குப் பாட்டுத் தானே பாஷை? வெறி பிடித்தவர்கள் வாயில் வந்ததைப் பாடிக்கொண்டுதானே இருப்பார்கள்? அறிவு தடம் புரண்டால் சாமானிய வெறி. அறிவைத் தடயம்கூடக் காண முடியாதபடி அன்பு ஓங்கிவிட்டாலும் வெறிதான் பிடிக்கும். ஆனால் இந்த வெறிக்குள் சுருதியும் லயமும் சீர்மையும் இருக்கும். சுருதி-லயம்-சீர்மை கூடிவிட்டால் அங்கே பாட்டுப் பிறக்க வேண்டியதுதானே? இதைப் புரிந்து கொள்வது கடினம். Harmonious madness என்று வானம்பாடியின் கானத்தை ஷெல்லி வர்ணித்தானல்லவா! அந்த ரத்தினச் சுருக்கமான வர்ணனைக்குமேல் சொல்வதற்கில்லை.

சிலர் சொல்கிறார்கள்: "சந்தம் தவறாமலா, அக்ஷரக் கணக்குப் பிசகாமலா கீதையைச் சுலோகமாகத் தனஞ்சயனுக்குக் கண்ணன் உபதேசித்தான்? கண்ணன் உரை நடையில்தான் உபதேசம் தந்திருப்பான். அதை வேத வியாசர் சுலோகங்களாக்கித் தந்திருக்கிறார்" என்று. இது சரியல்ல; கண்ணனுக்கு இருந்த அருள் வெறியில் அவனால் வசன நடையில் பேசியே இருக்கமுடியாது. உணர்ச்சியின் அடர்த்தியில் இசைதான் முளைக்கும். 'கீதை' என்றாலே கீதம் தானே?

எதையுமே வெளியிட ஓர் இசை மொழி உண்டு. நாடகத்தில் யுத்தமாயினும் கொலையாயினும் காதலாயினும்

பின்னணியாக ஓர் இசை இருந்துகொண்டே யிருக்கிறது. இது அந்த அந்த பாவத்தை நம் மனத்தில் இசைவாக்கித் தருகிறது. கலையுலகில் மட்டுமே நாம் காணும் இந்த இசையை, வாழ்வு முழுதையும் கலையாக்கிக்கொண்ட மகாத்மாக்கள் அநுதினமும் மொழியுடன் வெளியிடுகிறார்கள். மீராவின் வாழ்க்கையைக் கலையாகப் பார்ப்பவர்களுக்கு அதன் சங்கீதமே முக்கியமாகத் தெரியும்.

கதா ரீதியில் பெரிதாகத் தெரியும் சம்பவங்களைவிட மீராபாய் தனது கண்ணன் காதலையே பெரிதாக மதித்தாள். அவன் கூடலின்பமும் ஊடலின்பமும் அளித்ததையே பெரிதாகக் கருதினாள். கருத்து கானமாயிற்று. நூற்றுக் கணக்கில் பாடினாள். இலக்கியத்தில் பிரிவுத் துயரையும் சேர்க்கையையும் சம்பிரதாயமாக எப்படியெல்லாம் வர்ணிப்பார்களோ அப்படி வர்ணித்துப் பாடினாள். ஆனால் திரும்பத் திரும்ப வரும் இக்கருத்துக்களுக்கிடையிலேயே மீரா என்ற தனிப்பட்ட வியக்திக்கு உரிய தனிப்பட்ட தொனியையும் ஆங்காங்கே ஸ்வச்சமாகக் கேட்கலாம்.

நமக்கெல்லாம் உள்ளபடி புரிபடாத நாயிகா பாவம்தான் மீராவுக்கு உயிர்மூச்சாக இருந்தது. ஆனால், ஏனைய பக்தி பாவங்களாலும் அவள் தன்னுடைய பாவினாலேயே நமக்கெல்லாம் பாதை பாவ வேண்டும் என்று நமது அருட்கண்ணன் சங்கற்பித்ததால் அப்படிப்பட்ட கீதங்களும் இசைத்தாள்.

கும்பராணா வந்தபோது அவள் சிருங்கார நாயகியாக மட்டும் இல்லாமல் மனம் கனிந்த 'சம்பிரதாய' பக்தையாக கிரிதரனின் திருவடி குறித்துக் கானம் செய்து கொண்டிருந்தாள்:

'ஹரியின் கழல்அதனை
ஸ்பரிசிப்பாய் மனமே!

பாக்கிய நிலையம்; கோமள சீதளம்;
தாக்கிய தாப முத்தீயைத் தணித்திடும்
ஹரியின் கழல்அதனை
ஸ்பரிசிப்பாய் மனமே!

ப்ரஹ்லாதபாலனுக்கு ப்ரம்மநிலைதனை
ஆஹ்லாதமுடன் அள்ளி அளித்த கழலிணை

பாலகன் துருவனைப் பாலனமே செய்து
மேலவனாக்கிய கோலங்கொள் கழலிணை

கௌதமஸதிதனைக் கல்லுருவம் நீக்கி
உத்தம சீலம் உதவிய கழலிணை

காளியன் தலையினில் கோபியர் இன்புறக்
கேளிக்கையாய் நடம் கோத்த கழலிணை

கோவர்த்தனம் தாங்கித் தேவர்கோவைத் திருத்தி
ஆவர்த்தன மழை தடுத்த கழலிணை

மீளா வழிக்கே இம் மீராவைப் படுத்தி
ஆளாக்கிய நந்தலாலன்தன் கழலிணை.'

பாவனமே உருவமாகி மீரா கண்ணன் கழலிணைக்குப் பாமாலை சாத்துவதைக் காணக் காணக் கும்பரின் நெஞ்சு உருகியது. மீராவுக்குப் பிடித்திருந்த பைத்தியம் அவருக்குப் மிகவும் 'பிடித்து' விட்டது! 'இப்பேர்ப்பட்ட தூய்மையை, நாதத்தை, ராகத்தை, தாளத்தைப் பித்தத்தினால் பெற முடியுமாயின் அந்தப் பித்தம் எனக்கும் பிடித்தால் தேவலையே!' என்று ஏங்கினார் அவர்! ராஜகுலத்தின் மானத்தை வாங்கிவிட்டதாக மீராவை அவர் கண்டிக்காமலும் தண்டிக்காமலும் இருந்தது மட்டுமல்ல; அவளுக்குப் பித்துப் பிடித்ததே என்று பரிதாபம்கூடக் கொள்ளவில்லை! தமக்கும் அந்தப் பித்தை அவள் போதிப்பாளோ என்றே ஆசைப்பட்டார்!

"மீரா, கண்ணனின் பாதத்தை கீதத்தில் கட்டிவிட்டாய். ஆனால் ஒன்று, கோவர்த்தனத்தை உன் கிரிதாரி கையால் தாங்கிக்கொண்டிருப்பதாகத்தான் நான் கேள்விப்பட்டிருக் கிறேன். நீயோ அவன் கோவர்த்தனத்தைக் கழலினால் தாங்கியதாக அல்லவா பாடினாய்?" என்று கேட்டார் ராணா.

"காலாவது கையாவது? அவனுக்கு அப்படி யெல்லாம் பிரித்துப் பிரித்து அங்கம் சொல்ல முடியுமா? நகத்திலிருந்து சிகை வரையில் ஒரே ரஸம் நிறைந்தவன் அல்லவா அவன்?" என்றாள் மீரா.

'ரஸராஜ்' என்பது மீரா தந்துள்ள ஓர் அற்புத வாக்கு.

மீரா தொடர்ந்து பேசினாள்: "கிரிதரக் கோலம் ஒன்று தான் கண்ணனுக்கு உண்டு என்பதுமில்லை. இன்னும் எத்தனையோ லாவண்யக் கோலங்கள்..."

அப்படிப்பட்ட ஒரு லாவண்யக் கோலத்தை மீராவின் கண்கள் கண்டுவிட்டன போலும்! அப்படியே நிலைத்து விட்டன அவள் விழிகள்.

"என்ன மீரா, அப்படியே கண் நிலைக்குத்திட்டு விட்டதே! எதை, யாரைப் பார்க்கிறாய்?" என்றார் ராணா.

ராணாவின் குரல் மீராவுக்குக் கேட்டது.

ஆயினும் அவளது கண்கள் இன்னும் மாலவன் கோலத்திலேயே லயித்திருந்தன.

"நானே விரும்பினாலும் பார்வையை எடுக்க முடிய வில்லையே!" என்றாள் அவள். தனக்குத்தானே பேசிக் கொள்வது போல். "சிக்கலாக, கோணல் மாணலாக, வளைந்திருக்கும் ஒன்றில் மாட்டிக்கொண்ட வஸ்துவை எளிதில் வெளியே எடுக்க வராதல்லவா? அப்படித்தான் என் பார்வையும் மீள எடுக்கவொண்ணாமல் மாட்டிக்கொண்டு விட்டது!" என்று முணுமுணுத்தாள்.

"தேவி, உன் கண்ணில் தெரியும் தோற்றத்தில் கண்ணனின் அழகுரு தானே நிறைந்திருக்கும்? அதில் சிக்கலும் கோணலும் வளைவும் உண்டா என்ன?" என்று ஆச்சரியத்துடன் வினவினார் ராணா.

"நன்றாகக் கேட்டீர்கள்! கண்ணன் உருவம் என்றால் அது நேராக இருந்துவிடுமா? அவனுக்கு உள்ளேயும் நேர்மை இல்லை; வெளியேயும் நேர்மை இல்லை!" என்று கூறிவிட்டு சிரித்தாள் மீரா. பிறகு சொல்வாள்:

"ஆம், அவன் தோற்றத்தில் எதுவும் நேர் இல்லை; தலையிலிருந்து கால்வரை! தலைப்பாகையை நேராக வைத்திருக்கிறானா? சாய்த்து வைத்திருக்கிறான். ஒரே நேராக — சங்கீதத்தின் நேர்மைக்கே உருவம்போல — இருக்கும் குழலையும் வாயில் சாய்த்து வைத்திருக்கிறான். உடலையே 'த்ரிபங்கம்' என்பார்களே, அப்படி மூன்றாக வளைத்துப் 'பாங்கேவிஹாரி'யாக நிற்கிறான். அப்போது ஹாரமும் சாய்ந்து விடுகிறது. இடது காலை வலக்காலுக்குக் குறுக்காகக் கொண்டுவந்து குத்திட்டு வைத்து நட்டம் செய்கிறான். இத்தனை கோணல்களுக்குள் போன பார்வை எப்படி இலேசில் வெளியே வரும்?

'சொக்க வைக்கும் சொரூப வளைவினில்
சிக்கிக் கொண்டன என்றன் கண்கள்!

மதன மோகனனின் வதன அழகமுதைச்
சுதினம் இன்றே என்றன் நயனம் பருகியதே!

சுரிகுழல் வளைவு; புருவமும் வளைவு
துடியிடையும் வேணு பிடித்த கையும் வளைவு
சிரமதனில் பாகை சிறிது சாய்த்தேவைத்து
நறுமலர் மாலையும் சரிய நடம்புரிவான்

காணும் உருவமுற்றும் கோணல் மிகுந்திடினும்
நேர்மையற் றவனிடம் பார்வை புதைந்ததையா!

மீராப் பிரபுவிடம் பேராசைகொள் நயனம்
கிரிதரன் வடிவினில் பிரிவற லயித்தது.'

கும்பராணாவின் கண்களுக்குப் பாங்கேவிஹாரி புலனாகவில்லை. என்றாலும் பாங்கேவிஹாரியின் சௌந்தரியத்தை அவரது ரசிக உள்ளம் மானசிகமாகக் கண்டு இன்பம் கொண்டது. அந்தக் கோணல் பேர்வழியையேதான் மீரா நேரே நெடுக நிற்கும் கிரிதரனாகவும் பாடிவிட்டாளே! எனவே தாமும் ஸ்தூலமாகக் காணக்கூடிய கிரிதர மூர்த்தத்தை தரிசிக்க அவரது மனம் விழைந்தது.

"மீரா, ஆலயத்துக்குப் போகலாம் வா" என்று அவளை அழைத்தார் ஆர்வத்துடன்.

கும்பாபிஷேக தினத்துடனேயே கோயிலை மூடிவிட வேண்டியதுதானோ என்று எண்ணியிருந்த மீராவின் செவியில் தேனாக விழுந்தது அவர் வார்த்தை.

கும்பரும் மீராவும் கிரிதரன் ஆலயத்தை அடைந்தனர். மன்னரே வருகிறார் என்று அறிந்ததும் அர்ச்சகரும் தைரியம் அடைந்து ஓடி வந்து திருக்கதவம் திறந்தார்.

கிரிதரன் தரிசனம் சாதித்தான் — ஆனால் கிரிதரனாக அல்ல; பாங்கேவிஹாரியாகவே கோலம் காட்டினான்.

மீரா பாடினாள்:

மீரா மட்டும்தான் பாடினாளா?

ராணாவும் சேர்ந்து பாடினார்!

'பாங்கே விஹாரியைப்
பாங்கே பணிந்திடுவோம்!

வண்ண மயில் தோகை
மின்னும் சிரப்பாகை
குழை ஒளிக்குலகம், இழை சுருள் அலகம்
நெற்றியில் கஸ்தூரி திலகம்
அதன் மணத்தில் மயங்குது உலகம் (பாங்கேவிஹாரி)

அதரமதனில் குழல்
அதனுள் அமுதச்சுழல்;
நானிலம் செழிக்கத் தேனிசை தெளித்து
மகிழ்வித்துக்கொள்வான் தன்னை;
மகிழ்வாள் அதனில் நப்பின்னை* (பாங்கேவிஹாரி)

* தமிழகம் கண்ட ராதையே நப்பின்னை.

கிரிதர நாகரன்
கிறிசெயும் மோகனன்
ஒளி அலை வீசி மிளிர் கடலாய் வர
முங்கியே மஞ்சனம் கொள்வோம்
அங்கம் அவன் வண்ணமாவோம்.'

ராணாவுமா பாடினார்? அவர் எப்படிப் பாடினார்? ஆகா, மீராவின் பைத்தியம் அவருக்கும் கொஞ்சம் தொற்றிக் கொண்டுவிட்டது. அதனால் அந்த பைத்தியத்துக்கே உரிய பாட்டு மொழியும் அவருக்கு வந்துவிட்டது!

என்னவாயினும் மீராவைப்போல் வெறி உச்சத்திலேயே ராணாவால் இருக்க முடியவில்லை. எனினும் அந்த உச்சநிலையிலேயே எப்போதும் இருந்த அவளது வெறியை அவர் ரசித்தார். அவளைப்போல் அவரால் வெறியாகவே யிருந்து வெறி மொழியைப் பாடி வெளியிட முடியாவிடினும் அவள் ஆடிப் பாடும்போது அதன் அழகை ரசித்துத் தாமே வீணை மீட்டினார். ஆகா, அவை எவ்வளவு அற்புதமான நாட்கள்!

மீராவும் ராணாவும் இப்படிச் சீராகப் பத்திமை செய்வது அந்தக் கோணல்கார பாங்கே விஹாரிக்குப் பிடிக்குமா? தன்னுடைய வண்ணத்தில் எப்போதும் மீராவைப் போல் முங்கி மஞ்சனம் செய்யும் பாக்கியத்தை அவன் ராணாவுக்குத் தொடர்ந்து அளிப்பானா?

## 25. சிருங்கார சந்நியாசினி!

தாம்பத்தியமே செய்யாத அதிசயத் தம்பதியர் பைத்தியத்தில் ஒன்றுகூடிக் 'குடித்தனம்' செய்யத் தொடங்கிய பின் சித்தோரே மாறியது. கிரிதர ஆலயத்தில் நித்திய உற்சவ மாயிற்று. அடியார் கூட்டம் பெருகிற்று.

சித்தோர் மாநகர் மட்டும்தானா மாறிற்று? மேவார் சாம்ராஜ்யமே மாறிற்று. ஒரு சிறிய குயிலின் கண்டத்தில் பிறக்கும் குரல் சோலை முழுதும் பரவுகிறது. மீராவின் குரலோ மேவார் முழுதும் பரவியது! சித்தோரில் அவளது குரல் கேட்ட ஆண்டியர் தமது சஞ்சாரத்தின்போது அவளது சங்கீதத்தையும் தூக்கிச்சென்று நானாதிசையிலும் பரப்பினர், தென்றல் சுகந்தத்தைப் பரப்புவதுபோல். வீரம் செறிந்த ராஜஸ்தானத் தில் பண்ணின் ஈரம் கூடலாயிற்று. ஆடவரும் பெண்டிரும்

முதியோரும் இளையோரும் பாலரும் அவளது பாக்களைப் பாடிப் பரவசமாயினர். உழவர், ஆயர், உழைப்பாளர் தொடங்கி அந்தணோத்தமர், தவசிகள் வரை அனைவர் அதரங்களையும் மீராவின் கானம் அலங்கரித்துப் பாவனப் படுத்தியது.

முன்பு கண்டிருக்கிறோம், மீரா கொண்ட ஒரு மகத்தான ஆசையை! அவ்வாறு ஆசைப்படும்போதே அது மெய்யாலும் நனவாக முடியும் என்ற நம்பிக்கையென்னவோ அவளுக்கில்லைதான்! என்ன அவ்வாசை? ஈசனாரின் சுத்தியுடனும் ஈசுவரியின் கவசத்துடனுமே வாழ்க்கையை முடித்துக் கொண்டுவிட்ட ராஜஸ்தானத்தில் அதை உண்மையில் இட்டு நிரப்புவதற்கு கீத கோவிந்தனின், காதல் கண்ணனின் ஆனந்த சங்கீர்த்தனத்துக்கான தம்புராவும், ஜாலராவும், குங்குராச் சிலம்பும் கோஷ்டி சேரவேண்டு மென்பதே அவ்வாசை! இன்று அது மெய்யேயாகி மேவார் ஸாம்ராஜ்யமே ஒரு மகத்தான பஜனைக் கூடமாகிவிட்டது!

ஒரு பேரரசின் உயிரோட்டத்தையே மாற்றி விட்டாள் ஒரு பெண். மாற்றும் நோக்கம் — எந்த நோக்கமுமே — அவளுக்கு இல்லாமலேயே இவ்வதிசயம் நிகழ்ந்தது!

ஆண்டிப் பரதேசிகளிடையே மகாராணி நிருத்திய மிட்டுப் பாட, மகாராணா அதற்கு வீணை வாசிப்பார். பரமேசுவரனும் துர்க்கா தேவியும் அளித்த கத்தியையும் கேடயத்தையும் முன்பு தாங்கிய அவரது கை இப்போது அதைவிட லாகவமாக வீணையிலும் ஜாலராவிலும் மேவின. ராஜலக்ஷணப்படி ஆய கலைகள் அறுபத்து நான்கும் கற்றிருந்த கும்பர் இப்போது தமது ரசிக உள்ளத்தைத் தீட்சண்யமாக்கிக் கொண்டார். முன்பு தநுர்வேதமும் அர்த்த சாஸ்திரமும் படித்தவர், இப்போது பாகவதத்தையும் ஸ்வரார்ணவத்தையும் விழுந்து விழுந்து படிக்கலானார். அதையெல்லாம்விட அதிசயம், முன்பு படையெடுப்புத் திட்டங்களைத் தீட்டியவர் இப்போது பிரேம பக்தியின் வேதமாக ஸ்ரீ ஜயதேவ ஸ்வாமி அருளிய கீத கோவிந்தத்துக்கு உரை எழுதத் தொடங்கினார்.

லீலாசுகர் கிருஷ்ண கர்ணாமிருதத்தை இயற்றியபோது தமக்குப் பக்தியுணர்வூட்டிய சிந்தாமணியை முதலில் பாடினாரல்லவா? அப்படியே கும்பரும் தமக்குப் பிரேம பக்தி போதித்த குருவான மீராவுக்கு மரியாதை தெரிவித்து உரையைத் தொடங்க நினைத்தார். ஆனால் மீரா பிடிவாதமாக மறுத்தாள்.

"உங்களது மூத்த மனைவிகளான கும்பலாதேவியைப் பற்றியும் அபூர்வதேவியைப் பற்றியும் எழுதுங்கள். அதுதான் நியாயம்" என்றாள் அழுத்தம் திருத்தமாக.

"மீரா, நீயா இப்படிப் பேசுகிறாய்? தெய்விகக் காதல் நூலிலா மானுடக் காதலைச் சேர்ப்பது? அபசாரமல்லவா அது?" என்று மறுத்தார் ராணா.

"ஸ்வாமி, நீங்கள் உங்கள் மகிஷிகளை மானுடமாகப் பார்த்திருக்கலாம். ஆயின் அவர்கள் உங்களைத் தெய்வமாகப் பார்த்தல்லவா அன்பு செய்தார்கள்? அந்தக் கற்பரசிகளைச் சொன்னால் கீத கோவிந்த நாயகி ராதா தேவியே மகிழ்வாள்" என்றாள் மீராபாய்.

மீராவின் வாக்கிலிருந்து அப்படி வந்தது கும்பருக்கு அதிசயத்திலும் அதிசயமாக இருந்தது. அவள் சொன்னவாறே செய்தார், அவளிடம் பெருமதிப்புக் கொண்ட அப்பெரு மகனார்.

கும்பராணா கீத கோவிந்தத்துக்கு எழுதிய விரிவுரையை **'ரஸிகப்ரியா'** என்று ரஸிகருலகு கொண்டாடியது.

**'சங்கீதராஜ'** என்ற இசை நூலும் இயற்றிய கும்பரை ஆடல் பாடல் அரசராக ராஜஸ்தானம் காணத் தொடங்கியது. நரபதிகளையும் அச்வபதிகளையும் கஜபதிகளையும் வென்ற தோடர்மல் என்று முன்பு பட்டம் பெற்றிருந்த கும்பாஜி ராணாவுக்கு இப்போது மேவாரின் வித்வத் ஜனங்கள் 'அபிநவ பரதாசாரியர்' என்ற விருதினை அளித்தனர்!

ஆனால் அவரது உள்ளமோ பேரையும் புகழையும் ஒதுக்கியது. அரசாங்க உத்தரவுகளைக்கூடத் தம் பெயரால் வெளியிட அவர் விரும்பவில்லை. என்றுமே பெரியப்பா சண்டன் பெயரில்தான் அவர் உத்தரவுகளைப் பிறப்பிப்பது வழக்கம். அடியில் மட்டும் ஒப்புக்குத் தம் ராஜ முத்திரையைப் பதிப்பார். ஆனால் இப்போது அதைக்கூட விரும்பவில்லை அவரது உள்ளம். எனினும் உத்தரவுகள் அதிகார பூர்வமாக இருக்க வேண்டுமல்லவா? அதற்காகத் தம் பெயரை முத்திரையிடாமல் வெறுமே 'ஸஹீ' என்றே கையெழுத் திட்டார். 'ஸஹீ' என்றால், 'ஒப்புக் கொள்ளப்பட்டது' என்பது பொருள். கை 'ஒப்பம்' என்றே தமிழிலும் சொல்லுகிறோ மல்லவா?

முன்பு மாளவ கில்ஜியை வென்ற பெருமையில் சித்தோரில் நீண்ட நெடிய கீர்த்தி ஸ்தம்பம் நிர்மாணிக்கத்

தொடங்கியிருந்த அவர், இப்போது கீர்த்தியே வேண்டாம் என்று நினைக்கத் தொடங்கினார். மீராவின் வற்புறுத்தலின் மீதே கீர்த்தி ஸ்தம்பத்தைப் பூர்த்தி செய்தார். நூற்றிருபதடி உயரமுள்ள அந்த வெற்றித் தம்பத்தின் உச்சியான ஒன்பதாம் மாடத்தில் மகாராணாவின் பிரதாபங்களைச் சிலை வடிவில் பொறிக்கவே முதலில் திட்டமிடப்பட்டிருந்தது. ஆனால் இப்போது அவரது உள்ளம் மாறிவிட்டதே! "கண்ணனின் ராஸ மண்டலத்தையே கீர்த்தியின் உச்சமாகப் பொறியுங்கள்" என்று ஆணையிட்டார். ராஜஸ்தானத்தில் தலைசிறந்த சிற்பியான மண்டனும், அவனது சோதரன் நாதனும் ஜைத்ரனும், மண்டனுடைய அருமைப் புதல்வர்கள் நாபாவும் புஞ்சாவும் தங்கள் கலைத்திறனை யெல்லாம் காட்டிக் கீர்த்தி ஸ்தம்பத்தின் முகுடமாகக் கிருஷ்ண லீலையைச் செதுக்கினர்.

'கோட்டை எனில் சித்தோர்க் கோட்டை' (**கர் தோ சித்தோர் கர்**) என்று பெயர் வாங்கிய சித்தோர்க் கோட்டை யையும் கும்பல்கரையும் முன்பு கட்டியிருந்த மகாராணா இப்போது அவற்றிலும் கும்பஸ்வாமி என்று பெயரிட்டுக் கண்ணனுக்கு ஆலயங்கள் எடுத்தார். முன்பு வீரர்களுக்குப் பெருமானியங்கள் அளித்தவர் இப்போது அடியார்களுக்கு வாரி வழங்கினார்.

இதையெல்லாம் சௌபாக்கியதேவியும் உதயாவும் எவ்வளவு வெறுத்திருப்பார்கள் என்று சொல்லத் தேவையில்லை. அவர்கள் மட்டுமின்றிப் பிரமுகர்களில் பலரும் மக்களில் சிலரும்கூட மீரா ராஜஸ்தானத்தில் புகுத்தும் பக்தி வழியைக் கண்டிக்கத்தான் கண்டித்தனர். மீராவின் பாடலில் இதற்குச் சான்று காண்கிறோம்.

காது கொண்டு கேட்கவொண்ணாத அக்கண்டனங்களி லிருந்தே மீராவும் சான்று தேடுவாள்! எதற்கு? எவரிடம்? தன் கர்மச் சுமையில் எவ்வளவைக் கண்டனம் குறைந்திருக்கும் என்பதற்குத்தான்! கண்ணன் காட்டிய கார்முகிலில்தான் அச்சான்றினைத் தேடுவாள்! அதுவோ மயிரிழை மயிரிழையாகத்தான் குறையும்!

"அட கண்ணா! இன்னும் எத்தனை அடிபட வேண்டுமப்பா?" என்று தவிப்பாள் பேதை!

**க**ண்ணன் அன்பினால் ராணாவுக்கு எல்லோரிடமுமே அன்பு சுரந்தது. இதன் எல்லையாக, தாம் சித்தோரில் சிறை வைத்திருந்த மாளவ சுல்தான் கில்ஜியை நிபந்தனையேயின்றி

அவர் விடுவித்துவிட்டார். மீண்டும் அவனது மாளவ ராஜ்யத்தை அவனுக்கே தந்தார். நண்பனாக்கிக்கொண்ட பகைவனுடன் ஒன்றாக அமர்ந்து மதுவில் மாதுள முத்தை யிட்டு, 'முனவர் ப்யாலா' அருந்தினார். ராஜ குடும்பமும் மந்திரிப் பிரதானிகளும், 'இப்படியும் ஒருமுறையீனம் உண்டா?' என முணுமுணுத்தனர்.

"ஏன், அந்த மிலேச்சனுக்கு, 'தூனா'கூடத் தரலாமே!" என்று வெட்டிப் பேசினாள் ஊதா. ராஜப் பிரமுகர்களுக்கு ராணா செய்யும் மிகப் பெரும் மரியாதை தன் கலத்திலிருந்தே பணியாரம் எடுத்துத் தருவது. இதை 'தூனா' என்பார்கள்.

வென்ற அரசனுக்குக் கப்பமும் காணிக்கையும் தருவது போல் தோற்றுப்போன கில்ஜிக்காக ராஜஸ்தானத்தின் சுரங்கங்களிலிருந்து வெட்டியெடுத்த வெள்ளியையும் வெள்ளீயக் கட்டிகளையும் பல ஒட்டகங்களின் முதுகில் ஏற்றி மாளவத்துக்கு அனுப்பினார் ராணா. இத்தனை பெற்றும் இன்னொன்றுக்கு ஆசைப்பட்டது கில்ஜியின் கருத்த உள்ளம்; மீசை நரைத்தாலும் ஆசை நரைக்காத உள்ளம்!

"ராணாஜி, தங்களை அன்பு வழிக்காக்கிய தேவி மீரா பாயைத் தரிசிக்க வேணுமே!" என்றான், உள்பசியை ஒளித்து!

"மன்னிக்கவும், குறிப்பிட்ட சில தினங்களைத் தவிர எங்கள் பெண்டிர் வெளிவருவதில்லை. மீராபாய் மட்டும் ஆலயத்தில் அனைவருடனும் ஆடுவதுண்டு. எனினும் தங்களைத் தேவாலயத்தில் அநுமதித்தால் என் ராஜ்யமே எதிர்க்கும். இதை மட்டும் மறந்துவிடுங்கள்" என்றார் ராணா.

மீரா தெருத் தெருவாகப் பஜனை செய்யப் புறப்படாத காலம் அது.

ராணா மறக்கச் சொன்னாலும் கில்ஜி மறக்கவில்லை. எப்படி மறப்பான்? சரித்திரம் திரும்பவேண்டுமே! பத்மினியைப் பார்க்க அலாவுதீன் இச்சித்ததால்தானே இதே சித்தோரில் உற்பாதம் நிகழ்ந்தது?

"எல்லோரையும் விட எங்கள் மோர்தா சோதிடருக்குத் தான் அதிக மானியம் தரவேண்டும். என் மனோரதம் ஈடேறும் என்று தீர்மானமாகச் சொன்னவர் அவர்தான்" என்றாள் மீரா.

அந்த மனோரதத்தின் மர்மத்தைக் கும்பர் முற்றும் அறிய முடியாவிடினும் அச்சோதிடரை வரவழைத்துப் பொன்னும்

*பொருளும் வழங்கினார். அவற்றிலும் மேலாக மீரா அவருக்குப் பண்ணும் பனுவலும் வழங்கினாள்.*

'சோதிடரே, உமக்குக் கோடி நன்றி,
ஆதிமூலப் பிரான் இன்று இங்கே வந்தான்!

ஆனந்தவாரிதி ஆர்த்து எழுந்தது,
வானந்த வீட்டினில் வாழ்வு கொண்டேனையா!
ஐம்புலன்தமை அன்புச் சேடியரா(ய்)க் கொண்டு
ஐயனையே தொட்டேன், அணுஅணு சுகித்தேன்!

நாதனை நயனத்தால் நேயமிக நோக்க
வேதனை ஒழிந்தது; வேட்கை மறைந்தது!
மீராவினுக்கின்ப மீரமதை* வழங்க
மாறாத நெஞ்சுடன் ஆராமுதன் வந்தான்.'

*அவன் வந்தது உண்மை! ஆனால் வந்தவன் என்றும் தங்கினானா என்ன? வந்து வந்து மறைந்தும் விடுவான்! மீராவின் மனத்தை மலர்த்தியவனே அதனை அவ்வப்போது வாடவிட்டு மகிழ்ந்தான். ஏன் என்று எப்படிக் கேட்க முடியும்? மீராவின் மனமலரை மட்டுமல்ல; எந்த மலரையுமே மலர்த்துபவன் அவன்தான். ஆயினும் மலர்ந்த மலர்கள் அப்படியே இல்லாமல் வாடித்தானே விடுகின்றன? மலர்த்தியவன்தானே அவ்வாறு வாடவும் வைக்கிறான்?*

*வாடிய சமயங்களில் மீரா பாடிய பாட்டுக்களின் அழகைச் சொல்லி முடியாது. இதற்காகவே வாடவைத்தானோ என்னவோ?*

'தோகையே, அவன் வரு நாளினை எண்ணி விரல்
ரேகையெலாம் அழிந்து போச்சுதடி!
வெற்றிலைச் சருகாய் வெளிறி விட்டேன், சகி!
கொற்றவனைப் பிரிந்த கொடு விரகில்'[1]

*என்றும்,*

'புழுத்த உடல் முற்றும் புரை புரையே கனியக்
கழுத்து எலும்பொன்றே மிஞ்சித்தடி!
தோளாமணி நினைவில் தோய, என் மோதிரம்
தோள்வளை யாகவே தேயலுற்றேன்'[2]

---

* மீரம் : கடல்

1. கி$^{3}$ணதா கி$^{3}$ணதா கி$^{4}$ஸ் க$^{3}$யீ ரே ம்ஹாரா அங்க$^{3}$லியான் நீ ரேக்$^{2}$ |
பீவ் காரண் பீலீ பா$^{3}$லா ஜோவனவாலீ பே$^{3}$ஸ் |
2. மாம்ஸ் க$^{3}$ல க$^{3}$ல சீ$^{2}$ஜீயா ரே கரக் ரஹ்யா க$^{3}$ல ஆஹி |
ஆங்க$^{3}$லியா ரோ மந்த$^{3}$டோ$^{3}$ ம்ஹாரே ஆவண லாகோ$^{3}$ பா$^{3}$ம்ஹி |

*என்றும் மீரா பாடுகையில் வழக்கமான அதிசயோக்திகளையே அவளும் கையாளுவதாகத் தோன்றும். அநுபவம் ஒன்றாயின் அதன் வருணனையும் ஒருபோலத்தானே இருக்கும்? மீராவின் வழக்கமான வருணனையிலும் தனித்தன்மை வாய்ந்த ஒரு புதுமை இல்லாமற் போகாது. கழுத்தெலும்பு தவிர மீதி எலும்பு அவ்வளவும் உருகிவிட்டதாக மீரா கூறுவதில்தான் எவ்வளவு பொருள் இருக்கிறது? செத்துவிட்ட பின்பும்கூடக் கிரிதரனை நினைந்து இவள் கதறிக் கானம் செய்துகொண்டேதான் இருக்க வேண்டுமாம்! அதற்காகவே ஒலி உறுப்பைக் காக்கும் கண்டத்தெலும்பு மட்டும் எஞ்சியிருக்கிறது!*

*அந்தக் கழுத்திலிருந்து பிறந்த தாபக்குரலைக் கேளுங்கள்:*

'புண்ணிய! தரிசனம் இன்றிப்
புண்ணுண்டது கண்ணும் கன்றி!

அன்பனே, என்றெனைத் துறந்தாயோ
அன்றிலிருந்தின்பம் மறந்தேன்

நின்பெயர் கேட்டால் நெஞ்சம் தவிக்குது,
இன்னொலியின் உருவன்றோ?
வரும் வழியதனில் விழிதனைப் பதித்தேன்,
ஓரிரவே யுகமாச்சு!

பிரிவுத்துயரினை உரைப்பதெப்படி சகி?
அறுத்தன கண்களை ரம்பம்;
மீராவின் ப்ரபு வருவதெந்நாளோ?
தீராத் துயரினைத் தீர்க்க?'

*இந்நிலையில் இன்னொரு சாயல்:*

'நேச மோகனன்
பாசம் வீசினான்

மாமரக் கிளையில்
சாமளக் குயில்பாட
சிரித்தது உலகம்
மரித்ததென் ஆவி

சாடும் விரகினில்
காடுகாடலைவேன்
விழுப்புகழ் காசியில்
கழுத்தறு படுவேன்.'

*காசியில் ரம்பத்தால் கழுத்தையறுத்துக் கொண்டு சாகும் கல்லுளிமங்கத்தனத்தை மீரா பின்பற்றப் போகிறாளாம்!*

*மிகவும் பிடிவாதக்காரியாகத்தான் ஆகிவிட்டாள்! அவளே தன்னை அடம் பிடிப்பவள் (ஹடீலி) என்று பாடிக் கொண்டிருக்கிறாள். ஆயின் என்ன? அடம்பிடிப்பதில் அவனும் இவளுக்குச் சளைக்கவில்லை! இவள் மனத்திலேயே மறைந்திருந்து இவளது கானத்தைக் கேட்பதற்காக எதிரில் வாராதிருந்திருக்கிறான். அந்தக் கானத்தை நாமும்தான் சிறிது கேட்போமே!*

'ச்யாமளனே, செவி மடுப்பாய்,
கோமளனே, காது கொடுப்பாய்!

தரிசனம் காணாமல்
வெறி பிடித்தலைந்தேன்,
பிரிவின் பெருந்தாபம்
நெரித்துக் குமைத்ததையே!

மோகன, உனக்கெனவே
யோகினியாய் ஆனேன்,
சந்து சந்தாய் அலைந்தேன்,
வந்து புரந்திடுவாய்!

க்ருஷ்ணா, உன்றன் பொருட்டே
க்ருஷ்ணாஜினம் அணிந்தேன்,
தூய வெண்ணீ றணிந்தேன்,
காயத்தைக் காய வைத்தேன்

இரவுபகல் அழுதாலும்
இருண்டவனம் திரிந்தாலும்
அணையாத் தீபம் என் ஐயன்
அணைத்திடும் நாளினைக் காணேன்.'

*இதற்கு மேல் கிரிதரனாலும் தாள முடியாமல் தரிசனம் கொடுத்துவிடுவான். கதறித் தொடங்கிய பதாவளியைக் களிப்பின் எல்லையில் முடிப்பாள் மீரா!*

'பக்த மீராவினது
துன்பமதைத் துடைக்க
கிரிதரன் வந்தனன்!
அரிதினில் சேர்ந்தேன்!
அன்பனின் அடி சேர
ஜன்ம மரணம் போக
ரோமரோமமும் இன்ப
ப்ரேமை நிறைவாக்க.'

*கிருஷ்ண தரிசனானந்தத்தை மீரா எப்படிப் பாடுகிறாள், கேளுங்கள்:*

'கண்டுவிட்டேன் என் காந்தனை
பண்டுநாளாய்க் காத்திருந்தே!

வதனத்தின் அழகிலே
மதனனின் எழிலடி!
பவித்திரப் பார்வையிலே
விசித்திர மாயமடி!

ஆயப் பிள்ளையருடன்
வேயின் குழல் ஊதித்
தாள அலை மோதி
ஜாலம் செய்தாடினான்!

அடியே, ஆரா அமுதின்
வடிவே நிசியும் பகலும்
முடிவேயின்றி மனத்தில்
படிந்தே விட்டது, பாங்காய்!

வாரித் தந்தேனென் கிரி-
தாரிக்குயிரும் உடலும்;
நாரிக்குரிய நாணமதைத்
தூர எறிந்தேன், தோழி!

துளசிப் பொந்தரிலே
இளசாய் நடமிட்டுச்
சுற்றும் சேவடிக்கே
முற்றும் பலியானேன்!'

*இதே நிலையைச் சொல்லும் இன்னொரு பாட்டு. மேலே துளசி வனத்தில் அவனைக் கண்டதாகச் சொல்லும் மீரா இந்த இன்னொரு பாட்டில் தன் வீட்டு வாசல் வழியே அவன் சென்றதைக் கண்டதாகப் பாடுகிறாள்.* **'வீதியார வருவானை விருந்தாவனத்தே கண்டோமே'** *என்று நாச்சியார் அருளியது போல்.*

'லோபியாயின கண்கள்,
கோபிநாதனைக் கண்டே!
திருஉருவத்தில் திருகிச் சொருகிய கண்
திரும்பி வர மறுக்குதே!

அணு அணுவாயவனை
அடிமுடியும் கண்டேன்,
துள்ளும் சந்தோஷமுடன்
உள்ளத்திலே கொண்டேன்

வீதிவழி செல்லும்
சோதியன் எழிலினை

வாசற்புறம் நின்று
ஆசைதீரக் கண்டேன்!

முகமது ஒளிவிட
அகமது குளிர்ந்திட
மென்னகை பூத்தான்,
என்னை இழந்தேன்!

அற்புதன் கையினில்
விற்கப் பட்டேனடி!
உற்றமும் உலகமும்
முற்றும் விட்டேனடி!

இகழ்ந்து நிற்பார்சிலர்,
புகழ்ந்து நிற்பார் சிலர்,
தினையளவாய் நினைத்து
அனைத்தும் ஒதுக்கினேன்.

லால கிரிதரனை
லாலனம் செய்வதன்றி
ஜால உலகமதில்
வேலை எதுவுமிலேன்.'

*தன் ப்ரபு தரிசனம் சாதித்த போது ஐம்புலத் தோழியர் ஆனந்திக்க அவனை வரவேற்றதை மீரா பாடியிருக்கிறாள். திருமூலர் சொன்னாற்போல் வெறித்துத் திரியும் ஐம்புலன் களைப் பால் பொழியும் காமதேனுக்களாக்கிவிட்டவளல்லவா மீரா?*

'ஆழியன் வீடு வந்தான்—தோழியரே!
ஊழிக்காலம் தூது உரைத்தும் வாராதவன்
வாழி, இன்று வந்தான், ஏழை இணைந்து கொண்டேன்!

ரத்தினம் மணியும் அளித்(து) ஆ-
ரத்தி யோடு வரவேற்றேன்
முத்து வாய் மொழியினைத் தந்தான்;
முத்தியின் இன்பம் தொட்டேன்

மங்கையர் ஐவரும் சேர
மங்களமாய்ப் பண்ணிசைத்தேன்,
ரங்கனை வாழ்த்திக் களித்தேன்,
அங்கம் விம்மிப் பூரித்தேன்

படகாய் அன்பினைக் கொண்டு
கடலானவனை அளைந்தேன்,
அடியாள் அங்கண மதனில்
அடித்தது பால்மழை காணீர்!'

*மீராவின் பாடல் அடியாரின் மன அரங்குக்கும் பால் மழையாகவே உள்ளது. ஐம்புலன்களை அடக்கினால் ஜீவப் பசு ஞானப் பால் சொறியும் என்று திருமூலர் சொன்னதையே தான், மங்கையர் ஐவருடன் சேர்ந்து மங்கள கீதம் இசைத்ததாக மீராவும் சொல்கிறாள்.*

*மீராவின் இன்ப கானத்தைக் கேட்டால் கண்ணனுக்குப் போதமாட்டேன் என்னும். அவளது துன்ப கானத்தைக் கேட்கவே மறைந்துவிடுவான். மீரா உருகி உருகி, மறுகி மறுகி, கருகி கருகிப் பாடுவாள்:*

'தூது செல்வாருண்டோ?
மாதவனை அழைக்க?
மாதவனை அழைக்க; மாதென் மனம்செழிக்க (தூது)

எழுந்தருளவுமில்லை
எழுத்தனுப்பவுமில்லை;
இழுத்து அம்பினை நெஞ்சில்
அழுத்தி இன்பம் கொண்டான்!

பட்சம் கொண்ட கண்கள்
வெட்கம் சற்றும் இன்றி
எத்தனை சொல்லிடினும்
ரத்தம் கக்கலாச்சு!

செயலும் புரிவதில்லை!
வயம் அடியோடிழந்தேன்;
சிறகுமில்லை யம்மா,
பறந்து செல்லுதற்கே!

ஆண்டே! எனைத் தடுத்து
ஆண்டே கொள்ளுவ தெந்நாள்?
தூண்டில் வீசி விட்டாயே,
மீண்டுகொள்வதெங்ஙனமோ?'

*'தூது செல்ல ஆள் அகப்படுவதாகவே வைத்துக் கொள்வோம்; கண்ணனுக்கு எப்படிக் கடிதம் எழுதுவது?' என்ற கேள்வி மீராவுள் எழும். பாடுவாள்:*

'ராமையனே! உன் சாமள நிறத்தினில்
ப்ரேமையுடன் நனைந்தேன்

பரதேசம் சென்ற பதியினை நினைத்துப் பத்திரம் வரைவதுண்டு
இதயத்தில் ஒளிந்த என் ஈச்வரனுக்கோ எப்படி எழுதிடுவேன்?

மதுவினை மாந்தி மதம் கொளு மாதர் மயல்
கொண்டழைப்பதுண்டு
மது அருந்தாமலே மாதவனை எண்ணி மதிமயக்கம் மிகுந்தேன்

அன்பெனும் கோட்டை அடுப்பினை மூட்டி அல்லும் பகல் விசிறி
நாராயண எனும் நாமத்தைக் காய்ச்சிச் சாராயமே சுவைத்தேன்

நினைவெனும் தகளியில் நெஞ்சத் திரியை இட்டு
அன்புத்தைலம் வார்த்(து) அநுதினம் ஏற்றினேன்

பிறந்தகம் புக்ககம் இரண்டும் விட்டே ஹரி
புரிந்த சங்கேதத்தினில் புனர்ஜன்மம் பெற்றேன்.'

**'அன்பே தகளியாய் ஆர்வமே நெய்யாய் இன்புருகு சிந்தை இடுதிரியாய்'** *என்று ஆழ்வார் பாடியது போலவேதானே மீராவின் குரலும் தொனிக்கிறது? ஆனால் அவளுக்கென்று பிரத்தியேகமாக உள்ள விரக வேதனையில் நனைந்த குரல் இதோ கேட்கிறது:*

'திருவிழி நோக்கினை
திருப்புவை என்மீது!

பார்வைக்கேங்கி நின்றேன்,
பாறாங்கல்லானாயோ ?

போக்கிடம் வேறில்லை,
நோக்கி நிறைவிப்பாய்

என்னை விட்டாலுனக்குக்
கன்னி கோடி உண்டு;
ஈசன் உந்தனையன்றி
நேசன் எனக்கேது ?

அழிவிலாப் பொருளினைக்
கொழுநனாக் கொண்டேன்,
அற்பமான உயிரை
அர்ப்பணம் புரிந்தேன்.'

*கண்ணனைக் காதலித்துக் கூடுவதும் குருநாதனிடம் பாத தீக்ஷை பெற்று உபதேசம் பெறுவதும் ஒரே ஆனந்தம் என்ற தெளிவில் மீரா பாடிய விரக கீதமும் உண்டு.*

'முன்றில் வழியாகச்
சென்றிடுவாய், ஐயா

காலம் தாழ்த்தி எனை நாளும் வதைத்திடாது
காலைத்தலையில் வைத்து சாலப் புரந்திடுவாய்

ஜன்ம ஜன்மமும் உன்றன் மெய்யடிமை ஐயா!
பொன்மணி பூஷணம் பொருளும் நீ, துய்யா!

சத்துக்களுக்கென்றும் உத்தரணம் தரும்
உத்தம, உனைநான் உபசரித்திட வா!

கசக்கும் வேம்பெனவே கடையவள் அடியேன்,
ரசம் நிறைந்தவரின் அரச,எனை ஆளவா!

எந்தை, எங்கள் துயரைச் சிந்தையில் கொண்டாய்!
நொந்தவருக்கெல்லாம் பந்துவெனப் பரிந்தாய்!

எண்ணில மாந்தர்க்கும் அண்ணல் நீ ஆனாய்!
புண்ணியம் முளைத்திடும் தண்ணிலம் ஆனாய்!

கிரிதரநாகரன் மீரா நாயகன்
கரம் பிடித்தேன்; அவன் பரமனைத்தும் விட்டேன்.'

*கிரிதரனைக் காதலித்துவிட்டால், அதற்குக் கூலியாகக் கண்ணீரைக் கொட்டித்தான் திரவேண்டும் என்று கருதித் துடித்துப் பாடுவாள் மீராபாய்:*

'யோகீ! உன்னிடம் மோகம் கொண்டாலது
சோகித்திருப்பதற்கே மூலம்!

கரும்பென இனித்திடும்
உறுதிமொழிகள் தந்தாய்;
மறதி உனக்கும் உண்டோ?

பிஞ்சுச் சம்பகத்தினைக்
கொஞ்சம் தயவுமின்றி
வஞ்சகமாய்ப் பிய்த்தாய்!

கோலத்தைக் காணாமல்
ஓலமிடும் மனத்தில்
சூலத்தினைப் புதைத்தாய்!'

*சூலத்தினால் அவளது அந்தரங்கத்தை அவன் குத்துவது எவ்வளவு யோசனையற்ற காரியம்! அந்தரங்கத்தில் அவனே அல்லவா அமர்ந்திருக்கிறான்? உள்ளே இருந்துகொண்டே ஏன் உள்ளத்தை வதைக்கிறான்?*

'பரிவே தரிசனம் தர வருவாய்!
பிரிந்துயிர் வாழேனையா!

ஜலமற்ற கமலம், நிலவற்ற இரவென
நலமற்ற நாயேன் நலிந்தேன் நாதா!
ஆகுல வ்யாகுலம் அலைத்திட, விரகம்
இதயத்தை வதக்குதையா!

ஒய்வுறக்கம் இலை, ஊண்கொள்வதுமிலை,
வாயினில் வார்த்தை வருவதில்லை!
எங்கு செல்வேன் ப்ரபு? என்ன செய்வேன் ப்ரபு?
பொங்குதாபம் தவிர்ப்பாய்!

உள்ளுறைபவனே, உள்ளம் வதைப்பதேன்?
அள்ளி அணைத்தின்பம் அளி, அருளாளா!
அடியாள் மீரா முடிவற்ற பிறப்புமுன்
அடியிணை தனில் படிவாள்.'

*இப்படித் தவிப்பது தானொருத்திதானா? கண்ணனைக் காதலித்த கன்னியர் எல்லோருக்கும் இதே கதிதான். சூலத்தால் குத்துவதும் கத்தியால் குத்துவதும்தான் கிரிதர னுடைய காதல் பரிசு.*

'நித்தியனின் நோக்கு—அன்பின்
கத்திக்குத்துக்(கு) ஈடு—அடியே!

பட்டவுடன் பித்தம் பிடிக்குது; புத்தி
நட்டமாகு(து); உடல்பட்டுப் போகுதடி!

உள்ளமுழுதுமன்பு கொள்ளும்நிலை யதனில்
துள்ளுமதம்பிடித்துக் கள்ளமின்றி அலைந்தேன்;
கண்ணனைக் காதல்செய் கன்னியரை அறிந்தேன்
அனைவரும் என்போல் பின்னமுற்றார் சித்தம்

வெண்ணிலவை நாடி விண்செல் சகோரமும்
புழலினைத் தேடிடும் கயலும் போலானேன்;
விளக்கினில் விழுந்திடு விட்டிலினைப் போல்
விட்டுனுவை அடைந்து விட்டிடுவேன் உயிர்.'

*இப்படி அவன் கத்தியாலும் சூலத்தாலும் குத்துவதில் அதிசயமில்லை. பண்பறியா மாட்டுக்காரப் பையன்தானே அவன்? தார்க்குச்சி போட்டு இளம் கன்றுகளைத் துன்புறுத்தி மகிழ்பவன் அல்லவா அவன்? நிந்தாஸ்துதி பாடுகிறாள் மீரா!*

'மாட்டிடையன் அறிவானோ—எனை
வாட்டிடும் வாதனையை?

உடலில் கம்பளி போர்த்து
அடவியில் ஆநிரையைத்
தார்க்குச்சியால் சீண்டி
வேர்க்க நடக்கின்ற (மாட்டிடையன்)

அளவின்றி வெண்ணெயைக்
களவு செய்துண்பவன்
ஆய்ச்சியரைத் தினமும்
ஏய்த்துக் களிப்பவன்

மீரா பாக்கியமாய்
வாராது வந்தபின்
கிரிதரனே, உனக்குப்
பிரிய வெட்கமில்லையா?'

இதே பாவத்தில் நர்மம், ரேர்ஷோக்தி என்று சிருங்கார இலக்கியத்தில் கூறும் ஹாஸ்யக் கோபத்தில் மீரா பாடும் இன்னொரு பதாவளியில் சக்களத்திப் போராட்டத்தையே பார்க்கிறோம்:

'கோபித்துப் புறம் சென்றாய்—சியாமா,
தாபத்திலே தவித்தேனே!

பாபி எனக்கொரு வார்த்தை சொன்னாயில்லை,
கோபி அவளுடனே கொட்டம் அடித்தாய்

தெருவிலும் எனக்குத் தெரிசனம் தாராமல்
கரிசனமாய் அவள் குடிலுக்குச் சென்றாய்

தப்பியும் என்றனைத் தொட்டுவிடாத நீ
அப்படியே அவளை அழுந்தப் பிடித்தாய்!

அடியாள் முந்தியில் இடியாதே சென்று
பிடிவாதமாயவள் முகத்திரை களைந்தாய்!

மங்கா அன்புடன் உன்றன் காலினில் வீழ்ந்தேன்
ச்ருங்கார நாயகா! எங்கே திரிந்தாயோ!'

அவனை எவ்வளவுதான் சினந்துபாடத் தொடங்கினாலும் கடைசியில் அவன் பாதத்தில் வீழ்ந்து புரளத்தான் அவளுடைய பாழும் மனம் ஆசைப்பட்டது. இப்படி ஒரு நாளா, இரு நாளா? வருஷம் முழுதும் இந்தத் துன்பவதைதான்! ராஜஸ்தானத்தின் மாதாந்தர மரபுகளையும் இயற்கை விசித்திரங்களையும் பின்னிப் பின்னிப் பதாவளி பாடினாள்.

'வருடம் முழுவதிலும் நீ
வரு வழி பார்த்திருந்தேன்

அநுதினம் உன்றனை அழைத்து இளைத்தேன்
அணுவளவும் இரங்க அருள் இல்லையா,ஐயா ?

சித்திர மாயமாய் சித்திரை வந்தது
சித்தத்தில் வசந்த விசித்திரம் விளைத்தது

வைசாகந்தனில் வாசமலர் நிறைய
மெய்சோரக் குயில்,ஐயோ, இசைக்குதே!

ஆனித்திங்கள்தனில் கேணிகள் வற்றிட
மீனினம் என எனது) ஆவி துடித்தது!

ஆடியில் மேகங்கள் சாடிடச் சாதகம்
கூடி மகிழ, மயில் ஆடி அகவியதே

ஆவணி த்ரிதியையில் ஆவலுடன் செந்-
தாவணி அணிந்தேன், வான்மழை கண்டேன்

புரட்டாசியில் நதி புரட்டிப்பெருக்கிட
பரட்டானம்* சென்ற நாயகர் திரும்பினர்

ஐப்பசி ஸ்வாதியில் சிப்பியில் நீர்விழ
வைப்பு முத்தாச்சு, என் கண்ணிலும் முத்தாச்சு

கார்த்திகையில் மக்கள் நேர்த்திக்கடன் செய்ய,
மூர்த்திஉன் நினைவினைப் போர்த்திருந்தேன் நான்

மார்கழிப் பனியினில் பார் பரிதவித்ததுவே!
சேர்த்துப்பிடித்துக் குளிர் தீர்த்து வைப்பாய்இல்லை!

தையும் பிறந்தது; தண்மை செறிந்தது
தையல் எனைக்காணத் தயவு சுரக்கவில்லை!

ஹோலி விழா நிகழ் மாசியின் பஞ்சமி
கேலியாய்ப் பாடினர்; கேவி அழுதுவிட்டேன்!

பங்குனியில் வனம் அங்கிக்(கு) இரையாக்கிக்
குங்குமப்பொடியினை எங்கும் இறைத்தனர்;

மங்கை மீராவுக்கு மங்கலம் தந்திட
சங்க கரத்தையா, இன்னும் வாராயோ?'

*ஆதியில் குழந்தை மீரா, ஸாவண்தீஜ் கொண்டாடிச் செந்தாவணி அணிந்த நினைவு இன்னும் அவளை விட்டகல வில்லை. ஹோலியின் கேலியான கேளிக்கைப் பாடல்களைப் பற்றி வேறு பல பாடல்களிலும் மீரா குறிப்பிட்டிருக்கிறாள். பொங்கலுக்கு முன் நாம் சொக்கப்பானை கொளுத்துவது போல் பால்குன மாதத்தில் காட்டுப் புதர்களை எரிப்பது ராஜஸ்தான வழக்கம். மீராவின் வாழ்வில் மண்டிய துயரப் புதர்களை ஐயன் எரிக்க அதுவேனும் உகந்த சமயமாகாதா என ஏங்குகிறாள்.*

*இப்படிக் கேட்டுக் கதறினாலும் அவன் வரமாட்டான். அதற்காக அன்பு செய்வதை மீராவால் விட்டுவிட முடியாது. விரக சோகத்தின் சிகரத்தில் நின்று மீரா கதறிப் பாடுவாள்: வேறு வித பாவங்களில் அவள் தொடங்கும் பாக்களிலும் திடுமென இவ்விரகக் கதறல் விண்டு வந்துவிடும்.*

'பத்தர்களே பஜிப்பீர், பரமன்றனை
சத்துக்களை சாருவீர்; சத்தியனை!

ராமனை யன்றிப் பிற காமனை அறுத்து
ஸ்மரணம் புரிந்திடுவீர்! மரணம் கடந்திடுவீர்!

* பரட்டானம் : பரஸ்தானம், வேற்றிடம்

துன்புறு மேனியைத் தம்புருவாக்கி
அந்தரநாடிகள் தந்திரி யாக்கி
இதயகீதம் இசைத்துச் சதங்கை சலசலக்க
தாளமிட்டே இந்த ஞாலமெலாம் அலைவேன்

அநுதினம் அயரா(து) அணுஅணுவாய் எனை
ராமப்ரேமத் தீயில் ஹோமம் புரிந்து கொள்வேன்;
ஹரிபக்தியை விட்டுத் திரிபவள் அல்லேன்;
ஜீவனமிதில் மற்(று) ஆவன உண்டோ?

ஆற்றவொணாச் சோக ஆற்றங்கரை அடைவேன்
நன்னீர்ப் பெருக்குடன்என் கண்ணீர் கலந்திடுவேன்
துயர நதி தடத்தில் உயர்மரமாய் வளர்வேன்
பாஷ்பவாரியாய் நித்தம் புஷ்பமாரி பொழிவேன்

நந்தவனம் வந்த நந்தகுமாரனின் மேல்
நுட்பமான சோக புட்பமதை உதிர்ப்பேன்;
சீரார் சேவடியில் மீரா சிரம் வைத்துப்
படிவாள்; பணிவாள்; அடியாள் ஆவாள்.'

*பிரேமை வெறியைப் பாருங்கள்! சோக நதியைப் பெருக்கியவள் அவள்; அதன் கரையில் நிற்கும் தரு அவள்; அதில் மலரும் பூவும் அவளே. மீரா இதெல்லாம் மட்டும்தானா? இவற்றுக்கெல்லாம் மேலாக அவளேதான் கண்ணனும்! சூரியனும் வெயிலும் ஒருமிப்பதான அத்வைதக் காதலையுமல்லவா மீரா கானம் செய்திருக்கிறாள்?*

'மாலை வருமுன்னே
மாலே! வருவாயே!

உன்னுடன் இணைந்தால் மன்னுமின்பமாகும்
உன்னும் நினைவனைத்தும் திண்ணம் நிறைவாகும்

மாதவ!நம்மிடை பேதம் என்பதுமுண்டோ?
ஆதவன் நீ!அதன் சோதி யான் அன்றோ?

மீராவின் மனம் வேறாகாதினி
கருநிற அழகனை விரும்பி ரமிப்பாள்,'

*இந்த அத்வைதமே இன்னொரு பாடலிலும் இன்னொரு சாயலில் எவ்வளவு அழகாக வருகிறது பாருங்கள் :*

'பேதை எனக்கு ராம—
போதை ஏறிப்போச்சு

மேகம் பொழியாய்ப் பொழியத்
தேகம் நனைந்து தொப்பலானேன்.

எத்திசையும் இடி மொத்தியது,
பின்னலிட்டது கொடிமின்னல்!

திறந்து அஞ்ஞானக் கதவம்
பரந்தஞான வெளி நின்றேன்,
கர்மம் தொலைத்திடும் வழியின்
மர்மமென் சற்குரு தந்தார்!

உடலனைத்தும் ஓர் ஆன்மா
குடவிளக்கா யொளிரக் கண்டேன்
அந்தரங்கத் திருந்தாலும்—ஆன்மா
பந்தமற்றே துலங்கக் கண்டேன்

அழிவிலாத அன்பொளியில்
அறிவு மாடந்தனில் சேர்ந்தேன்
ஆவி அமுதைப் பலிதந்தே
மேவினேன் மேலவன் பாதம்.'

அத்வைதம் மட்டும்தானா? அத்வைதத்துக்கும் மேலே சென்றவள் மீரா. 'அத்வைதத்துக்கும் மேலா?' என்று அதிசயிக்காதீர்கள்! பரம்பொருளின் சரீரத்தில் ஜீவர்கள் அங்கமாயிருப்பது விசிஷ்டாத்வைதம். பரம்பொருளாகவே இருப்பது அத்வைதம். பரம்பொருளையே தன்னில் ஓர் அங்கமாக, தன்னில் ஒரு பங்காகக் கண்டால் அதை என்னென்பது? அத்வைதத்துக்கும் மேம்பட்டது எனலாம் அல்லவா? பற்பல வித அநுபவங்களில் அலையாடிய மீராபாய் இப்படியும் ஒரு நிலைகண்டு கானம் செய்கிறாள்:

செல்லக் கண்ணன்—என்றன்
உள்ளத்திலே ஒரு பங்கு!

வன்ன மயிலிறகு
சொன்னப் பட்டாடை
மின்னும் குழைஅணி
சின்னஞ்சிறு பயல் (செல்லக் கண்ணன்)

ப்ருந்தாவனத்தின்
பொந்து புதர்களில்
தொந்தோ மென்றாடும்
நந்த கிசோரன் (செல்லக் கண்ணன்)

'ஆண்டவனைத் தன்னில் ஒரு பாகமாகக் **கண்டவள்**' என்பது முற்றும் உண்மை. ஏனெனில் தத்துவங்களையும் தான் **கண்டதாகவே** அவள் பாடியிருக்கிறாள். கண்ணன் என்பதே காண்பதைக் குறிப்பதுதான். கண்ணை உடைய எல்லோருமே கண்ணாதாம். ஆனால் எவன் எதிலும் பட்டுக்கொள்ளாமல்

வெறும் கண்ணனாக — சாட்சி மாத்திரமாக — நிற்கிறானோ அவன்தானே உண்மையான கண்ணன்? சாட்சி (ஸ-அக்ஷி) என்பதன் நேர் பொருள் கண்-ணன். நம் கண்ணாகவே இருப்பவனை நாம் எப்படிக் காண முடியும்? கண் பிற பொருளைத்தான் பார்க்குமே அல்லாமல் தன்னையே பார்த்துக்கொள்ள முடியாதே! ஆயின் ஞானத்தினாலும் யோகத்தினாலும் உள் முகமாக அவனைப் பார்க்க முடியும். அவ்வாறு மீரா தன் பக்தியன்பு கொண்டே பார்த்திருக்கிறாள். முன்பு 'அலக் நிரஞ்ஜன்' யோகமார்க்கத்தை அவள் பயின்றபோது அவளது உயிர் மூச்சு படிப்படியாக ஏறுகையில், வேண்டாத சக்திகள் அவளைக் கவர வந்து, அவள் பயந்தாளல்லவா? இப்போதோ அவளது ப்ரேம பக்தியே அப்பிராண சக்தியை ஒரே தாவில் உச்சிப்படிக்கு ஏற்ற, அவள் பேரானந்த தரிசனம் பெற்றாள்! பாடினாள்:

'புருவ மத்தியினில்
இரு தளத் தாமரை
மலரும் மாளிகையின்
பலகணி திறந்து
ஆசை தீர எந்தன்
நேச மணாளனவன்
கிரிதரனை உள்ளே
தரிசனம் கொண்டேன்!

சூனிய வெளியினில்
ஞானியர் நினைவினில்
மணக்கும் சிங்கார
மணவறை அமைத்தேன்;
நேயம்எனும் மலர்ப்
பாயல்தனை விரித்தேன்
இருமையற்ற அன்பில்
இறுகி உறங்கினேன்.'

உறக்கம் வெளிப்புலன்களுக்கு! அந்தராத்மாவுக்கோ அதுவே பேரின்பப் பெருவிழிப்பு! இப்படி அருவத் தத்துவமாக அவனைக் கண்டவள், உருவ சுந்தரத்தையும் நேருக்கு நேராகக் கண்டவள்தானே? நாமே அப்படிப் பல காட்சிகள் இச் சரிதை நெடுகிலும் கண்டிருக்கிறோமே! கண்ணனின் ரூப லாவண்யத்தை முகமுகமாகப் பருகிய மீரா பொங்கிப் பொங்கிப் பாடுகிறாள்:

'அந்த சந்தமாய் நந்தநந்தனனை
எந்த நாளில் கண்டேனோ?

இந்த உலகினிலும் இந்த்ர உலகிலும்
எந்த இன்பம் அதற்கீடே ?

கடலில் நீலத்தரங்கம்—அது
மகர மீன் நடன அரங்கம்
கண்ணனின் கன்னம் பளிங்கம்—அதில்
மகர குண்டலநிழல் துளங்கும்

புருவம் வில்லினுடைப் போக்கு—மாய
மந்த்ர சக்தி நிறை நோக்கு
கஞ்சனம் வண்டும் மானும் மீனும்—அவன்
அஞ்சனக் கண் கண்டு நாணும்

நாசிகையோ அதி சுந்தரம்—தங்க
ரேகை மூன்று தங்கு கந்தரம்
நட்டமிட்டு வரும் தாண்டவன்—தன(து)
இட்ட வேடமிடும் ஆண்டவன்

மாவிளம் பூவினில் மின்கதிர்—ஜக
மாந்தர் கண்டறியாததோர் புதிர்!
மாதுள மொட்டென அதரம்—ப்ரபு
மூரல் மின்னல் அதில் சிதறும்!

இடையில் சிறுமணி குலுங்கும்—அதில்
உவமையிலா ஒலி துலங்கும்
கிரிதரனின் அங்க அங்கம்—மீரா
மீளாதே பலியானேன்!'

*சுந்தரனாகவும் ஞான அந்தரமாகவும் ஐயன் ஒரே போதில் இருந்தான் அல்லவா? இதைக் கொண்டே மீராபாய் அவனை யோகியாகப் பொய் வேடமிட்ட விடபுருஷன் என்று நிந்தா ஸ்துதி செய்கிறாள்! அவன் வேஷத்தை அம்பலப் படுத்தப் போவதாக அச்சுறுத்தவும் செய்கிறாள்!*

'ஆண்டி வேஷமிட்டே—முறை
தாண்டி விட்ட தூர்த்தா!
சீண்டிச் சிரித்து ஆசை
தூண்டிவிட்டு மறைந்தாய்!

மானின் தோலினை உடுத்தாய்
மேனியில் நீறு துதைந்தாய்
மோன விரதம் என்று சொன்னாய்
மானம் வாங்கி விடுவேன், பார்!

தொண்டே செய்யும் எந்தமக்கு
பண்டே நீ செய் வினையை

அண்டோர் அனைவரும் அறியத்
தண்டோரா அறைந்திடுவேன்!

அன்றலர்ந்த கமலத்தை
வென்ற முகத் திருஒளியாய்!
ஒன்றி யோக வேஷம்
முன்றில் முன்பு நின்றாய்

ஏது சொல்லிடினும் என்ன?
ஆதி உல்லாசன் உன்னிடத்தே
ஊதியம் ஏது மில்லாமல்
ஊழியம் புரிபவளானேன்.'

உத்தண்டமாகவே, உரிமையாகவே வந்த வாக்கு இனிக்க முடிகிறது.

இப்பாட்டில் பிட்சாடனப் பரமேசனையே மீரா பாடுவது போலல்லவா இருக்கிறது? மான் தோலையும் வெண்ணீற்றையும் சொல்கிறாளே! எந்தச் சித்தாந்தத்துக்கும் கட்டுப்படாதவள் மீரா! தானுமே வெண்ணீறணியப் போவதாகவும் பாடியிருக்கிறாள். அவளால் ஆசை எரிந்த யோக நிலைக்குப் பஸ்மத்தைத்தான் உருவகமாகப் பார்க்க முடிந்திருக்கிறது. தனது இறுதிப்பாடலில் தானே அப்படி விபூதியாக வேண்டும் என்று கதறலான கதறலிலேயே உறுதியாகப் பாடியவள் மீரா.

மீரா இசைத்த ஹோலிப் பாடல்களைப் பார்த்தால் நடைமுறை, தத்துவம், இவற்றின் இடைநிலை ஆகிய மூன்று பாவங்களும் ஒன்றை யொன்று கவ்வியிருப்பதைக் காணலாம். ஹோலியில் வண்ணநீரைப் பீச்சியும் தமார் கானம் இசைத்தும் மகிழ்வது வழக்கம். இதை வைத்தே மீரா பாடுகிறாள்:

'கசந்ததடி ஹோலி
வசந்த மாதவனின்றி (கசந்ததடி)

வாசலும் வீடும் பாழாச்சு
தேசமும் உலகும் பாழாச்சு
பாயல் சயனமும் பாழாச்சு
நேயனில்லாதே நோகின்றேன்

தாளம் தம்புரா தண்குழலும்
மேளமும் முழங்கின மேளாவில்
வேனில் வந்தது, வெந்துவிட்டேன்;
ஏனின்னும் வேந்தன் வரவில்லை?'

இதே உணர்ச்சிச் சாயலில் இன்னொரு பாடலைப் பாருங்கள்:

'வீடுவாசல் சலித்தது
கூடுமன்பன் இன்றி (வீடு)

தேசம் நீத்து என் நேசன் சென்ற பின்
தீபவரிசை என்றன் தாபம் பெருக்குது!
மஞ்சத்தின் சூனியம் நெஞ்சில் நஞ்சாக
துடியாய்த் துடித்தது உயிரும்;
நொடியும் துயிலுமோ நயனம்?

உப்பரிகை ஏறி அப்பன் வழி பார்த்தேன்
இரவு பகல்முழுதும் விரகம் வதைக்குதே!
எங்கு செல்வேனடி? என்ன சொல்வேனடி?
ஆகுலம் அடைந்தது இதயம்
கோகுலன் வருநாளே கதினம்

ஆதுர மறிந்து தூது மொழிந்திட
உள்ளன்பு என்னிடம் உள்ளவர் இலையோ?
சுபவேளை எனக்கும் லபித்திடுமோ சகி?
ஹரி முறுவலித்து வருவானோ?
பிரியனுடன் ஹோலி இசைப்பேனோ?'

*இது ஒரு பாவம். ஐயன் வராத பாவம். அவன் வந்து நடைமுறையில் வாஸ்தவமாய், நேருக்கு நேராய் ஹோலி கொண்டாடியதையும் அநுபவித்தவள் அவள். அதை இன்னொரு பதாவளியில் பார்க்கிறோம்.*

'பாலித்திடும் கிரிதாரி
ஹோலியில் இன்பம் செய்தான்

நாணும் நங்கையரை நயமுறவே தொடர்ந்து
வேணுவும் மத்தளமும் வித்தகமாய் இசைத்து (பாலித்திடும்)

தனது திருக்கரத்தால் சந்தனத் துகளினை
மனது குளிர எங்கள் மேனியிலே தடவி (பாலித்திடும்)

பிடிப் பிடியாய் வண்ணப் பொடியை எடுத்தே
அடித்துத் திசையெங்கும் அயர்வுறச் செய்தான்

உல்லாசம் நிறை யௌவன நாதனாய்
சல்லாபம் செய்து உளம் கொ(ள்)ளை கொண்டான்

குரல் எடுத்தே தமார் இசையினை ஓதினான்
கரதாளம் கொட்டிக் குதித்துக் கூத்தாடினான்

பண்டிகை தினத்தினில் பண்டை யுறவுப்பிரான்
எண்டிசையும் மகிழ என்னைச் சேர்ந்தானடி!'

*இந்த நடைமுறையே தத்துவமாகப் பரிணமிக்கும் பாவத்தையும் மீராவின் பாவில் பார்த்துவிடுவோம்*

பொதுவாக எளிய சொல். கருத்துக்களையே கவிதை மலரில் மலர்த்தியவள் ஆங்காங்கே பண்டிதையாகவும் பாட ஐயன் அருள் கூர்ந்தான். அந்த ரகத்தில் வரும் பாடல் இது.

'நாளும் பங்குனி தேய்ந்திடுமே
ஹோலி கொண்டாடிட வருவீரே!

சுநாத தாளமும் மேளமும் வேண்டா;
அநாஹத லயம் அநுபவித்திடுவோம்!

சுரமற்ற பண்களைப் பாடிடுவோம்!
சுரரும் பெறா இன்பம் சூழ்ந்திடுவோம்!

சீல சந்தோஷமே கோலப்பொடி
காலமற்ற அன்பு பீச்சாங்குழல்;
விண்ணெட்ட வண்ணம் தெளிந்திடுவோம்!
கண்ணன் நிறத்தில் மண்ணைக் கரைத்திடுவோம்!

மத, மான, வெட்கம் உதறிய பின்னர்
இதய மணிக் கதவம் திறந்திடுமே!
இன்பன் உள்ளே புகுந்(து) இனிதமர்வான்
அண்டர் அறியாப் பேர் அன்புசெய்வான்.'

'சீல சந்தோஷம்' என்கின்ற அழகான தொடரின் மூலம் யோகத்தையும் போகத்தையும் இசைத்துவிடுகிறாள் மீரா. இன்பத்தைத் தேடுவதற்காக ஒழுக்கத்தை விட்டுவிடாமல், சங்கீதமும் சாகித்தியமும் போல் சீலமும் சந்தோஷமும் இணைவது தானே சிருங்கார பக்தி?

யோகமும் போகமும் கண்ணனிடம் சேர்ந்தது போலவே மீராவிடமும் சேர்ந்துவிட்டன. அதனால்தான் கண்ணன் காதலில் திளைத்த சிருங்கார நாயகியாயினும் தான் யோகினியாகக் கிளம்பி விட்டதாகப் பல பாடல்களில் அவள் திரும்பத் திரும்பக் கூறுகிறாள். உலகத்தார் செய்து கொள்ளும் சிருங்கார எழிலை அவள் எவ்வளவு நிர்த்தாட்சிண்யமாகக் களைந்து எறிகிறாள் என்பதைக் காண நமக்கு அச்சமாகக்கூட இருக்கும். ராணா அணிவித்த பாஜுபந்துவை மட்டுமின்றி, மற்றச் சுமங்கலச் சின்னங்களையும் கூசாமல் விட்ட சந்நியாசினி அவள்.

'யோகியின் அழைப்பு வந்தது,
போகிறேன் சடையினை முடித்து!
சீலையைக் கிழித்துக் கந்தலை உடுத்து
சீல உபதேசம் பெற்றிடுவேன்'

என்று மீரா பாடுகையில் '**ஒரு ஞான பத்தினியைத் திகழ் மார்புறத் தழுவு மயில்வீரா**' என்றும் '**ஒது குறமான் வனத்தில் மேவியவள் கால்பிடித்து ஓம் எனுபதேசவித்தொ டணைவோனே**' என்றும் அருணகிரி பாடியது நினைவு வரும். மீரா தொடர்ந்து,

'ஒப்பரிய ஜபமாலையும் முத்திரையும்
கப்பரையும் ஏந்திக் காவலன்பால் செல்வேன்
மன்னர் மன்னவனின் சந்நிதியது பெற
மண்ணுலகெங்கிலும் யோகினியாய் அலைவேன்'

என்கிறாள்.

ஆனால் இந்த யோகினி போல் விரகத் தீயில் தவித்தவர் யாருமில்லை. சிருங்காரச் சக்கரவர்த்தினியான ஆண்டாள் குயிலை நோக்கி,

'சங்கொடு சக்கரத்தான் வரக் கூவுதல்
பொன்வளை கொண்டு தருதல்
இங்(கு) உள்ள காவினில் வாழக் கருதில்
இரண்டத்து ஒன்றேல் திண்ணம் வேண்டும்!

என்றும் இக்காவில் இருந்திருந்து என்னைத்
ததைத்தாதே நீயும் குயிலே!
இன்று நாராயணனை வரக்கூவாயேல்
இங்குத்தை நின்றும் துரப்பன்!'

என்றெல்லாம் சினந்து பாடினாள் அல்லவா? அதைவிட உக்கிரமாக மீரா அன்றில் பட்சியை நோக்கிப் பாடியதையும், திடுமென உக்கிரம் மாறி அன்பு மயமானதையும் ஒரு பதாவளியில் பார்க்கிறோம்:

'அன்றிலே, அவனுடை நாமமதனை நீ
இன்றிலிருந்து சொல்லாதே!

விரகிணி உன்றன் குரலிசை கேட்டால்
சிறகினை ஒடித்துத் தெருவினில் எறிவேன்!

அன்றிலே, உன்றன் குன்றிமணி அலகைச்
சப்பையாய் வெட்டியே உப்பையும் அழுத்துவன்!

அவன் என்னுடையவன், அவனுடையவள் நான்
மத்தியில் நீ யார், கத்த அவன் பெயரை?

உன்னொலி கேட்டு இன்பன் வந்தேவிடில்
சின்ன அலகினுக்குச் சொன்னக் கவசம் செய்வேன்!'

'மூக்கையறுத்து மிளகாய்ப்பொடி போட' இருந்தவளே அம்மூக்குக்கு சொர்ண கவசம் சார்த்தி முடிக்கிறாள்!

அன்றிலைவிடக் கரும் சிறகால் நந்தலாலனை நினைவுறுத்தும் காகமே சிறந்த தூதியாக மீராவுக்குத் தோன்றுகிறது. சட்டென்று பாட்டை மாற்றுகிறாள்:

'காகமே நீசற்று வேகமே சென்(று) அநு–
ராக மடலதனை நாகரனிடம் சேர்!
"ப்ரியன் ப்ரியன் எனவே இயம்பி இளைகிறாள்;
ஊணுறக்கம் இல்லை; காணுதி!" என்பாய்!'

# 26. கணகௌரி நோன்பு

**ஊ**ண் கொள்ளாத உதரமும், உறக்கம் கொள்ளாத நயனமுமாக மாடத்திலிருந்து இறங்கித் தடாகத்துக்கு வந்து சேர்ந்தாள் மீரா.

படிக்கட்டில் அமர்ந்துகொண்டாள். இதே இடத்தில் மது மங்களனுடன் மாதவன் அமர்ந்து பேதையான தன் கதையைக் கூறியதை நினைந்து நெஞ்சுருகினாள்.

அப்படிப்பட்ட அரிதான பாக்கியத்தை இழந்த தனக்கீடாக இன்னொரு விரகிணி இருப்பாளா என்றெண்ணி னாள்.

தடாகத்துக்குள் மீராவின் பிம்பம் தெரிந்தது. கண்ணீரிலேயே மீரா நகைத்துக்கொண்டாள். 'தன்னைப் போல இவளும் விரகத்தில் தவிக்கும் இன்னொரு விரகிணி' என்று எண்ணிக் கொண்டாள். பிம்பத்தையே தனது விரகத் தோழியாக்கிக் கொண்டாள். அவள் மீதே கானமிசைத்தாள்:

'விரகிணியாய் விழித்திருந்தேன்
தரணி துஞ்சுகையில் தனியளாய் அமர்ந்தேன்
தரணி துஞ்சும் அப்பொழுதிலும் பிறிதொரு
விரகிணி நீருள் கண்ணீர் பொழியக் கண்டேன்

ஆவி பதறிக் கண்ணீர் ஆரம் அணியக்கண்டேன்
வாவியுள்ளே ஒரு வாட்டமுற்ற வனிதை

தாராகணங்களை எண்ணி எண்ணி அயர்ந்தேன்
தீராதோ இரவு? வாராதோ சுகநாள்?

ஆரா அமுதான கிரிதர நாகரனை,
மீராவின் ப்ரபுவைச் சேராதுயிர் உண்டோ?'

பாட்டு முடிந்து மீரா எழுந்திருந்தாள். ஆனால் பிம்பம் மட்டும் எழுந்திராமல் அமர்ந்தே இருந்தது. 'இதென்ன

விந்தை? இல்லை... இல்லை... அமர்ந்திருப்பது பிம்பமல்ல. பிம்பமெனில் என் காலடியிலேயே தலைகீழாக அல்லவா கிடக்கவேண்டும்? இது எதிர்க்கரையில் அல்லவா நேராக அமர்ந்திருக்கிறது? நட்ட நடு நிசியில் இப்படி இங்கு வந்தமர்ந்து கொண்டிருக்கும் இன்னொரு பைத்தியம் யார்?'

தன்னைப்போல் இன்னொரு பைத்தியமிருப்பதில் ஆறுதலடைந்த மீரா அந்தப் பிம்பத்தை நோக்கிச் செல்வதற்குள், 'சரக்' 'சரக்' என்ற அடியோசை கேட்டது. அதைத் தொடர்ந்து "சிருங்கார தேவி, இங்குதான் இருக்கிறாயா!" என்ற குரலும் வந்தது.

சிருங்கார தேவியை மணந்த ராய்மல் தவிர வேறு யார் அவ்வளவு சுவாதீனமாக அந்த வேளையில் அவ்விடத்துக்கு வந்து அவளை அப்படிக் கூப்பிட முடியும்?

இளந்தம்பதியர் இனித்துப் பேசுமிடத்தில் தான் இருக்கலாகாதென்று இருளோடு ஒன்றித் தன் அரண்மனை நோக்கி நடக்க முற்பட்ட மீராவின் செவியில் சிருங்காரதேவி விம்மியழும் ஒலி கேட்டது.

மீராவின் கால்கள் தாமாக நின்றன; செவி கூர்மையாயிற்று.

"ஏன் அழுகிறாய் தேவி! இங்கேயும் நான் வந்துவிட்டேனே என்றா?" என வினவினான் ராய்மல். எதையும் லேசாக எடுத்துக் கொண்டு குறும்பு செய்யும் ராய்மல்லின் குரல் சோகத்தில் கனப்பதைக் கேட்க மீராவுக்கு உள்ளம் நெகிழ்வாய் நெகிழ்ந்தது.

சிருங்காரதேவி பேசினாள்: "நீங்கள் வந்தீர்கள் என்று அழவில்லை. அழுவதற்கென்றேதான் இங்கு வந்தேன். உங்களை உறக்கத்திலிருந்து எழுப்பிவிடக் கூடாதென்றுதான் சயனத்தை விட்டு இங்கு அழ வந்தேன்."

"உறக்கமா? நல்ல பேச்சுப் பேசுகிறாய், தேவி! இந்த அரண்மனையில் இதுவரை இரண்டு பேருக்கு உறக்கமில்லாதிருந்தது. இப்போது நாலு பேரிடமிருந்து நித்திராதேவி விடைபெற்றுவிட்டாள்" என்றான் ராய்மல்.

மீராவின் உடல் வெடவெட என்று ஆடிற்று. 'என்ன நடந்துவிட்டது?'

ராய்மல் கரகரத்த குரலில் பேசிக்கொண்டிருந்தான்:

"மேவார் ராஜவம்சத்தை துர்க்கா பரமேசுவரி சரியாகத் தண்டிக்கிறாள். திருமணத்தில் அரசியலைக் கலந்து சிசோதிய-ராட்டோர் பகை தீர்ப்பதற்காகப் பெண்ணெடுத்ததற்குத் தண்டனை தருகிறாள். அப்பாவிடம் சித்திக்குப் பிடித்த மில்லை. அது ஓர் உன்னத காரணத்தாலென்றாலும், சித்திக்கு ஒரு பத்தினி ஸ்தானப் பிடிப்பு அப்பாவிடம் இல்லைதான். உனக்கு என்னிடம்....."

"அப்படி மட்டும் சொல்லாதீர்கள்" என்று அவனை இடைமறித்த சிருங்காரதேவி குலுங்கக் குலுங்க அழுதாள்.

"பின் உன்னுடைய போக்குக்கு என்ன பொருள் சிருங்காரி? கலியாணமாகிய பின்னும் நீ என்னைக் கட்டைப் பிரம்மசாரியாகவே வைத்திருப்பது எதனால்?"

மீராவின் உடல் மீண்டும் வெடவெடத்தது.

"சொல்லத்தான் வேண்டுமா?" என்றாள் சிருங்காரி. பிறகு தானே, "சொல்லத்தான் வேண்டும்" என்றாள்.

"சொல்லாவிடில் என்னைத்தான் தவறாக எடுத்துக் கொள்வீர்கள்; சொன்னாலோ உங்கள் மதிப்புக்கு உகந்தவர் களைத் தவறாக எண்ணுவீர்களே என்றே இது நாள்வரை மனத்தை அடைத்துக்கொண்டிருந்தேன். சொல்லாவிட்டாலும் நீங்கள் என்னை மட்டுமின்றி சித்தியையும் சேர்த்துத் தவறாக நினைப்பீர்களோ என்று இப்போது தோன்றுகிறது. 'துர்க்கா தேவியின் தண்டனை' என்று நீங்கள் சொன்னாலும் உண்மையில் சிசோதிய விரோதத்தினால்தான் ராட்டோர் ராஜகுமாரிகளான சித்தியும் நானும் உங்கள் பிதாவையும் உங்களையும் ஒதுக்குகிறோமோ என்று உங்கள் உள்மனத்தில் ஒரு நினைவு நிழலாடுகிறதோ என்று எனக்கோர் ஐயம், ஸ்வாமி. எனவே இனி உண்மையைச் சொல்லத்தான் வேண்டும்.

"ஸ்வாமி, அரசியல் காரணங்களுக்காக நீங்கள் பெண் கொண்டீர்களெனில், அரசியல் காரணங்களுக்காகத்தான் என் தந்தை ஜோதாவும் பெண் கொடுத்தார். தாங்கள் மகாராணாவின் கனிஷ்ட புத்திரரே ஆயினும் தங்கள் தமையனாருக்கு ஆட்சிப் பட்டம் கிடைக்காதென்ற நம்பிக்கையிலேயே, ராட்டோர் ராஜகுமாரியைச் சிங்காதனத் தில் பார்க்கும் ஆசைக்காக, அச்சிங்காதனத்தில் அடுத்த வாரிசாக ராட்டோர் ரத்தத்தையே பார்க்கும் ஆசைக்காகத் தான் என்னைத் தங்களுக்கு தந்தார் என் தந்தை. அந்த

எண்ணமே என் நெஞ்சைக் கசப்பாக்கிவிட்டது. தங்களை அணுகும்போதெல்லாம், ஏதோ என் தந்தையின் ஆசையைப் பூர்த்தி செய்யமட்டுமே அப்படிச் செய்வதாக உள்ளத்தில் ஒன்று கட்டை போடுகிறது. சுயமாகப் பிறந்த இந்த ஒதுக்கம் போதாதென்று தங்கள் பாட்டியாரின் பழிச் சொல்வேறு என்னைத் துளைக்கிறது ப்ரபு! பெரியவர்களை நான் குறை சொல்வதற்காக என்னை க்ஷமிக்கவேண்டும். ஆயினும் என்னால் இந்தப் பழியைத் தாங்க முடியவில்லை. தங்கள் தமையனார் பாய்-ஜி-ராஜுக்கு மூத்த பேரர். பேரன் எப்படி யிருந்தாலும் அவனுக்கு மணமாகிப் பார்க்க வேண்டுமென்று எந்தப் பாட்டியும் விரும்புவது இயற்கை. ஆனால் நானா உங்கள் தமையனின் திருமணத்துக்குக் குறுக்கே நின்றேன்? உங்கள் தமையனார் திருமணப் பொறுப்பை ஏற்காமலே உல்லாஸ புருஷராக வாழ நினைப்பதையும், அவரிடம் ஒரு பெண்ணை மனைவியாக ஒப்பிப்பது ஸ்திரீ துரோகம் எனத் தங்கள் பிதா கருதுவதையும் இந்த ராஜ்யமே அறியும். இது தெரியாததுபோல் உங்கள் பாட்டியார் என்னை ஓயாமல் சாடுகிறார். 'ராட்டோர் ராஜகுமாரிகளின் சாமர்த்தியத்துக்கு ஈடு உண்டா? ஆச்சு, இன்னும் சில மாதத்தில் பிள்ளையாகவும் பெற்றெடுத்துக் கொண்டுவிடுவாய். அப்புறம் எங்கள் உதயனுக்குக் கலியாணமானால் என்ன, ஏதானால் என்ன? அம்பாளுக்கே இந்த அக்கிரமம் சம்மதமாயிருக்கும்போது நான் ஏன் பைத்தியக்காரி புலம்பவேண்டும்?' என்று அடிக்கடி சொல்கிறார். என்னால் தாங்கமுடியவில்லை. 'என் உள்ளம் உங்களுக்குத் தெரியவில்லை. அம்பாளுக்கே பூ கட்டி வைத்து எடுத்துப் பாருங்கள்' என்று சொல்லிவிட்டேன். அதற்கு பாய்-ஜி-ராஜ் என்னென்ன சொன்னார் தெரியுமா? 'பிள்ளையும் பேரனும் காலால் வைத்துத் தேய்க்கிற புழுத்த விதவைக் கிழம் நான். நீயோ எதிர்கால ராஜஸ்தானச் சக்கர வர்த்தியின் தாயார். உன்னோடு விவகாரம் வைத்துக்கொள்ள எனக்கேது திராணி?' என்றார். என்னால் பொறுக்க முடிய வில்லை. 'நானும் சிம்மாதனம் ஏறுவதில்லை, என் பிள்ளையையும் சிம்மாதனத்தில் ஏற்றுவதில்லை' என்று சபதம் செய்துவிட்டேன். அதற்காகத்தான் புத்திரபாக்கியமே வேண்டாமென்று இப்படி....." சிருங்காரி மீண்டும் விம்மி யழலானாள்.

உதயனிடத்தில் பாய்-ஜி-ராஜுக்கு என்றுமே அதிகப் பற்றுதல் உண்டு. பலவீனமான குழந்தைகளிடமும் புத்தி தவறிய குழந்தைகளிடமும்தான் தாய்மாருக்கும்

பாட்டிமாருக்கும் அதிகப் பிரியம் இருக்கும். அதற்கு சௌபாக்கியதேவி விலக்கல்ல. அதோடு ராய்மல்லும் அடிக்கடி அவளது வாயை அடக்குவான். அவளுடைய வழி தனக்குப் பிடிக்கவில்லை என்று சிறு பிராயத்திலிருந்தே வெளிப்படக் காட்டி வந்திருக்கிறான். இதுவும் அவளுக்கு உதயனிடமிருந்த அன்பைப் பெருக்கிவிட்டது.

ராய்மல் அனைத்தையும் புரிந்துகொண்டான். சிரித்தான்.

"நான் அழுவது உங்களுக்குச் சிரிப்பாகத்தானே இருக்கிறது?" என்று கேட்டு மேலும் விசும்பினாள் சிருங்காரி.

"நீ சண்டித்தனம் செய்கிறாய், நான் சிரிக்கிறேன்" என்றான் ராய்மல்.

"சண்டித்தனமா? நானா?"

"ஆம்! தமக்குப் புத்திரன் பிறக்கக்கூடாது என்ற பிரதிக்ஞையைக் காப்பாற்றுபவர் பெரிய தாத்தா சண்டன். அதே போல் நீயும் பிரதிக்ஞை எடுத்துக்கொண்டிருப்பதால் நீ சண்டி! சண்டி செய்வது சண்டித்தனம்தானே?"

மீரா பெருமூச்சு விட்டுக்கொண்டாள். ராய்மல் வலிந்து குறும்பை வரவழைத்துக்கொண்டு அசந்தர்ப்பமாக ஹாஸ்யம் செய்வதற்குக் காரணம் அவனுடைய மனத்தில் பட்டுள்ள ஊமைக் காயமே என்பதைப் புரிந்துகொண்டாள். அவளுக்குத்தான் இந்தப் பாடம் அற்றுபடியாயிற்றே! அவளது ஹாஸ்யப் பாடல்களுக்குப் பின்னால் எவ்வளவு ரத்தக் கண்ணீர் ஓடுகிறது என்பது அவளுக்குத்தானே தெரியும்?

சிருங்காரியின் குரல் கேட்டது. "உங்களிடம் சொன்னது என் தவறு! இவ்வளவு நாள் சொல்லாமலிருந்த பைத்தியக்காரி இப்போது ஏன் வாய்விட்டேன்? என் மனக்கொதிப்பு உங்களுக்கு வெறும் தமாஷாகத்தானே இருக்கிறது?" என்று சினந்து கூறிய அவள் அங்கிருந்து எழுந்து நடக்கலானாள்.

"நில் சிருங்காரி, நில்!" என்று ராய்மல் கூறியதையும் பொருட்படுத்தாமல் நடந்தாள்.

"நில் சிருங்காரி, நில்!" என்று மறுபடியும் குரல் கேட்டவுடன் அவளது கால்கள் தாமே நின்றன. இது சித்தியின் குரல் அல்லவா? சித்தியின் கட்டளை அல்லவா?

இனம் இனத்தோடே என்பது பல்வகையிலும் மெய்யாக, சிருங்காரதேவி மீராபாயிடம் எல்லையற்ற அன்பும் மரியாதையும் கொண்டிருந்தாள்.

அந்த வேளை சிற்றன்னை அங்கு வந்ததே அத்தம்பதிக்கு அதிசய ஆறுதலாயிருந்தது.

மீரா பேசினாள்: "சிருங்காரி, உனக்கு உன்னொருத்தியின் துன்பம்தான். யுவராணா ராய்மல்லோ என் துன்பம், மகாராணாவின் துன்பம், இந்த ராஜ்ய அரசியலின் துன்பம் இவ்வளவையும், இவற்றோடு இப்போது உன் துன்பத்தையும் சேர்த்துத் தாங்கிக் கொண்டிருக்கிறார். அவரைத் தப்பாக எடுத்துக்கொள்ளாதே. கண்ணீரின் எல்லையைக் கடந்துவிட்ட நிலையில் அவர் சிரிக்காமல் வேறென்ன செய்ய முடியும்?" என்றாள். தான் பெறாமலே பெற்ற பிள்ளையின் துயரை நினைத்து அவளது தொண்டை அடைத்தது.

சிருங்காரி தலைகுனிந்தாள்.

"சித்தி, உன்னிடம் அநுதாபத்துடனிருக்க நான் ஒருவன் உண்டு என்று முன்பு கூறினேன். இப்போது உனக்குத் தருகிற அநுதாபத்தைவிட அதிகமாகவே உன்னிடமிருந்து அநுதாபத்தைப் பெறவேண்டியவன் நான் என்று தோன்றுகிறதல்லவா?" என்று கேட்டுச் சிரித்தான் ராய்மல்.

"ஏன் சிரிக்கிறேன், புரிகிறதா?" என்று மீராவைக் கேட்டான், தொடர்ந்து.

மீராவுக்குப் புரியத்தான் இல்லை.

ராய்மல் விளக்கினான்: "நீ உலக பாசத்தையெல்லாம் விட்டுக் கண்ணனிடமே மனத்தை வைக்க ஆசைப்பட்டவள். அப்படியும் என் பாசம் உன்னை விடவில்லை. பிள்ளைகளிடம் உண்டாவதைவிடப் பேரப்பிள்ளைகளிடம்தான் அதிகப் பாசம் ஏற்படுவது வழக்கம். அப்பாவிடம் இருப்பதைவிட எத்தனை மடங்கு உதயனிடம் பாட்டிக்கு அபிமானம் இருக்கிறது, பாரேன்! இதே மாதிரி, எனக்குப் பிள்ளை பிறந்தால் உனக்கும் அவனிடம் என் மீதுள்ளதைவிட அதிகப் பாசம் உண்டாகும். அது உன் கண்ணனன்புக்குக் குறுக்கே தானே நிற்கும்? அப்படி நடக்காதவாறு சிருங்காரி உனக்கு உதவி செய்துவிட்டாள். 'ராட்டோர் ராஜகுமாரிகள் சதிசெய்து சீசோதியரைப் பழிவாங்குகிறார்கள்' என்று நான் நினைக்கக் கூடுமென இவள் சொன்னாளே, அது வாஸ்தவம்தானோ என்று நினைத்துத்தான் சிரித்தேன்" என்றான் ராய்மல்.

மீராவும் சிரிப்பை வரவழைத்துக்கொண்டாள்.

வரவழைத்துக்கொண்ட சிரிப்போடு, திடீரென உண்மையான மலர்ச்சியும் அவள் முகத்தில் பரவியது. "சிருங்காரி! நீ

பாய்ஜிராஜிடம் என்ன சபதம் செய்தாய்?" என்று ஆர்வமாகக் கேட்டாள்.

"நானும் சிம்மாதனம் ஏறுவதில்லை; என் பிள்ளையையும் சிம்மாதனத்தில் ஏற்றுவதில்லை என்று சபதம் செய்தேன்" என்றாள் சிருங்காரி.

"அதாவது பிள்ளை பெற்றுக்கொள்வதில்லை என்று அவர்களிடம் நீ சபதம் செய்தபோது சொல்லவில்லையே! பிள்ளை பிறந்தாலும் அவனுக்கு அரசுரிமை வேண்டாம் என்றுதானே உன் சபதத்தினால் ஏற்படுகிறது?" என்று உற்சாகமாக வினவினாள் மீரா.

வினாவுக்கு அவளது உற்சாகமே விடையும் ஆயிற்று!

சட்டென்று ஒரு நாணம் சிருங்காரதேவியையும், ஏன் ராய்மல்லையும்கூட சூழ்ந்துகொண்டது!

நாணம் விட்ட மீரா அவ்விருவரையும் பெருமிதத்துடன் பார்த்துவிட்டுத் தன் மாளிகை நோக்கி நடந்தாள். ஒரு தம்பதியைச் சேர்த்து வைத்த புண்ணியத்தினாலாவது தன் விரகம் தீராதா என்ற நம்பிக்கையுடன் இன்பமாக நடந்தாள்.

அந்தச் சந்நியாசினி பிறப்பித்த சிருங்காரத்தில் இரு இளம் உள்ளங்கள் கிளுகிளுத்தன.

**வி**ரகத்தில் மீராவை நரகவதை செய்ததுடன் கண்ணன் திருப்திப்பட்டுவிடவில்லை. உலக வாழ்விலும் அவளை மேலும் வதைக்கக் காலம் வந்துவிட்டது. கர்மக் கார்மேகம் பின் எப்படி இற்று மறையுமாம்?

அன்று கணகௌரி விரதம்.

ராஜஸ்தானத்தின் அரச போகமனைத்தும் சிறக்கப் பொலிகிற திருவிழா அது. பெண்டிருக்கே அதில் தலைமை ஸ்தானம். மேஷராசியில் சூரியன் பிரவேசிக்கும் சித்திரைப் பிறப்பில் கொண்டாடும் வசந்த நவராத்திரிக்கு உயிரூட்டுவது கண கௌரி விரதம். அப்போது அன்னபூரணியாக கௌரி தேவியை வழிபடுவார்கள்.

முதலில் தேவியின் ப்ரீதிக்காக மகாராணாவும் ராஜ குடும்பத்தினரும் ஜாகிர்தார்களும் காட்டுப் பன்றியை வேட்டையாடுவர். பிறகு சித்தோர் நகருக்கு வெளியே உள்ள ஒரு புனித நிலத்திலிருந்து கௌரியின் பதுமை செய்ய மண் கொண்டு வருவார்கள். கௌரியின் பிரதிமை பாங்குற அன்ன பூரணியாக அமைக்கப்படும். எஞ்சிய மண்ணைக் கொண்டு

அவளெதிரே சிறிய உருவத்தில் கப்பரை ஏந்திப் பிச்சை கேட்கும் சிவபெருமானையும் சமைப்பார்கள். பெண்மகிமைப் பண்டிகையாயிற்றே!

ராஜக்ருஹ மைதானத்தில் ஒரு சிறிய சதுரம் அகழ்வார்கள். அதில் தானியம் தூவித் தண்ணீர் வார்ப்பார்கள். வெயில் காயாவிடினும் பதமாக நெருப்பு மூட்டி வெப்பமும் அளிப்பார்கள். தானியத்திலிருந்து முளை கிளம்பியவுடன் கோலாகலம்தான்! இறைவனுக்குத் தேவி பிச்சையிட்டது போலவே, ஆடவர்களுக்குப் பெண்டிர் தானியங்களை வழங்க அவர்கள் அதனைத் தலைப்பாகையில் தரித்துக்கொள்வார்கள். கௌரிதேவி சிம்மாதனத்தில் பவனி புறப்படுவாள். பட்டும் பொன்னும் ரத்தினமும் அவளை ராணியாக அழகு செய்ய, மேவார் ராணியே அவளுக்கு நவரத்தின கசிதமான பிடிபோட்ட சாமரம் இரட்டி வருவாள். வேறு பல ராஜஸ்திரீகள் தங்கக் கைத்தடி தாங்கிக் கட்டியம் கூறிச் செல்ல, ராணாவும் குறுநில மன்னர் சூழத் தேவியுடன் ஊர்வலம் வருவார். ஊர்வலம் சித்தோரின் மகத்தான ஏரிக்கரையை அடையும்.

அங்கே தேவியின் சிம்மாதனத்தை இறக்கிவைத்து மக்கள் அனைவரும் வழிபடுவர். அதோடு ராணாவையும் ராணியையும் பொதுமக்களும் அவர்களோடு சேர்ந்து குறுநில மன்னரும் வணங்குவர். பிறகு தேவியைச் சுற்றிப் பெண்டிர், வளையமாகக் கைகோத்துக் கொண்டு ஆடிப்பாடுவர். அம்பிகைக்கு ராணியும் மற்ற ராஜ ஸ்திரீகளும் ஏரி நீரினால் திருமுழுக்காட்டுவார்கள்.

அதன் பின் ஏரியில் படகுப் போட்டி நடைபெறும். ராணா உட்பட அனைவரும் ஏரியோரமாகவே படகில் சென்று ஆங்காங்கே பிரதிஷ்டையாகியிருக்கும் தேவியின் பல பிம்பங்களை வழிபடுவார்கள். கடைசியில் முன்போலவே கோலாகலமாக கௌரியின் திருவுருவை அரண்மனைக்கு எடுத்துச் செல்வர். வாணவேடிக்கைகளுடன் விழா முடிவுறும்.

இந்த விழாவில் மீராவும் பங்குகொள்ள வேண்டுமென்று கும்பராணா விரும்பினார்:

"ராஜஸ்தானத்தின் நீண்ட கால சம்பிரதாயங்கள் சேர்ந்து உருவாக்கிய சுபநாள் இது. சிற்றரசர்களும் படைத் தலைவர்களும் பொதுமக்களும் தங்கள் மன்னனுக்கும் அரசிக்கும் தேவியின் திருமுன்னர் அன்புடன் காணிக்கை

தரும் தினம் இது. இன்று நீ கௌரியின் பவனியில் கலந்துகொண்டு ஏரிக்கரைக்கு வந்தால் நம் மரபுக்கே அது அழகு. உனக்கும் கௌரவம்" என்றார் மீராவிடம்.

"ஸ்வாமி, இதைப் பற்றி நீங்கள் இவ்வளவு சொல்ல வேண்டுமா? எத்தனை எதிர்ப்பையும் பொருட்படுத்தாமல், என்னுடைய விருப்பங்களையெல்லாம் நீங்கள் நிறைவேற்றித் தரவில்லையா? உங்களுடைய ஒரு விருப்பத்தை நான் நிறைவேற்றாமல் போவேனா? கட்டளையிட்டாலே போதும், கீழ்ப்படிவேனே!" என்று மதுரப் பணிவுடன் மீரா கூறினாள்.

"என் மீராவே மீரா!" என்று அகமகிழ்ந்தார் கும்பாஜி.

நகராக்கள் முழங்க நகர பவனி வந்தாள் கௌரிதேவி. மீராவின் தந்தக் கை அவளுக்குத் தங்கச் சாமரம் வீசும் அழகைக் கண்டு வானில் பறந்த வண்ணப் புறாக்களும் வெட்கின. அன்புருவான அரசி நாட்டின் மரபை மதித்து உடன் வருவதில் மக்களுக்கெல்லாம் அன்று சொல்லி முடியாத ஆனந்தம்.

உதயா அப்படியே மீராவை ஆரத் தழுவிக்கொண்டு விட்டாள். "இன்று போல் நீ என்றும் இருக்க தேவி அருளட்டும்" என்று சௌபாக்கியதேவி நாத் தழுதழுக்கக் கூறினாள். மாற்றுப் பெண்ணின் 'பைத்தியம்' தெளியத் தொடங்கியதில் அவளுக்கு அவ்வளவு திருப்தி.

ஆனால் பைத்தியம் பிடிக்கச் செய்வதுதானே பகவத் லீலை? ஒளியில் இருளைப் பரப்புவதுதானே இறைவனுக்குப் பிடித்த விளையாட்டு?

ஊர்வலம் ஏரிக்கரையை நெருங்குகையில் நிர்மலமாக வெயில் வீசிக்கொண்டிருந்த வானில் கருமேகங்கள் கூடின. ஆம், ஒளியில் இருள் சூழத் தொடங்கியது!

மீரா வானத்தைப் பார்த்தாள். அவளுடைய கருமச் சுமைக்கு உருவாயிருந்த கருமுகில் மெலியாமல் குலையாமல், கண்ணில் பட்டது!

கருமுகிலைக் கண்டபின் அவள் எப்படிக் கண்ணனை நினையாதிருக்க இயலும்? போதாததற்கு அதில் வான வில்! மயில் பீலியேதான்! பாழாகப் போகிற காற்று வேறு ஏரிக்கரை மூங்கில் புதரில் பாய்ந்து அம்மரத் தொளைகளிலிருந்து குழலிசையை உண்டாக்கி விட்டது. இதற்கெல்லாம் முத்தாய்ப் பாக நகராக்களின் ஒலியையும் மீறி இடி முழங்கியது. ஆம்,

கண்ணன்தான் சினந்து அதட்டுகிறான். "நீ உண்மையாகவே ராணாவின் ராணிதானா?" என்று மிரட்டுகிறான்.

மீராவின் இதயம் பதைத்தது. நாத் துடித்தது. உதடு உலர்ந்தது. கண்கள் படபடத்தன.

"இல்லை, இல்லை, நான் ராணாவின் ராணி இல்லை; அன்றும் இன்றும் என்றும் உன் அடியாள்தான், கிரிதரா! வந்தேன் ப்ரபு, உன்னிடம்!" என்று தன்னை மறந்து உரக்கவே மொழிந்தாள்.

சாமரத்தை அப்படியே போட்டாள். சூழ்ந்திருந்த பெண்களை யெல்லாம் இடித்துத் தள்ளிக்கொண்டு ஓடத் தொடங்கினாள். மேவார் மகாராணி சித்தோரின் ராஜவீதி களில் தன்னந்தனியளாகக் கிரிதரனின் ஆலயத்தை நோக்கி வெறி பிடித்தவள் போல் ஓடலானாள்.

ஊர்வலம் ஒரு கணம் ஸ்தம்பித்து நின்றது. கும்பராணா தன்னுடைய சமநிலை அவ்வளவையும் வரவழைத்துக் கொண்டார். குழுமியிருந்தவர்களைப் பார்த்துக் கம்பீரமாக, "ஊர்வலம் தொடரட்டும். தேவி வழிபாடு தடைப்படாமல் நடக்கட்டும். சிருங்கார தேவி சாமரம் இரட்டி வரட்டும்!" என்றார்.

மீராவின் இடத்தை ராய்மல்லின் பத்தினி பெற்றாள். விழா தொடர்ந்தது.

குழுமியிருந்தோரில் மெய்யடியார்களும் மற்ற சாதுக் களும் தங்களது தேவியான மீராஜியைத் தொடர்ந்தோடினர்.

ஏனைய அனைவர் உள்ளத்தின் அடி ஆழத்திலும் இனம் தெரியாத அச்சமும் துக்கமும் அருவருப்பும் வெட்கமும் நிறைந்திருந்தன.

ஏரிக்கரையில் தேவி வழிபாடு நடைபெற்றபோது, சித்தோருக்குள் கிரிதரன் அதைவிட விமரிசையாக வழிபாடு பெற்றுக்கொண்டிருந்தான்.

வீதியோடு சென்ற மீராவின் கானம், ஊர்வலத்தில் கலந்து கொள்ளாமல் வீட்டோடு இருந்த அனைவர் உள்ளத்தையும் சுண்டி இழுத்தது. அவர்கள் யாவரும் மீராவைத் தொடர்ந்தனர். மேன்மேலும் இதமான இதயங்கள் தன்னைச் சூழ, மீராவின் குற்ற உணர்ச்சியும் குன்றித் தேய்ந்தது; ஓட்டமும் நடையாயிற்று; தெருத் தெருவாகப் பஜனை செய்து கொண்டு மீரா நடந்தாள். கண்ணனை விட்டு இன்னொன்றைத் தேடிச் சென்றதை நினைத்துப் பாடினாள்:

'ராதாக்ருஷ்ணனின் நாமத்தையன்றி
ஓதாய் நாவே பிறபொருளை!
அக்காரமதனைத் திக்காரம் செய்து
கசக்கும் வேம்பினைச் சுவைத்திடுவாரோ?
கதிரவனொளிக்கு முதுகினைக் காட்டி
மின்மினி ஒளியை நண்ணுவரோ?
மாணிக்கம் வைரம் பூண மறுத்துக்
கண்ணாடி மணியில் அணி கொள்ளுவரோ?
உயிரை உடலுக்கீடாக்குவரோ?
உயிர்ஹரிக்(கு) ஈடாய் இன்னொன்றுண்டோ?'

என்று கானம் செய்தாள். கிரிதரனே தன் யஜமானன் என்பதை நினைந்து நினைந்து, "மீரா ப்ரபு கிரிதாரி" என்று திரும்பத் திரும்பப் பலுக்கிப் பாடினாள். இவள் முன் பாட, மற்றோரும் அதைப் பின்பாடிக் கலந்து கரைந்து கொண்டனர். வானமும் மந்திர புஷ்பமாக நீர் தெளித்தது. நீரிலும் ஹரிவண்ணத்திலும் ஒருசேர நனைந்தவாறு, அனைவரும் ஆலயம் சேர்ந்தனர்.

அவர்களில் காதை மறைத்து முண்டாசு கட்டிய ஓர் ஆண்டியும் இருந்தார். அவரது கண்களிலும் கதியிலும் பக்தியை விட அதிகமாக கள்ளத்தனமும் அச்சமும் நிறைந்திருந்தன. இவரை எங்கோ பார்த்திருக்கிறோமே!

## 27. நஞ்சும் அமுதும்

**கோ**யிலை அடைந்து கண்ணனைப் பார்த்ததும் மீரா கானவருஷம் பொழியலானாள்.

'கணகௌரி நோன்பின்று — கண்ணா!
கணவனாய் வந்தருள் செய்,மன்னா!
கனவிசையுடனே கொண்டல் குமுறுது
கனையிடிக்கிடையே மினுக்குது மின்னல்
தாதுரம்* அன்றிலும் மயிலும் கூவிட
ஆதுரமாய்க் குயில் அகவுதையே
திருநாள் இன்றும் திரும்பிப் பாராயோ?
திருவடியில் எனைப் பொருத்திக் கொள்ளாயோ?
மீராவின் ப்ரபு! கிரிதர நாகர!
ஊரார் போல் நான் சேர்வனோ பதியை?'

* 'தாதுரம்' : தவளை

ஊரார் யாரை இவளது பதியாக எண்ணினார்களோ அந்த ராணாவை விட்டு ஓடிவந்தே இப்படிப் பாடினாள் மீரா!

காதை மறைத்துத் தலைப்பாகை கட்டியிருந்த ஆண்டி மீராவிடம் வந்து வணங்கினர். ஏழையாகத் தோன்றிய அவர் கையில் முத்தாரம் ஒன்று மிளிர்ந்தது. அதன் மத்தியில் ஒரு பெரிய வைரமும் தொங்கட்டானாக ஒரு ஸ்படிகமும் ஒளி வீசின.

"தாயே, எனக்கு ஜபமாலையாக குருநாதன் கொடுத்த ஆரம் இது. இனி எனக்கு ஜபத்தால் அவசியம் இல்லை. இதை கிரிதாரிக்கு அணிவியுங்கள்" என்று மீராவைப் பணிவுடன் கேட்டுக்கொண்டார் அவர்.

வினையறியா மீரா மகிழ்ச்சியுடன் அதை வாங்கிக் கொண்டாள், "சாதுவே! அவன் முத்துப் பல்லைக் காட்டி நகைக்க ரொம்பவும் பிகு செய்துகொள்கிறான். அந்தக் குறையை இந்த முத்தாரம் தீர்த்துவிடும்" என்று சொல்லி மாலையை வாங்கிக் கொண்டாள். கிரிதரனுக்கு அதனை மண மாலைபோல் இட்டு அழகு பார்த்தாள்.

சாதுவோ இவள் அழகையே பார்த்துக்கொண்டு நின்றார்..... இல்லை; பார்த்துக்கொண்டே நிற்க விரும்பினாரே யன்றி அவரால் பார்க்க முடியவில்லை! ஏன்? மீராவின் பாவனம்தான் அவரது பாவ நோக்கைப் பொசுக்கியது! நோக்கை முதலில் பொசுக்கியது. அப்புறம் அச்சாதுவின் நோக்கத்தையே — மீராவைப் பாவ எண்ணத்துடன் நோக்கும் விருப்பத்தையுமே — பொசுக்கியது. இப்போதுதான் இது பொசுக்கலாகத் தீவிரம் பெற்றதெனினும், சாது அவ்வாலயத்துள் அடி வைத்ததிலிருந்தே மீராவின் பாவனம் அவரது துர்நோக்கத்தைச் சுடத் தொடங்கி விட்டது. அந்த துர்நோக்கம்! எழுதத் தகாதது! மீராவை வெறுமே பார்ப்பதோடு நில்லாமல்...வாசகர்களே புரிந்து கொள்வார்கள்! கண்ணனுக்குகந்த நடுநிசியில் ஆலயக் கண்ணனை மீரா மாதாவுடன் மட்டுமாக இருந்து தாம் ஏகாந்த தரிசனம் செய்ய விரும்புவதாகச் சொல்லிவிட்டு, அப் படுபாதக நோக்கத்தை அப்போது நிறைவேற்றிக் கொள்ளும் திட்டத்துடனாக்கும் அச்சாது (அசாது) வந்திருந்தார்(ன்). அப்போது மீராவுக்கே அளிக்கத்தான் அவன் முத்தாரம் கொணர்ந்ததும்! அது மீராவுக்குப் பரிசளிப்பாக மட்டுமல்ல; ராணாவைப் பரிகசித்து அவர் முகத்தில் கரி தீற்றுவதற்குத்தான். ஆயின் மீராவின் அருகு வந்ததும் பாபியின்

பாதக எண்ணம் எரிபடத் தொடங்கியதால்தான் அது கிரிதரன் கழுத்துக்குச் சென்றது.

இரவு முதற்ஜாமம் முடியுமளவிலேயே எல்லா அடியார்களும் பஜனை முடித்துப் புறப்பட, அசாதுவும் அவர்களோடு போய்ச் சேர்ந்தான்!

ஆனால் அம் மக்கட்கூட்டத்துடனேயே சேர்ந்து அவன் சென்றானில்லை. அவர்கள் பார்வையிலிருந்து எவ்வளவு சீக்கிரம் முடியுமோ அவ்வளவில் கழற்றிக்கொள்ளவே நினைத்த அவனுடைய பார்வையில் ஆலயப் பின்புறத்தி லிருந்த திட்டி வாசற்கதவு பட்டது. அதுவும் கண்ணனின் மாயச் சோதனைதான்! அசாது அக் கதவைத் திறந்து கொண்டே வெளியில் பிய்த்துக்கொண்டான்.

மீரா ஏகாந்தமாக ஏககாந்தனுடன் தங்கிவிட்டாள்.

நடுநிசி. கணகௌரி வைபவங்களும் கிரிதரன் ஆலய ஆர்ப்புக்களும் ஓய்ந்து இடியில்லாத, மென்மழையின் சீத சுருதியில் ஊர் உறங்கியது.

ராணா உறங்கவில்லை. அவமானத்தில் குமைந்த அவர் மீராவுக்குத் தம் மனத்தைத் திறந்து காட்டப் புறப்பட்டார்.

மீராவுக்கும் உறக்கம் கொள்ளவில்லை. ஆனால் அவள் இன்பச் சூழலில் சிக்கிக்கொண்டிருந்தாள். அன்று பிற்பகல் ஊர்வலத்தை விட்டு [illegible]வந்ததிலிருந்தே அவள் வெளி ஸ்மரணையைப் பெரு[illegible] இழந்து கண்ணனின்பத்தில் ஆழ்ந்திருந்தாள். அப்ப[illegible]

பரம ஆனந்தம் நிகழ்ந்தது! அவள் பிரார்த்தித்துக் கொண்டபடியே கண்ணன் அவளுடைய கணவனாக எழுந்தருளியிருந்தான்! அவனுக்காக அவள் அறுசுவை விருந்து தயார் செய்து பரிமாறிக்கொண்டிருந்தாள். ஏழுசுவை நிறைந்த கானத்தையும் பரிமாறினாள்.

'திரு அமுதே கொள்வாய்,
கிரிதர லாலனே! கீதவிலோலனே!

உவந்தே அடியாள் உபசரிக்கின்றேன்,
உதரம்தனில் இவ்வுண்டி கொள்வாய்!

ஐம்பத்தாறு வித அன்னமிட்டேன்;
முப்பத்தாறு வ்யஞ்சனம் வைத்தேன்,
அகில உயிர்க்(கு) உண(வு) ஈந்தருளும்
சகல நாயகா, மகிழ்ந்துண்பாய்!

திருமுகத்தெதிரே தாலமிட்டேன்
அறுசுவை உண்டியை அருத்திடுவேன்;
அரசபோகமதை அநுபவிப்பாய்
தரிசனப் பேறு சதா அளிப்பாய்!

கண்ணன் உண்ணவில்லை. கணகணவென்று நகைக்க மட்டும் நகைத்தாள். வெளியே ஆலயக் கதவின் மணிகளும் கணகண என்று ஒலித்தன. மீரா எழுந்து சென்று கதவைத் திறந்தாள்.

ராணாதான் அங்கு நின்றார். சப்பாத்திப் பழமாக அவர் முகம் சிவந்திருந்தது.

சூழ்நிலைதான் எப்பேர்ப்பட்ட மாற்றங்களை உண்டாக்கி விடுகிறது! நெருப்பில் நீராய் உருகிக் கொண்டிருக்கும் பாகு, தண்ணீரில் விட்டவுடன் கல்லிலும் கடினமாக இறுகி விடுகிறதல்லவா? உருகிய ராணாவும் இறுகும் நாள் இன்று வந்துவிட்டது!

"இங்கே யார் சிரித்தது?" என்று அவர் கேட்டபோது அவர் குரலில் விஷ ஜ்வாலையே வீசிற்று.

அமுதமும் ஆலகாலமும் உடன்பிறப்பல்லவா? அமுதம் ஒரே நொடியில் நஞ்சாகிவிடும் போலும்! அன்பு ராணா விஷ ஜ்வாலையைக் கக்கினார்!

"ஏன், கண்ணன் தவிர வேறு யார் அப்படிக் கீத கிண்கிணியாகச் சிரிக்க முடியும்? அதோ!" என்று கூறியவாறு மீரா திரும்பினாள்.

ஆனால் அந்தப் பொல்லாத கண்ணன் மறைந்து விட்டான். ஏனென்று கேட்க முடியுமா? வெண்சங்கத்தைச் சுட்டுச்சுட்டே தூய்மையாக்குபவன் அல்லவா அவன்?

விக்கிரகம் மட்டும் நின்றது. அதன் கழுத்தில் தொங்கிய முத்துமாலையை, வைரமும் ஸ்படிகமும் இழைத்த அதன் பதக்கத்தைக் கண்டவுடன் துணுக்குற்றார் கும்பாஜி.

ஆலயத்தின் பின்புறம் திறந்திருந்த திட்டிவாசற் கதவத்தை ஐயத்துடன் நோக்கிய ராணா, "யாருக்கு இங்கே பரிமாறியிருக்கிறது?" என்று உள்ளுக்குள்ளேயே சிக்கிக் கொள்ளும் குரலில் கேட்டார்.

திடீரென்று மென்மழை கனவருஷமாயிற்று. பெரிதாக மின்னல் வெட்ட இடி கர்ஜித்தது. உணர்வுகளின் இடியில் நடுநடுங்கிய மீரா அந்த மின்னொளியில் தன்னுடைய கர்ம

மேகத்தைப் பார்த்தாள்! ஓரளவு குறைந்திருந்தது! பாடம் பெற்ற மீரா மனத்தைத் திடம் செய்து கொண்டாள்.

அதோடு பச்சைக் குழந்தையாகிவிட்டாள்! நிர்மலமாக, "என் கிரிதரனுக்குத்தான். அவன் திருஅமுது கொள்ளும் அழகை நான் பார்க்கவொட்டாமல் சமயத்தில் வந்து... அது சரி, இந்த நடுநிசியில் வந்திருக்கிறீர்களே ஸ்வாமி, என்ன விஷயம்?" என்று கேட்டாள்.

அவள் குரலின் தூய்மை ராணாவின் நெஞ்சைப் பிசைந்தது. தலையை அழுத்திப் பிடித்துக்கொண்டார்.

'கண்ணன் நேரில் வருவதாவது? சிரிப்பதாவது? உண்பதாவது? இவள் ஏமாற்றுகிறாளா? இல்லை, பாவன மீரா ஏமாற்ற மாட்டாள். ஆனால் பச்சைக் குழந்தையான இவளே ஏமாறியிருக்கிறாளா?' — கும்பருக்குப் புரியவில்லை.

கீதகோவிந்த காவியத்தில் மனமாரத் திளைத்து, கண்ணன் இம்மண்ணுலகிலேயே ராதையோடு கூடியும் ஊடியும் லீலை புரிந்ததையெல்லாம் விமரிசனம் செய்தவர் ராணா. எனினும் அவரால் கண்ணன் மீராவுடன் நேருக்கு நேராக உரையாடுவதையும் உண்பதையும் ஏனோ இன்று நம்பத்தான் இயலவில்லை.

ஏனோ என்றால் ஏன் அப்படி? அது மனித உள்ளத்தின் ஒரு மர்மம். நாம் நாடக மேடையில் சீலையில் எழுதிய ஒரு தெருக்காட்சியைப் பார்ப்போம். நாடகம் நடக்குமளவும் அச்சீலை உண்மையான சாலை என்றே நம் புத்தி நம்பும். கலையுலகில் பிரவேசித்ததும் நாமே மனமார அவ நம்பிக்கையை விட்டு விடுவோம். Willing suspension of disbelief என்று இதைத்தான் சார்ல்ஸ் லாம்(ப்) சொல்கிறார். ஆயின், நாடகம் முடியட்டும்; அடுத்த கணமே அந்தச் சீலையைச் சாலையாகப் பார்க்க முடியாமல் போகும். கலை உலகும் தெய்விக உணர்வும் ஒன்றிய நிலையில் கும்பராணா, 'கீதகோவிந்த'த்தில் பிரவேசித்தார். அப்போது அவரால் அதில் வரும் கண்ணனின் காதல் சம்பவங்களை மனமார நம்ப முடிந்தது. ஆயினும் அதே சம்பவங்களைப் பிரத்தியட்சத்துடன் பொருத்திப் பார்க்க அவரால் இயலவில்லை.

மீராவுக்கு இடம் கொடுத்து ராஜ்யத்தின் பெயருக்கே, குலத்தின் பெருமைக்கே, குடியின் கியாதிக்கே இழுக்குத் தேடி வைத்து விட்டோமே என்ற குற்ற உணர்ச்சி ராணாவைப் பிடுங்கி எடுத்தது. மீரா குற்றவாளியா, தானே குற்றவாளியா

என்பது அவருக்குப் புரியவில்லை. தலையை அழுத்திய கையை எடுக்காமல் அப்படியே சமைந்திருந்தார்.

மீராவால் அவர் நிலையின் முழுப் பரிமாணத்தை உணர முடியவில்லை. அவளுடைய மனத்தில் பஞ்சுப் பொதிகளைப் போல், சிறுசிறு மேக மந்தைகள்போல் திட்டுத் திட்டாக ஏதேதோ எண்ணங்கள் தோன்றி வியாபித்தன. அமைதி தேடி, ரயிதாஸர் உபதேசித்த ராம மந்திரத்தை ஜபிக்கலானாள். அப்படியே கற்சிலையானாள்.

மீராவையும் உணவு பரிமாறியிருந்த உண்கலத்தையும் பார்த்தபோது ராணாவுக்கு அழுகைதான் வந்தது. 'ஐயோ இப்படியும் ஒருத்தி வெள்ளையாகப் பயமில்லாமல் நடுநிசியில் தனியே உட்கார்ந்திருக்கிறாளே!' என்று எண்ணினார். அந்தத் தாலத்தை வேறு யாரேனும் பார்த்துவிடப் போகிறார்களே என்ற அச்சம் அவருள் ஈட்டியாகப் பாய்ந்தது. 'மீரா எப்படி வேண்டுமானாலும் இருந்துவிட்டுப் போகட்டும். அவளை இப்படி மட்டும் உலகம் நினைத்துவிடக் கூடாது' என்று கருதி அந்தத் தாலத்தைக் கும்பரே அப்புறப்படுத்தினார். முன்னொருகால் தாம் அணிந்திருந்து, அப்புறம் மாளவ சுல்தான் கழுத்துக்குப் போய், தற்போது கிரிதாரியின் மேனியில் தொங்கிக் கொண்டிருந்த முத்து மாலை அவருக்கு மாளாத அவமான மூட்டியது. அதைக் கழற்றுவதற்காக அவர் விக்கிரகத்தை நெருங்கியபோது, மணிக்கதவம் கணகணத்தது.

ராய்மல் அவசர அவசரமாக ஆலயத்துள் நுழைந்த போது காற்றில் அலைந்த அவனது ஆடை பட்டுத்தான் கதவின் மணிகள் கிணுகிணுத்தன.

"அப்பா, நடக்கக் கூடாதது நடந்துவிட்டது!" என்றான் ராய்மல்.

ராணா தலையைப் பிடித்த கைகளை நீக்கவில்லை; ராய்மல்லை முகம் தூக்கிப் பார்க்கவும் இல்லை.

ராய்மல் பதற்றத்துடன் தொடர்ந்தான்:

"அப்பா, மாளவ சுல்தான் கில்ஜிக்கு நீங்கள் தயவு காட்டியது பாம்புக்குப் பால் வார்த்த காரியமாகிவிட்டது. அவன் நம் கோட்டையின் மர்மம் முழுதும் தெரிந்துகொண்டு இன்று இச் சித்தோர்க் கோட்டைக்குள்ளேயே ஆண்டி வேடத்தில் புகுந்து இஷ்டப்படி உளவுகள் பார்த்திருக்கிறான். இந்த நள்ளிரவில் சித்தோர்கர் பக்கத்தில் ஒரு சாது செல்வதைப் பார்த்து நம் வேவுகாரர்கள் ஐயுற்றிருக்கிறார்கள்.

அவன் காதை மறைத்த முண்டாசு விலகியபோது, அவன் காது குத்தப்படாத ஒரு முஸ்லீம் என்பது தெரிந்ததாம். அதையொட்டி அவன் கில்ஜி என்று கண்டுபிடிப்பதில் சிரமமிருக்கவில்லை. ஆனால் அவன் அத்தனை பேர் கண்ணிலும் மண்ணைத் தூவிவிட்டுக் குதிரையேறி நம் எல்லையைத் தாண்டிச் சென்றுவிட்டான். அப்பா, சொல்லவே நாத் தயங்குகிறது. அவன்... அவன்... ஆண்டி வேஷத்தில் இதோ இந்தக் கோயிலுக்குள்ளேயே வந்து சென்றிருப்பானோ என்று வேவுகாரர்களுக்குச் சந்தேகம்."

தலைக்குமேல் வெள்ளம் வந்தபின் சாண்போனால் என்ன, முழம் போனால் என்ன? எனவே கும்பர் பதற்றமின்றி, "சந்தேகமே வேண்டாம்" என்றார்.

"ஏன், என்ன சாட்சி?" என்று படபடத்தான் ராய்மல்.

கிரிதரநாகரனின் கண்டத்தில் தொங்கும் முத்துமாலையைச் சுட்டிக்காட்டினார் கும்பாஜி.

ராய்மல்லின் உள்ளங்காலிலிருந்து உச்சந்தலைவரை உள்ள அத்தனை அணுக்களும் ஆட்டம் கண்டன.

'ஆகா! இது கில்ஜிக்கு மகாராணா அளித்த பரிசல்லவா? 'நீங்கள் சந்திரப் பிறையைத் தொழுபவர்; சந்திரனுக்கு அடையாளமாக இதில் ஒரு வைரம். நாங்கள் சூரிய வம்சத்தினர். சூரியனுக்கு அடையாளமாக இதோ ஒரு ஸ்படிகம். மாலை போட்டு மணம் செய்துகொள்வதுபோல் நம் இரு ராஜ்யங்களும் இந்த மாலையால் ஒன்றுபடட்டும்' என்றுகூறிக் கும்பராணா முகமது கில்ஜியின் கழுத்தில் இந்த ஆரத்தை அணிவித்திருந்தார். அது எப்படி விக்கிரகத்தின் கழுத்தில் வந்தது?'

"என்ன புத்திசாலி ராய்மல்! உனக்குக்கூடப் புரியவில்லையா? உன் அப்பாவின் மண்டையில் செம்மையாக இரண்டு அடிகள் விழுந்துவிட்டன. முகம்மது கில்ஜி அவர்கள் கிரிதர நாகரனிடம் பெரும் பக்திகொண்டு உன் சித்திக்கு இதைப் பரிசாகத் தந்திருக்கிறார். நான் 'உதார'மாக இருந்தது ராஜ தர்மத்துக்கே விரோதம் என்று எடுத்துக்காட்டி என் மண்டையில் அடிப்பதற்கே முகம்மது கில்ஜி சித்தோருக்கு மீண்டும் வந்து, அதற்கு அடையாளமாக இதைக் கொடுத்துப் போயிருக்கிறார். என் 'உதார' குணத்தில் பதி தர்மத்தையும் நான் விட்டதை என் மண்டையில் அடித்துக் காட்டுவதற்காக

உன் சித்தி இதை கிரிதரனுக்குச் சூட்டியிருக்கிறாள்" என்றார் ராணா. அவரது உடலில் ஒரு கம்பனம் பரவியது.

ராய்மல் சித்தியைப் பார்த்தான்.

சித்தியோ உறுமி உறுமி இடித்து, பளிச்சுப் பளிச்சென்று மின்னிக் கொண்டிருக்கும் வானில் 'தன்' மேகத்தைப் பார்த்தாள். அது சிறிது சிறிதாய்க் குறையக் கண்டு தெளிவுற்று சித்தத்தை ராமன்பால் திருப்பினாள். பாராது பார்க்கும் பரமானுபவத்தில் மூழ்கினாள்.

"ராய்மல்! எனக்கு மூளை ஸ்தம்பித்து விட்டது. உடலும் செயலிழந்து விட்டது. இப்போது என் குற்றங்களை நீ எடுத்துக் காட்டினால்கூட அவற்றை நான் நன்றாகப் புரிந்துகொண்டு துடித்துப் பச்சாத்தாபப்பட முடியாது. ஆகையால் இப்போது என்னிடம் ஏதுமே பேசாதே. என்னை என் மாளிகைச் சயனத்துக்கு அழைத்துப் போ, அப்பனே! போகுமுன் அந்த முத்துமாலையைக் கழற்றியெடுத்துச் செல்" என்றார் ராணா.

புஜபல பராக்கிரமசாலியான தந்தை போர்க்களம் புகாமலே வைக்கோல் துரும்பாகி விட்டதைக் கண்டு ராய்மல்லின் நெஞ்சு குமுறியது. அவர் சொன்னவாறே முத்துமாலையைக் களைந்து விட்டு, குழந்தையைப் பிடித்துத் தூக்கிச் செல்வது போல் தந்தையை அணைத்து ஆலயத்தை விட்டுக் கிளம்பினான்.

**ம**றுநாள் காலை மகாராணாவின் திராணி மீண்டது. அதுவும் பயங்கரமாக மீண்டது. அவர் அழைத்திருந்தபடி பாய்ஜிராஜூம், ராஜபேடி உதாவும், யுவராணா ராய்மல்லும், பிரதான மந்திரியும், மற்ற அந்தரங்க ஆலோசகர்களும் வந்துவிட்டனர். சண்டன் மட்டும் இன்னும் வரவில்லை. அவர் ஏன் வரவில்லை என்பதை அறிந்துவர ராய்மல்லை அனுப்பினார் ராணா.

சண்டன் அவரது மாளிகையில் இருக்கவில்லை. எங்கெல்லாமோ தேடிய ராய்மல் துர்க்கா பரமேசுவரியின் சந்நிதியில் அவரைக் கண்டான்.

தேவியின் முன் நெடுஞ்சாண்கிடையாக விழுந்தெழுந்து பெரிய தாத்தாவை நமஸ்கரித்தான் ராய்மல்.

"தாத்தா...!" என்பதற்கு மேல் அவனால் எதுவும் பேச முடியவில்லை.

"நேற்று இரவே எனக்கும் சாரர்களிடமிருந்து செய்தி வந்துவிட்டது. ஸௌம்யா! நீ ஏதும் சொல்ல வேண்டியதில்லை! மிலேச்சன் நம் நகரக் கோயிலுள் புகுந்து விட்டான்; மகாராணியை வஞ்சித்து விட்டான். இது நம் குலத்துக்கே மக்த்தான களங்கம். இதற்குப் பிராயச்சித்தம் ஒரு பிராண தியாகம்தான். துர்க்காதேவியின் முன் நான் பிரயோபவேசம் செய்து உயிரை விடுவேன். மேவாரின் பெருமை அழியாதிருக்க காவு ஜீவனாகி மரணத்திலும் தேசப் பணி புரியும் பாக்கியத்தைப் பெறுவேன். என் பிராயோபவேசத்தின் காரணம் நம்மைத் தவிர யாருக்கும் தெரிய வேண்டாம்" என்று கூறி அந்த முதுபெரும் கிழவர் ஜகன்மாதாவின் முன்பு அப்படியே வடக்கிருந்து உண்ணா நோன்பு தொடங்கிவிட்டார்.

ராய்மல் வந்து ராணாவிடம் இதை அறிவித்ததுதான் தாமதம். ராணா தம் நிலையை முற்றும் இழந்துவிட்டார். மென்மையான நீர்த்துளிகள் சூழலின் கமுக்கத்தில் மின்னலாகப் பற்றி எரிந்து இடியைப் பிறப்பிக்க வில்லையா? இடியாகவே ஆகிவிட்டார் கும்பராணா.

"ஏன் இது யாருக்கும் தெரிய வேண்டாம்? தெரிந்தே தான் ஆகவேண்டும்? இந்த நாட்டில் சாமானியப் பிரஜைகள் செய்த குற்றத்துக்கெல்லாம் பகிரங்கமாகத் தண்டனை விதிக்கும் போது ராஜ குடும்பத்தினரின் விஷயம் என்பதால் இதை மட்டும் ஏன் மூடிவைக்க வேண்டும்? ராய்மல்! மேவாரின் அதிதேவதைக்கு இன்று உயிரோடுகிறது எனில் அதற்குக் காரணமாயுள்ளவர் காகா சண்டன்ஜி. அவரது உயிர்ப்பலி உத்தேசத்தையும் அதன் காரணத்தையும் மறைத்து ஒன்றும் ஆக வேண்டியதில்லை. ஆம், இனி ஒளிவு மறைவே வேண்டாம். இப்போதே நம்முடைய யானைப் படைத் தலைவனுக்கு உத்தரவு அனுப்பு. எதிரிக் கோட்டைகளைத் தாக்கும்போது யானைகளுக்கு எப்படிப் போதையேற்றி அவற்றின் துதிக்கையில் உலக்கைகளைக் கொடுத்து விரட்டுவோமோ, அப்படியே நூறு யானைகளை அனுப்பி உன் சித்தி பஜனை செய்துகொண்டிருக்கும் அந்தக் கிரிதரன் கோயிலை இடிக்கவேண்டும் என்று கஜபதிக்கு உத்தரவிடு, போ!"

ராய்மல் பேசாமல் நின்றான்.

"ராவல்ஜியின் கட்டளை!" என்று உறவுப் பசையற்ற குரலில் கும்பர் உறுமினார்.

சீதாதேவி தீக்குளிப்பதற்காக அக்கினி மூட்டிய லக்ஷ்மணனாக ராய்மல் அகன்றான்.

'இனி ஒளிவு மறைவே வேண்டாம்' என்று சொன்ன போதிலும் ராணாவின் உள்ளத்தில் இன்னும் ஏதோ ஒன்று ஒளிந்துகொண்டு அவரைச் சுரீரென்று சுட்டது. அதை வெளியிட அவருக்கு இப்போது வலிவு பிறக்கவில்லை. தம்முள்ளே குமைந்தார்.

**ம**தம் பிடித்த யானைகள் நெருங்கி வருவதைக் கண்டு ஆலயத்தில் கூடியிருந்த சாதுக்கள் அஞ்சி நடுங்கினார்கள்.

மீராவோ கர்ம முகிலைப் பார்த்து, அது மேலுமன்றோ குறைகிறது என்ற மகிழ்ச்சியில், தனது இயல்பான பொறுமை பின்னரும் பொங்கிப் பெருகத் தெளிவுடன் பேசினாள்: "கோயிலைக் கட்டிய மன்னர்தான் இடிக்கச் சொல்கிறார். கோயிலைக் கட்டும் எண்ணத்தையே அவருக்கு எழுப்பிய இளவரசர்தான் இதோ இடிக்க வருகிறார். அவர்களுக்கு அந்த உரிமை உண்டு. உங்களுக்கு உயிர்மேல் ஆசையிருந்தால் அது நியாயம். ஆசையுள்ளவர்கள் அதை மறைக்காமல் வெளியேறுங்கள். நான் என் கிரிதரனுடனேயே, அவனுக்கு ஆவது எனக்கும் ஆகட்டும் என்று இருப்பேன். அவன் தீனஜன பரிபாலகன், ஆபத்பாந்தவன் என்பதை உங்களில் பூரணமாக நம்புபவர்களும் இங்கிருக்கலாம்" என்று சொல்லிப் பாடினாள்.

'அறிந்ததில்லையோ, ஹரி
ஆபத்(து) உத்தாரணன்
ஆபத்(து) உத்தாரணன்
அனைத்துக்கும் காரணன்

வாரணம் அலறிட விரைந்துவந்(து) இன்னல் நி–
வாரணம் செய்தவன் நாரணன் அன்றோ?

துருபதன் செல்விக்குத் துகிலினையே அளித்து
கருவ துஃசாஸனனை வெருவச் செய்தானன்றோ?

சரணம் புகுந்திட்ட ப்ரஹ்லாதனுக்காய்
இரணியன் உரத்தைப் பிளந்தவன் அன்றோ?

அகலிகை மீது அடியிட்(டு) அவள் மா(சு)
அகலவே அருளிய பகவனும் அன்றோ?

ஏழைக் குசேலனுக்(கு) ஏழுலகு அறிய
வாழ்வினைத் தந்த வள்ளலும் அன்றோ?

நையும் மீரா ஹரி அன்பில் கைதானாள்;
கைகொடுக்க நாழிகை செய்குவானோ?'

ஆலயத்தை விட்டுப் பலர் வெளியேறினர். கிரிதரனுக்கு நேருவது தனக்கும் நேரட்டும் என்று மீரா இருந்ததுபோல், மீராவுக்கு நேருவது தங்களுக்கும் நேரட்டும் என்று சிலர் கோயிலினுள்ளேயே தங்கியிருந்தனர்.

ஆனால் எதுவுமே நேரவில்லை!

வாரணத்தை நாரணன் காத்த கதையை அந்த வாரணப் படை புரிந்துகொண்டு விட்டது போலும்! மத்த வெறியையும் மீறிய மதித் தெளிவுடன் யானைகள் ஆலயத்தின் வெளியே உலக்கைகளை எறிந்துவிட்டு, தும்பிக்கையை வளைத்துக் கும்பிட்டன. துதி செய்வதுபோல் துதிக்கை தூக்கிப் பிளிறி விட்டுத் திரும்பிப்போயின.

"என்ன! யானைகள் ஆலயத்தைத் தாக்க மறுத்தனவா?" என்றார் ராணா.

விந்தையிலும் விந்தையாக அவருக்கு ஆத்திரம் முன்னி லும் பெருகியது! மீரா மேலும் மேலும் தனக்குத் தோல்வி கொடுக்கிறாள் என்றே அவரது ஆண் நெஞ்சு கருதியது!

"இதோடு விட்டு விடு; அவள் சூனியக்காரி. ஏதோ மாய மந்திரம் செய்கிறாள். அவளைப் பகைத்துக்கொண்டால் நமக்குத்தான் உற்பாதம் வரும்" என்று சௌபாக்கியதேவியும் உதயாவும் முறையிட்டனர்.

"ஒரு நாளும் முடியாது. அவளுக்கு நான் பணிவதில்லை. என்னை எப்படியெல்லாம் மாயமந்திரம் கொண்டு அவளால் ஆட்டி வைக்க முடியுமோ அவ்வளவும் செய்யட்டும்; நானும் அதற்கு மந்திரத்தால் எதிர் செய்வேன். அதோடு மன்னனாக உலக ரீதியில் என்ன செய்ய வேண்டுமோ அவ்வளவும் செய்வேன்" என்று வெறிகொண்டு ஆர்ப்பரித்தார் கும்பர்.

பக்தி வெறி அவருக்குப் பூரணமாகப் பிடிப்பது அசாத்தியமாயிருந்தது. கோப வெறியோ முழு உருவுடன் அவரிடம் ஆவிர்ப்பவித்து ஆர்ப்பரித்தது! மீராவை மணந்ததிலிருந்து அவளிடம் அடைந்த ஏமாற்றங்களை யெல்லாம் தாமே அறியாமல் உள்மனத்தில் அடைத்து வைத்திருந்தார் போலும்! அது எரிமலையாக வெடித்து விட்டது!

"நம்முடைய மந்திரவாதியைக் கூப்பிடுங்கள். அந்தச் சூனியக்காரியிடம் போய் அவன் சர்ப்ப மந்திரம் ஜபித்துப் பாம்பை வரவழைத்து ஏவட்டும்" என்றார்.

அப்படியே மந்திரவாதியும் கூடையுடன் சென்றான். அவன் ஜபித்து முடித்ததும் கூடையைத் திறந்துகொண்டு பாம்பு வரவேண்டும்; அதை அவன் மீராவின் கழுத்தில் இட வேண்டும் என்பது ஏற்பாடு. மீராவுக்கு ராணா மரணத் தாலி கட்டுவதாக அதற்குப் பொருள்.

ஆனால் மந்திரவாதி உச்சாடனத்தை முடித்தும் கூடையில் எந்த அசைவும் இல்லை. முத்துக் கொத்துப் போல் துல்லியமாக விளங்கிய மீரா, 'ஆஹா, கர்ம முகில் அடியோடு இற்று மறைய இதோ அழைப்பிதழ்!' என்ற மகிழ்ச்சியில் தானாகவே கூடையைத் திறந்தாள்.

ஆனால், அதற்குள்ளோ பாம்பில்லை!

எவனுக்குப் பாம்பு அணையோ, எவனுக்குப் பாம்பு சிம்மாதனமோ, எவனுக்குப் பாம்பு குடையோ, எவன் காளியன் தலையில் களிநடம் புரிந்தானோ அவனே சாலக்கிராமமாகக் கூடையுள் பொலிந்தான்! ஆதியிலே குழந்தை மீரா கல்லைத் தொட்டாள்; அது சாலக்கிராம மாயிற்று. இன்று மீண்டும் விஷ நாகம் வர வேண்டிய இடத்தில் அந்த சாலக்கிராமமே வந்தது.

மந்திரவாதி மன்னிப்புக் கேட்டுக்கொண்டு ஓட்டம் பிடித்தான்.

"முடியாது, நான் ஒருபோதும் தோற்றுப்போக முடியாது!" என்றார் ராணா.

மனத்தில் ஆணவப் போராட்டத்துக்கு இடம் தந்த கும்பர் பேயுலாவும் காராக்கிருகம் ஒன்றில் மீராவை அடைத்தார். "இந்த நாட்டைக் கெடுக்க வந்த கிரிதரனையும் அதில் சிறை செய்யுங்கள்" என்று கூசாமல் முழங்கினார். கோயில் எழுப்பியவரே இன்று சிறை வைக்க உத்தரவிட்டார்! மீராவோ நவக் கிரகங்களையும் மீறிய தன் கர்மத்தை இப்போதேனும் குறைக்கத் தண்டனை வாங்கித் தந்து, அதோடு காராக்கிருகத்தையும் பிருந்தாவனமாக்கக் கண்ணன் விக்கிரக உருவில் வந்தானே என்று பூரித்தாள். கண்ணனும் கார்மேகத்தை மேலும் சிறிது கரைத்துக் காட்டினான்.

கண்ணனுடன் கூடிச் சிறையிலும் மீரா கூத்தாடியது ராணாவின் நெஞ்சத் தீயில் நெய்வார்த்தது. முன்பு **'சயனத்தில் ஈட்டி முனைகள்'** என்று மணவறையில் அவள் பாடி கிரிதரனுக்காக ஏங்கியது ராணாவின் உள்மனத்தில் ஈட்டியாகக் குத்தியது போலும். இன்று உண்மையிலேயே

ஈட்டிப் படுக்கை ஒன்றைத் தயாரித்து மீராவுக்கு அதனை அனுப்பி வைத்தார்.

"மேவார் அதிபரின் கட்டளையைப் பிரஜைகள் ஏற்க வேண்டியதுதானே! கொண்டுவாருங்கள் அந்த ஈட்டிப் படுக்கையை!" என்று வரவேற்றாள் மீரா. தன்னுடைய கர்ம முகிலில் குறையும் நீர்த்திவலைகளின் மெத்து மெத்தான மெத்தையாகவே அதை வரவேற்றாள்.

ஈட்டிப் படுக்கையில் மீரா சயனித்ததும் அது மலர்ப் பாயலாயிற்று! விரகதாபத்தில் இந்நாள்வரை உறக்கம் கண்டிராத மீரா, அன்று அப்புஷ்ப சயனத்தில்தான் நிம்மதியாக நித்திரை செய்தாள்!

"நாங்கள்தான் சொன்னோமே, அவள் ஒரு பேய்!" என்று கும்பரிடம் அன்னையும் தங்கையும் கூறினர். ஆனால் அவர்கள் வார்த்தையைக் கேட்கும் நிலையில் அவர் இல்லை.

மீராவிடமே அவ்விருவரும் சென்று அவளுடைய போக்கை விடும்படி நயமாகக் கேட்டுக்கொண்டனர். அவளோ பிடிவாதமாக, "நீங்கள் உங்கள் வழியே செல்வதை நான் தடுக்கவிலலை. என்னை ஏதும் செய்யுங்கள். ஆனால் நான் என் வழி மாற மாட்டேன். ஏனெனில் அது என் கையிலுள்ள விஷயமில்லை" என்றாள்.

எதிரிகள் தரப்பினர் போர்த் தரும வரம்பை மிகவும் மீறிவிட்டால் அப்போது மேவார்ப் படைகள் நச்சு தீற்றிய அம்புகளை அவர்கள்மீது எய்வதுண்டு. இதற்காக வைத்திருந்த காலசர்ப்ப விஷத்தை ஒரு கிண்ணத்தில் நிரப்பினார் ராணா. அதை மீராவிடம் கொண்டு கொடுக்குமாறு பணியாளருக்கு ஆக்ஞையிட்டார். ஒருவரும் அதற்குப் பணியவில்லை.

"வேண்டாம் பெண்பாவம்" என்று ராஜமாதாவும் ஊதாவும்கூட மன்றாடினர்.

ரத்தினாவை அழைத்தார் ராணா. "நான் என்ன சொன்னாலும் செய்வதாகப் பிரதிக்ஞை எடுத்துக் கொண்டவள் நீ! இந்தா, துர்க்காதேவியின் பிரசாதம் என்று சொல்லி, இந்த விஷக்கிண்ணத்தை மீராவிடம் கொடு" என்றார்.

ரத்தினாவின் நீட்டிய கரம் நடுங்கியது. ஆனால் தான் பூண்ட ராஜா விசுவாசப் பிரதிக்ஞையை நினைவுகொண்டு

மனத்தை இரும்பாக்கிக்கொண்டு, கையையும் நிலைப்படுத்திக் கொண்டாள்.

"ராவல்ஜி, உங்கள் ஆக்ஞையில் ஒரு பாதியைத்தான் நான் கேட்பேன். அதாவது நச்சுக் கிண்ணத்தை ராணி சாகேபாவிடம் தருவேன். ஆனால் அது துர்க்காப் பிரசாதம் என்று சொல்ல மாட்டேன். கொலைக் குற்றத்தோடு பொய் சொல்லும் குற்றமும் சேரவேண்டாம். நீங்கள் அனுப்பிய விஷம் என்று சொன்னாலே தேவி அதை அருந்திவிடுவார். ராணிஜி அன்பு யாகம் செய்பவர் மட்டுமல்ல; அவரே அதில் பலியும் ஆவார்" என்று கூறிய ரத்தினா விஷக் கிண்ணத்துடன் மீராவிடம் பறந்தாள்.

"நானாக உயிரை மாய்த்துக்கொள்ள மாட்டேன் என்பதால் ராவல்ஜிதான் எவ்வளவு கருணையுடன் என் விடுதலைக்கு மீண்டும் மீண்டும் முயல்கிறார்? விஷத்தை ஆனந்தமாகக் குடிப்பேன். ஆனால் என் ப்ரபுவுக்கு நிவேதியாமல் நான் ஒன்றைப் பருகுவது இதுவே முதல்முறை என்பதுதான் என் குறை" என்று கூறியபடி மீரா புத்தம் புதிய புஷ்பம் பனித்துளியை வரவேற்பது போல் மலர்ச்சியுடன் பேலாவை வாங்கிக்கொண்டாள்.

கிண்ணத்தின் விளிம்பு கிரிதரன் அதரத்தைத் திறந்து குவித்திருப்பதுபோலவே அவளுக்குத் தோன்றியது. அதிலிருந்த நஞ்சு கண்ணனின் திருவாய் அமுதமாகவே தோன்றியது. அவனது அதரம் பட்டுத்தான் அமுதுக்கு அவ்வளவு சுவை வந்திருக்கவேண்டும். அவனது அதரத்துக்கு எப்படி அவ்வளவு சுவை வந்தது தெரியுமா? துன்புற்றவரின் கண்ணீரை அவன் முத்தமிட்டுத் துடைப்பான்! துன்பத்தின் இனிமைதான் அவன் அதரத்தில் ஊறிவிட்டது!

உலகோரின் துயரை அநுபவிக்க ஆசைகொண்டு மீராவாக வந்த ராதா தேவி விஷத்தை ஆர்வமுறப் பருகினாள்.

அத்துயரை மாந்தருக்களிப்பதான அவர்களது கர்ம பாரத்தைத்தானே இவள் தன்னுடையதாக்கிக் கொள்ள விரும்பியதும், அதற்குக் கண்ண பெருமானும் ஒப்புதல் அளித்து அதனை முகிலுருவில் இவளுக்குக் காட்டியதும்? அன்றன்றும் இவள் உற்ற இன்னல்களால் சிறு இழை களாகவும், கடந்த சில நாள்களாக இவள்பட்ட பேரவதிகளால் சிறு கத்தைகளாகவும் கரைந்து வந்த அம்முகிலில் இன்னும் முக்காற்பங்குக்கு மேல் மீதமிருந்தது! இன்று அம் முக்கால்

பங்கு முகிலுமுள்ள நீர்த்திவலைகளையேதான் சுவாமி இறுக்கிப் பிழிந்து தனது அதர ரஸமாக இப்பேலாவில் அனுப்பியிருப்பானோ என்றுகூட மீராவுக்குள் ஒரு குதூகலக் கேள்வி! பருகினாள், உயிர் பறிக்கும் நஞ்சையே துயர் பறிக்கும் சஞ்ஜீவினியாக எண்ணி!

அவ்வளவுதான்! இவள் நிவேதிக்காவிடினும் அவனே விஷத்தை முற்றும் தனக்கென எடுத்துக்கொண்டு விட்டான்! அதிசயம் நிகழ்ந்தது! மீரா தொழும் கிரிதர விக்கிரகம் விஷச் சாயையில் அப்படியே நீல நிறமாயிற்று. அதேசமயத்தில் இந்த உற்பாதம் தாங்காமல் துவாரகாபுரியில் ரணசோட்நாதனாக உறையும் கண்ணனின் சந்நிதானக் கதவுகளும் தாமே மூடிக் கொண்டன — ராணாவின் உள்ளக் கதவு மூடியதன் பிரதிபலிப்பாகவோ?

பிருந்தாவனத்திலும் மதுராபுரியிலும் பல ஸம்ஹாரங்கள் செய்தவன் கண்ணன். குருக்ஷேத்திரத்தில் நடந்த மஹா ஸம்ஹாரத்தையும் அவனே பின்னிருந்து நடத்தி வைத்தான். துவாரகையில்தான் ஸம்ஹாரமென்பதை விட்டு, அவன் ஓர் அதிசய அஹிம்ஸா மன்னனாக விளங்கி, அதனாலேயே 'ரணசோட்நாத'னெனப் பெயர் கொண்டிருந்தது. அவன் காரணமாயிருந்த வதங்களெல்லாம் துஷ்ட நிக்ரஹத்தைச் சேர்ந்தவை. இன்று ராஜஸ்தான மன்னர் சிஷ்ட நிக்ரஹமாக தேவி மீராவை வதம் செய்ய விஷமனுப்பியபோது அதை ஏற்க உளம் கொண்ட பக்தரக்ஷகன் பிருந்தாவனத்திலும், வட மதுரையிலும், குருக்ஷேத்திரத்திலும் அவனுக்கிருந்த ஆலயங்களைவிட மகத்தான ஆலயம் துவாராபதியிலேயே இருந்ததால்தான் அதன் துவாரத்தை அடைத்துக் கொண்டான், போலும்!

மீரா சிரித்தாள். கண்ணனைப் பார்த்தே சிரித்தாள். கேலிச் சிரிப்புச் சிரித்தாள். "கறுப்பன் நீ விக்கிரஹத்திலாவது பொன்வண்ணம் கொண்டிருக்கிறாயே என்று நினைத்தேன். இங்கேயும் கறுப்பை அப்பிக்கொண்டாயா? வெட்கமாயில்லை? பண்டொரு நாள் உன் பெயரைச் சொல்லி ஆலகால விஷம் முழுதையும் உண்ட சிவபெருமான் கண்டம் மட்டுமே கறுத்தார். நீயோ ஒரு கிண்ணம் விஷத்தில் உடல் முழுதும் நீலமாகிவிட்டாயே!" என்றாள்.

உடனே விக்கிரகத்தின் நீலம் மாயமாக மறைந்து ஐயன் பொன்வண்ணச் சிலையாக நின்றான். பக்தைக்கு அருள்செய்த

*திறத்தை உலகுக்குக் காட்ட ஐயனது கழுத்தில் மட்டுமே நீலரேகை நின்றது.*

*கல்யாணப் பரிசமாகக் கண்ணன் அளித்த காற் சிலம்பைக் கட்டிக்கொண்டு மீரா பாடி ஆடினாள்:*

'சலங்கை கட்டி மீரா
குலுங்க ஆடுவாளே!

நாரணர் எனக்கு; நானவர் தமக்கு;
மீளா அடிமை ஆளானேன்!

நிருபன் அளித்தார் கருநாக விடம்;
பருகிய மீரா முறுவலித்தேன்!

உளறலென்(று) என்மொழியை உலகு சிரித்தது;
குலபாதகி என்றார் மாமி

மீராவின் ப்ரபு கிரிதர நாகரன்
சரண கமலம் சரண் கொண்டேன்.'

*இந்த அற்புத நிகழ்ச்சிக்கு ஒரு பாடல் போதுமா? மீரா மேலும் கானம் செய்தாள், மற்ற 'தண்டனை'களையும் சேர்ந்து!*

'அரவப்பெட்டியை அரையர் அனுப்பினார்
அறியா மீராவுக்கு;
திறந்துபார்த்துக் கண் விரித்து மகிழ்ந்தேன் —
சிறந்த சாலிக்ராமம்!

சூலசயனம் நிருபாலர் அனுப்பினார்
வாலை மீராவுக்கு;
மாலைவந்தது; நீளப்படுத்தேன் —
சோலை மலர்க்கணமாச்சு!

கிண்ணம் நச்சினை மன்னர் அனுப்பினார்
சின்னவள் மீராவுக்கு;
கண்ணன் அருளில் இன்னமுதாச்சுது —
உண்ண அமரமானேன்!

இடையூறனைத்தும் தடைசெய்வான் ப்ரபு,
அடைந்தார்க்கரிய துணைவன்;
படைபலம் அன்பாய் நடைபயின்றேன் நான்,
உடையவர்க் குரிமை யானேன்.'

*நஞ்சு தன்னுள் ஏன் புகவில்லை என்பதைப் புரிந்து கொண்டு நிருத்தமிட்டுப் பாடினாள் தேவி மீரா.*

'நந்தகுமாரனின் வண்ணமல்லாமல்
எந்த வண்ணமும் என்னுள் மேவாது

அமுத ரசத்தினை ஐயனின் வண்ணத்தில்
குமுகுமுவென்(று) உண்டு பேதலித்தேன்
யத்தனம் எத்தனை செய்து பார்த்தாலும்
சித்தபோதை இது தெளிவுதுண்டோ?

கிண்ணத்திலே விடம் மன்னர் அனுப்பினார்
அண்ணித்த(து) அமுதாய்; அண்ணலின் அருளே!
நீலக்கழல் நீராய் ஆலம் இனித்தது!
ஹரிநிறம் அன்றிப் பிறி(து) எனுள் புகுமோ?'

ஆட்டமும் பாட்டமும் ஓய்ந்தபின் ரத்தினாவைப் பார்த்தாள் மீராபாய்.

ரத்தினா விம்மிக்கொண்டிருந்தாள். "இந்தப் பாழும் உலகைவிட்டு உங்கள் உத்தம உயிர் இன்னும் போகவில்லையே! ராவல்ஜி இன்னும் எத்தனை அபசாரங்களுக்கு ஆளாவாரோ என்றுதான் அழுகிறேன்" என்று மீராவிடம் கூறிவிட்டு மீண்டும் விம்மினாள்.

மீராவின் கண்ணிலிருந்தும் நீர் வழிந்தது. கிரிதரனை உற்றுப் பார்த்தாள்.

"பிரபு, இந்த விஷத்தை அமுதாக்கினாய். ஆனால் ராணாஜியின் அமுத உள்ளத்தை விஷமாக்கி விட்டாயே! இது தருமமா?" என்று கேட்டாள்.

'ஸர்வதர்மான் பரித்யஜ்ய' குரு அதற்கு என்ன விடை தரப்போகிறான்? வாய் வார்த்தையில் தருவானா, மாயன்? வாழ்க்கை நிகழ்ச்சியாகவே திரைமறைவிலிருந்து எப்படி ஆட்டி வைத்து விடை தரப் போகிறான்?

## 28. களப்பலி

எந்த அடியாரின் வாழ்க்கையைப் பார்த்தாலும் அதில் சோதனையில்லாமல் இல்லை. அவர்களைக் கொடுமைப் படுத்துவதற்கென்றே தீயவர்கள் இருப்பார்கள். மீராவுக்கு ஏற்பட்ட சோதனையோ மகத்தானது. அவளைக் கொடுமைப் படுத்திய மகாராணா? அவர் தீயவரே அல்ல! அவளுக்காகப் பரமத் தியாகங்கள் புரிந்த அவரே பிற்பாடு கொடுமைப் படுத்தினார். மகான்கள் கொடியோர் இழைக்கும் கொடுமை தங்களைத் தொடுவதாகவே எண்ணமாட்டார்கள். மீராவும் அவ்வாறே கும்பாஜி இழைத்த தீமைகளைப் பொருட்படுத்த வில்லைதான். சுயச்சார்பான வேதனை அவளுக்கில்லை.

ஆயினும் ராணாவின் அன்பு இதயம் துவேஷமயமாயிற்றே என்று அவரைக் குறித்தே அவள் தாங்கவொணாத வேதனை அடைந்தாள். பக்திப் பயிரைப் பார்த்துப் பார்த்து விதைத்து வளர்த்தவர், தானியமணி முற்றும் சமயத்தில் வயலையே துவம்சம் செய்கிறாரே என்று துடியாகத் துடித்தாள். அன்பு மயமான சூழலில் விஷம் பரவி விட்டதே என்று மனம் பிளந்தாள்.

"கண்ணா!" என்று விண்ணை நோக்கினாள்!

நீர் நிறைந்த நயனத்திலும் கரும முகில் நன்கு நிழலாடவே செய்தது! கண்ணை வழித்து விட்டுக் கொண்டு பார்த்தாள்.

முக்காற்பங்கில் முக்காற்பங்குக்கும் மேல் மீதமிருந்தது! 'ஐயோ, இன்னும் என்னென்ன சோதனை வைத்திருக்கிறாய் ஐயா?' என்று அவள் ஆவி அலறியது.

மீராவை விஷம் ஏதும் செய்யாத அதிசயத்தையும் கண்ணனின் கண்டம் கறுப்பாகிய பேரதிசயத்தையும் மட்டுமே கும்பராணா கேட்டிருந்தால் ஒருகால் அவரது மனம் மாறி இருக்கக்கூடும். ஆயின், அப்படி அவர் மனமாற்றம் கொள்வது மாயக் கண்ணனின் திருஉள்ளமல்ல போலும்! காராக் கிருஹத்தில் நடந்த அற்புதத்தை ரத்தினா அவரிடம் தெரிவித்த அதே சமயத்தில் இன்னொரு செய்தியும் ராணாவுக்கு வந்தது: பிராயோபவேசம் புரிந்த சண்டனின் உயிர் துர்க்கா பரமேசுவரியிடம் ஐக்கியமாகிவிட்டது!

"மேவார் ராஜ்யத்தின் ஆன்மாவையே அந்தப் பெண் பேய் உறிஞ்சிவிட்டது!" என்று அலறினாள் சௌபாக்கிய தேவி.

"அண்ணா, சாம்ராஜ்யமே செத்த வீடாகிவிட்டது. எனக்கு பீதியாயிருக்கிறது!" என்று திகிலடைந்து கூவினாள் உதயா.

"இனி ஒரு கணமும் அவள் இந்த ராஜ்யத்தில் இருக்கக் கூடாது. இருக்கவும் மாட்டாள்" என்று குமுறினார் கும்பர்.

"அவளைக் கட்டுப்படுத்த என்னால் இயலவில்லை. நான் கையாலாகாதவன்! ஆகையால் அவளை ஒரேயடியாக அவிழ்த்து விட்டுவிடுகிறேன். இந்த நாட்டைவிட்டே அவள் போய்த் தொலையட்டும். ராய்மல், மீராவை நான் நாடு கடத்துகிறேன். போய் அவளிடம் தெரிவி" என்றார்.

ராய்மல்லுக்கு அது நியாயமாகவே பட்டது. 'சித்தி எங்கும் நிறை பரமனைப் பாடும் இசைக்குயில். அவளை இவ்வளவு நாட்கள் கூண்டில் அடைத்து வைத்ததே தவறு, இதோ இன்று கூட்டைத் திறந்து விடுவேன். நான் இழக்கிற அருமைச் சித்தி வெளிஉலகுக்கெல்லாம் ஒரு வரப்பிரசாத மாகட்டும்' என்று எண்ணியவாறு மீராவை அடைந்தான்.

நாடு கடத்தல் உத்தரவு அவளுக்கு மிக மிக மனோ ரஞ்சகமாகவே இருந்தது! துன்பங்களைப் பொறுத்துக் கொள்வதில் மீரா எவ்வளவுதான் பக்குவப்பட்டிருந்த போதிலும் சூழல் தலைகீழாக மாறியது அவளுக்குத் தாங்கொணாததாகத்தான் இருந்தது. கண்ணன் புகழைப் பேசிய கணவன், இப்போது இகழ்மொழி பேசியது அவள் காதில் உருக்கிய ஈயமாகப் பாய்ந்தது. 'கிரிதரன், கிரிதரன்' என்று அவர் உருகியதும், ஆலயம் எழுப்பியதும், விழா எடுத்ததும் எல்லாம் கனவாகத் தேய்ந்ததே என்று நொந்தாள் மீரா. எனவே தேசப் பிரஷ்டம் அவளுக்கு உற்சாகமே ஊட்டியது.

'ஆகா நானாகக் கிளம்பினால் அவருக்கு அவமானம் என்றுதான் இத்துணைக் காலம் கட்டுப்படுத்திக் கொண்டேன். ஆனால் அதுவே இப்போது அவர் கட்டளையாக வந்து விட்டது!' கூண்டிலிருந்து வெளியேறும் பட்சியாக மீரா உவகையில் பொங்கினாள். மலர மலரச் சிரித்தாள்.

"யுவராணா, முன்பு பேடகத்திலிருந்த என் கண்ணனுக்கு விடுதலை தந்து, கோயில் எழும்பக் காரணமானீர்கள். இப்போது எனக்கும் விடுதலை தந்துவிட்டீர்கள். இனி உலகெல்லாம் எனக்குக் கிருஷ்ணமயம்தான். இந்தப் பேருதவி செய்யும் உங்களுக்கு இந்தக் கிரிதர விக்கிரகத்தைப் பரிசு தருகிறேன். மலையாய் வரும் துன்பங்களையும் நீங்கள் சுண்டுவிரலில் தாங்கிக் கொள்ள கிரித்தாரி அருளட்டும்! என்னையும் என் கண்ணனையும் என்றும் தன்னவராகவே கொண்ட அன்பிதயர் நீங்களாதலால் அந்த அன்புக்கு இந்தத் தெய்விகக் காணிக்கை தருகிறேன்" என்று உணர்ச்சி பொங்கக் கூறினாள் மீரா.

உற்சாகமே உருவான ராய்மல் தலைகுனிந்து, மாலை மாலையாகக் கண்ணீர்விட்டவாறு சித்தியின் அடிகளில் விழுந்து, அவள் தந்த விக்கிரஹத்தை வாங்கிக் கொண்டான்.

*தனது பிரிய சகியான தம்புராவை நோக்கி இன்ப கானம் செய்தாள் மீரா:*

'ஆனந்த கோவிந்தன் அருங்குணமதனை
கானம் செய்வேன் சகியே!

மேவார் அதிபர் நாடு கடத்திடின்
மேவுதற்(கு) இடமுண்டு
சகத்துக்கதிபன் பகிஷ்கரித்திடிலோ
புகலிடம் பிரிதுமுண்டோ?

காதலில் ஊறிக் கருத்து அனைத்தும்
பேதலித்தவள் மீரா
சாமளனை வரனாயடைந்தே உயிர்
போமளவும் இசைப்பாள்.'

*சாட்சாத் கும்பராணாவே அப்போது அங்கு வந்து சேர்ந்து விட்டார்.*

*"மீரா, ராய்மல் கொண்டுவந்த உத்தரவை மாற்றி விட்டேன்" என்று கூறிவிட்டு வெறிபிடித்தவர்போல் கோரமாக நகைத்தார்.*

*"மெய்யாகவா அப்பா?" என்று ஆனந்தத்துடன் தந்தையை அணுகினான் ராய்மல், அவரது வெறியைக் கவனியாமல்.*

*"ஆமாம் ராய்மல். நீ அங்கிருந்து புறப்பட்டதுதான் தாமதம். சாரர்கள் மேலும் சுபச் சேதி கொண்டுவந்தார்கள். உன் அருமைச் சித்தியின் தயவில் சித்தோர்க் கோட்டையைத் தங்கு தடையின்றி ஆண்டி வேஷத்தில் பரிசீலித்துச் சூக்ஷ்மங்களைத் தெரிந்துகொண்டுவிட்ட கில்ஜி, நம் நாட்டின்மீதே படை எடுத்து வருகிறானாம். தனியாக வரவில்லை. நம்மிடம் தோற்றவுடன் சதிகார மஹ்பா, குஜராத் சுல்தான் குத்புதீனைச் சரண் புகுந்தானாம். இப்போது அந்தக் குத்புதீனையும், என் உதவியாலேயே அரசாட்சி பெற்ற நாகோர் ஷாம்ஸ்கானையும் சேர்த்துக்கொண்டு கில்ஜி பெரும்படைகளுடன் வருகிறானாம். ஊரறிய இதை முரசறைந்து சேனாவீரர் அனைவரையும், புதிதாகச் சேனையில் சேர விரும்புவோரையும் அழைக்க உத்தரவிட்டு விட்டேன்.*

*"இந்த நாடே விரைவில் முகம்மதியர் ஆட்சிக்கு வரப் போகும்போது, உன் சித்தி செய்த உபகாரத்துக்குப் பிரதியாக*

அவளே அதில் சுல்தானாவாகப் பதவி வகிக்கக் கூடும். அவளை நாடு கடத்த எனக்கேது உரிமை?"

மீராவுக்கு அந்தப் பழிச் சொல்லும் அமிருதமாயிற்று. ஆலமே அமுதானபின் எதுதான் இனிக்காது? ராணாவின் வெஞ்சினம் விஞ்சுவதேபோல் அந்தப் பொல்லா நேரத்திலும் மீராவுக்கு அடி அடிகளாக விஞ்சிக்கொண்டு பாடல் வர, பாடினாள் விந்தை மீரா!

'கெட்டவள் என நீர் திட்டியதும் எனக்குக்
கட்டிக் கரும்பாச்சுது—ஐயே!
கட்டிக் கரும்பாச்சுது!

வந்தனையாயினும் நிந்தனையாயினும்
சிந்தனை ஏதும் செய்யேன்
ஆர்வம் குன்றாமல் என் பார்வை விடாமல்—அ-
பூர்வ வழிசெல்வேன்!'

வழிஅறியாமல் வாழ்க்கைப் பாட்டையில்
விழித்துத் திரிந்ததுண்டு,
அருளெனும் அழகுத் தெருவில் புகுந்துபின்
குருவினைக் கண்டதுண்டு

உத்தம நாமம் சத்குரு அளித்தார்
சித்தமதில் பொதிந்தேன்;
தூஷணை செய்தனர் துர்ஜனர்—அதனைப்
பூஷணமாய் அணிந்தேன்

மனக்கொதிப்புற்றவர் மண்டிப் புகைந்திடும்
தணல் அடுப்பில் வீழ்ந்தார்;
அண்ணல் கிரிதரை அன்பு செய்மீரா
தண்கடலில் ஆழ்ந்தாள்.

கும்பராணா பயங்கரமாகச் சிரித்தார். கொலைவெறியே அவர் முகத்தில் கூத்தாடியது. மீராவின் கழுத்தைப் பிடித்து நெரிக்கவொட்டாமல் அவரை எது தடுத்தது என்பது அவருக்கே தெரியவில்லை. சுற்றுமுற்றும் பார்த்தார். கிரிதர விக்கிரகத்தின் பின்னிருந்த காமதேனு அவர் கண்ணைக் குத்தியது. அவரே ஜயபுரிச் சலவைக் கல்லால் செதுக்கி வைத்த சிலை அது. பித்தராக அந்தப் பசுப் பதுமையிடம் பாய்ந்தார் கும்பர். அதை அப்படியே உருட்டிப் புரட்டிக் கீழே தள்ளினார். எழிலார்ந்த சிலை துகள் துகளாகச் சிதறியது.

ராணாவும் உடைந்த சிலையாகத்தான் மீராவின் கண்ணுக்குத் தோன்றினார். ஆனால் அவள் மட்டும் உடையாமல் முழுமையுடனேயே இருந்தாள். பாறாங்கல்லும்

சுக்கல் சுக்கலாகச் சிதறியபோது மலர் நசுங்காமல் சொகசாக இருந்தது! இதில் விந்தையென்ன? மலை உச்சியிலிருந்து பாறாங்கல்லைத் தள்ளினால் அது தூளாக உடையும். ஆனால் அதே உச்சியிலிருந்து மலரைப் போட்டால் அது சிதைவதில்லையே! மலர் போன்ற மனம் படைத்தவர்களை எவ்வளவு கீழே தள்ளினாலும் அவர்கள் பாதிக்கப்படுவ தில்லை!

மீரா சாந்தமாக ராணாவி[illegible]ம் சொன்னாள்:

"முகம்மதிய [illegible] யத்தைவிடப் பெரியதோர் அரசுக்குச் சுல்தானாவாக[illegible] ஆசைப்படுகிறேன். நானாக நாட்டை விட்டு ஓட முடியாமல் தவிக்கையில் அதையே தங்கள் உத்தரவாக இளவரசர் கொண்டுவந்தார். அதேபோல் உலகையே விட்டுப் போக முடியாமல் நான் தவிக்கும் போதும்......"

மீரா பேசிக் கொண்டு போனாள். கும்பர் செவியைப் பொத்திக்கொண்டார்.

விம்மி விம்மிப் பேசினார்: "நான் காதைப் பொத்திக் கொண்டு பயன் என்ன! நீ உண்மைதான் சொன்னாய் மீரா! நீ இந்த உலகில் இருக்க இந்த உலகுக்குத் தகுதி இல்லை. உன் உயிரை எடுக்க எனக்கும் தகுதியில்லைபோல் இருக்கிறது. நான் கொடுத்தனுப்பிய விஷமே உன்னை ஒன்றும் செய்ய வில்லையே. உன்னை எப்படி இந்த உலகிலிருந்து பர லோகத்துக்கு அனுப்புவேன்?"

கும்பராணா சிந்தித்தார். சடேரென்று ஏதோ ஒன்று அவருக்குத் தோன்றியது.

"மீரா, யுத்தத்தில் வெற்றி பெறக் களப்பலி இடுவதுண்டு. சுல்தான்கள் படையெடுத்து வருகையில் உன்னை அப்படித் தரலாம். துர்க்காதேவியின் காரியமாதலால் அதற்குத் தடை நேராது. உன் விருப்பமும் நிறைவேறும். ஆனால் கொலையாளி களைக் கொண்டு உன்னைப் பலியிட மாட்டேன். நீயாகவே தான் உன் உயிரைப் போக்கிக்கொள்ள வேண்டும். கணகௌரி விரதத்தன்று வந்தாயே ஏரிக்கரைக்கு, அந்த ஏரியே தேவியின் ஸ்வரூபம் என்று கருதுவதுண்டு. அதில்...அதில்....."

ராணா பெண்பிள்ளையைப்போல் குலுங்கக் குலுங்க அழுது கொண்டே அகன்றார். அவர் பாதத்தில் ஏதோ இடறியது. குனிந்து பார்த்தார். மீராவுக்கு அவர் விஷமனுப்பிய கிண்ணம்! அது மட்டுமல்ல; அதியில் 'வாழ்க்கை இன்பத்தை

நிரப்பித் தருகிறேன்' என்று கூறி அவர் மீராவிடம் பழரசம் தந்ததும் இதே கிண்ணத்தில்தான்!

ராய்மல், சித்தியையும் தந்தையையும் பிரதட்சிணம் செய்து அவர்கள் பாதத்தில் சிரத்தை ஒற்றிக்கொண்டு அகன்றான்.

அவன் காராக்கிருகத்திலிருந்து மட்டும் புறப்படவில்லை. சித்தோரைவிட்டே, மேவார் ராஜ்யத்தைவிட்டே புறப்பட்டு விட்டான். அரசைப் பேரபாயம் சூழ்ந்திருக்கிறது என்பதை அவன் உணர்ந்தபோதிலும் மனமுடைந்து கிளம்பிவிட்டான். முன்பே மாளவத்துக்குச் சென்று போரிடமுடியாமல் தன்னைத்தானே தடுத்துக்கொண்டு அப்புறம் உள்ளுக்குள்ளே தவித்த அவனுக்கு இப்போது வலுவில் வீரலட்சுமியின் வரவேற்புக் கிடைத்தபோதிலும் அதை ஒதுக்கிவிட்டு இதயம் வெடிக்கப் புறப்பட்டு விட்டான். எங்கே போகிறோம் என்றே தெரியாமல் எங்கோ போகலானான்! அவதார காலத்தில் சிறையில் பிறந்தது மட்டுமின்றி, இப்போதும் சித்தியுடன் சிறை புகுந்து, அவளது அன்புப் பிரஸாதமாகத் தன்னை வந்தடைந்த கிரிதரனை அவனது ஆலயத்திலேயே வைத்து விட்டுப் புறப்பட்டான்.

மீராவும் பரிமள புஷ்பமாகப் புறப்பட்டாள். கண்ணன் சிலையை வணங்கி அவனுக்குச் சாத்தியிருந்த துளசி மாலையை எடுத்துத் தரித்துக்கொண்டாள். ஆதியில் பச்சிளம் பாலகியாக இருந்தபோது, வறுமைக்கு ஆசைப்பட்டுப் பாட்டனாரிடம் ஸாவண் தீஜ் தினத்தன்று கேட்டுப் பெற்ற முரட்டுத் தோம்புப் புடைவையைத் தளிர் மேனியில் சுற்றிக் கொண்டாள்.

இணைபிரியாத தன் தம்புராவையும் கரதாளத்தையும் எடுத்துக்கொண்டு, காலில் சலங்கை கட்டிக்கொண்டு, இன்ப நடமிட்டு ஏரிக்குப் புறப்பட்டாள். சித்தோர்ச் சாலைகளின் இருபுறமும் மக்கள் ஆச்சரியத்தைக் கண்களில் தேக்கிப் பார்த்திருந்தபோது, அந்தச் சாலைகளுக்கும் மேலாகச் சங்கீதத்திலேயே மிதந்துகொண்டு தன் நித்திய கலியாண நிலையத்தை நினைத்துச் சென்றாள்! பக்தி மார்க்கக் கலியாணமே யோக மார்க்க, ஞான மார்க்கக் கலியாணங் களாக இருப்பதைப் பேரானந்தத்துடன் பாடியவாறு சென்றாள்! ஏராளமான மக்களும் உடன் சென்றனர்.

'தடுப்பவர் யாருமில்லை—கண்ணன் அன்பு
மடுத்தனில் மூழ்கிட மங்கை புறப்பட்டேன்!

மானமும் வெட்கமும் குலமரியாதையும்
வானத்தில் விட்டேன்; ஞான 'வழி தொட்டேன்!

சிரத்தின் உச்சியில் மாளிகையாம்,
சிவந்த அன்பு அதன் திருக்கதவாம்,
சுழுமுனை முடிவினில் சூனியமாம்,
சூனியத்தில் ஐயன் பாயல் உண்டாம்!

அஞ்சு புலன்களும் குஞ்சங்களாம்,
எண்ணங்கள் வண்ணப் புஷ்பங்களாம்,
மணவறை நோக்கி மணமகள் நானே
தியான தாளமதைத் தட்டி ஏகினேன்!

சுபதினம் இன்றே சுழுமுனைப் பாயலில்
அபயனை அடைந்தே ஆனந்தம் காண்பேன்
*ராணா தன் வழி கோணாதே செல்க!*
நாணா(து) என்வழி நானும் செல்வேன்.'

*ராணாவைப்பற்றி அவள் பாடியது மக்களின் உணர்ச்சியைத் தட்டி எழுப்பியது. இயல்பாகவே வீர ரத்தம் ஓடப் பெற்ற அவர்கள், 'ராணா அவரது வழியிலேயே செல்ல வேண்டும்' என ராணி மீரா தேவி கூறியதால், ராணாவின் வழியில் தாங்களும் சென்று நாட்டைக் காக்க வேண்டியதே தங்கள் தலையாய கடமை என்று உணர்ந்தார்கள். சித்தோர் அரசுக்கு ஒருவேளை மீரா இழைத்திருக்கக்கூடிய தவற்றுக்குக் கழுவாயும் அவள் செய்துகொண்டுவிட்டாள் போலும்! அம்மக்களில் மிகப் பெரும்பாலோருக்கு, ராணா அவரது வழியில் செல்வதற்கு உறுதுணையாக அவரது பிரஜைகளாகிய தாங்கள் ராணுவத்தில் சேர்ந்து படையெடுப்பில் கலந்து கொள்ள வேண்டும் என்ற கடமையுணர்வை மீரா பாடிய ஒரே வரி தெய்வத்தின் ஆணையாகவே உசுப்பிவிட்டது! தொண்டு கிழவரிலிருந்து சின்னஞ்சிறுவர் வரை அவர்கள் அப்போதே சேநாபதியின் காரியாலயத்திற்கு விரைந்தனர்.*

*எஞ்சியோர் மீராவைத் தொடர்ந்தனர்.*

*ஆனால் அவள் எவரையும் கவனித்தாளில்லை. அவன் தவிர எவரும் அவளுக்கு வேண்டியதில்லை. பாடினாள்:*

'மாறிலா கிரிதாரியன்றி
வேறு யாரும் வேண்டேன்!

சங்கு சக்ரம் கதையும் பதுமம் துளசிமாலை தோகை
முழுதும் அழகு சொரியும் பொருளைக் கொழுநனாகக்
கொண்டேன்!

அன்னை தந்தை உற்றம் சுற்றம் நின்னையன்றி வேண்டேன்!
குடியின் மானம் அடித்துவிட்டேன்; அடக்கு வாருமில்லை!
அடியார் கணத்தை அண்டி அமர்ந்து கொடிய வெட்கம்
ஒழித்தேன்,
பவளம் முத்து நீத்துத் துளவம் அணிந்து கந்தை பூண்டேன்!
சித்தப் பாலைப் பிரேமை கொண்டு நித்தமும் கடைந்தேன்,
கண்ணனென்ற வெண்ணெய் கொண்டேன்; உண்டனர் பிறர்
நீர் மோர்!
பாதை காணாப் பேதைக்(கு) ஆசான் நாதன் பேரைத் தந்தார்,
இதயத்தீசன் நாமம்; ஆசான் பதம் பதித்து உய்ந்தேன்!
கண்ணின் நீரை வார்த்து வார்த்து, அன்புக் கொடி வளர்த்தேன்,
செழித்துக் கொடியும் பரவி மணக்க, பழுத்ததே பரஇன்பம்!
அன்பு வழியை அண்டர்க்குரைக்க ஜன்மம் கொண்ட மீரா
துன்பம் நிறைந்த உலக நிலையைக் கண்டு கண் சிவந்தேன்.'

விசுவ வேதனையையே சுயவேதனையாக்கிக் கொண்ட அவதாரமே மீரா. சுய வாழ்வில் அவள் பட்ட வேதனை யாவும் உலகோர் உற வேண்டிய வேதனையின் இறுக்கிப் பிழிந்த சாறுதான்! இன்றுதான் மனம் தெளிந்து இன்பமாய்ப் புறப்பட்டுச் சுயவேதனையை விட்ட மீரா புத்தி பூர்வமாக விசுவ வேதனையை அநுபவித்தது! 'தான் பெற்ற பக்தியின்பம் இவ்வையகம் பெறவில்லையே' என்று கண்சிவக்கக் கண்ணீர் விட்டாள்!

கோலோகத்திற்கே சென்று கோவிந்தனைக் கூடும் ஆனந்தத்துடன் ஏரி விளிம்பிலே வந்து பளிங்காக நின்றாள் மீரா. சின்னஞ்சிறு அலைகள் சிலும்பிக்கொண்டு வந்து அவளது பாதங்களைத் தொட்டன. யமுனாநதியில் முழுகிக் கண்ணனிடமே போகும் இன்பத்துடன் மீரா ஏரியில் புகுந்து சென்றுகொண்டே இருந்தாள்! பாதத்திலிருந்து முழங்கால், இடுப்பு, மார்பளவாகி அவளது மோவாயையும் தொட்டு விட்டது நீர்.

ஓர் அலை அடித்தது. மீரா நிலையின்றி ஆடினாள். அவள் நாசிக்குள் நீர் சுரீலென்று புகுந்தது. கபாலத்தின் உச்சியில் ஏதோ ஒரு வீணையின் புருடைகள் முறுக்கேறி ஜணார் என்று தெறித்தது! அந்த ஒலியும், வெள்ளத்தில் சிலம்பிய காற்சிலம்பு, சுரதாளம், தம்புரா இவற்றின் ஒலியும் ஒன்றாக லயித்தன. அவ்வளவு ஒலியும் லயித்துச் சேர்ந்து மோகனக் கண்ணனின் முரளி கானத்துக்குச் சுருதி கூட்டின. சுருதியின் நிறைவான நிசப்தத்தில் மீரா முங்கிவிட்டாள்.

மக்கள் பலர் ஏரிக்கரை வரை அவர்களது அந்த 'மாதாஜி'யைத் தொடர்ந்து வந்தாலும், மாதாஜிக்கோ மக்கள் வேண்டியிலலாமல் 'பிதாஜி' ஒருத்தன்தானே தேவைப் பட்டது? "தடுப்பவர் யாருமில்லை" என்று அவள் பாடியதும் தெய்வத்தின் பிறிதொரு ஆணையாகவே அவர்களது நெஞ்சில் பதிந்து விட்டது! எனவே அந்த அன்புப் பாண்டம் நீர்ப்பெருக்கில் முழுகி உலகவாழ்வுக்கே முழுக்குப் போட்டதை அவர்கள் செயலிழந்து வெறுமே பார்த்துக் கொண்டு மட்டுமே நின்றனர். மாதாஜி 'பித்ரு'லோகம் போய்விட்டாளெனக் கண்டு கொண்ட பின்னர் தேம்பி அழுதவாறு ஊருக்குத் திரும்பினர்.

## 29. காமதேனுவின் தாண்டவம்!

ராணா அதிக காலம் உள்ளம் குமுறித் துடிக்க அவகாச மில்லை. அவரது சித்தத்தையும் செயலையும் ஒருமுகமாகக் கவர்ந்திழுப்பதாக எதிரிகளின் நால்வகைப் படைகளும் வேக வேகமாகச் சித்தோரை நோக்கி வந்தன!

ராணாவின் வீர உணர்ச்சியையும் செயலாற்றலையும் சுண்டி எழுப்பியது ஒரு சம்பவம். நாகோரில் முகம்மதியர்கள் வேண்டுமென்றே ஆயிரக்கணக்கில் பசுக்களைப் பிடித்து அடைத்து வைத்தனர். சித்தோரைக் கைப்பற்றி, ராணாவைச் சிறைப்பிடித்து அழைத்துச்சென்று, அவரது ஹிந்து ரத்தத்தைக் கொதிக்கச் செய்வதற்காக அவரெதிரிலேயே அப்பசுக்களை வதைக்க எண்ணியிருந்தார்கள்.

தானே இந்த கோஹத்தி மாபாவத்துக்கு வித்திட்ட மாபாவி என்று ராணாவின் இதயம் தன்னையே தின்று கொண்டது. தான் காமதேனுவின் விக்கிரகத்தைக் கீழேபிடித்துத் தள்ளியதன் விளைவாகவே இப்படி ஓர் எண்ணம் எதிரிகளுக்கு ஏற்பட்டது என்று அவரது உள்ளம் கூவியது. அதற்குப்பின் கும்பர் காத்திருக்கவில்லை. உடலில் கடைசிச் சொட்டு ரத்தம் உள்ளவரையில், நாசியில் கடைசி மூச்சு இழையோடும் வரையில், சித்தத்தில் கடைசி எண்ணம் தேய்கிற வரையில் போராடுவது, போரில் தோற்றால் நாடு திரும்பாமல் சாவது என்று பிரதிக்ஞை செய்துகொண்டு காவி உடை உடுத்தார். மீரா ஜோம்புத்துணி கட்டிக்கொண்டு ஒரு வகையில் சந்நியாசினியாகப் புறப்பட்டாள். ராணா இன்னொரு விதத்தில் சந்நியாசியாகப் புறப்பட்டுவிட்டார்!

ராஜபுதனத்தில் வீரம் வெள்ளமெடுத்தால் உலகையே புரட்டிவிடும் என்பதற்குச் சரித்திரம் கூறும் சான்றாக அமைந்தது யுத்தம். எண்ணிக்கையை வைத்து நடத்திய போரல்ல அது; எண்ணத்தின் அடர்த்தியை வைத்து நடத்திய போர்!

ராஜஸ்தானியரின் சுதந்திர எண்ணமே இறுதியில் வென்றது. சத்தியம் வென்றது, தர்மம் வென்றது.

வாழ்க்கையில் தோற்றுப்போனபோதிலும் போர்க் களத்தில் வென்ற கும்பராணா, ஓட்டம் பிடிக்கும் படைகளைத் தொடர்ந்தார். நாகோரை அடைந்தார். எந்த இடத்தில் பசுக்களை ஒன்றுகூட்டி வதைக்கப் பகைவர் உத்தேசித்திருந் தனரோ, அதே இடத்தில் அவற்றை ஆராதனை செய்வதற்காக ஆயத்தம் தொடங்கினார்.

அந்தப் பசுக்களின் முன்வந்து நின்றபோது அவரது கண்கள் மடையாகத் திறந்தன. 'மக்கள் உண்பதற்காக வயலில் உழுபவை மாடுகள். மக்கள் உண்பதுபோக எஞ்சிய வைக்கோலைத் தின்னும் தியாகிகள் அவை. அந்த வைக்கோலையும் அமுதப் பாலாக்கித் தம் கன்றுகளுக்கு மட்டுமின்றி மாந்தருக்கும் பொழியும் உத்தம ஜீவன்கள் அல்லவோ பசுக்கள்? அவற்றை விடப் பூஜைக்குரியன எவை உண்டு? ஆகா, இந்த ஆயிரமாயிரம் பசுக்களில் ஒவ்வொன்றை யும் தனித்தனியாக அர்ச்சிக்க இயலவில்லையே?" என்று ஆதங்கமடைந்தது ராணாவின் இதயம்.

அவ்வளவு பசுக்களையும் சித்தத்தால் ஒன்றாக்கி மனக்கோயிலில் வைத்துப் பூஜித்தார் கும்பர். நன்றியும் அன்பும் நிறைந்த அவரது உள்ள அரங்கான சூக்ஷ்ம லோகத்தில் எல்லாப் பசுக்களுக்கும் ஆன்மாவாகிய காமதேனுவே கம்பீரமாகத் தரிசனம் தந்தாள். அவளுக்குப் பக்கத்தில்...

ஆம், காமதேனுவின் பக்கலில் அக்காமதேனுவுக்கும் ராணியாக மீராவே நின்றாள். பக்கலில் நின்றாளா? அப் பசுவாகவே நின்றாளா?

'காமதேனு வேறு; மீரா வேறா?' ராணாவுக்குத் தெளிவு பிறந்தது. பசு-பசுபதி, கோ-கோபாலன் என்று சித்தாந்த வித்துவான்கள் விரித்து விளக்கிக் கேட்டிருக்கிறார் கும்பராணா. ஆனால் இப்போது வீரலக்ஷ்மியும் காருண்ய லக்ஷ்மியும் சேர்ந்து அவருக்கு மாலையிட்ட முகூர்த்த

விசேஷமோ என்னவோ? அதன் பொருள் அநுபவ பூர்வமாகவே புரிந்துவிட்டது. 'கோ என்றால் ஜீவாத்மா; கோபாலன் பரமாத்மா' என்ற விளக்கம் ஒருபுறம் இருக்கட்டும்! அன்பு இருக்க வேண்டுமாயின் அன்பு செய்பவர் என்றும், அன்பு பெறுபவர் என்றும் இருவர் இருக்கவேண்டும். அன்பு புரிவதே கோ — அதுவே மீரா! அன்பு பெறுபவனே கோபாலன்.

அதுதான் எப்பேர்ப்பட்ட பரமசுப வேளையோ? மகாராணா ஒரு மகா உண்மையை உணர்ந்துவிட்டார்! உறுத்தும் வைக்கோலை உண்டு பாலாக்கும் பசுப்போல் உலகத் துயரனைத்தையும் ருசித்து உண்டு பாலான பாவாக்கிப் பொழிந்தவள் மீரா என உணர்ந்துவிட்டார்.

பாலை மட்டுமின்றி வேண்டிய எப்பொருளையும் சுரப்பது சுரபியான காமதேனு. மீராவின் பக்திப் பாக்களும் அவ்வாறே விரும்பிய சகலமும் தரவல்லது. அதாவது பசு குலத்துக்குக் காமதேனு மாதா போலவே மானுட குலத்துக்கென அவதரித்து மறைந்த காமதேனுவே மீரா. அவதார ரகசியத்தை ராணா புரிந்து கொண்டுவிட்டார்.

ஆம், கும்பராணாவுக்கு வாழ்க்கையின் மகத்தான கணம் வாய்த்து விட்டது! வாழ்வை ஒரே வெறுமையாக்கிக் கொண்டவுடன் அங்கே நீள நெடுகச் சத்தியம் வந்து தரிசனம் தந்துவிட்டது! மீரா யார் என்ற மர்மத்தை அறிந்தார்! தாம் அறிந்த ரகசியம் உண்மைதானா என்று இன்னொருவரைக் கேட்டு ஸ்திரப்படுத்திக் கொள்ள முடியாமல் போயிற்று. அவர் கேட்டாலும்கூட அதைத் தெரிந்துகொண்டு உறுதிப்படுத்தும் ஞானியர் இவ்வுலகில் இருக்க முடியுமா?

'நிச்சயமாக ஒரு ஜீவனுக்கு அந்த உண்மை தெரியும். தான் ரகசியத்தை உடைக்காமல் வெறுமே அந்த ஜீவனின் எதிரில் சென்று நின்றாலே அந்த ஜீவன் இவ்விஷயத்தில் தனக்கு உறுதி உண்டாக்கிவிடும்' என்று ராணாவின் உள்மனம் கூறிற்று.

காமதேனுதான் அந்த ஜீவன்.

உண்மைக் காமதேனு கோலோகத்தில் இருப்பதாகக் கூறப்பட்டாலும் இந்த ஸ்தூல உலகில் ராஜஸ்தானத்தைப் பொறுத்த மட்டில் ஏகலிங்கர் ஆலயத்தில்தானே ஒரு காமதேனு வாழ்ந்தாள்? மீராவை மணந்து அவர் மேவார்

வரும் வழியில் இந்த காமதேனுவும் மீராவும் ஒட்டி உறவாடினரே!

வெற்றி வீரரான கும்பராணா சித்தோரில் விஜயபவனி வருமுன், நேரே ஏகலிங்கர் ஆலயத்துக்கு விரைந்தார்.

முன்பு மீராவுடன் தாம் அங்கு வந்ததும், அப்போது காமதேனு கதறியதும், மீரா அதை நோக்கி ஓடி மூர்ச்சித்ததும் ராணாவின் நினைவரங்கில் நிழலாடின. இனம் தெரியாத வேதனையுடன் ஆலயத்துள் நுழைந்தார்.

வேதனையவ்வளவும் அக்கினியிலிட்ட பஞ்சாக எரியும் ஆனந்தம் ஆலயத்துக்குள் விளைந்தது.

ஏகலிங்கர் ஆலயக் காமதேனுவை ராணா நோக்கியதும் அந்தப் பசு ஆனந்த மயமாக ஹாஹாகாரம் செய்துகொண்டு சுற்றிச் சுற்றி நிருத்தமிட்டது. கூடியிருந்தவர்களுக்கெல்லாம் அது பேராச்சரியமாக இருந்தது.

கோலோகத்திலே கண்ணபெருமான் காமதேனுவிடம் சொன்னான்: "நீ ஆனந்தத் தாண்டவமாடும் நாள் வரும் என்று சொன்னேனே, மெய்யாயிற்று பார்த்தாயா?"

இங்கே பூலோகத்திலே ராணாவால் இன்பச் சுமையைத் தாங்க முடியவில்லை. 'தன்னோடு பல்லாண்டு வாழ்ந்த மீரா யாரென்பது நிச்சயமாகிவிட்டது! ஆகா, அப்படிப்பட்டவளுடன் அத்துணை ஆண்டுகள் சேர்ந்து வாழ என்ன பாக்கியம் செய்திருந்தேனோ? ஆனால் அவளைத் துன்புறுத்தியவனும் நானேயல்லவா? இல்லை, இல்லை! தான் எவ்வளவு பாடுபட்டுத் துயருக்கு மேல் துயரை அவளுக்கு அனுப்பி வைத்த போதிலும் அவள் துயரப்படவே யில்லை. அவளை யாராலும் துன்புறுத்த முடியாது. அப்படியானால் அமர மீராவைக் கொல்லமட்டும் முடியுமா என்ன? மீராவை நான் நிச்சயமாகச் கொல்லவில்லை. அவள் உயிர்வாழ்ந்து கொண்டேதான் இருக்கிறாள். உலக தர்மத்துக்கு உறைவிடமான மேவாரை விட்டு, அவள் கண்ணனின் தர்மத்துக்கு, அதாவது 'ஸர்வதர்மான் பரித்யஜ்ய'வுக்கு உறைவிடமான பிருந்தாவனத்துக்குப் போய்விட்டாள். அவ்வளவுதான்!'

தன் எண்ணத்தை ஸ்திரப்படுத்திக்கொள்ளக் காமதேனுவை நோக்கினார் கும்பாஜி. அது இன்னமும் குதித்துக் கூத்தாடியது.

"காமதேனு தாண்டவம் செய்தாள்" என்பதையே திரும்பத் திரும்ப வாய்விட்டுக் கூறியபடி ராணா புறப்பட்டார்.

சித்தோர் நகர பவனியின்போதும் பிற்பாடு சபா மண்டபத்துக்கு வருகை தந்து சிம்மாதனத்தில் ஆரோகணித்த பின்னரும் இதையே மீண்டும் மீண்டும் கூறிச் சிரித்துக் கொண்டிருந்தார் கும்பாஜி ராணா.

அவையில் கூடியிருந்த சாரணர் எனப்படும் கவிஞர்களில் ஒருவர் உடனே ஆசுகவி பாடினார்:

'நாகோரில் கோரக் கோவதைப் பேச்செழ
காமதேனு கதிகலங்கி விட்டாள்!
முப்பத்து முக்கோடி மூவாதவரும்
தந்த தண்ணீர் புல்லைத் தொட மறுத்தாள்!

முகம்மதியரை முகம் கொண்ட எம் மன்னர்
பசுக்கணமதனைப் பாலித்தார்;
சங்கரன் சந்நிதி சேரும் சீருடைக்
காமதேனு களிநடம் செய்தாள்!'

அவ்வளவுதான்! கும்பராணா, 'காமதேனு தாண்டவம் செய்தாள்' என்று சொல்வதை நிறுத்திக்கொண்டார். மாறாக, "மீராவை அழைத்து வாருங்கள்" என்று திரும்பத் திரும்பக் கூறலானார்.

ஒன்று மாற்றி ஒன்றாகக் குமுறும் பல உணர்ச்சிகளிலும் நிகழ்ச்சிகளிலும் அலைப்புண்டதால் மகாராணாவின் ஈடிணையற்ற பேரறிவு ஓரளவு பேதலித்து விட்டது என்ற இனிப்பற்ற உண்மையை நாடும் நகரமும் புரிந்துகொண்டன.

## 30. பிருந்தாவனம்

**சி**த்தோர் ஏரியில் முழுகிய மீரா மீண்டும் கண் விழித்தது அவளுக்கே அதிசயம்தான்! 'அதிசயமென்ன? ஏரியில் விழுந்தால் அதோடு ஆன்மாவே செத்துவிடுமா என்ன? கண்ணனின் உலகில் நான் மீண்டும் கண் விழித்துத்தானே ஆக வேண்டும்?'

மீராவுக்குத் தான் கண்ணனின் உலகில் இல்லை என்று புரிந்தது. எப்படிப் புரிந்ததெனில் அவளது விழித்த கண்ணுக்கெதிரே, நேர் மேலே, ஆகாயத்தில் அந்தப்

பொல்லாத கார்முகில் இன்னமும் அரைப் பங்குக்கு மேல் சொஸ்தமாக இருந்துகொண்டு அவளுக்குத் தரிசனம் தந்ததால்தான்! மண்ணுலக மண்ணிலும் நீரிலும் வெளியிலும் காற்றிலும்தான் கிடக்கிறோம் என்றும் அவளுக்குப் புரிந்தது. ஏதோ ஒரு நீர் நிலையின் கரையில் கிடக்கிறாள். அந்த நீர்நிலை ஏரியல்ல, ஒரு நதியே என்றும் புரிந்தது.

'ஓகோ, சித்தோர் ஏரியும்கூட என்னை வைத்துக் கொள்ள மாட்டேன் என்று பகிஷ்காரம் செய்துவிட்டதோ? ஆம், இது சித்தோர் ஏரியில்லைதான். இது...இது...' மீராவின் இதயம் துள்ளியது. 'அப்படியும் இருக்க முடியுமா? நான் யமுனைக் கரையிலா இருக்கிறேன்? பிருந்தாவனத்திலா இருக்கிறேன்? இங்கு எப்படி வந்தேன்? அநாவசியக் கேள்வி! **அவன்** செயல்தான்!'

பிருந்தாவனத்து மண்ணில் புரண்டு புரண்டு யமுனைக்குள் வந்து விழுந்தாள் மீரா. பிருந்தாவனத்து நீரின் ஒவ்வொரு துளியினுள்ளும், மண்ணின் ஒவ்வொரு துகளினுள்ளும் கிருஷ்ண பரமாத்மாவைக் கண்டாள். இதே பிருந்தாவனத்தில் கண்ணனின் வயிற்றுக்குள் அண்டங்களைக் கண்டாள் யசோதை. மீராவோ அண்டத்தின் ஒவ்வோர் அணுவுக்குள்ளும் கண்ணனைக் கண்டாள்! சாகரத்தினுள் நீர்த்துளியைக் கண்டாள் யசோதைத்தாய். நீர்த் துளியினுள் சாகரத்தைக் கண்டாள் மீராபாய். கண்ணன் என்ற கடலில் மீரா கானப் படகில் சஞ்சரித்த நாட்களுக்கு மீதாக, இப்போது படகுக்குள்ளேயே கடல் முழுவதும் முழுகிவிட்டது!

**பி**ருந்தாவனத்தில் மீரா கழித்த ஆனந்த நாட்களுக்கு ஈடேது, இணையேது? எளிய உள்ளத்து ஆயச் சிறுவர்களுடன் அவள் ஆயர்பாடித் தெருவெல்லாம் புரண்டு, பாடி பஜனை செய்து இன்புற்றாள். மேவார் மகாராணியைச் சுற்றி இடைச் சிறுவர்கள் உட்கார்ந்து கதை கேட்டார்கள். அவள், தன் கதை முழுவதையும் பாட்டிலேயே சொல்வாள். தன் வாழ்வையே மூன்றாம் மனிதராகப் பார்க்கிற பாக்கியம் — கலைஞனாக இருந்து செய்ததை ரஸிகனாகிப் பார்க்கும் பாக்கியம் — மீராவுக்கு அப்போது கிடைத்தது. பல சந்தர்ப்பங்களில் உணர்ச்சிகளின் நெரிசலில் தான் பாடிய பாடல்களெல்லாம் இப்போது கண்ணனருளில் அவள் மனத்திலும் நாவிலும் வர, அவற்றை இப்போது சாந்த நிலையில் பாடினாள். அந்தப் பாடல்களை ஆயர்குலத்தவர் கானம் செய்தனர். பிருந்தா வனத்திலேயே வாழ்ந்த சாதுக்களும் ஞானிகளும், அங்கு

யாத்திரைக்கு வந்த பாகவத உத்தமர்களும் அந்தப் பாடல்களைக் கேட்டு ஆச்சரியமுற்றனர். இடைச் சிறுவர்களிடம் சென்று தவசிகளும் அப்பதாவளிகளைப் பக்தியுடன் பாடம் கேட்டனர். அப்படித்தான் அவை இன்று நமக்குக் கிடைத்திருப்பது.

எளிய மீராவோ அந்த சாதுக்களிடம் சென்று பச்சைக் குழந்தை போல் பாடினாள். யமுனையில் பலர் துணி துவைத்துக் கொண்டிருப்பார்கள். அந்தக் கரையிலேயே இந்த சாதுக்கள் அநுஷ்டானத்துக்காக நிர்மலமாக நீராடி அமர்ந்திருப்பார்கள். இரண்டையும் இணைத்து மீரா பாடினாள்:

'ஹரிகுணம் அறிந்த பெரியோரே!
அறியாதாள் உளம் சலவை செய்வீர்!
சலவை செய்துள்ளத்தை உலர்த்திடுவீர்,
மலமா(சு) அனைத்தும் அகன்றிடவே!

உழுவலன்புத் தண்ணீர்அதிலே
கழுவ நன்புச் சவுக்காரமுண்டு,
சுழுமுனை நாடியாம் துறையினிலே
அழுக்(கு) அகற்றி எனைத் துவைத்திடுவீர்!

உடலெனும் கூண்டினில் உறங்(கு) உயிர்க்கு
விடுதலை அருள்வீர், வித்தகரே!
நொடியாய் வாழ்வு கழியுது; நேயனை
அடியாள் மீராவுக்(கு) அடைவிப்பிரே!'

"பூஜ்யதேவி! நாங்களா உனக்குக் கண்ணனை அடைவிப்பது? நீயல்லவோ அவனை எங்களுக்குக் காட்டுவிக்கவும் கூட்டுவிக்கவும் வேண்டும்?" என்று அச் சாதுக்கள் கூறுவார்கள்.

அடியார்களுடனும் ஏழைகளுடனும் ஆடிப்பாடி ஆயர்பாடியைச் சுற்றிச் சுற்றி பஜனம் செய்து வருவாள் ராஜஸ்தானச் சக்கரவர்த்தினியாக இருந்த மீராபாய்.

'துக்கத்தைத் துடைக்கப் பக்கிரியாவோம்,
ஆழியனுள் புக ஏழையராவோம்

மாடமாளிகை கூடகோபுரம் விட்டு
நாடிடுவோம் படுகாட்டு வாழ்க்கையே!

குதிரை ஆனை ஆரோகணம் விட்டுக்
குதிகால் தேயவே நடந்திடுவோம்!

பஞ்சபக்ஷ்ய பரமான்னமும் விட்டுப்
பஞ்சத்திலடிபட்டு இன்புறுவோம்!'

என்று பாடுவாள். கண்ணனை அடைய வழி ஏழைமைதான். உலகப் பொருள்களையெல்லாம் நிரப்பிக்கொண்டுவிட்டால் அப்புறம் அவனுக்கு இடமேது? **'நமோ அகிஞ்சன வித்தாய'** என்று குந்திதேவி துதித்ததையேதான் மீராதேவியும் கானம் செய்தாள்.

சாதுக்களிடம் குழந்தையாக உபதேசம் கேட்ட மீராவே தாய்மை உணர்ச்சியுடன் உபதேசமொழிகளாகப் பல பாடல்களைப் பாடியும் பிருந்தாவனத்தை நாதலோகமாக்கினாள்:

'சுஜன சாதுக்களே,
பஜனம் செய்குவோம்!

பாவனனை யன்றி
ஜீவன மொன்றில்லை (சுஜன)

ப்ராணனைத் தந்தி மீட்டி
ஞானத் தம்பூர் இழைத்து
ஓங்காரமாம் ச்ருதியில்
பாங்காகவே லயிப்போம்

நாதன் அணிவித்த
பாதச் சிலம்பினொலி
நாதம் குலுங்க அதில்
போதம் பெற்றாடுவோம்

இதயமாம் சந்நிதிக்(கு)
அதரமே வாயிலன்றோ?
அதரத்திலே நாம
அமுதமே விளக்கன்றோ?

சாண் உதரத்துக்கு
வீண் செய்வரோ வாழ்வை?
பிடி அரிசிக்காகவே
அடிமை செய்திடுவரோ?

பருக்க உடல் வளர்த்து
செருக்குக் கொண்டாலும்
காலன் வந்திடுங்கால்
சாலம் பலிக்காதையே!'

*பாகவதம் நிகழ்ந்த தலமல்லவா திருஆய்ப்பாடி? அங்கே பக்திவேதமாகிய பாகவதத்தின் பெருமையையும் பாகவ தோத்தமர் மகிமையையும் பண்ணிலே சாற்றினாள் மீரா.*

'கோவிந்த, கோவிந்த, ராம, க்ருஷ்ணா என்று
சோர்வின்றி எக்காலும் ஏத்திடுவாய்!

நரப்பிறவி பெறற்கரிது; பாழ் செய்யாமல்
பரநிலைதனைப் பெற்றுப் பவம் கடப்பாய்!

பாகவதர் அன்புப் பாகீரதியில் அமிழ்வாய்,
பாகவதம் கேட்டு *பாவ*பக்தி பெறுவாய்!

ஹரியின் குழந்தை நீ; அறிந்து சொன்னேன் மீரா,
பரிமளக் கழலினில் பொருத்திடுவாய் மனம்'

*என்று பாடி, கண்ணுக்குத் தெரிகிற யமுனையோடு பாகவதரின் அன்புப் பாகீரதியை மட்டுமின்றி, தன் வெள்ளையான சங்கீதம் என்னும் சரஸ்வதி நதியையும் பெருக விட்டுப் புதிய திரிவேணியை உண்டாக்கினாள் மீரா.*

*யமுனைக் கரையில் விளையாடியவன் பக்தர்களின் பஜனைக்குப் பரிசாக முக்திக் கரைக்குப் பரிசல் வலிக்க வருவதை அறைகூவிப் பாடினாள் மீரா:*

'பஜனை செய்தே பவசாகரமதனை
கஜமெனக் கடப்போம், ஜகத்தீரே!

எச்சிற் பாண்டத்தை இச்சியாமலே
மாயச்சிக்கலினை மாய்த்திட வாரீர்!

பத்திப் பரிசலைப் பற்றிடுவோம்—பின்
நித்தியன் வருவன் கலத்தினை வலிப்பன்,
சத்தியக் கரைதனில் பத்திரம் சேர்ப்பன்
முத்திநிலை தருவன், முந்திட வாரீர்!

கோணா(து) அவனிடம் கொண்ட அன்(பு) என்றும்
வீணாகாதென விண்ணுறச் சாற்றுவேன்!

கடலெனக் கருணை கொழிப்பவன்—அடியார்க்(கு)
அடிமைப்படுவன் அடியிணை அணைவோம்.'

*இன்னொரு பாவத்திலோ பகவானின் பேரருளைப் பெற்ற பக்தர்கள் கூட்டத்தில் தனக்கும் இடம் கிடைக்குமா என்று ஏங்கி ஏங்கியும் பாடுவாள். அத்திருக்கூட்டத்தில் திகழும் அம்பரீஷன், குசேலர், துருவன், தன்னா, கபீர், சபரி, சதனா, சேனா, கணிகை (பிங்களை), கர்மா என்ற பக்தர்களின் திருநாமத்தைச் சொல்லி உருகிப்பாடுவாள்:*

'உன் குரைகழல் அடைந்தேன்,
என் குறை கேட்டருள்வாய்!

பதிதர் பலரைக் பவக் கடல் கடத்தினாய்;
கதிதந்(து) என்னையும் காத்திடுவாய்!
புனிதராய் உன்அருள் பெற்றவர் பெயரினை
இனிக்கச் சொல்லி நான் பனித்திடுவேன் கண்!

அம்பரீஷனுக்கும் அன்புக் குசேலனுக்கும்
உம்பர் வாழ்வுதந்து உன்னிலைக்(கு) ஆக்கினாய்!
அஞ்சுவயசுச் சிசு பிஞ்சுத் துருவனுக்கு
மஞ்சுநிறமேனி மகிமை காட்டினாய்!

தன்னா பத்தனுக்குத் தானியம் விளைத்தாய்!
செந்நாக் கவீருக்குச் செவலை ஓட்டினாய்!
காட்டினிலே திரிந்து காய்கனி தானளித்த
வேட்டுவ சவரிக்கு வைகுந்த மீந்தாய்!

மாமிசம் விற்றிடும் சதனா அவனையும்
தாமசம் செய்யாது தன்னவனாக்கினை!
நாவிதன் சேனனை நன்னெறிப் படுத்தினை!
பாவிக் கணிகையையும் பரநிலைக்குய்த்தனை!

குச்சுவாழ் கர்மாவின் கிச்சடியைப் பெரும்
இச்சையுடன் புசித்(து) உச்சநிலை தந்தாய்!
தாரகம் தரும் உத்தாரன் உன் நிறத்தில்
ஆர அமிழ்வேன், பாரறிய!

அடியார் குழாத்தில் தனக்கு இடம் உண்டோ என மீரா ஏங்குகையில் பிருந்தாவனத்தில் வாழ்கின்ற தபஸ்விகளோ அத்தனை பக்தர்களுக்கும் முடிமணியென வந்தவள் மீராவே எனக் கருதி அவளை வணங்கினர்.

பிருந்தாவனத்துக்கு வந்த தவசிகளில் ஒருவர் சாட்சாத் ரூபகோஸ்வாமியே என்று அறிந்த மீராவின் உயிர்ப் பறவை சிறகடித்தது. பாலப்பருவத்தில் தனக்குக் கண்ணன் அன்பைப் புகட்டிய அந்த மகனீயரைத் தரிசிக்க விரைந்து சென்றாள்.

ஆனால் ரூபரின் ஆசிரம வாயிலிலோ அவளைத் தடுத்து நிறுத்தினர், அவரது சீடர்கள். "துவாரகாபுரியில் கண்ணன் சந்நிதிக் கதவுகள் சாத்திக் கொண்ட நாளாக, 'ஏதோ பெரும் அபசாரம் நடந்திருக்கிறது' என்று குருஜி வியாகுல முற்றிருக்கிறார். அதற்குப் பரிகாரமாக மிகவும் கடுமையான தவ விரதங்களை அநுஷ்டித்து வருகிறார். எனவே அவர் பெண்களைப் பார்ப்பதில்லை" என்றனர் ரூபரின் சீடர்கள்.

சடேரெனப் பேரெழுச்சி கொண்டாள் மீரா! ரூபகோஸ்வாமிக்கு மண்டையில் அடிப்பதுபோல அவளைக் கொண்டு பிரேமச் சுடரான ஞானச் சுடர் கொளுத்த வேண்டுமெனக் கண்ணபெருமான் அருட்சிந்தை கொண்டே சிஷ்யை மீராவை அவருக்கு குருவாக்கும் அந்த அதிசய எழுச்சியைத் தந்தான் போலும்!

ரூபரின் அடக்கவொடுக்கச் சிஷ்யையான மீராவாக இன்றி அவள் கண்ணன் ஸ்திரவாஸம் செய்யும் நித்ய ப்ருந்தாவனத்தின் மகாராணியான ராதேச்வரியாக, ராஸேச்வரியாக மகா பரிணாமம் கொண்டாள்!

ரூபர் பெண் பிரஜைகளைப் பார்ப்பதில்லையெனக் கூறிய சீடரைப் பார்த்து, ஆயினும் அவ்வாசிரமம் முழுதிலுமே தனது கம்பீரமான ஆணைக்குரல் பரவுமாறு எகத்தாளத் தொனியில் சொன்னாள்:

"அது யார் இந்தப் பிருந்தாவன பூமியில் கண்ணன் ஒரு புருஷனுக்கு வேறாகத் தானும் இன்னொரு புருஷன் என்று உரிமை பாராட்டிக்கொள்கிறவர்? இந்த க்ஷேத்திரம் அந்தப் பரமபுருஷனின் நாயகிகளுக்கு மட்டுமே உரியதான அந்தப்புரம். இங்கே ஒரே புருஷனாக அந்தக் கிருஷ்ணனொருத்தனுக்குத்தான் இடமுண்டு! அவனிடம் நிஜபக்தியுடன் வரும் எவரும் இங்கே அவனுக்கு நாயகியாகத்தான் ஆகி வசிப்பார்கள். அப்படி ஆகாத இந்த அந்நிய புருஷருக்கு இந்த ஜனானாவில்* இடமில்லை! போகச்சொல் வெளியிலே, அவரை!"

இவ்வார்த்தைகள் ரூபரின் செவியில் பாய்ந்தன. அவர் ஒரு குலுங்குக் குலுங்கி விட்டார்! 'புருஷன் என்றால் அந்த ஒருவனே ஒருவன்தான். பரம புருஷனுடன் கூடவேண்டிய அத்தனை ஜீவான்மாக்களும் பெண்கள் தாமே! அதுதானே பக்தி பாவத்தின் உச்சம்? நானே பெண்ணாக வேண்டியிருக்க, பெண்ணைப் பார்க்க மறுத்தேனே! என்னையே பெண்ணாகப் பார்த்துக் கொண்டிருந்தால் பெண்ணின்ப இச்சை

* 'ஜனானா' என்றால் ஸ்திரீகளின் அந்தப்புரம். இங்கு காணும் மீரா வசனம் — ராதாவாகி மீரா மொழிந்த வசனம் — அம் மீரா—ராதாக்களாகத் தாமே ஆனதுபோன்ற உணர்வுடன் காஞ்சி முனிவர் ஸ்ரீ மஹா பெரியவாள் மொழிந்ததன் அச்சுப் பிரதியே! அவர் கூறிய வார்த்தையே 'ஜனானா'. அது பெர்சியச் சொல். சுமார் ஆயிர மாண்டுகளுக்கு முன்பிருந்தே வடபுலத்தில் முஸ்லிம்களின் அளாவலால் பெர்சிய—அராபியச் சொற்கள் பரவத் தொடங்கிவிட்டதால் மீராவின் காலத்திலேயே 'ஜனானா' பொது வழக்கில் வந்துவிட்டது போலும்!

இயல்பாகவே சுழன்றிருக்குமே! அப்படிக்கின்றி, 'ஆண்' என்ற உணர்விலே ஆழ்ந்தபடியிருந்ததால்தானே, பெண்ணினத்தைப் பார்த்தாலும் எங்கே அது கீழ்த்தர இச்சையின் வேகத்தை அணுவேனும் உண்டாக்கிவிடுமோ என அஞ்சி, அதற்கிடம் தராமல் தீவிர விரதம் காக்க எண்ணினேன்? என் மடமையை என்னவென்பது?

ரூபர் விரைந்தோடி வந்தார் ஆசிரம வாயிலுக்கு.

"குருமகாராணி ராதே! வணங்குகிறேன்" என்று கூறி மீராவின் பாதத்தில் விழப்போன ரூபரைத் தடுத்து நிறுத்தினாள், மீண்டும் நிகழ்கால மீராவாகவே ஆனவள்.

"நான் யார் பாருங்கள்! அப்புறம், வணங்குவதற்குப் பதில் ஆசி வழங்குங்கள்" என்றாள்.

அவளது திருமுகத்தைக் கூர்ந்து கவனித்தார் ரூபர். தூதாராவின் சின்னஞ்சிறு பேத்தி அந்தத் தூயமுகத்தில் நடனமிட்டாள். 'எத்தனையோ ஆண்டுகள் ஆகிவிட்டன. வயது ஏற ஏற மீராவின் குழந்தைத் தன்மையும் ஏறி, அன்று கண்டதை விடச் சிறிய குழந்தையாய், ஆயினும் ஞானத் தாயாய், ப்ரேமைத் தாயாய் இதோ நிற்கிறாள்!"

"மீரா, நீ எனக்கு அறிவுச்சுடர் கொளுத்தியது மட்டும் போதாது. இங்கே ஒரு பெரிய ஞானமார்க்கப் பண்டிதர் வந்திருக்கிறார். யாராலும் வெல்லமுடியாத அவர் அஜிதர் என்றே பெயர் பெற்றிருக்கிறார். பக்தி மார்க்கத்தைப் பற்றி அவர் கேட்கும் சில கேள்விகளுக்கு உன்னையன்றி விடை சொல்வார் இல்லை. அவரிடம் போவோம் வா" என்று கூறி மீராவை அழைத்துச் சென்றார் ரூபகோஸ்வாமி.

அஜிதர் கேட்டார்: "உலக மாயையை மாய்த்தாலன்றி மோட்சம் கிடைக்காது என்று பக்தி மார்க்கக்காரர்களாகிய நீங்களும் ஒப்புக்கொள்கிறீர்கள். உருவமும் உணர்ச்சிகளும் மாயை என்பதையும் ஒப்புக்கொள்கிறீர்கள். அப்படியிருக்க உருவத்தையும் உணர்ச்சியையும் மதிக்கும் உங்கள் பக்தி மார்க்கத்தால் மோட்சம் பெற முயல்கிறீர்களே! இது முரணல்லவா? உருவமும் உணர்ச்சியும் பற்றாத ஞான மார்க்கத்தால்தான் மோட்சம் பெறமுடியும் என்பது உங்கள் அறிவுக்கு ஏன் எட்டுவதில்லை?"

மீரா இளநகை பூத்தாள். "மத்தகஜத்தை நேருக்கு நேராகச் சண்டையிட்டுப் பிடிப்பது எளிதா? அல்லது

இன்னொரு பெண் யானையைக் காட்டி வசியம் செய்வது எளிதா?" என்று கேட்டாள்.

"இதென்ன கேள்வி? யானையை யானைகொண்டு பிடிப்பதுதான் எளிது. யாரேனும் அதனுடன் நேருக்கு நேர் சண்டையிடுவார்களோ?" என்றார் அஜிதர்.

"மாயையுடன் நேருக்கு நேராகச் சண்டையிடுவதுதான் ஞானமார்க்கம். அதில் பராக்கிரமசாலிகள் வெற்றியும் பெறலாம். ஆட்சேபமில்லை. ஆனால் மாயையை எளிதில் மயக்கிப் பணியவைக்க எங்களைப் போன்ற பலவீனர்களுக்கு பக்தியே உபயோகமாகிறது" என்றாள் மீரா அடக்கத்துடன்.

அஜிதர் ஜிதராகி வீழ்ந்தார். "தேவி, தோற்றேன். ஆனால் தோல்வியிலேயே வென்றுவிட்டேன். உணர்வாலும் உருவாலுமே உணர்வையும் உருவையும் கடக்கும் வழியின் பெருமையைப் புரிந்துகொண்டேன். எங்கிருந்து கற்றீர்கள் தேவி, இத்தகைய அற்புதத் தத்துவத்தை?" என்று விநய சிரத்தையுடன் வினவினார் அஜிதர்.

"கற்பதா?" என்றாள் மீரா. "பெண்ணுக்குத்தான் பெண்ணின் இரகசியம் தெரியும். நான் பெண். பக்தியும் பெண். மாயையும் பெண். எனவே ரகசியம் தானாகவே தெரிந்து விட்டது. நீங்களும் பெண்ணாகுங்கள். மர்மக் குகை களெல்லாம் வெட்ட வெளிச்சமாகிவிடும்" என்றாள் மீரா.

அப்புறம் என்ன? பிருந்தாவனத்தில் அனைவருமே உள்ளத்தால் பெண்களாயினர்.

அக் கோபிகைகளைக் காணக் கண்ணனும் வந்து சேர்ந்தான்!

பாகவதம் மீண்டும் நிகழ்ந்தது!

ஆகா, பாகவத பூமியான பிருந்தாவனத்துக் காட்சிகளை யெல்லாம் மீண்டுமல்லவா கானத்தால் கட்டிக் கொண்டு வந்துவிட்டாள் மீரா?

'நந்தர் நாயகன் வாழ்கின்ற
ப்ருந்தாவனத்தெழில் கண்டேன்

இல்லமெங்கிலும் இறைப்பூசை,
அல்லும் பகலும் அவன் தரிசனமே!

இன்னமுதாக இழியுது யமுனை,
அன்னம் வெண்ணெயும் அளவின்றிப் பெருகுது!

சிம்மாதனத்தில் பெம்மான் உறைகிறான்,
அம்மா! அழகைச் சும்மாச் சொல்வனோ?

குழல்முடியினிலே துளவமணிந்து
குழலினை ஊதியே வந்திடுவான்;
குஞ்சம் குஞ்சமாத் தீஞ்சுவை கேட்டுச்
சஞ்சரித்திடுவாள் ராதை!'

*பிருந்தாவனத்தில் பொழுது விடிகிறது; கண்ணனை எழுப்புகிறாள் மீரா:*

'அன்பே! தீங்குழல் ஊத,
இன்பே! எழுந்தருளாயே!

கீழ்வானம் வெள்ளென்க கோபியர் தங்கள் குடில்
தாழ்ப்பாள் திறந்தனவே, தாமதியா தெழுந்தருளே!

மங்கள கங்கணம் கலகலப்பக் கைபேர்த்து
மங்கையர் தயிர் கடை மதுரப்பண் கேட்டிலையோ?

சுரநரரும் வந்தேநின் பள்ளிக்கட்டிற் கீழே
வரம் பெறவே வணக்கமுடன் சங்கமிருந்தனரே!

போற்றி போற்றி என்றாய்க்குலப் பாலர்கள்
சாற்றினர் ஆராத அன்புக்களிப்புடனே!

இறைவ, அப்பம் நெய்நிறைய எடுத்துவா,
கறவைகள் பின்சென்று கானம் சேர்ந்துண்போம்!

மீராவின் எசமானே! கிரிதரனே! பண்பாளா!
வாராயே, தாரகத்தைத் தாராயே, தயவாளா!'

*இங்கே திருப்பாவையின் பல பாசுரங்களின் எதிரொலியைத் தெள்ளத் தெளியக் கேட்கிறோமெனில், இதோ, 'கிருஷ்ண கர்ணாமிருதம்' பிரதித்வனி செய்யும் ஒரு பதாவளி:*

'ஆயர் பாடியில் கண்டேன்,
மாய வேடிக்கை!

சந்தினில் வெண்ணெய் விற்றிடும் கோபி
நந்த நந்தனனைக் கண்டாள்;
வெண்ணெயை மறந்தாள்! – "வாங்கலியோ, சின்னக்
கண்ணனை?" என்றே விற்றாள்!

பிருந்தாவனத்தின் குஞ்சமனைத்தும்
சுந்தரன் கண்ணை நிறைத்தான்;
மனம் மயக்கும் ரசகன கிரிதாரி
எனையாட் கொண்ட பிரான்!'

*மீரா ஆண்டாளாகவும் லீலாசுகராகவும்தான் ஆனாளா? ஸ்ரீ ராதாதேவியாகவே மாறினாள். கண்ணுக்கு மெய்யாகக் கண்ணன் பசுமந்தையின் பின்செல்வதைக் கண்டாள்; நள்ளிரவில் அவன் ஊதிய குழலிசை கேட்டாள்.*

'ஆவினம் மேய்த்த பிள்ளை—அவன்
மேவினன் என் மனத்தில்!

வாரிஜ வதனத்தை வாரிப்பருகினேன்,
நாரி உடல் உளம் வசமிழந்தேன்

வேய்ங்குழல் அணி வேந்தன்
தார்க்குச்சி அணி தாயன்
பீதகம் புனை ப்ரேமன்
போகிறான் பாரீர், பசுநிறை பின்னர்!

இரவு விரிந்தது விருந்தாவனத்தே!
இனியன் குழலது விருந்து படைத்தது!
காதல் கொடிதனில் கடிமலர் விரிந்தது!
சாதலறிந்திடா சொர்க்கசுகந்தனில்
ஞானமுனிவரர் வானவரோடு
மானுட, வானர, பசு பட்சிகளும்
ஊனுடல் மறந்து, உறைந்து போயினவே!
வேணுவின் வித்தக விந்தை மாதோ?

# 31. குற்றச்சாட்டு

*பழைய பாகவதத்தில் கண்ணன் ராதையைத் தவிக்க விட்டு பிருந்தாவனத்திலிருந்து மறைந்தான் அல்லவா? இப்போதும் அதைச் செய்தான்!*

*வடமதுரையிலிருந்து வந்த அக்ரூரர், கண்ணனை பிருந்தாவனத்திலிருந்து அழைத்துச் சென்றதாக பாகவதம் பாடுகிறது. கோபியரிடமிருந்து கண்ணனைப் பிரித்துச் சென்றவர் க்ரூர மனத்தவரல்லவா? அவரையா அக்ரூரர் என்பது? 'இவருக்குப் போய் அக்ரூரர் எனப் பெயரிட்டனரே!' என்றனர் கோபியர். ஆதி கோபியரின் இதே மொழி இன்று மீராவின் நொந்த நெஞ்சிலிருந்தும் பாவாகப் பிறந்தது.*

'நாணம் எனக்குப் பகையாச்சு—அடியே!
ஆணரசன் கோவலனை அடைந்தபின்னரே (நாணம்)

க்ரூரமனம் கொண்ட அ-க்ரூரன் வந்தானிங்கு,
அலங்கரித்த ரதத்தில் அலங்கலணி ஐயனைக்

கைப்பிடித்தேற்றிச் சென்றான்! கை பிசைந்தாள் மீரா!
நிற்பாள் விடாதுயிர், கற்பாவை ஆயினளோ?'

*பாகவத காலத்தில் அதற்குப்பின் வடமதுரையிலிருந்த கண்ணனிடமிருந்து ராதைக்குத் தூதுமொழி கொணர்ந்தார் உத்தவர். இப்போதும் அவரே மீராவுக்குக் கண்ணனிடமிருந்து ஓலை கொணர்ந்தார். ராதாவில் இழைந்த மீரா அவரைக் கேட்கிறாள்:*

'கண்ணனில்லாமல் கடிதம் கொணர்ந்தாய்
கண்ணெடுத்தும் பார்ப்பேனோ?—ஊதோ
கண்ணெடுத்தும் பார்ப்பேனோ?

ஸ்நேகிதன் இன்றிக் காகிதம் கொணர்ந்தாய்
தாகித்தவர்க்கிது போதுமோ?—ஊதோ
தாகித்தவர்க்கிது போதுமோ?

படிக்கவேண்டாமெனில் தடுக்குது நெஞ்சு
கடிதம் பிரித்தேன் காரிகை ராதை
படிப்பதெப்படி? உரம் வெடிக்குது, உணர்ச்சியில்!
வடிக்குது கங்கையைத் துடித்திடு நயனம்!'

*ராதாவோ மீராவோ, அது யாராயிருந்தாலும் சரி, அந்த நாயகிக்குக் கண்ணன் என்ன எழுதியிருந்தான்?*

*ஆதியில் பிருந்தாவனத்திலிருந்து கண்ணன் வடமதுரை சென்றாலும் அதன்பின் அவன் நிரந்தர வாசஸ்தலமாக்கிக் கொண்டது துவாரகையைத்தான்! அந்தத் துவாரகைக்கு வருமாறே கண்ணன் மீராவை அழைத்திருந்தான்.*

*'ஆய்ப்பாடிக் கண்ணனாக கோபியரின் சேலைகளைக் களைந்து மானத்தை வாங்கினாய்! துவாரகைக் கண்ணனாகியோ பாஞ்சாலிக்குச் சேலை தந்து மானத்தைக் காத்தாய்! இதுவரை என் மானத்தை வாங்கியே, மானாவமான உணர்வு என்னைத் தீண்டாத வான்பதவியைத் தந்து காத்தாய்! இப்போது மான உணர்வு உண்டாக்கி என்னைச் சோதிக்கும் மாயவிளையாடல் காணத்தான் துவராபதிக்குக் கூப்பிட்டிருக்கிறாயா?"*

*கிரிதரனை 'நாகரன்' என்று மீரா பல பாடல்களில் அழைத்திருக்கிறாள். நகரப் பண்பறிந்தவன்தான் நாகரன். ஆய்ப்பாடியில் கோவர்த்தனம் தூக்கிய கிரிதரனோ கிராமந்தரப் பிள்ளைதான் — நகரத்தைக் கண்ணாலும் கண்டவன் அல்ல.*

நகரவாசிகளான மேட்டுக்குடியினர் தாங்களே உயர் பண்புகளுக்கு உறைவிடம் என்ற மிதப்பான எண்ணத்தில் கிராமத்து நாட்டுக்குடியினரைப் பண்பு குறைந்தோராகக் கருதி, உயர் பண்பை 'நாகரிகம்' என்றும், பண்பில்லாமையை 'கிராமியம்' என்றும் பெயரிட்டனர். மேவார் ராஜ்ய ராஜதானியான சித்தோர் மாநகர மாராணியோ உள்ளீடற்றதும், செயற்கைப் போலி கலந்ததுமான நகர மக்களின் போக்கை 'நாகரிகமாக'க் காணவில்லை. இயற்கைப் பண்பின் எளிய திண்மை பொருந்திய கிராம மக்களின் போக்கிலேயே அவள் நாகரிகத்தை உணர்ந்தாள். எனவேதான் கிராமாந்தரத்துக் கிரிதரனுக்கு 'நாகரன்' என்று பட்டம் கொடுத்து "கிரிதர நாகரன்" எனப் பாடினாள். 'கிராமிய'மாக அவன் கன்னிகைகளின் ஆடைகளைப் பறித்ததிலேயே அவர்களுடைய போலியான மானாவமானங்களை விட்டு இயற்கை பிறப்பித்த உண்மை ஆன்மாவாக அவர்களை உய்விக்கும் உச்சமான நாகரிகத்தை அவன் புகட்டியதாக அவள் கண்டிருந்தாள்!

கண்ணன் தானே நிர்மாணித்துக் கொண்ட மாநகரம் துவாரகை. ஆய்ப்பாடி கிராமத்தில் மாடு கன்று மேய்த்தவன் இந்நகரிலோ மன்னனாக இருந்தான்!

'சரி சரி, அதற்காக அவன் எனக்குப் போலியான மான உணர்வை மீண்டும் தருவானென்று நான் ஏன் எண்ண வேண்டும்? அவன் இன்ன செய்வான், இன்ன செய்ய மாட்டான் என்று நான் — நான் மாத்திரமில்லை; எந்த மகா பட்டவருங்கூடத்தான் — ஊகிக்க முடியுமா என்ன? அதுவுமின்றி, அவன் எனக்கு மீண்டும் மானாவமான உணர்ச்சிகளைத் தந்தாலுந்தான் தந்துவிட்டுப் போகட்டுமே! அவன்தான் சத்ய சத்யன். அப்படிப்பட்ட அவன் தருகிற எதுவொன்றும் போலியாயிருக்க முடியுமா, என்ன? சரி, போலியாகவேதான் இருக்கட்டும்! தருகிறது அவன் அல்லவா? அவன் தரும் எதுவும் பிரேமப் பிரஸாதாம்ருதம்தானே? துவாரகைக்கு மட்டுமின்றி தாரணிக்கே மன்னர் மன்னனான அம் மகிமன் பதரிலும் பதரான அசடு எனக்கு 'வா' என்று சூக்ஷ்ம சந்தேசம் அனுப்பியிருக்கிறானென்றால், 'என்ன பாக்கியம்!' என்று ஆர்த்துப் பறந்து ஓடவேண்டியதுதானே முறை? என்னுடைய இந்தப் போலியான மூளைக் கேள்விகளையும் அந்தப் போலி மூளையையுமே தூக்கிப் போட்டுவிட்டு, வலக்கை இடக்கை தெரியா இடைச்சியாக ஓட வேண்டியதுதானே முறை?'

இவ்வாறெண்ணி ஆனந்தப் பட்சியாக மீரா, சிறகடித்துத் துவாரகை நோக்கிப் பிருந்தாவனத்திலிருந்து பறந்தபோது,

அங்கே சித்தோரில்.....

'மீராவை அழைத்து வாருங்கள்' என்று மீளமீள மகாராணா கூவிக்கொண்டிருந்தது தாங்கவொண்ணாத பரிதாபமாயிற்று. சௌபாக்கியதேவிக்கும் உதயாவுக்கும் உள்ளத்தைப் பிசைந்து எடுத்தது. ஏரியில் மூழ்கிய மீரா இறக்கவில்லை என்பதில் ராணா காட்டிய உறுதியைக் கண்டு, ராஜமாதாவும் உதயாவும் மீராவை எப்படியும் அழைத்து வருவது என முடிவு செய்தனர்.

பச்சைக் கர்ப்பூரத்தையும் குங்குமப்பூவையும் சேர்த்து வைத்துச் சந்தனக்கட்டையால் இழைத்துவிட்டு, அதன் மணம் பரவக்கூடாது என விரும்பினால் நடக்குமா? பக்தியும் கானமும் தூய உள்ளத்தில் சேர்ந்து இழைந்துவிட்டபின், அந்த உள்ளத்துக்குரியவர்கள் அநாமதேயமாக அக்ஞாதவாசம் செய்ய ஆசைப்பட்டாலும் அது சாத்தியமா? ஏழைப் பக்கியரில் ஒருவராக மறைந்திருந்து வாழ ஆசைப்பட்ட மீராவை அவளது சங்கீதம் வெளி உலகுக்குக் காட்டிக் கொடுத்துவிட்டது.

மீரா பிருந்தாவனத்தில் இருக்கிறாள் என்பதை அங்கே பிறந்த சங்கீத-சங்கீர்த்தனம் வெளியுலகுக்கு அறிவித்து விட்டது. மீரா பிருந்தாவனத்தில் இருந்தது மட்டுமல்ல; சர்வ சுதந்திரமாகவாக்கும் இருக்கிறாள்; மேவார் ராணியாகக் கட்டுப்பட முடியாமல் கஷ்டப்பட்டவள் பக்தகுல ராணியாகவாக்கும் அங்கு அன்பரசு ஓச்சுகிறாள்; பரம பக்த சிகாமணிகளும், தவயோக ஞானியர்களும் கூட அவளைப் போற்றிப் பணிந்து வருகிறார்கள் — என்றெல்லாமும் வெளியுலகம் அறிந்தது. அதுவே மீராவின் உள்ளார்ந்த தெய்விக மகிமையில் **எல்லோருக்கும்** உறுதி நம்பிக்கை உண்டாக்கிவிட்டது.

''எல்லோருக்கும்''!-ஆம், சௌபாக்கியதேவிக்கும் உதயாவுக்கும் கூடத்தான்!

சௌபாக்கியதேவி, அந்தணோத்தமர் சிலரை அழைத்தாள். "பிருந்தாவனம் சென்று மீராவை அழைத்து வாருங்கள். பாவி நான் அழைத்ததாகச் சொல்லாதீர்கள். கும்பனே அனுப்பியதாகச் சொல்லுங்கள். அவனுக்குச் சிறிது சித்தப்பிரமை ஏற்பட்டிருப்பதாக அவளுக்குச் சொல்ல

வேண்டாம். அவளும் இந்தப் பாழும் உலகுக்கு ஒரு சித்தப்பிரமைக்காரிதான். எனவே உங்கள் அழைப்பை எப்படி ஏற்பாள் என்று சொல்வதற்கில்லை. நீங்கள் எப்படியேனும் உங்கள் சாமர்த்தியத்தைக் காட்டி, நயமாகவோ பயமாகவோ பேசி, அவளை இங்கே கொண்டுவந்து விடவேண்டும். என் பிள்ளை பிழைக்க அதுதான் வழி!" என்று கூறி ஹோவென்று அலறி விட்டாள் ராஜமாதா.

அந்தணாளர்கள் பிருந்தாவனத்தை அடைந்தனர். துவாரகை நோக்கிப் புறப்பட்டவளை மேவாருக்கு வருமாறு அழைத்தனர்.

மகாபுருஷர்களின் வாழ்க்கைகளில் எங்கேனும் ஓரிடத்தில் ஒரு பழுது ஏற்பட்டேயிருப்பதைப் பார்க்கிறோம். தாசரதியும் ஒருபோது மனம் நொந்து தசரதனையும் கைகேயியையும் சற்று நிந்தித்தது போலப் பார்க்கிறோம். உத்தமர் உள்ளமும் கசந்து விடும்படியாகச் செய்துவிடும் 'சாமர்த்தியம்' படைத்தது இந்த உலகம்!

வேதியர்கள் வந்து தூது சொன்னபோது சித்தோரை நினைத்த மீராவின் உள்ளமும் அப்படித்தான் கசந்திருந்தது. அன்பு மீராவா அப்படிச் சொன்னாள் என்று நாம் நம்ப முடியாதபடி மகாராணாவுக்குக் கண்டிப்பாக உத்தரம் எழுதினாள் மீரா:

'வறண்ட(து) உன் நாடு,
வரமாட்டேன் வேந்தே!

அப்பனைத் தொழுவதற்கிடமற்ற தேசம்
குப்பை என்றொதுக்கினேன், கோமகனே!

பிடிவாதம் மிகுந்த அடியாள் மீரா
பிடித்தேன் ஹரியைப் பூரணமாய்—இனி

வரமாட்டேன் வேந்தே,
வறண்ட உன் நாட்டினுக்கே!'

மானாவமானம் விட்ட மீராவையும் சித்தோரில் பட்ட பாடெல்லாம் இப்போது சேர்ந்து வந்து கொத்தியது.

பிராமணோத்தமர்களை வணங்கி, "இந்தாருங்கள் ஓலை. நான் வரப்போவதில்லை" என்றாள் கம்பீரமாக.

நயமாகவும் பயமாகவும் பேசி அழைத்து வருமாறு ராஜமாதா சொல்லியிருந்தாள் அல்லவா? அதை நினைத்து, "இது உங்கள் கணவர் கட்டளை; நீங்கள் அடிபணிந்துதான் ஆகவேண்டும்" என்று நிர்ப்பந்தம் செய்தனர் அவ்வேதியர்கள்.

"கணவரா? கட்டளையா? அப்படி ராணாஜி சொல்லியிருக்கமாட்டாரே! சொல்லியிருந்தால் அதற்கும் இதோ விடை தருகிறேன்" என்று கூறிவிட்டு எழுதலானாள் மீரா!

'மோகனனே என் கணவன்,
கோமகனே நீர் கோபித்தென்னே?

உண்ணவும் உரைக்கவும் எண்ணவும் உயிர்க்கவும்
உயிர்க்(கு) ஆதாரன்எனைக் கொண்டான் தாரம்;

தினை அளவாற்றலால் அனைத்தினுள்ளே புகுந்து
தனித்து நிற்கும் புருஷ உத்தமன் என் புருஷன்!

நீரும் பொய் நானும் பொய்; நீர்மேல் குமிழி ஜகம்;
மாறும் உடலுறவு; மாதவனொன்றே மெய்;
சிட்டர்கள் வாழ்வினைத் தொட்ட நீர்—வெட்கத்தை
விட்டுவிட்டே எனைக் கட்டுப்படுத்தலாமோ?

அண்ட கோடிகளாகி, அண்டங்களை எடுத்து
உண்டபிரான் எனைக் கொண்டனன் காந்தனாய்;
மனைவி உந்தமக் கென்றே நினைவு கொண்டேஎனைச்
சிறை செயினும் பண்டை முறை மறப்பேனோ?

ராணி வாழ்வினை என்றோ 'வீணி(து)' எனவிட்டேன்!
பட்டும் முத்தும் பரிசும் விட்டு விமலமானேன்!
வண்டுலவும் யோகத் தண்டுழாய் தாரணிந்தேன்!
ஹரிபக்தி அறியாத சிறியர்தமைப் பிரிந்தேன்.'

அதற்குமேல் மீராவிடம் தங்கள் யத்தனம் பலிக்காது என்றுணர்ந்த அந்தணாளர்கள் வெறும் கையுடன் திரும்பினர்.

அன்னை ஆட்களை அனுப்பியிருப்பதை அறிந்து மீராவை ஆவலுடன் எதிர்பார்த்திருந்த கும்பராணா, அவர்கள் காரியம் பலிதமாகாது திரும்பியதைக் கண்டு முன்னிலும் பேதலித்து மனம் உடைந்தார்.

குளமான கண்களும் சோகம் ததும்பும் தோற்றமுமாய் அரசகாரியம் அனைத்தும் விட்டுப் புலம்பிக் கொண்டிருக்கும் மகனைப் பார்த்துப் பார்த்து சௌபாக்கியதேவியின் பெற்ற வயிறு பற்றி எரிந்தது. மீராவிடம் மீண்டும் அவளுக்கு ஆத்திரம் எழும்பியது. 'இப்படி என் பிள்ளையைப் பரிதவிக்க விடுபவளுக்குச் சாந்தி கிடைக்குமா?' என்று உதரம் குமுறிச் சபித்தாள்.

அவள் சபித்ததில் நியாயமிருந்ததாகக் கண்ணன் கருதினானோ?

பிருந்தாவனத்தில் பேரானந்தமாய் வாழ்ந்து வந்த மீராவின் மனத்தை அலைக்கழிக்கத் தொடங்கினான்.

அந்தணர்களிடம் செந்தணல்போல் தான் பேசி அனுப்பியது மீராவின் மனத்தைச் சுடத் தொடங்கியது. 'அற்பப் பதராகிய நான், எனக்காக எத்தனை எத்தனையோ செய்த மாமன்னரிடம் செல்ல மறுத்தால் அகிலாண்ட நாயகன் மட்டும் எனக்குக் காட்சி தருவானா, என்ன?' என்ற கேள்வி அவளது அகத்தில் அடிக்கடி எழுந்தது. 'ராணாஜி ஒருபோதும் கணவன் என்ற உரிமை கோரித் தன்னைக் கூப்பிட்டிருக்க மாட்டார். அத்துணைக் காலம் பழகியும் அவரது உள்ளத்தைப் புரிந்து கொள்ளாமல் நிர்த்தாட்சிண்ய மாக உத்தரம் தந்தேனே!' என்று தன்னையே நொந்து கொண்டாள்.

பிருந்தாவனத்திலிருந்து தன்னந் தனியளாகப் புறப்பட்டாள் மீரா. சித்தோருக்குத்தானே? அதுதான் அவளுக்கே தெரியவில்லை! ராதா பாவத்தில் அவள் இருக்கையில் அவனிடமிருந்து பெற்ற உத்தரவு துவாரகைக்கு அவள் செல்லவேண்டுமென்று! நடைமுறை உலகில் மீராவாக இருக்கையில் இவரிடமிருந்து பெற்றுள்ள உத்தரவோ சித்தோருக்கு வரவேண்டுமென்பது!

துவாரகை செல்வதா சித்தோர் செல்வதா என்று தீர்மானமாக முடிவெடுக்காமலே சென்றுகொண்டிருந்தாள் மீரா. ராஜஸ்தானத்தைக் கடந்துதானே துவாரகை செல்ல வேண்டும்? 'இவரை முதலில் பார்த்துவிட்டு வேண்டுமாயின், அப்புறம், அவனை...?'

மழையிலும் வெயிலிலும் புயலிலும் தட்டுத் தடுமாறி நூறு நூறு காவதங்கள் கால்நடையாகச் சென்றாள் மீரா. மலைகளையும் பாலைகளையும் காடுகளையும் காட்டாறு களையும் கடந்து தனியே சென்றாள் மீரா.

வழியில் எத்தனை எத்தனையோ சோதனைகள். நீரில் ஊறிக் கால் சதை புண்ணாகிய நாட்கள் பல. மண்ணில் பொறிந்து கொப்புளித்த நாட்களும் பலப் பல. பனியில் எலும்புக் குருத்துக்கள் முடங்கிய நாட்கள் எத்தனை எத்தனையோ! ஆனால் இந்த வருத்தங்களுக்கு மேலாகக் கண்ணனின் தரிசனத்தைச் சிறிது காலமாக அடியோடு இழந்த வருத்தம்தான் அவளுக்குப் பெரிதாக இருந்தது. அந்த வருத்தம் பாடலாக வெளிவந்தது.

'எங்கு சென்றான் பிரியன்?
பொங்கும் ஆசையைப் பொழிந்துவிட்டே பின்னர் (எங்கு)

பத்தி எனும் ஊது வத்தியை ஏற்றிப்பின்
நம்பிக்கைத்ரோகியாய் நம்பி சென்றானடி!

விரகக் கடலினிடை விட்டுச் சென்றானடி;
பரிவென்னும் புணையினைப் புனைந்து வாரானோ?

மீராவின் ப்ரபு' கிரிதர நாகரன்
வாராதிருந்திடில் வாழ்வே போச்சுடி!'

ஆய்ப்பாடியிலிருந்து ராஜஸ்தானத்தின் வழியாகத்தான் துவாரகாபுரி சென்றாள் மீரா. மகாராவல்ஜியைப் பார்த்தே தீர வேண்டும் என்று ஏதோ ஒன்று அவளுக்குக் கூறியது. 'ஆயின் இப்போது தான் ஊரறியச் சித்தோர் சென்றால், ஏரியில் மூழ்கியும் உயிர் துறக்காத என்னை தெய்வமாகவே மேவார் மக்கள் வழிபடுவார்கள். மற்ற இடத்து மக்களைவிட அவர்கள் பல படிகள் அதிகமாக வழிபடுவார்கள். என்னைச் சுற்றித் தெய்விகப் பிரபையைக் காண்பது அவர்களுக்கு இன்பமாக இருக்கலாம். ஆனால் என்னையோ தலையைச் சுற்றியுள்ள பிரபையின் உஷ்ணம் எரிக்கத்தான் செய்யும். யாரும் அறியாமலே சித்தோர் சென்று ராணாஜியைச் சந்திக்க வேண்டும்' என்று தீர்மானித்துக் கொண்டாள் மீரா.

விந்தையிலும் விந்தையாக அவளைச் சித்தோரில் பிரதிஷ்டையாகி யிருந்த கிரிதர நாகரன் ஈர்க்கவில்லை! கும்பல்கர் என்ற கோட்டையிலுள்ள ராணாவின் மூத்த தாரமாகிய கும்பலாதேவியின் சிலையே அவளை ஆகர்ஷித்தது! கற்பரசியாகிய அவளை வணங்கி ஆசி பெற்றாலே, என்றும் பிரியாமல், என்றும் விரகதாபம் ஏற்படாமல், கண்ணனைச் சாசுவதமாக நாயகனாக அடைய முடியும் என்று மீராவுக்குத் தோன்றியதுதான் காரணம்.

துர்க்காதேவி தனது சாமள வண்ணத்தையே குழைத்து வானுக்குப் பூசுகிறாளோ என்றெண்ணுமாறு சாந்த இரவு பரவுகையில், 'யாதும் சுவடு படாமல்' மீரா முகத்திரையை நன்கு இழுத்துவிட்டுக் கொண்டு கும்பல்கரை அடைந்தாள். ஒரு சக்கரவர்த்தினியின் பெருமையுடன், பிறகு பக்திமதியின் புகழுடன் வாழ்ந்த பட்டினத்தில், யாருமறியாமல் பரதேசியாகப் பிரவேசிக்க மீரா போன்றோரால்தான் முடியும்!

கும்பலாதேவியின் திருஉருவத்தை அடிபணிந்துவிட்டே, கும்பஸ்வாமியாகிய கிரிதரனின் கோயிலை நோக்கி ஊர்ந்தாள்.

வழியில் இரண்டு பிரம்மாண்டமான தொட்டிகள், நெய்க்கிணறு (கீ பாவுரி) என்றும் எண்ணெய்க்கிணறு (தேல் பாவுரி) என்றும் அவற்றுக்குப் பெயர். ஊதாவின் திருமணத்தின்போது இந்த இரண்டு தொட்டிகளிலும்தான் நெய்யும் எண்ணெயும் நிரப்பி இருந்தார்களாம். கடைசியில் அவளோ இளமையிலேயே கைம்மை அடைந்துவிட்டாள்! ஊதாவை நினைந்து இந்நாள்வரை இல்லாததோர் இரக்கம் மீராவின் உள்ளத்தில் சுரந்தது. தொட்டியின் பக்கத்திலேயே சிந்தனைச் சுமையுடன் அமர்ந்தாள்.

'ஆகா, இந்த அந்தி வெளிச்சத்திலும் அதோ தொட்டிகளின் மறு விளிம்பில் உட்கார்ந்திருக்கும் ஓர் உருவம் தெரிகிறதே...அது...அது....இந்த நெஞ்சு ஏன் இப்படி அடித்துக் கொள்ளவேண்டும்? உடம்பு ஏன் இப்படி நடுங்க வேண்டும்? கண்ணனையே சர்வ சகஜமாகக் கண்டு உரையாடிய எனக்கு அதோ கும்பராணாஜியைக் காணும்போது ஏன் இப்படி நிலை தடுமாற வேண்டும்? ஏன் இப்பேர்ப்பட்ட பீதி எனக்கு ஏற்படுகிறது?'

இனம் தெரியாத சோர்வும் சோகமுமே ஓர் உருவாகத், தொட்டி விளிம்பில் அமர்ந்து, எட்ட உள்ள கும்பலா தேவியின் நினைவுச் சின்னத்தில் பார்வையைப் பதித்திருந்தார் ராணா.

அவரை ஏதோ பேராபத்துச் சூழ்ந்திருக்கிறது என்ற உள்ளுணர்ச்சி மீராவின் பிடரியைப் பிடித்து உந்தியது. மீரா, கும்பராணாவை நோக்கி வேகமாகச் சென்றாள்!

அவளைவிட வேகமாக ஒரு திருகு கத்தி ராணாவின் இதயத்தை நோக்கிப் பாய்ந்தது!

மார்பில் புதைந்த செருகு வாளுடன் மீராவின் மடியில் சாய்ந்தார் ராணா.

கண்ணீரின் ஆழமும் தொட முடியாத சோகத்தில் மீரா சிலையாகி விட்டாள். கும்பாஜியோ தம் கண்களையே நம்ப முடியாத இன்பத்துடன், அப்போது அடித்த ஒரு பெருங்காற்றில் முகத்திரை விலகிய மீராவின் திருமுகத்தைப் பார்த்துக்கொண்டிருந்தார். பித்தம் முற்றிலும் தெளிந்த சுத்தமான முகத்துடன் மீராவின் வதனத்தைப் பார்த்தார்.

"மீரா தேவி, வரமாட்டேன் என்று சொன்னவள் வந்தே விட்டாயா? தருணம் அறிந்து என்னைப் பரமபதத்துக்கு அனுப்பிவைக்கவே வந்தாயா? ப்ரேமை நதிக்கரையிலே சோக நடுநிசியில் வந்து நிற்பானே ஒருவன், அவனிடம் அனுப்பி வைக்கச் சரியாக வந்துவிட்டாயே! எங்கே மீரா, அந்தப் பதாவளியைப் பாடு. உன்னுடைய தூய கானம்தான் இந்தப் பாவியின் ஆன்மாவைக் கோலோகத்துக்குத் தூக்கிச் செல்ல வேண்டும்.... பாடமாட்டாயா? நான் உன்னைப் பாடாகப் படுத்தினேனே என்று கோபமா? அதெல்லாம் கனவு மீரா. அப்புறம், நீ யார் என்ற ரகசியத்தையே — அது உனக்குக் கூடத் தெரியுமோ தெரியாதோ — நான் தெரிந்துகொண்டு விட்டேன். இப்போது நீ என் மனைவியல்ல! மேவார் ராணியல்ல; நீ மீரா கூட அல்ல....."

இதயத்தில் புதைந்த கத்தி குருதியைக் கசியச் செய்தது. ஆனால் ராணாவின் இதயத்தில் புகுந்த காமதேனுவின் தரிசனக் காட்சியோ அமுத சாகரத்தையே தண்ணென அவர்மீது வாரிவிட்டது!

திக்கித் திணறி வார்த்தை வார்த்தையாக முணுமுணுத்த கும்பராணா எதையோ நினைத்துக்கொண்டார். மிகவும் சிரமத்துடன் தொடர்ந்தார்: "ராமபிரான் வாழ்ந்தபோது உலகு அவரை மானுடனாய்த்தான் பார்த்தது. நீண்டகாலத்துக்குப் பிறகுதான் அவரது அவதார ரகசியம் வெளியாயிற்று. உலகால் அப்போதைக்கப்போதே அவதார ரகசியத்தைத் தாங்க முடியாது. மானுடமாய் வாழவந்த அவதாரத்தாலும் தெய்விகப் பெருமையை இவ்வுலகில் உள்ளபோதே சூடிக்கொள்ள முடியாது. உன் நாள் முடிந்து நீண்ட காலத்துக்குப் பின்னும் ரகசியமாக இருக்கவேண்டிய விஷயம் உன் அவதார மர்மம்.

"ஆனால்...... ஆனால்..... என் காலத்திலேயே நான் பகிரங்கப்படுத்தியிருக்கவேண்டிய இன்னொரு ரகசியம் உண்டு மீரா! சித்தோர் ராஜ வாரிசாகப் பிறந்து சித்தோர் மன்னனாகவே சாகிற நான் ராஜ தர்மப்படி ஒரு காரியத்தைச் செய்யாமல் விட்டுவிட்டேன். அதுதான் இந்த வாளை விட என்னை அறுக்கிறது. உன்னை நான் தெய்வமாகப் பாவிப்பதும், நீ கண்ணனோடு நேருக்கு நேர் நாயகியாய் இன்புறுவதை இன்று நான் ஒப்பிப் பெருமதிப்புத் தருவதும் வேறு விஷயம். ஆனால் நீ இந்த மேவாரில் பிரஜையாகவும் நான் மன்னனாகவும் இருந்த நிலையில் உன்னை நான்

நடத்தியிருக்க வேண்டிய விதமே வேறு. அதன்படி நான் செய்திருக்க வேண்டிய ஒரு ராஜ கடமையைச் செய்யாது போனேன். அதனால்தான் ராஜநீதியிலிருந்து பிறழ்ந்த பிரஷ்டனாகிவிட்டேன். இந்தப் பிரஷ்டனுக்காக நீயே மன்றாடினாலும்கூட பகவான் எப்படிப் பரம பதத்தில் இடம் தருவார்? நரகுக்குத்தான் இவ்வுயிர் தள்ளப்படும். எனவே இப்போதேனும் நான் நீதிவழி நின்று, முன்செய்த பிழையை நிவிருத்தி செய்துகொள்ள நீதான் உதவவேண்டும். மானாபிமானம் விட்டு, சிறைச்சாலையோ, சிரச்சேதமோ எதுவாயினும் உளமார ஏற்கக்கூடிய ஞானத்தாயான உன்னால் அவ்வுதவி செய்ய முடியுமென்ற நம்பிக்கையில், இதோ அதைச் சொல்கிறேன்..... எவ்வளவுதான் நான் மனத்தைத் திடம் செய்து கொண்டாலும் என்னால் அதை வாய் விட்டுக் கூற முடியவில்லை. எங்கே மீரா, இப்படி உன் செவியை என் வாய்க்கருகே கொண்டு வா."

மீராவின் காதோடு காதாக அவர் கூறிய விஷயம் அவளுடைய உடலைத் துகள் துகளாகச் சிதற அடிக்காதது அவளுக்கே அதிசயம்தான்!

கணகௌரி விரதத்தன்று கிரிதரன் ஆலயத்துக்கு கில்ஜி வந்ததையும், தான் கண்ணனுக்கு விருந்து படைத்திருந்ததையும், மாயமே மறைகிற அந்தக் கள்ளக் கண்ணனின் சிரிப்பொலியையும் மகாராணா ஒன்றாகப் போட்டு உழப்பிக்கொண்டு பயங்கரமான சந்தேகத்துக்கு ஆளானார் என்பது முன்பே மீரா சந்தேகித்த விஷயந்தான். முதலில் ஓர் ஆடவனின் சிரிப்பொலியைக் கேட்டு, அவன் இன்னானென்று தெரியாமலே ஐயுற்றவர், அப்புறம் கில்ஜி அன்று மாறுவேடத்தில் ஊருக்குள் புகுந்ததாக அறிந்ததும் அவனே தான் ஆலயத்துக்கு வந்து சிரிப்பொலி எழுப்பி, ஓடி மறைந்தவன் என்று எண்ணத் தலைப்பட்டதை மீரா ஊகித்து விட்டாள். பிற்பாடு கில்ஜி படையெடுத்து வருவதாகச் செய்தி வந்தபோது, தான் மேவாரின் எதிர்கால சுல்தானாவாகக் கூடும் என்ற அளவுக்கு அவர் வெடிப்பாகக் கூறியபோது மீராவுக்கு அவர் தன்னை சந்தேகிக்கிறாரென்பது சந்தேகமாக நில்லாமல் உறுதியாகவே தெரிந்தது. ஆயின் அவரைப் பொருத்தமட்டில் வலுத்த சந்தேகம் மட்டுமே கொண்டிருக்கிறாரேயன்றி, உறுதியாக நம்பிவிடவில்லை என்றே நம்பினாள்.

'ஆனால், ஐயோ, இன்று இப்போது அவர், சொல்வதோ? கண்ணனோடு நேருக்கு நேராக நான் நாயகியுறவு கொள்வதை அவர் நம்பி அதற்குப் பெருமதிப்புத் தருவதாகக் கூறி என் மீது இன்னமுதத் துளிகளைத் தெளித்தவுடனேயே தணற் கங்குகளையும் சரித்து விட்டாரே! இப்போதும் அவர் நான் தவறியதாகத் தாம் எண்ணவில்லை என்றுதான் சொல்கிறாராயினும்... ஆயினும்.... மான் பேட்டின் மீது கண் வைத்த வேங்கைப்புலி தன் இச்சையை நிறைவேற்றிக் கொள்ளாமல் ஒருகாலும் விடாது என்பதுபோல, ராஜஸ்தானப் பத்தினிப் பெண்டிரிடம் தகாத உறவு கொண்டு சுய இச்சை பூர்த்தி பெறுவதோடு, அவ்வுத்தம ராஜ வம்சத்திற்குப் பெரும் களங்கம் உண்டாக்கவேண்டும் என்றும் வன்மம் பூண்ட ஓர் அன்னிய மன்னன்... ஐயோ, நான் கண்ணனன்பில் மெய்ம்மறந்திருக்கும்போது நான் அறியாமலே தன் தகாத உத்தேசத்தை...!'

மீராவால் தாளவே இயலவில்லை! தலையைக் குலுக்கிக்கொண்டாள்! குலுங்கிய தலைக்கெதிரே வானம் குலுங்கியது. குலுங்கிய வானில் அவளது கருமக் கருமுகில், அஸ்தமன சூரியனின் கடைசியான செவ்வொளிக் கீற்றுக்கள் ரத்தக் கறை கட்ட அவள் கண்முன் நின்றது.

"கண்ணா! உன் நினைவில் இதையும் தாங்குவேன்; தாங்கியேவிட்டேன்!" என்று வாய்விட்டுக் கூறினாள்!

அவ்வளவே! ஆதியில் கண்ணன் காட்டியதில் பாதிக்கு மேல் தேயாமலே அதுகாறும் நின்ற முகில் கணத்திலும் கடிதாக இருந்த இடம் தெரியாமல் அழிந்தே போயிற்று!

இப்பேருதவி புரிந்த மகாராணாவை நன்றியில் நனைந்து நோக்கிக் கையெடுத்துக் கும்பிட்டாள், மீரா. "ப்ரபு, தாங்கள் கூறியபடியே கிரிதரன்மேல் ஆணையாகச் செய்கிறேன்! இன்னும் என்ன செய்ய வேண்டும்?" என்றாள்.

"பாடு, மீரா பாடு! முன்பு நீ பாட நான் வீணை வாசித்திருக்கிறேன். இன்று என்னையே உன் மடியில் வீணையாக வளர்த்திக்கொண்டிருக்கிறாய் அல்லவா? என் ஆன்மத் தந்திகளை மீட்டிப் பாடு" என்றார் மகாராணா.

மீரா பாடினாள். இதுவரை அவளுடைய குரலிலேயுமே இருந்திராத தெய்விக மாதுரியம் இன்று அதில் செறிந்து நிறைந்தது. தேவாமுதமே வாய்திறந்து கானம் செய்தது.

'திரைகடல் ஆழமும் குகையினது) ஆழமும்
நிறைந்தவன் மீரா நாதன்
ப்ரேமை நதிக் கரையில் சோக நடுநிசியில்
ச்யாமளனாய் வந்(து)இன்பு செய்வான்.'

கும்பாஜி மகாராணாவுக்குத்தான் அச்சியாமளன் எப்பேர்ப்பட்ட இன்பு செய்துவிட்டான்! அவரை அவன் அள்ளியெடுத்துக் கொண்டு கோலோகம் புகுவது கண்டு ஆனந்த பாஷ்பம் சொரிந்தாள் மீரா!

கும்பல்கரைக் காவல் காக்கும் வீரர்கள் சங்கீதத்தைக் கேட்டு அதிசயித்து ஓடி வந்தனர். அங்கே கண்ட காட்சியில் அவர்களுடைய ரத்தமே உறைந்துவிட்டது.

சித்தோருக்குள் சமாசாரம் பரவியதும் மேவார் ராஜ்ய தேவதையின் ரத்தமே உறைந்துவிட்டது. சௌபாக்கியதேவி பாக்கியசாலி! அவள் ஒரு விநாடிக்கு மேல் புத்திரசோகத்தில் தவிக்கவில்லை; விஷயம் கேட்ட இரண்டாம் விநாடியே அவளது இதயம் வெடித்து விட்டது!

ஊதா ஓடிவந்து அண்ணனின் சடலத்தின்மீது விழுந்து அலறினாள்.

"சண்டாளி, இப்படிச் செய்துவிட்டாயே! இருட்டில் பதுங்கி இதற்காகத்தான் கோட்டைக்குள் வந்தாயா? வஞ்சம் தீர்த்துக்கொண்ட பெருமையில் இனி நீ சாகக்கூடத் தயார். அதுதான் ஆனந்தமாகக் கானம் செய்துவிட்டு அசையாமல் இருக்கிறாய்!" மதனியை நோக்கிக் கூறினாள் ஊதா.

கூடியிருந்த அனைவரும் அதிர்ந்துவிட்டனர், மீரா மட்டும் ஆடவில்லை, அசையவில்லை. கும்பராணா அவள் காதோடு காதாகக் கூறிய விஷயத்தையே தாங்கிக்கொண்ட பின் இதற்கு அசைந்து கொடுப்பானேன்?

**நா**டறிய நகரறிய மீரா மீது கொலைக் குற்றம் சாட்டப் பட்டு அவள் சபையில் நின்றாள்.

தெய்வமாக மதிக்கப்பட்டவளே இன்று குற்றவாளிக் கூண்டில் நின்றாள்! மன்னன் போய்விட்டான். அடுத்த மன்னனாக யார் பட்டம் ஏற்பது என்பதையும் அவன் சொல்லிப் போகவில்லை. நாடு போற்றிய ராய்மல் — மீராவை நாடு கடத்துமுன்பு நாட்டை விட்டுச் சென்றவன் — இன்னமும் திரும்பவில்லை. மூத்த இளவரசன் உதயனுக்கே பட்டம் கட்டலாம் எனில் அவனது இருப்பிடமும் தெரியவில்லை. மந்திரிப் பிரதானிகளும் ராஜகுருவும்

அந்தரங்க ஆலோசனையாளருமே மன்னனுக்குப் பதிலாக நிர்வாகப் பொறுப்பை ஏற்றிருந்தனர். அவர்கள் முன்னரே மீரா குற்றம் சாட்டப்பட்டு நின்றாள்.

அவள்மீது கொலைக் குற்றம் ஆரோபணம் செய்யப்பட வேண்டிய தருணத்தில் அதைத் தடுத்து மீராவே பேசினாள். வெட்டு ஒன்றும் துண்டு இரண்டுமாகத் தன்னிடம் துளிக் கூடத் தாட்சிண்யமின்றி மீரா பேசினாள்.

"ராவல்ஜியின் இறுதிக் கட்டளையைச் சொல்கிறேன். கொலைக்குற்ற விசாரணைக்கு முன்னதாக இன்னொரு குற்றத்தைப் பெரியோர்கள் விசாரிக்கக் கோருகிறேன்" என்று மீரா கூறியவுடன் சபை கலகலத்தது. ஆச்சரியமும் அதிர்ச்சியும் அடைந்தது.

"அது விபசாரக் குற்றம்" என்று ஈரமற்ற குரலில் மீரா சொன்னபோது, மின்னல் பாய்ந்தாற்போல் சபையோர் திக் பிரமித்தனர். மீராவோ நிச்சலனமாக, அதே இரக்கமற்ற குரலில் தொடர்ந்தாள், தன்னிடம்தானே காட்டிக்கொள்ளும் தயாதாக்ஷிண்யம் என்ற அகம்பாவைச் சாயை அவளை விட்டு அறவே அகன்றதால்.

"மாளவ சுல்தான் கில்ஜி இந்தச் சித்தோருக்குள் ஆண்டியாகப் பிரவேசித்து ஆலயத்துக்கு வந்து, கிரிதரனுக்காக என்னிடம் முத்துமாலை தந்த அதே இரவில் மகாராணா ஆலயத்துக்கு வந்தார். அப்போது என்னுடன் யாரோ ஆடவன் பேசிச் சிரிப்பதை அவர் கேட்டார். அவர் உள்ளே பிரவேசித்தவுடன் ஆளைக் காணவில்லை. ஆலயத்தின் பின் கதவு மட்டும் திறந்திருந்தது. நான் அந்த ஆடவனுக்காகப் பரிமாறியிருந்த தாலமும் அப்படியே இருந்தது. தரும நியாயப் படி இதை மகாராணா பகிரங்கமாக நீதி விசாரணை செய்ய விரும்பினாலும் ஏதோ ஒன்று அவரது மனத்தில் கட்டை போட்டது. ஆனால் அவர் உலகிலிருந்து மறையும்போது, தாம் தவறவிட்ட அந்தத் தமது ராஜ கடமையைப் பூர்த்தி செய்த திருப்தியை அவருக்கு நான் அளிக்கவேண்டும் என்று பணித்தார். அந்தக் கட்டளையையே இங்கு நான் இப்போது நிறைவேற்றுகிறேன். முதலில் விபசாரக் குற்றத்தை விசாரித்து விட்டு, பிறகு கொலைக் குற்றத்தை விசாரியுங்கள்" என்றாள் மீரா.

மீராவின் தூய்மையும் பக்தியும் உலகமறிந்தது. அதுவும் அவள் சித்தோர் மடுவில் மூழ்கிப் பிருந்தாவனத்தில் எழுந்த

பின் ஒரு தெய்வமாகி இருந்தாள். ஊதாவின் வற்புறுத்தலுக் காகவே அவள்மீது கொலைக்குற்ற விசாரணை பகிரங்கமாக நடந்தது. இப்போது அவள் விபசாரக் குற்றத்தையும் சாட்டிக் கொண்டவுடன் முதலில் யாருக்கும் எதுவும் புரியவில்லை. ராணாவின் கட்டளையை அவளாகவே சொன்னதால் அவளைப் பரம நிர்மலமாகவே சபை பார்த்தது.

எனினும் மனித மனத்தின் விசித்திரத்துக்கு யாருமே விலக்கில்லையே! சபையோரில் சிலருடைய உள்ளத்தின் ஒரு மூலையில், 'ஒரு வேளை மீரா பெரிய மாய மந்திர சூனியத்திலும், பொய் வேஷ நடிப்பிலும் கைதேர்ந்த ஒருத்தி தானோ? செய்கிற பாபத்தையும் செய்துவிட்டு, நடிப்பாலும் மந்திரசக்தியாலும் நம்மை மயக்குகிறாளோ?' என்ற எண்ணமும் எழத்தான் எழுந்தது.

விசாரணை என்றால் எதை விசாரிப்பது? எப்போதோ நடந்துபோன விஷயம். விஷயம் அறிந்தவர்கள் மீராவையும் ராணாவையும் தவிர யாருமில்லை. ராணா இன்றில்லை. மீரா சற்று முன் சொன்னதற்கதிகமாக எதுவும் சொல்லவில்லை. ஏன் சொல்லவில்லை? அன்று ராணாவிடம் அவள் கண்ணனே வந்ததாகச் சொன்னாள். அதை ராணா முழு மனத்துடன் நம்பினாரா, நம்பவில்லையா என்பது அவருக்கே தீர்மானமாகத் தெரியவில்லை என்பது அவர் இறுதியில் சொல்லிப் போனதிலிருந்து தெரிந்துவிட்டது! அந்தத் தியாகி, வள்ளல், பரம அநுதாபி ராணாவே நம்பாதிருந்திருக்கக் கூடிய ஒன்றை இந்தச் சபையினர் நம்பினால் அவர் தவறு செய்ததாகவே ஆகிவிடும் அல்லவா? அந்த அவப்பெயர் மறைந்த மாண்பாளருக்கு வரக்கூடாது என்றே மீரா வாய் திறக்கவில்லை.

பயங்கர நிசப்தத்தில் மக்களில் சிலரது மனத்தில் எழுந்த ஐயத்தின் நிழல் மீராவின் முன் பேயாக ஆர்த்தது.

அதை அடித்துப்போட்டு, மீராவின் அகக்கண் எதிரே நின்றது? மலை தாங்கிய கிரிதரனா? இல்லை.

கோதண்டம் தாங்கிய ஸ்ரீராமனே நின்றான்!

ப்ரேம சந்திரனாக அவளது சித்தத்தில் இனித்த ஸ்ரீ ராமசந்திரன் நிலவமுதத் துளிகளான வாக்குகளை அவளது அகச்செவியில் தெளித்தான். "மீரா, இன்றுதான் எனக்கு நான் பிராயச்சித்தம் செய்துகொண்டேன். சீதாதேவியாக வந்த

உன்னை ஊருலகில் பெரும்பாலோர் உத்தமியாக மதித்த போதும் நான் ஒருவன் மட்டுமே உன்மீது பழி சுமத்தி உன்னைப் பூமி கொள்ளுமாறு செய்தேன். இன்று உன்னை உலகெல்லாம் சந்தேகிக்கும்போது, நான் ஒருவன் மட்டும் நிச்சயமாக உன்னைச் சந்தேகிக்கவில்லை. இது உனக்கு உறுதிதானே?"

ஆதியில் ஒருநாள் கிரிதரன் அவளிடம், "மீரா, உன்னிடம் பாகவதமும் பாரதமும் பூர்த்தி பெற்றுவிட்டன. ராமாயணமும் கூட உன்னால்தான் நிறையப் போகிறது; நான் ராமாயணத்தில் உற்ற உளைச்சலைத் தீர்க்க நீ வந்திருக்கிறாய்" என்று சொன்னது மீராவின் நாடி நரம்புகளிலெல்லாம் இன்று அதிர்ந்தது!

பரமனே ஒரு பிராயச்சித்தம் செய்துகொள்வதெனில் அதற்காகத் தான் எவ்வளவு பரிதவிக்கவும் அவள் தயாராக இருந்தாள்,

ஸ்ரீ ராமன் தொடர்ந்து பேசினான்: "நான் ஒருவன் மட்டும் உன்னைச் சந்தேகிக்கவில்லை என்றேன். ஆனால் நான் தானே இத்தனை உயிர்களும்? எனவே, நானே வந்து சாட்சி சொல்லாமல், மக்களிலே இழியவர்களுள் இழியவனான ஒருவன் மூலம் உன் உன்னதத் தூய்மையை நிலை நாட்டுவேன். எனக்காக மானம், மரியாதை உள்படச் சர்வமும் விட்ட உனக்கு அது தேவைப்படாவிடினும், உன் தூய்மையை நிரூபித்தாலே என் நெஞ்சு தாபம் தணியும்" என்று சொல்லி மறைந்தான்.

அடுத்த கணமே பாபக் குன்றான உதயன் சபா மண்டபத்தில் பிரவேசித்தான்.

சாஸ்திரப்படியும், சட்டப்படியும், சம்பிரதாயப்படியும் இனி அவன்தான் மன்னன். எனவே யதோக்தமான பட்டாபி ஷேகத்துக்கு முன்பாகவே, அவசர காலத்தை உத்தேசித்துப் பிரதான மந்திரி தாரணகர் உதயனிடம் சென்று அவனுடைய இடையில் ஈசன் தந்த வாளைச் சொருகினார். மும்முறை நிலத்தைத் தொட்டு, "ஹிந்துவா சூரஜ் மேவார் மகாராவல்ஜி உதயசிங்ஜி ஜேய்!" என்று கோஷித்தார்.

மேவாரின் சாபத்தீடு போன்ற உதயன் நீதி பீடம் ஏறியது சபையோருக்குக் கேலிக் கூத்தாகவே இருந்தது. அவர்களில் சிலர் மீராபாயைக் குறித்து லவலேசமே ஐயுற்றனர். இந்தச் சண்டாளனோ அவளது புனிதத்தை அறியாமல் வாயில்

வந்ததைப் பேசி மிகவும் அவமானகரமான தண்டனை விதித்து விடப் போகிறானே என்று அவையோர் கலங்கினர்.

ஆனால் மகாராணா உதயசிங்கிடம் இரண்டு குற்றச்சாட்டுகளும் கூறப்பட்டவுடன் அவனது தோற்றத்தில் கண்ட மாறுதல் உலகுக்கே அதிசயமாயிருந்தது. உருக்கமே உருவானாற்போல் அவன் எழுந்தான். நாத்தழுதழுக்கும் குரலில் கூறினான்:

"மீராதேவி ஒருகாலும் விபசாரக் குற்றம் செய்திருக்க முடியாது என்று என் அன்னை கும்பலாதேவியின்மீது சத்தியமிட்டுச் சாற்றுகிறேன்! அவரிடம் துர் எண்ணத்துடன் செல்லும் படுபாதகன் எவனாயினும் அவனுக்குங் கூட அவர் அன்னையாகவே தரிசனம் தருவார்" என்று விம்மலுக் கிடையே கூறினான். "யதார்த்தத்தை வைத்து விசாரணை செய்யவேண்டிய சமயத்தில் என் மன உணர்வைக் கூறினால் ஒப்ப மாட்டீர்கள். அதனால் இதோ அடித்துச் சொல்கிறேன்; யதார்த்தமாக, பிரத்தியட்சமாக, மகாபாவியான நானே தேவி மீரா்ஜியிடம் தீய நோக்குடன் சென்றதுண்டு. அப்போது அவரை என் தாயாகவே கண்டேன்! அதனால் அவர் மீதுள்ள இக் குற்றச்சாட்டை எனது சொந்தச் சாட்சியுடன் சட்டப்படி ரத்துச் செய்கிறேன்.

"இன்னொன்று கொலைக் குற்றம். அதுவும் அவர் செய்யவில்லை. இதற்கும் சாட்சி நான். சாட்சி மட்டும் அல்ல. குற்றவாளியே நானேதான்! ஆம், மீராதேவியைத் திரும்பச் சித்தோருக்கே அழைத்துவரச் சொன்ன மகாராணா எங்கே ராய்மல்லையும் வரவழைத்து விடுவாரோ என்று பயந்தேன். அவனில்லாதபோதே தந்தையை ஒழித்துக் கட்டிவிட்டு அரசு கட்டில் ஏற நானேதான் ராவல்ஜியைக் கொலை செய்தேன்.

"இப்படியெல்லாம் சொல்வதால் நான் இப்போது திருந்தி விட்டேன் என்று ஏமாறவேண்டாம். மீராஜியைக் குற்றவாளியாகக் கண்ட குமுறலில் ஏதோ உண்மைகள் என்னையும் மீறிப் பீறிக்கொண்டு வந்துவிட்டன. மற்றபடி நான் அயோக்கிய உதயனாகவேதான் இருப்பேன். மீராஜி இங்கே உள்ளவரை எனக்குப் பெரிய தடங்கல்தான். ஆனால் அவர் நமது சம்பிரதாயப்படி, கணவனை இழந்ததால் தீப்புகுந்து விடுவார் என்று நம்புகிறேன்" என்றான் — அவளைக் குற்றவாளி என்ற அபவாதம் தீண்டாமல் காத்த அதே உதயன்.

மீராவால் அதை ஏற்க முடியவில்லை. கண்ணன்தான் அவள கணவன். கும்பாஜி ராணா உயிர் வாழ்ந்த காலத்தில்

*ஒருநாள்கூட அவரது மனைவியாக இராமல் இப்போது அவர் மறைந்தபோது மட்டும் தீக்குளிப்பது தர்மத்துக்கு விரோதம் என்றே அவள் கருதினாள். சத்தியத்துக்கு மாறாகச் செல்ல முடியாதவள் அல்லவா மீரா? நித்த மணாளனை மணந்த தன் நித்திய செளமங்கலியத்தைப் பாடினாள்:*

'மீரா ஆழ்ந்தாள் ஹரிநிறத்தில்;
ஏறாதினி இவ் உலக நிறம்!'

குருவாய் வந்து பெருமான் அருளிய
அருண திலகம், ஜப ஆரமும்
மங்காச் சீலம் திவ்ய விரதமும்
சிங்காரமாயெனக்(கு) ஆச்சுது!

சாது பதம் படு பாதையில் செல்பவள்
பேதுறுவ தென்பதுமுண்டோ?
தண்டனை வெகுமதி பொருளாக் கொள்ளேன்!
கண்டம் கரைய இசைப்பேனே!

களவிடவில்லை, எவர் உளமும் புண்செயவில்லை,
தளரவிடேன் என் வழியை!
மத்தகஜம் மேவி மெத்த வலம்வந்தேன்;
கர்த்தவம் மீதூர்வேனோ?

வாணாள் முழுதும் கண்ணனை இணைந்தவள்
ராணாவை எண்ணிடுவேனோ?
உடல் மறைந்தாலும் எனை மறவானிருக்க
உடன்கட்டை ஏறுவேனோ?

கிரிதரன் காந்தன், கிரிதரன் எந்தை,
கிரிதரன் அன்னையும் அன்பும்;
மண்ணுலக வழி விட்டுவிட்டவளிடம்
மன்னவன் கட்டளை செலுமோ?'

*தீக்குளிக்காவிடினும் உதயனுக்கு இடையூறாக இராமல் மேவாரை விட்டுப் புறப்பட்டு விட்டாள் மீரா — துவாரகைக் குத்தான்.*

## 32. ஜோதியில் கலந்த ஜோதி!

**மீ***ரா விரைவில் துவாரகை செல்ல முடியவில்லை. மீராவின் அவதார ரகசியத்தை ராணாவைப் போல் நுணுக்கமாக அறியமுடியாவிடினும், எல்லா மக்களும் தாங்களாகவே அதை ஓரளவு உணர்ந்து தெய்வப்பிறவியாக*

அவளைக் காணத் தொடங்கிவிட்டனர். எனவே அவள் எங்கு சென்றாலும் தொடர்ந்து சென்று தங்களுடனேயே அவளை இருத்திக்கொண்டனர். ஊர் ஊராக அவளை வரவேற்று உபசரித்து வணங்கினர். தான் பெற்ற கண்ணனின்பம் வையகமும் பெறச் செய்யவே அவதரித்திருந்த தேவி மீராபாயும் முகச் சுளிப்பின்றி களிப்புடனேயே மக்களுக் கெல்லாம் பக்தியைப் பாலான பாக்களாக்கி ஊட்டியவாறு சென்றாள்.

மெல்ல மெல்லப் பல ஆண்டுகளுக்குப் பின்னர் துவாரகையை அடைந்தாள்.

கதவடைத்துக் கிடந்த துவாராபுரிக்கு பக்த சிரோமணி மீரா மாதா செல்கிறாளென்பதால், அதிசயம் எதிர்பார்த்து அவளோடு ஏராளமாக அடியார்கணம் சேர்ந்தது.

பொங்கிவரும் உணர்ச்சியுடன் துவாரகாநாதனின் ஆலயத்துக்குப் புறப்பட்டாள் மீரா. துவாரம் என்றால் வாயில். பாரதத்தின் மேற்கு வாயிலானதால் துவாரகை அப்பெயர் பெற்றது. தனக்கோ அமர சாம்ராஜ்யத்துக்கான வாயிலே அங்கேதான் திறக்கப் போகிறது என்று மீரா உணர்ந்திருந்தாள்! தான் ராணா அனுப்பிய விஷத்தை உண்டதிலிருந்து துவாரகையின் ஆலயக் கதவு மூடிக்கொண்டதாக அவள் அறிந்திருந்தாள். அதைத் திறந்து, அதோடு தன் நித்திய மணவறையையும் பகவான் திறக்கப் போகிறான் என மீரா உள்ளுணர்வின் உறுதியுடன் நம்பினாள்.

ஆன்மா ஆனந்த நிர்த்தமிட, நித்திய கலியாணத்துக்கு மீரா அலங்கரித்துக்கொண்டு புறப்பட்டாள். கலியாணப் பெண்ணின் அலங்காரத்தைக் கேட்டால் நமக்குத் தூக்கிவாரிப் போடும்.

'யோகி சென்றான் பரதேசம்!

வேகிறேன் பிரிவினில்; வேகம் தீர்த்தானில்லை
காகிதமும் எழுதவில்லை!

யோகினியாகவே ஏக எண்ணங் கொண்டேன்,
மோகனனைத் தேடி!

கூந்தலினை மழித்துச் சாந்த வெண்ணீறணிந்து
ஏந்தலைத் தேடிச் செல்வேன்!

துவராடை புனைந்து துவராபதிசென்று
அவனோ(டு) அடைவுறுவேன்

